# தமிழும் சமற்கிருதமும்

( மொழி ஆய்வு நூல் )

பகுதி – I

## ம. சோ. விக்டர்




**யாத்திசைப் பதிப்பகம்**

50, அண்ணா நகர்

அரியலூர் – 621 713

அலைபேசி: 98432 73914

தமிழும் சமற்கிருதமும்
( மொழி ஆய்வு நூல் )
பகுதி – I

Dr. Ma.So. Victor, M.A., Ph.D.,
Cell : 9843273914



*முதல் பதிப்பு : ஜூலை 2007*
*இரண்டாம் பதிப்பு : சனவரி 2013*
*பக்கம் : 362*
*படிகள் : 1200*

*பதிப்பு :*
**யாத்திசைப் பதிப்பகம்**
*50, அண்ணா நகர்*
*அரியலூர் - 621 713*
*அலைபேசி: 98432 73914*

வடிவமைப்பு :
**எஸ். தனசேகர்**

விலை : **300. 00**

*அச்சிட்டோர்:*
**ஸ்ரீராகவேந்திரா லேசர் பிரிண்டர்ஸ்**
*15, தானப்ப தெரு, திருவல்லிக்கேணி,*
*சென்னை - 600 005.*
*தொலைபேசி : 044-42664695, 90031 81586*

Website : http://www.cict.in
Email : ramsay2@rediffmail.com
ramasamy.k@cict.in



Phones (O): 044-28448841
044-28442716
Fax : 044-28448888

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்
இந்திய அரசு, மனித வள மேம்பாட்டு அமைச்சகம், உயர் கல்வித்துறை, மொழிகள் பிரிவு )
எண். 6, பாலாறு இல்லம், காமராசர் சாலை, சேப்பாக்கம், சென்னை - 600 005, இந்தியா

CENTRAL INSTITUTE OF CLASSICAL TAMIL
(Government of India, Ministry of Human Resource Development, Department of Higher Education, Languages Division)
No. 6, Kamarajar Salai, Chepauk, Chennai - 600 0050, India

---

F.No. 11-264/CICT/2011-12/

**Prof. K. RAMASAMY**
Officer in Charge

This is to certify that Dr. Ma.So. Victor, M.A., Ph.D., known to me for the last twenty years, is a reputed scholar and researcher, who has been working on the ancientness and classicality of the Tamil language for the last twenty-five years. He has written about forty well-researched books running to more than 10,000 pages on the impact of Tamil Culture and Civilization on the Western nations during the pre-historic days as well as on the achievement of the ancient Tamils in various branches of knowledge including science, mathematics, astronomy, theology and sociology.

Dr. Ma.So. Victor is a very distinguished etymologist, who has been steadily making substantial contributions to ancient Tamil studies. He has explained with suitable illustrative examples how the roots of several hundreds of words in world's languages are to be found in Tamil. He has presented learned papers in numerous seminars and conferences and published scholarly articles in a number of

standard journals and magazines. He has now been invited to give lectures by the Tamil Organisations in Italy, France, Germany, Norway and other European nations.

Central Institute of Classical Tamil, Chennai, has granted a sum of Rs.2,50,000/- for his research project on "Tamil and Western Semitic Famlily of Languages".

We hope and trust that Dr. Ma.So. Victor will receive the international encouragement he deserves.

K. Ramasamy

**(K. RAMASAMY)**

## பொருளடக்கம்

೦೦೦

## ஆசிரியர் உரை

தமிழ் மக்கள், தமது தாய் மொழியாம் தமிழ் மொழியின் மீதுள்ள பற்றாலும், தம் இனத்தின் மீது கொண்டுள்ள பிணைப் பாலும், தமிழே உலகின் முதன்மொழியெனக்கூறி வருகின்றனர் என்றும், இவைகள் அவர்தம் அவாவையும், ஆர்வப் பெருக்கை யுமே உணர்த்துவன என்றும், அதற்கானச் சான்றுகள் எவையும் இல்லையென்றும், தமிழரல்லாத பலரும், தமிழரில் சிலரும் கூறி வருகின்றனர். இவ்வாறு உரைப்பவர்கள் கூட, உலகின் முதல் மொழி எதுவெனக் கூறத் துணியவில்லை. கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக மொழிவழிச் சிந்தனைகள் வளம் பெறாமல், முன்னோர்கள் சொன்னவற்றையும், புலவர்கள் எழுதியவற் றையும், புலவர்கள் எழுதியதற்கு மாறாக உரையாசிரியர்கள் கொடுத்த விளக்கங்களையும், அப்படியே தமிழர்கள் ஏற்றுக் கொண்டனர்.

மேலைநாட்டார் கொடுத்த மொழிகள் பற்றிய ஆய்வுகளும், அவர்தம் கொள்கைகளும், முடிந்த முடிவுகளாக, இதுவரையில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. மொழியியல் தொடர்பான மேனாட்டவரின் கொள்கைகளில் குழப்பங்களும், குறைபாடு களும், அறுபட்ட தொடர்புகளும், அனைத்து நிலைகளிலும் காணப்படுகின்றன. தமிழ் மொழியென்பது, திராவிட மொழி களான, தெலுங்கு-கன்னடம்-மலையாளம் போன்ற மொழி களுக்குத் தாய்மொழியானது என்பதை மட்டும் அறிவித்தனர். கடந்த நூற்றாண்டுகளில், பிராமணர்களே கற்றறிந்தோராகக் கருதப் பட்டதால், தமது கொள்கைகளை நிறுவும் வகையில், குறுக்கே நின்ற உண்மைகளையும், சான்றுகளையும் தகர்த்து அழித்துவிட்டுத் தாம் சொன்னவைகளே சரியானவை என்ற கருத்தைப் பரப்பிவிட்டனர். 50,000 ஆண்டுகளாக, நிலை பெற் றிருந்த தமிழ் வரலாற்றையும், தமிழக வரலாற்றையும், ஈராயிரம் ஆண்டுகளெனச் சுருக்கியவர்களும் அவர்களே.

சமற்கிருதமே இந்தியாவின் மூத்த மொழியென்றும், ஆரியரே தொன்மைக் குடியினர் என்றும் கடந்த ஈராயிரம் ஆண்டுகளாகத் தமிழர்களின் உணர்வுகளில் பதிவு செய்து விட்டனர். சமற்கிருதமே தேவ மொழியென்றும், மற்ற இந்திய மொழிகள் தாழ்ந்த மொழிகள் (நீச பாஷை) என்றும் கூறி, அதனையும் தமிழர்கள் ஏற்குமாறு செய்து விட்டனர். சென்ற இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்பட்ட தமிழரின் விழிப்புணர்வைக் கண்ட பிராமணர், சற்று ஒருபடி கீழே இறங்கி வந்து, சிவனின் உடுக்கையினின்றும் பக்கத்துக்கொன்றாகத் தோன்றியவைகளே தமிழும் சமற்கிருதமும் என்றனர். ஆரியர் களின் ஒரே கொள்கை, தங்கள் இனம்மட்டும் சிறப்புற்று வாழவும், அவ்வாழ்வு நின்று நிலைபெற வேண்டும் என்பதே. இதற்கேற்ற வகையில், அவர்கள் எவரையும் காவு கொடுக்கத் துணிந்தனர் என்பதே கடந்த கால வரலாறாகும்.

மன்னர்களைத் தம்கைப்பிடிக்குள் வைத்துக் கொண்டு, மக்கள்மீது தமது கொள்கைகளைத் திணித்த ஆரியர்கள், இடைக்காலச் சோழப்பேரரசில் மிகவும் ஏற்றம் பெற்றனர். தஞ்சை மாவட்டத்தில் பலநூறு வேலி நிலங்களுக்குப் பிரா மணர்கள் உரிமையாளர்களாகவிருந்தது, மன்னர்கள் அளித்த நிலக்கொடைகள் வழியாகவே. தங்கள் கொள்கையோடும், சமயத்தோடும் தொடர்பில்லாத இசுலாமியர்கள், இந்தியாவை ஆண்ட போதும், இந்திய மக்களின் காப்பாளர்களாகத் தம்மை முன்னிறுத்திக் கொண்டு, இசுலாமிய மன்னர்களின் நன் மதிப் பையும் பெற்றனர். இந்திய நாட்டைப்பற்றியும், மக்களைப் பற்றியும் அறிந்திராத இசுலாமிய மன்னர்கள், தங்கள் ஆட்சி நிலைகொள்ளவேண்டி, பிராமணர்களையே தம்பக்கத்திலும் வைத்துக் கொண்டனர். பிராமணர்களுக்கு அளிக்கப்படும் உதவிகளும் சிறப்புகளும், இந்நாட்டு மக்களுக்கே அளிக்கப் பட்டதாக, ஆட்சியாளர்களையும் நம்பவைத்தனர்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆண்ட 200 ஆண்டுகால அளவுகளில், மன்னர்கள் வழியில் நிறைவேற்றப்படாமல் இருந்த பலவற்றை, அக்காலங்களில் நிறை வேற்றிக் கொண்டனர். பாரசீக மன்னர்கள் காலத்தில் இசுலாம் பரப்பப்பட்டபொழுதோ, ஆங்கிலேயர் காலத்தில் கிறித்துவம் மொழியப்பட்ட பொழுதோ, ஆரியப் பிராமணர்கள் எதிர்ப்பேதும் தெரிவிக்கவில்லை.

இந்தியப் பண்பாட்டில் மேலைநாட்டுச் சமயங்கள் ஊடுருவி அழிக்க முற்படுகின்றன என்று கூக்குரல் இடவில்லை. அக்காலங்களில் ஆண்டு கொண்டிருந்தவர்களையே அடிவருடிக் கொண்டிருந்தனர். கி.பி. 16-17 நூற்றூண்டுகளில், கிறித்துவ சமயத்தைப் பரப்பவந்த ஐரோப்பியவிடையூழியர்களுக்கு, விவிலியத்தைத் தமிழில் மொழிமாற்றம் செய்து கொடுத்தவர்கள் பிராமணர்களே. அதற்கான நல்ல தொகையை அவர்களிடமிருந்து பெற்றுக் கொண்டு, வடமொழியும் தமிழும் கலந்த “மணிப்பிரவாள”த் தமிழை உரைநடையாக அறிமுகம் செய்தனர். கிறித்துவ அமைப்புகளில் சிலர், இன்னும் அந்த பிராமணத் தமிழ் விவிலியத்தையே பயன்படுத்தி விருகின்றனர்.

இந்திய விடுதலைப்போரில் பிராமணர்களின் ஈடுபாடுங் கூட, ஆங்கிலேயரை வெளியேற்றவேண்டும் என்ற நோக்கத்திற்காக அன்றி, விடுதலை பெற்றபின் ஆரியக்கொள்கைகளைக் கொண்ட, ஆரிய அரசை (Hindu Rashtra) இந்தியாவில் தோற்றுவித்து, கடந்த நூற்றாண்டுகளில் இழந்திருந்ததாகக் கருதப்பட்ட பல பயன்களைப் பெறுவதற்கே என்று அறிதல் வேண்டும். தமிழ் மொழியையும் தமிழ்ச் சமயத்தையும் அழித்த ஆரியர்களின் அழிப்புக் கணக்குச் சொல்லி மாளாது. கிறித்துப் பிறப்பாண்டுக் காலங்களில் இந்தியாவெங்கும் நிலை பெற்றிருந்த புத்த-சமணக் கோயில்கள், பிற்காலத்து மன்னர்களால், ஆரியத்தூண்டுதலின் பேரில், ஆரியச்சார்புடைய கோயில்களாக மாற்றம் பெற்றன. ஆரியர்கள் எந்தக் கோயிலையும் கட்டியதாக வரலாறு கூறவில்லை. இவ்வாறு மாற்றம் செய்யப்பட்ட ஒரு புத்தக் கோயிலே, பிற்காலத்தில் பாபர் கட்டிய, ஆரியக் கோயிலாகும். புத்தக் கோயில் ஆரியர் வழிபாட்டிடமாக மாற்றம் செய்யப்பட்டதை, பாபர் இசுலாமிய வழிபாட்டிடமாக மாற்றினார் என்பதே வரலாற்றுண்மையாகும்.

இந்தியாவை இந்தியர்களே ஆள வேண்டும் என்பது ஆரியத்தின் புதிய கொள்கையாகக் கூறப்படுகிறது. இந்தியாவை இந்தியனே ஆள வேண்டும் என்றால், இந்திய நாட்டின் தொன்மைக் குடியான தமிழனே இந்தியாவை ஆளவேண்டும். அன்றி, தமிழ் மரபுகளின் தோற்றங்களாக இன்று வட இந்தியப் பகுதிகளில் வாழ்ந்து வரும் சாட் (Jats) மரபினரோ, யாதவ மரபினரோ, தீண்டத் தகாதவர்களாக்கப்பட்ட ஆதி தமிழரோ

அல்லது ஆதி இந்தியரோதான் ஆளவேண்டும். கி.மு. 2000 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தியாவில் குடியேறிய ஆரியரும் இந்தியரை பொருத்தவரை அவர்கள் வெளிநாட்டினரே.

இன்று இந்திய அரசியல் அரங்கில், அனைத்து இயக்கங்களிலும் (பொதுவுடைமைக்கட்சி உட்பட) ஊடுருவி விட்ட ஆரியர்கள், தங்கள் நலனை முன்னிறுத்தியே, அனைத்துத் திட்டங்களையும் வகுக்கின்றனர். மாநிலப்பட்டியலில் இருந்த கல்வியை, நடுவண்பட்டியலுக்கு மாற்றிய இந்தியப் பேராயக் கட்சி, ஆரியர்களின் பின்புலத்து இயக்கத்தால் அவ்வாறு செயல் பட்டது. அதன் விளைவுகளாக, அடுத்து ஆட்சிக்கு வந்தவர்கள், இந்திய வரலாற்றையே மாற்றி எழுதிவிட்டனர். தமிழுக்காக வும், தமிழர்களுக்காகவுமே பிறந்திருப்பதாகக் கூறிக்கொள்ளும் திராவிடக் கட்சியினர், தமிழருக்காக எதையும் செய்துவிட வில்லை. ஆரியர்களிடம் ஏமாந்துப் பழக்கப்பட்ட தமிழரை, இன்று தமிழ் இயக்கங்களே ஏமாற்றி வருகின்றன.

தமிழ்ப் போராளிகள் எனக் கூறிக் கொள்ளும் சிலர், வன்முறைகளில் நாட்டங் கொண்டு, தமிழ் இளைஞர்களைத் திசைதிருப்பி விடுகின்றனர். ஆரியர்கள் எந்த வன்முறையையும் கையாண்டு, தங்கள் ஆளுமையை நிலை நிறுத்திக் கொள்ள வில்லை என்பதை இவர்கள் புரிந்து கொள்ளவேண்டும். தந்தை பெரியாரைப் போன்ற அறிவுச் சுடரை ஏற்றும் தமிழ்த் தலைவர் களே இன்று தமிழகத்துக்குத் தேவைப்படுபவர்களாக உள்ளனர். மக்களின் சிந்தனைகளைத் தூண்டவும், தமிழர் தம் இலக்கு களைக் கல்வி மேம்பாட்டினால் அடையவும், தமிழகத்தின் ஆட்சியாளர்கள் திட்டங்கள் வகுக்கவேயில்லை. தாய்மொழி யாம் தமிழில் கல்விபயல, தமிழ்மக்களே தடைப்படுத்தப் படும் நிலைமைகள், தமிழர் என்று சொல்லிக் கொள்ளும் திராவிடக் கட்சியினரின் செயல்பாடுகள் தமிழர் மீது கொண்டிருக்கும் பற்றிற்கு எடுத்துக்காட்டாகும்.

கடந்த 19ஆம் நூற்றாண்டில் இறுதியில், பிராமணராகத் தப்பிப் பிறந்த சூரிய நாராயண சாத்திரியார் என்ற **பரிதிமாற் கலைஞர்**, தமிழ்ச் சுடரை ஏற்றி வைத்த பிற்காலத் தமிழறிஞர் ஆவார். இவரைத் தவிர வேறெந்த பிராமணரும், இவர் காலத் துக்குப் பிறகு தனித்தமிழில் தமது பெயரை மாற்றிவைத்துக்

கொண்டதாகக் கூற இயலாது. அடுத்து வந்த கரந்தையின் **தமிழவேள் உமா மகேசுவரனாரும், தந்தை மறைமலையடி களும்** தமிழின் ஏற்றத்துக்குத் தூண்டு கோல்களாக விருந்தனர். தமிழைச் செம்மொழியென அரசு அறிவிக்கவேண்டுமென குரல் கொடுத்தோர் இவரே. அடுத்து வந்துற்றப் **பாவாணர் தேவ நேயர்**, தமது சீரிய அறிவுத் திறத்தால், மொழியறிவால், தமிழின் தொன்மையைச் சான்றுகளுடன் விளக்கினார். மொழியியல் துறைக்கு முதல் அடியை எடுத்துவைத்தவர் பாவாணரே.

இருபதாம் நூற்றூண்டின் தொடக்கத்தில் நடைபெற்ற புவியியல் அகழ்வாய்வுகளால் குறிப்பாக சிந்து வெளியிலும், ஈராக் நாட்டின் யூப்ரடீசு-தைகிரீசு ஆற்றுப் பகுதிகளிலும், தமிழரின் தொன்மைக்கால வரலாறுகள் தோண்டி எடுக்கப் பட்டன. பாபிலோனிய, எபிரேய, எகிப்திய, கிரேக்க மொழி களில் தமிழ் இரண்டறக் கலந்திருப்பது, இன்று ஆய்வுகள் வழி யாக மெய்ப்பிக்கப்பட்டு வருகின்றன. ஆரியம் என்ற மொழியும் கூட, பாபிலோனியத் தமிழினின்றும் திரிபுபட்ட மொழியாகவே உள்ளது. மேற்கண்ட மொழிகளுக் கெல்லாம் தாய்மொழி தமிழே என்பதை நிலை நிறுத்தி நிறுவுங்காலம், தொலைவில் இல்லை எனலாம்.

ஆரியம் என்ற சொல்லே தமிழ்ச் சொல்லாயிருக்க, அவர்கள் மொழி தமிழினும் மூத்த மொழி என்பது நகைப்பிற்கிடமானது. கீழை ஆரியம் எனப்படும் சமற்கிருதம், கி.மு. 1500-1000 ஆண்டு களில், சிந்துவெளித் தமிழ் மொழியுடன் மேலும் கலந்து உருவான மொழியே. சம் என்ற முன்னொட்டுச் சொல்லே, செம்மை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். சமற்கிருதம் என்பதே செம்மைப்படுத்தப்பட்ட மொழியெனப்படும். ஒரு காலத்தில் அது செம்மையுற்றிருக்கவில்லை என்பதை, அதன் பெயரே உணர்த்தும். தங்கள் இனத்துக்கும் மொழிக்கும் தமிழ்ச் சொற் களையே கொண்டுள்ள ஆரியர், தமிழினின்றே அனைத்தையும் கடனாகப் பெற்றனர் என்பது தெளிவு. பாவாணர் அவர்கள் கூட, சமற்கிருதத்தில் நாற்பது விழுக்காடு தமிழ்ச் சொற்கள் உள்ளனவெனக் கூறினார். ஆனால் உண்மைநிலை அதற்கும் கூடுதலாக இருக்கும் என ஆய்வுகள் மெய்ப்பிக்கின்றன.

இந்நூல், ஆரியம் இந்தியாவில் நிலைபெற்ற வரலாற்றை முதற்பகுதியாகவும் டாக்டர் உ.வே.சா. அவர்களால் ஆரியச்

சொற்கள் எனக் கூறப்பட்ட தமிழ்ச் சொற்கள் சில எவ்வாறு தமிழின் வேர்ச் சொற்களாகவுள்ளன என்பதை இரண்டாம் பகுதியாகவும் விளக்க முற்பட்டுள்ளது. இந்நூலை எழுதத் துணிந்த போது அதற்கான ஊக்கத்தைக் கொடுத்து, பிழைகளை யும் திருத்திக் கொடுத்த, தமிழறிஞர், தமிழ்ப்பெரும்புலவர், **திரு. இரா. தமிழ வேந்தன்** அவர்களுக்கும், எழுத்து நிலையி லேயே, அவ்வப்போது படித்துப் பார்த்துச் சேர்க்கை நீக்கல் களைச் செய்ய அறிவுரை வழங்கிய, அரசு மேனிலைப் பள்ளி, மேனாள் தலைமை ஆசிரியர், **திரு. அய்.சிவ. கோவிந்த சாமி** அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை வடிவமைத்து அச்சிட்டு உதவிய ஸ்ரீராக வேந்திரா லேசர் பிரிண்டர்ஸ் நிறுவனத்துக்கும் அவர்களுக்கும் எனது நன்றி.

அரியலூர் **– ம.சோ. விக்டர்**

பகுதி – I

# 1

## ஆரியர் என்போர் யாவர்?

"வடமேற்குப் புல்வெளிப் பகுதியினின்றும் இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியர், இந்தியாவின் தொன்மக்குடிகள் அல்லர். தொன்மக்குடிகளாக மொகஞ்சதாரோவில் வாழ்ந்திருந்த பண்பாட்டில் சிறந்திருந்த மக்களுடன், ஆரியர்களுக்கு மரபியல் தொடர்பும் இருந்திருக்கவில்லை. சொல்லப்போனால், தொன்மக்குடிகளின் நாகரிக வாழ்வைப் பற்றி ஆரியர்கள் அறியாதிருந்தனர். ஆரியர்கள் புல்கண்டவிடத்துக் கால்நடைகளை ஓட்டிச் சென்ற நாடோடி இனத்தவரும், சிறுசிறு குழுக்களைக் கொண்ட மரபினருமாக இருந்தார்கள்," என்று உருசிய வரலாற்றறிஞர் செர்கி தாக்கரேவ் கூறுகிறார்![1]

ஆரியர் என்போர் யாவர்? அவர்களது பிறப்பு நாடு எது? அவர்களின் தாய் நாட்டைவிட்டு எந்நோக்கிற்காக வெளியேறினார்கள்? ஆரியர்கள் உண்மையில் இந்தியப் பழங்குடியினரா? இந்தக் கேள்விகளுக் கெல்லாம் இது வரையில் தெளிவான விடைகளை அளிக்க இயலவில்லை. ஆரியர்களைப் பொறுத்த வரை இரண்டு வகையான வரலாற்றாய்வர்கள் உண்டு. முதலாமவர், உண்மையான வரலாற்றை வெளிக்கொணர முயன்றவர்கள். பின்னவர்கள், ஆரியர்கள் இந்தியாவின் தொன்மைக் குடிகளே என நிறுவுவதற்கு ஏற்ற கரணியங்களைத் தேடிகொண்டிருந்தவர்கள். இந்தியாவிலும் சரி, மேலை நாடுகளிலும் சரி, இவ்விரு வகையான ஆய்வாளர்களே இருந்து வந்துள்ளனர். இந்தியாவைப் பொறுத்து, இடது பிரிவைச் சேர்ந்த சிந்தனையாளர்களும் ஆய்வாளர்களும், ஆரியர் வெளிநாட்டவரே என்றும், ஆரியர் மரபைச் சார்ந்தவர்கள், அவர்கள் இந்தியர்களே

1. The History of Religion, p. 161.

என்றும் வாதிட்டு வருகின்றனர். ஆட்சியாளர்களிலும் இவ்வாறான இருவேறு நிலைகளைக் கொண்டவர்களே இந்தியாவில் உள்ளனர்.

கி.பி. 19ஆம் நூற்றாண்டின் இறுதி வரையிலும், ஆரியர்கள் இந்தியாவின் தொன்மைக் குடிகளே என்றும், அவர்கள் இயற்றிய வேதங்களும் புராணங்களும், பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே படைக்கப்பட்டன என்றும், ஆரியர்கள் பேசிய சமற்கிருத மொழியே இந்திய நாட்டின் முதல் மொழி என்றும் கூறிவந்தனர். இதனை மறுப்பதற்கான சான்றுகளும், வரலாற்றுச் செய்திகளும் தெளிவுபடக் கிடைக்காத கரணியத்தினால், ஆரியர்கள் இந்தியாவின் தொன்மக் குடியினரே என்ற கருத்து பரவலாக இருந்து வந்தது. இதன் வழியில் தமிழ் மொழியும், வட மொழியினின்றும் பிறந்ததே என்றும், தமிழில் உள்ள வடசொற்களே இவற்றிற்கான சான்றுகள் என்றும், வடமொழியின் கலப்பின்றித் தமிழ் தனித்தியங்கவியலாது என்றும் கூறிவந்ததைத் தமிழர்களும் கூட ஏற்றுக் கொண்டனர்.

கி.பி. 1920களில், ஆங்கிலேயர் ஆளுகையின் போது, இன்றைய பாகித்தான் பகுதியான பஞ்சாபில், (இரயில்) புகை வண்டித் தொடர் வழிகள் போடப்பட்டபோது, உயர்ந்து நின்ற மண்மேடுகளைச் சிதைத்தனர். அப்போது அப்பகுதியில் புதைந்து கிடந்த நகரைக் கண்டுபிடித்தனர். இவ்வாறு பல நகரங்கள் 700 கி.மீ. இடைவெளிகளில் அடுத்தடுத்து கண்டுபிடிக்கப் பட்டன. இப்புதையுண்ட நகரங்கள், வரலாற்றில் புதிய ஒளிக் கற்றைகளை வீசின. அங்கு கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் பலவும், அங்கு வாழ்ந்திருந்த மக்கள், மிகச் சிறந்த நகரிய நாகரிகத்தில் வாழ்ந்திருந்தனர் என்பதை மெய்ப்பித்தன.

திட்டமிட்டு உருவாக்கப்பட்டிருந்த நகரமும், நகரத்தினூடே செல்லும் நேரான தெருக்களும், தெருக்களின் இருசாரிகளிலும் கட்டப்பட்டிருந்த வீடுகளும், வீடுகளில் அமைவுற்றிருந்த நீராடும் அறைகளும், நீராடும் அறைகளின் நீர் வழிந்தோடும் கால்வாய்களும், அக்கால்வாய்கள் தெருக்களின் விளிம்பில் விடப்பட்டு, ஊருக்கு வெளியே வழிந்தோட செய்யப் பட்டிருந்த ஏற்பாடுகளும், ஆய்வு செய்தவர்களை அதிர்ச்சிகளுக்குள்ளாக்கின. வீடுகளின் தரையில் பாவப்பட்டிருந்த வழவழப்பான ஓடுகள் (Tiles) இன்றைய ஓடுகளுக்கு எவ்வகை

யிலும் தரத்திலோ, வழவழப்பிலோ குறைவு படாதவைகளா யிருந்தன. அரிமா, புலி, காளை உள்ளிட்ட கால்நடைகள், ஒற்றைக் கொம்பன் (Reno) போன்ற விலங்குகள், அம்மக்களின் விலங்குகள் பற்றிய பட்டியலில் இடம்பெறுகின்றன. செம்பு அவர்களின் முதற்கனிமமாக இருந்துள்ளது, பொன்னும் வெள்ளியும், அதன்வழி செய்த நகைகளும் மிகுந்த வேலைப் பாடுகள் உடையவைகளாயிருந்தன. இரும்பின் பயன்பாடு அறியப்படவில்லை. புரவி என்ற குதிரையைப் பற்றிய செய்தி கள் அறியப்படாததால், புரவியின் பயன்பாட்டை அம்மக்கள் கொண்டிருக்கவில்லை எனலாம். இன்னோரென்ற ஆய்வுப் பொருட்களும், சிந்து வெளியில் வாழ்ந்த மக்கள், உலகின் தலைசிறந்த நாகரிகத்தில் வாழ்ந்தவர்களே என மெய்ப்பித்தன.[2]

வழக்கம் போல் எதையும் தாங்களே முதலில் செய்ததாகக் காட்டிக் கொள்ளும் ஆரியரும், ஆரியரின் புகழ்பாடும் வரலாற்று ஆய்வாளர்களும் எந்தவொரு ஆய்வு முடிவும் மேற் கொள்ளப் படாத நிலையில், அந்நாகரிகம் ஆரிய நாகரிகமே என அவர் களாகவே முடிவு செய்து, அறிவித்தும் விட்டனர். வேதகாலங் களில், இவ்வாறான வாழ்க்கை முறைகளை ஆரியர் கைக் கொண்டிருந்தனர் என்றும் செய்திகளை வெளியிட்டனர். ஏறக் குறைய பத்தாண்டுகாலம், இந்நாகரிகம் பற்றிய செய்திகளை வெளியிடுவதில் குழப்பமடைந்திருந்த வரலாற்று ஆய்வாளர்கள், கி.பி. 1930களில், இது தமிழர் (திராவிடர்) நாகரிகமே என உறுதிபடத் தெரிவித்தனர். அவர்களில் சிறப்பானவர் வணக்கத்துக் குரிய ஈராஸ் பாதிரியார் (Rev. Fr. Heras) ஆவார். சிந்துவெளி மக்களின் கடவுள் வணக்க முறைகளையும், எழுத்துக்களையும் ஆய்வு செய்து, இது தமிழர் நாகரிகமே என்றும், இதன் காலம், கி.மு. 3500 ஆண்டுகள் என்றும் அறிவித்தார்.[3] இந்த ஆய்வின் முடிவுகளையுங் கூட தமிழறிஞர்கள் பலர் ஏற்றுக் கொள்ள வில்லை. ஏனெனில் அவர்கள் எல்லோரும் ஏற்கனவே, கூறி யிருந்த கருத்துகளுக்கு இவை மாறுபட இருந்தன என்பதால், புதிய கருத்தை மறுத்தனர். ஆரிய நாகரிகமே என்று சொல்லி வந்தவர்கள், பிறகு இந்திய நாகரிகம் என்றனர். எந்த வகையிலும் இப்பெருமை தமிழனைச் சென்றடையக் கூடாது என்பதில் உறுதியாக இருந்தனர்.

---

2. இந்திய வரலாறு, ந. சுப்பிரமணியன், பக். 22-25.
3. மேலதே, ப. 22.

*அண்மையில் (2002),* உலோத்தள் (Lothal) என்ற சிந்து வெளியின் துறைமுக நகருக்கு அருகில் (காம்பே வளைகுடா), கண்டெடுக்கப்பட்ட, மரக்கலத்தின் உடைந்த துண்டொன்றினை ஆய்வு செய்தவர்கள், சிந்துவெளி மக்களின் காலம், கி.மு. 7500க்கு முற்பட்டது என உறுதி செய்தனர்.[4] இதனை நாளிதழ்களின் செய்தித் தொடர்பாளர்களுக்கு அறிவித்த மேனாள் மாந்தவள மேம்பாட்டு அமைச்சர் முரளி மனோகர் ஜோஷி, இதனை இந்திய நாகரிகம் என்றே குறிப்பிட்டார். **ஆரிய நாகரிகம் என்று சொல்லச் சான்றுகள் இல்லாததும், தமிழர் நாகரிகம் என்று சொல்ல மனமில்லாததும், அவரை இந்திய நாகரிகம் என்று உரைக்கத் தூண்டியது.**

கி.பி. 1940க்குப் பிறகு, இந்தியாவில் ஆரியர்கள் நிலைபெற்றிருந்த காலமும், அவர்களது வருகையும் பற்றிய செய்திகளை அறியும் ஆவலும் ஆய்வாளர்களிடையே பெருகிற்று. இதன் பிறகே, ஆரியர் என்பார். இந்திய நாட்டின் தொல்குடியினர் அல்லர் என்பதும், அவர்கள் இந்தியாவில் வந்து குடியேறியவர்களே என்பதும் உறுதிப்படலாயிற்று. இந்தக் கோணத்தில் ஆய்வுகள் தொடரப்பட்டன. அப்படியானால் ஆரியர் என்போர் யாவர், அவர் எந்நாட்டினின்றும் இந்தியப் பகுதிக்குள் நுழைந்தனர், அவர்கள் குடிபுகுந்த காலம் எது, என்பன போன்ற ஆய்வுகள் தொடங்கின.

ஆரியர்களின் இந்திய வருகை குறித்த காலத்தை முடிவு செய்ய, சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட பொருட்களையும், கிடைக்கப்பெற்ற செய்திகளையும் அடிப்படைகளாகக் கொண்டும், ஆரியர்களின் நான்கு வேதங்களிலும், தொன்மக் கதைகளிலும் (புராணங்கள்) சொல்லப்பட்டுள்ள செய்திகளைக் கொண்டும், இவைகளை ஒப்பீடு செய்து சில முடிவுகள் எடுத்தனர். முதலாவதாக, புரவியின் பயன்பாடு பற்றி அறியாத சிந்து வெளி மக்களின் காலம், புரவியின் பயன்பாட்டை அறிந்திருந்த ஆரியர்களின் காலத்திறகும் முற்பட்டது என முடிவுசெய்தனர். காளையை தெய்வமாக வணங்கிய சிந்து வெளிமக்கள், பசுவை வணங்கிய ஆரியரின் வணக்க முறையினின்றும் மாறுபட்டிருந்

4. Indian Express, English Daily. Sahani Institute of Palaeobotany and the National Geophysical Research Institute, New Delhi, dt. 17.01.2002 Tuesday.

தனர். ஆரியரின் தொடக்க கால வேதமான இரிக்கு வேதத்தில், அரிசி, புலி, அரிமா, யானை, ஒற்றைக் கொம்பன் இவைகளைப் பற்றிய செய்திகள் இல்லாமையால், ஆரியர்கள் இந்தியாவின் தொன்மைக் குடிகளாக இருந்திருக்க வாய்ப்பில்லை என முடிவு செய்தனர்.[5] ஆடுமாடுகளை மேய்த்து, புல்கண்டவிடங்களில் புலம் பெயர்ந்து சென்ற ஆரிய மக்கள், நகரிய நாகரிகத்தை அறியாதவர் என்றும், சிந்துவெளி மக்கள் ஆரியரினும் மிக உயர்ந்த நாகரிகத்தைக் கைக்கொண்டிருந்தனர் என்றும் சுட்டிக் காட்டி, சிந்துவெளி மக்களே ஆரியரினும் மூப்புடைய இந்தியக் குடிகள் என உரைத்தனர்.[6]

கி.பி. 1940களில், தமிழ் நாட்டில் செல்வாக்குப் பெற்றிருந்த திராவிட இயக்க உணர்வுகளும், சிந்துவெளி மக்கள் பால் தமிழர்களின் கவனத்தை ஈர்த்தன. தமிழ் வரலாற்றறிஞர்களில் பலர், முனைப்புடன் சிந்து வெளிபற்றிய வரலாற்றுச் செய்தி களை ஆய்வு செய்யத் தொடங்கினர். வடநாட்டில் வாழ்ந்திருந்த வரலாற்று ஆய்வாளர்களும், புதுப்புது கோணங்களிலும், புதிய அறிவியல் அணுகு முறைகளிலும், ஆய்வு செய்து, இருபதாம் நூற்றாண்டின் இறுதியில், சிந்துவெளி நாகரிகம் தமிழர் நாகரிகமே என முடிவு செய்துவிட்டனர். டாக்டர். இரா. மதிவாணன் அவர்கள், சிந்துவெளி எழுத்துக்களையும் ஆய்வு செய்து அவை தமிழ் எழுத்துக்களே என்றும், அவ்வெழுத்துக்கள் கூறும் செய்திகள் யாவை என்பனவற்றையும் அறிந்து கூறியுள் ளார். இந்நிலைகளிலும் கூட, தொல்தமிழரின் சிந்துவெளி நாகரிகம், சில ஆங்கிலேய ஆய்வாளர்களால் முடிவு செய்யப் பட்ட செய்தி என்றும், அதனையே சில தமிழ் வெறி பிடித்தவர் கள் முன்னிலைப் படுத்தி, மக்களை திசை திருப்பி வருகின்றனர் என்றும் கூறிக் கொள்வதில் மகிழ்ச்சியடைந்து வருகின்றனர்.[7]

ஆரியர் என்போர் யாவர் என்பதும், அவர்களுடைய தாய் நாடு எதுவென்பதும் இன்றும் கூட விடையிறுக்க இயலாத நிலையிலேயே உள்ளன. ஏறக்குறைய 4000 ஆண்டுகட்கு முன்பு நடு ஆசியா அல்லது கீழ் ஐரோப்பா என்ற ஏதோவொரு பகுதி

---

5. இந்திய வரலாறு. ந. சுப்பிரமணியன், ப. 22.
6. The History of Religion, p. 22.
7. தினமணி நாளிதழ், நாள், 19.2.2002.

யினின்றும் புற்றீசல் போல் கிளம்பிய ஆரியர் கூட்டம், அவ்விடங்களினின்றும், தெற்கு, தென்மேற்கு, கிழக்கு ஆகிய பகுதிகளுக்குள் நுழைந்தது என்கிறார், டாக்டர் ந. சுப்பிரமணியம். இதில் கீழ் ஐரோப்பா என்ற பகுதியே ஏற்புடையதாக இருக்கும் என்பது பலரது கொள்கையாகும். பன்னெடுங்காலம் கீழ்ஐரோப்பாவில் வாழ்ந்திருந்த ஆரியர், தங்கள் தாயகத்தைவிட்டுக் கிளம்புவதற்கான கரணியங்கள் யாதென யாராலும் இது வரை விளக்கப்படவில்லை. இந்திய விடுதலைப் போரின் முன்னோடியாகத் திகழ்ந்த பால கங்காதர திலகர்[8] என்னும் மகராட்டிரப் பிராமணர், ஆரியர்களின் தாயகம் வடமுனை அருகில் இருந்த பனி மிகுந்திருந்த நாடு என்றும், பனி உருகல் கடுங்குளிர் போன்ற கரணியங்கள் பற்றி, அவர்கள் தெற்கு நோக்கித் திரும்பினர் என்றும், அக்கூட்டப் பெயர்ச்சி, இறுதியில் இந்தியாவில் நிலைத்தது என்றும், செர்மனி முதற்கொண்டு இந்தியா வரையிலான பகுதிகளில், ஆங்காங்கு சில குழுக்கள் நிலைத்துவிட்டன என்றும், எஞ்சிய குழுக்களே பாரசீகத்திலும் இந்தியாவிலும் நிலைபெற்றன என்றும் கூறுகிறார். தங்களுடைய தெய்வம் வாழ்ந்த பனி மலையை, இந்தியாவில் கைலாயத்தில் உருவாக்கி, அங்கு சிவன் என்கிற உருத்திரன் வாழ்ந்திருந்ததாக அறிவித்தனர் என்றும் கூறுகிறார். திலகருடைய கொள்கையை வரலாற்றாய்வாளர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

பர்ஜிதர் (Pargiter) என்பார் ஒரு கொள்கையை அறிவித்தார்.[9] ஆரியர்கள் நடு இந்திய (Middle India)ப் பகுதிகளில் வாழ்ந்திருந்த பழங்குடியினர் என்றும், இந்தியாவினின்றும் மேற்கு நோக்கிச் சென்ற ஆரியர், பாரசீகம் உள்ளிட்ட பலபகுதிகளையும் வென்று, இறுதியில் செர்மனிப் பகுதியில் சிலர் நிலைத்தனர் என்றும் கூறுகிறார். பர்ஜிதரின் கூற்று மற்ற ஆய்வாளர்களின் கொள்கைகளுக்கு மாறுபட்டதாக உள்ளது. இது பொதுவாக கூறப்படும் கொள்கைகளை மறுத்த, தலைகீழ்க் கொள்கை என்று, பெரும்பாலோரால் மறுக்கப்பட்டது. ஆடுமாடுகளை மேய்த்து வந்த நாடோடி இனமாகக் கருதப்படும் ஆரிய இனம், தங்கள் கால் நடைகளுக்கான புல்வெளிகளைத் தேடியே பல பகுதிகளுக்கும் பிரிந்து சென்றனர் என்ற கூற்றும் முழு அளவில்

8. இந்திய வரலாறு, ப. 27.
9. Bhishma's, History of Tamilakam, Introduction, p. 4.

ஏற்க இயலாததாகவே உள்ளது. கடும் போராட்டம், இயற்கைச் சூழல்களின் அச்சுறுத்தல், சரியான போக்குவரத்து கட்டமைப்புகள் இல்லாத அக்காலத்தில், ஆரியர் கூட்டம் இந்தியாவிற்கு வருகைதர எடுத்துக் கொண்ட முயற்சி, அவர்கள் திட்டமிட்டே இந்தியாவுக்குள் வர எண்ணினர் என்பதை உறுதிப்படுத்துகின்றது. சிந்துவெளியின் வளமை, அங்கு வாழ்ந்திருந்த மக்களின் செல்வம், நிலையாகத் தங்குவதற்கேற்ற அமைதிச்சூழல், தங்கள் கால் நடைகளுக்குத் தேவையான புல்வெளிகள் அனைத்தும் ஒருங்கே அமைவுற்றிருந்த சிந்துவெளிப் பகுதியைப் பற்றி அறிந்து, அப்பகுதிச் சென்று தங்குவதே சிறப்புடையதாக அமையும் என திட்டமிட்டே அவர்கள் இந்தியாவுக்குள் நுழைந்திருக்க வேண்டும். ஆரியர்கள் செர்மனியிலிருந்து புறப்பட்டு, கிரேக்கம், காகேசியம், ஆர்மீனியா, காஸ்பியன் கடலுக்குக் கிழக்கேயுள்ள பகுதிகள், பாரசீகம் ஆகிய பகுதிகள் வழியாக இந்தியாவுக்குள் நுழைந்தனர் என்ற கூற்றுக்கும் சான்றுகள் இல்லை.

ஆனால் சிறிய ஆசியா (Asia Minor)ப் பகுதியான கப்படோசியா என்ற இடத்தில் ஆரியர்கள் தங்கியிருந்தனர் என்பதற்கான சான்றுகள் உள்ளனவென்று சிலர் கூறுவர்.[10] கி.மு. 1400 ஆண்டுகளைச் சார்ந்த சில எழுத்துக் குறிப்புகளைக் கண்டெடுத்த செர்மானிய தொல்பொருள் ஆய்வாளர்கள், அக்குறிப்புகள், ஆரியர்களுக்கும் அப்பகுதியில் வாழ்ந்திருந்த மக்களுக்கும் இடையே ஏற்பட்ட சில உடன்பாடுகளை விளக்குவதாகக் கூறுகின்றனர். அக்காலத்தில் சிறிய ஆசியா, வடக்கு மெசபத்தோமியா ஆகிய பகுதிகளை கேசியர் (Kassites) என்ற மரபார் வென்று, பாபிலோனியப் பகுதியை ஆண்டு கொண்டிருந்ததாக, பாபிலோனிய வரலாறு கூறுகிறது.[11] அக்காலத்தில், எகிப்து நாட்டில் 18ஆம் மன்னர் மரபைச் சார்ந்த (18th dynasty) அமென் தேவு (III Amenhetep) என்ற மன்னன் ஆண்டு வந்ததாக, எகிப்திய வரலாறு கூறுகிறது.[12] ஏறக்குறைய, கி.மு. 1400-1300 ஆண்டுகளில், கேசியர்களையோ, எகிப்து மன்னர்களையோ, எந்தப் படை

---

10. இந்திய வரலாறு, ப. 29.
11. The Men and Message of the old Testament Panorama of Biblical History-Annexure.
12. Ibid.

எடுப்பும் அச்சுறுத்தவில்லை என்று வரலாற்று நிகழ்வுகள் கூறுகின்றன. கி.மு. 1400களில், கிரேக்கத்துக்கு தெற்கேயுள்ள கரட்டுத்தீவை (Crete) ஆரியர்கள் கைப்பற்றினர் என்ற செய்தி உறுதிப் படுத்தப்பட்டுள்ளது.[13] இக்கரட்டுத்தீவைப் பிடித்த ஆரியக் குழுவிற்கும், இந்தியாவுக்கு வந்த ஆரியக் குழுவிற்கும் தொடர்பில்லை எனலாம். ஆரியர்களால் வெளியேற்றப்பட்ட, கரட்டுத் தீவின் மக்களில் ஒரு பகுதியினரே, இசுரேல் நாட்டின் கிழக்குப் பகுதியான, காசப் (Gaza) பகுதிகளில் குடியேறிய பிலித்தியர் (Philistines and now Palestenians) என்று அழைக்கப் பட்ட பாலத்தீன மக்கள் என்பர்.[14]

கி.மு. 1400களில், கிரேக்கம் என்ற ஒருநாடு நிலைப்படாமல், தனித்தனி நகரங்கள், ஊர்களின் ஆளுகைக்குட்பட்டிருந்தது.[15] பெரும்பாலான கிரேக்கர்கள் தங்கள் வறுமையைப் போக்கிக் கொள்ள, கிழக்குப் பகுதிகளான சிறிய ஆசியா, பாபிலோன், ஃபோனீசியா போன்ற நாடுகளில் உடலுழைப்பை அளிக்கும் தொழிலாளிகளாகவே வாழ்ந்து வந்தனர். கிரேக்கர்களின் மொழி வளர்ச்சியும், இலக்கிய வளர்ச்சியும் இக்காலத்துக்குப் பிறகே, ஓமர் போன்ற கவிஞர்களால் பெருமை பெற்றன.[16]

இவ்வாறு கி.மு. 1400 இல் கண்டெடுக்கப்பட்ட குறிப்பு களில் கிடைத்துள்ள செய்திகள், அசீரிய மொழியில் எழுதப் பட்டவைகளாகும். ஆரியர்களுக்கென்று ஒரு மொழி இருந்தது பற்றியும், அதற்கான வரிவடிவங்கள் பற்றியும் செய்திகள் இல்லை. நடு ஐரோப்பாவினின்றும் புறப்பட்ட ஆரியர்களின் குழுக்கள் கிரேக்கப் பகுதிகளை, கி.மு. 1400களில் வென்றதாகக் கூறப்படும் ‘பெரும் ஆரியர் எழுச்சி’[17] (Great Aryan invasion) எந்த அளவிற்கு முழுமை பெற்றது எனக் கூறவும் சான்றுகள் இல்லை. இந்தியாவுக்குள் நுழைந்த ஒரு குழுவானது, முதலில் பாரசீகத்தில் தங்கியிருந்ததாகவும், அக்குழுக்களிடையே தோன்றிய கருத்து வேறுபாடுகளால், இரண்டு குழுக்களும் போரிட்டு

---

13. Ibid.
14. Ibid.
15. History of Religion, p. 260.
16. Lebanon-Phoenician Alphabet, Lonely planet, p. 14.
17. The Men and Massage of the Old Testament, Annexure.

கொண்டதாகவும், அப்போரில் தோற்ற குழுவினர், இந்தியாவுக்குள் நுழைந்ததாகவும் ஒரு கொள்கையை வகுத்துள்ளனர்.[18]

இவ்விரண்டு குழுக்களுக்கும் இடையில் தோன்றிய போருக்கான கரணியம் யாதென கூறப்படவில்லை. இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியர் தங்களைத் தேவர் என்றும், பாரசீக ஆரியரை அசுரர் என்றும் அழைத்தார்கள் என்றும் கூறப்படுகிறது. இதன் வழியில் தேவர்கள் உயர்ந்தவர்கள் என்பதும், அசுரர்கள் தீயவர்கள் என்பதுமாக அறியக் கிடக்கின்றது. இந்தியாவில் ஆரியர்களுக்குத் தொல்லைகள் கொடுத்தவர்களையும், அசுரர்கள் என்றே அழைத்தனர். ஆனால் இதற்கு நேர்மாறான கருத்தை, செண்டு அவெஸ்தா (Zend Avesta) என்ற பாரசீகச் சமய நூல் கூறுகிறது.[19] தோற்ற ஆரியரைக் கீழ்நிலைப்படுத்த தேவர் என்ற சொல்லையும், தங்களை மேன்மைப் படுத்திக் கொள்ள அசுரர் என்ற சொல்லையும் செண்டு அவெஸ்தா பயன்படுத்துகிறது.

இக்கொள்கையும் ஏற்புடையதாகத் தெரியவில்லை. ஆரியர் வருகைக்கு முன்னரே, பாரசீகத்தில் மக்கள் வாழ்ந்திருந்ததும், அம்மக்கள் சிந்து வெளிமக்களே என்பதும், சிந்து வெளியினின்றும் மேற்கில் புலம் பெயர்ந்தோர் என்பதும், தங்கள் நாட்டிற்கான பெயரைப் பார்த்தீயம் (அழல் நாடு-தீ நாடு) என்றே வைத்திருந்தனர் என்பதும், அச் சொல் தமிழ்ச் சொல்லே என்பதும் அறியக் கிடக்கின்றன. தேவன் என்ற சொல்லும், அசுரன் என்ற சொல்லும் தமிழ்ச் சொற்களே என்று பாவாணர் விளக்குகின்றார். எனவே, பார்த்தீய மக்களிடம் தோல்வியடைந்த குழுவே, இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியக்குழு என்பது தெளிவாகின்றது. அசுரர்களிடம் ஆரியரினும் சிறந்த அறிவும், நாகரிகமும் பண்பாடும் ஒழுக்கமும் இருந்தமையால், அவர்களையும் தங்கள் இனம் போல் காட்டி, அவர்கள் வாழ்வியலை (லோகாய்தம்) அடிப்படையாகக் கொண்டவர்கள் என்றும். தங்களை அக்கொள்கையினின்றும் உயர்ந்த மெய்யியல் (கடவுள், ஆன்மா, மறுபிறப்பு, யாகம்) கொள்கையாளர்கள் என்றும் கூறிக் கொண்டனர்.[20]

---

18. Lothal-Dr. C.R. Rao.
19. History of Religion, p. 215.
20. ரிக்வேத சம்ஹிதை, சுவாமி சிவத்தியா நாநந்த மகரிஷி

ஆரியர்களைத் தூக்கிப் பிடிக்க நினைத்த வரலாற்றாய் வாளர்களே, அசுரரும் ஆரியரின் ஒரு குழுவின் இருகிளைகளே என்றனர். அசுரர்கள் ஆரியரினும் உயர்ந்தோர் என்ற உண்மை இவ்வாறு மறைக்கப்பட்டது எனலாம். அசுரர்களின் வழி, வினை வழி (கர்ம மார்க்கம்) என்றும், தேவர்களின் வழி (ஞான மார்க்கம்) அறிவு வழி என்றும் சொல்லப்பட்டது பிற்காலத்து விளக்கங்களே. வடநாட்டு வரலாற்றாய்வாளர் சி.ஆர். இராவ், இவ்விரு கிளைகளும் ஆரியர்களே என்பதை, தனது உலோத்தல் (Lothal) என்ற ஆய்வு நூலில் வலியுறுத்துகிறார். ஒரு குழுவின் இருகிளைகளுக்கு இடையில் ஏற்பட்ட பிணக்குக்கு அழுத்த மான கரணியம் யாராலும் விளக்கப்படவில்லை. ஞானமார்க்கம் என்ற அறிவு வழியை தேவ ஆரியர்கள் பின் பற்றியதாகக் கூறுவதும் ஏற்புடையதன்று. இந்தியாவுக்குள் புகுந்த ஆரியர், கொச்சையான, இலக்கணமற்ற, வரிவடிவம் இல்லாதவொரு மொழியையே பேசி வந்தனர். அம்மொழியிலும் அவர்கள் எந்தவொரு இலக்கியத்தையும் படைக்கவில்லை. ஆரியர்களின் முதல் நூலான இரிக்கு வேதம் என்பதுங்கூட, ஆரியர்கள் பஞ்சாப் பகுதியில் இருந்தபோதே சொல்லப்பட்டது.[21] அப்போதும் அது எழுத்துவடிவில் பதிவு செய்யப்படவில்லை. அவ்வேதத்தில் சொல்லப்பட்டுள்ள நடையின் போக்கு (Style) எந்தவிதமான இலக்கியத்தரத்திற்கும் உட்பட்டதன்று. சிறு குழந்தைகளுக்குச் சோறூட்ட நினைக்கும் தாய்மார்கள், நிலாவைக் கூப்பிட்டதும், நிலாவில் பாட்டி வடைசுட்டு விற்கிறாள் என்பது போன்ற சிறு குழந்தைகளைக் கவரும் வகையிலேயே, அக்கினி சோமன், வாயு, அசுவினி, வருணன் போன்றோர்களை அழைக்கும் முறை கள் உள்ளன. இரிக்கு வேதம் கி.மு. 1200 ஆண்டுகளில் சொல்லப் பட்டிருக்கலாம் என்பர்.

இவ்வேதத்தின் இலக்கிய நடையைப் பிறமொழி இலக்கியங் களோடு ஒப்பிடுகையில், ஓமரின் இலியட்டையும், தமிழின் தொல்காப்பியத்தையும், விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ள திருமறைப் பாடல்களையும் (Psalms) விட இலக்கியத்தரவரிசை யில் உயர்வானதும் அன்று. இரிக்கு வேதத்தில், தமிழ் நாட்டுச் செய்திகளும், தமிழ் மரபுகளும் கூடக் காணக்கிடக்கின்றன.[22]

---

21. இந்திய வரலாறு, ப. 29.

22. Non-Aryan Elements in Rig-Veda, M. Sunder raj, p. 97-98.

இவைகள், சிந்துவெளித்தமிழ் மக்களோடு ஆரியர்கள் தொடக்கத்தில் கொண்டிருந்த உறவின் வெளிப்பாடுகளேயாகும். இரிக்கு சொல்லப்பட்ட காலமே வேதகாலம் எனப்பட்டது. இத்தொகுப் பிற்குப் பிறகே இராமாயணம், பாரதம் போன்ற இலக்கியங்கள் தொகுக்கப்பட்டன. இரிக்கு வேதம் ஒன்றே என்றும், அதையே பின்னர் வகுத்துப்பிரித்து, யசூர் சாம வேதங்களாகப் பிரித்தனர் என்றும், பின்னிரெண்டும் தனியாக எழுதப்படவில்லை என்றும் கூறுவர். அதர்வண வேதம் கி.மு. 5ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே எழுதப்பட்டது என்று கூறுவர்.

பாரசீகர்களிடம் தோல்வியுற்ற ஆரியர்கள், இந்தியாவின் பஞ்சாப் எல்லைக்குள் புகுந்தனர் என்றும், தொடக்கத்தில் (ஏறக்குறைய 500 ஆண்டுகள்) அவர்கள் பஞ்சாபிலேயே வாழ்ந்திருந்தனர் என்றும், கங்கைப் பகுதிகளுக்கு அவர்கள் வரவில்லையென்றும், இரிக்கு வேதச் செய்திகளையே சான்றுகளாகக்காட்டி, ஆய்வாளர்கள் நிறுவுகின்றனர். பஞ்சாபில் வாழ்ந்திருந்த சிந்துவெளி மக்களைப் போரில் புறங்கண்டு, அப்பகுதிகளைக் கைப்பற்றிக்கொண்டு, தோற்றுப்போன அம்மக்களை, தென்னிந்தியப் பகுதிகளுக்குத் துரத்திவிட்டனர் என்ற கருத்து, அடிப்படைச் சான்றுகள் ஏதுமில்லாதது. சிந்துவெளி மக்களை விட, குறைந்த மக்கள் தொகையைக் கொண்டிருந்து, பாரசீக நாட்டிடம், தோல்வி கண்டவர்கள், பெரும் பேரரசை நிறுவி ஆண்டிருந்த சிந்துவெளி மக்களைப் போரில் புறங்கண்டனர் என்ற செய்தி வலிந்து வரலாற்றில் திணிக்கப்பட்ட செய்திகளாகும். **புகழ் பெற்ற வரலாற்றாசிரியர் எம்.ஆர். சாகனி என்பார். சிந்துவெளியின் அழிவுக்கு வெள்ளக் கொள்கை (Flood theory)யே கரணியம் என்கிறார்.**[23] ஐயாறுகளில் பெருக்கெடுத்த வெள்ளம், அப்பகுதியை முழுதும் அழித்துவிட்டது என்றும், அவ்வெள்ளங்கள் பலகட்டடங்களில் பலகாலங் களிலும் நிகழ்வுற்றன என்றும், மண்மேடுகள் எல்லாம் பல்வேறு மண்வரிகளை (Layer)க் கொண்டிருப்பதைச் சான்று காட்டி நிறுவுகிறார். இரிக்கு வேதத்தில் சொல்லப்பட்டுள்ள விரித்திரன்,[24] சம்பரன் என்பவர்கள் கட்டி வைத்திருந்த நீரணைகளை (Dams), இந்திரன் உடைத்தெறிந்ததாகக் கூறப்படும் செய்திகள், சகானியின் வெள்ளக் கொள்கையை உறுதி படுத்துகின்றன.

---

23. Man in Evolution, M.R.Sahani, Calcutta, 1952, pp. 153-154.
24. Rig-Veda, I:59:6.

ஆரியர்களின் இந்திய வருகை குறித்த காலத்தை முடிவு செய்வதில் வரலாற்றாசிரியர்களிடையே கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. ஆனால் ஒரு கருத்தில் ஒற்றுமைப்படுகின்றனர். கி.மு. 2000 ஆண்டுகட்கு முன்னதாக ஆரியர்களின் வருகை இருந்திருக்கவில்லை என்பதை அனைவரும் ஏற்றுக்கொள் கின்றனர்.[25]

சிந்துவெளிப் பேரரசின் அழிவு தொடங்கியது கி.மு. 1800-1500 ஆண்டுகளில் என ஆய்வளர்கள் கருதுகின்றனர்.[26] இக் காலத்திலோ, அதற்கு 500 ஆண்டுகள் முன்னதாகவோ, ஆரியர் களின் வருகை இருந்தது என்பது ஆய்வாளர்களின் முடிவு. போரில் புறங்காண இயலாத ஆரியர், சூழ்ச்சியால் அப்பேராசைக் குலைத்தனர் என்று எண்ண இடமுள்ளது. சிந்துவெளியை ஆண்டிருந்த தமிழ் மன்னர்களிடையே, உட்பகையைத் தோற்று வித்து, அதை வளர்த்து, ஊதிப் பெரிதாக்கி, இந்திரன் என்ற தமிழ் மன்னனைக் கொண்டே அழித்தனர் என்று கருத, இருக்கு வேதத்தில் சொல்லப்பட்டுள்ள செய்திகளே சான்றுகளாக உள்ளன. எனவே, சிந்துவெளி வீழ்ந்து பட்ட காலத்திற்கு சில நூறு ஆண்டுகள் முன்னதாகச் சொல்லப்படும், கி.மு. 2000 என்ற கணக்கு ஏற்புடையதாகவே உள்ளது.

சிந்து வெளியில் நிலைத்த ஆரியர்களின் இருக்குவேதம், எந்த ஆண்டில் சொல்லப்பட்டது என்பதை ஆய்வு செய்த வரலற்றாய்வாளர்கள், கி.மு. 1000 ஆண்டுகளில், அவ்வேதம் இயற்றப்பட்டதாகக் கூறுகின்றனர்.[27] பாரதப்போர் கி.மு. 1500-1000 ஆண்டுகளில் நடைபெற்றதாகவும், இப்போர் முடிவுற்ற பின்னரே இரிக்கு வேதம் இயற்றப்பட்டதாகவும் ஏ.டி. புசால்கர் (Dr. A.D. Pusalkar) என்பார் கூறுகிறார்.[28] வியாசர் என்ற விரித் துரைக்கும் ஆசிரியர், பாண்டவ-கௌரவர்களின் கொள்ளுப் பாட்டன் ஆவார். இவரே பாரதப்போர் பற்றிய மகாபாரதம், இரிக்கு வேதம் ஆகியவைகளைத் தொகுத்தவராகக் கருதப்படு கின்றார். செர்மானிய அறிஞர், மாக்ஸ் முல்லர் என்பார், இரிக்கு

---

25. Bhishma's, History of Tamilakam, p. 3.
26. இந்திய வரலாறு, ப. 25.
27. Bhishma's History of Tamilakam, p. 1.
28. Ibid. 2.

வேதம் எழுதப்பட்டது கி.மு. 1000 ஆண்டுகளில் தான் எனக் கூறியவர், பின்னர் அவரால் கொடுக்கப்பட்ட செய்திகளின் காலம், கி.மு. 500 ஆண்டுகளுக்குப் பிறகு வருவதால், கி.மு. 1000 என்பதை, கி.மு. 3000 என்று மாற்றிக் கொண்டார்.[29]

இரிக்கு வேதத்தில் சொல்லப்படும் சில வானியல் கருத்துக் களை அடிப்படையாகக் கொண்டு, அதன் காலத்தைக் கணிக்கப் பலர் முயன்றனர். கோள்களின் பெயர்ச்சி, கதிரவன் மறைவு (Solar eclipse) போன்ற இரிக்கு வேதச் செய்திகள், பன்முறை ஏற்படும் நிதழ்வுகளாகும். கோள்களின் சுழற்சி மாற்றங்களால் தோற்றுவிக்கப்படுபவை. 1000 ஆண்டுகள் இடைவெளிகளில் இந்நிகழ்வுகள் பன்முறை நிகழலாம். எந்த நிகழ்வை அடிப்படை யாகக் கொண்டு, ஆண்டைக் கணக்கிடுவது என்பதில் குழப்பமே மிஞ்சும். எடுத்துக்காட்டாகப் பாரதப்போர் முடிவுற்ற போது, கதிரவன் மறைவு (Solar eclipse) ஏற்பட்டதாக, மகாபாரதம் கூறுகிறது. கி.மு.30000 ஆண்டுகள் முதல், கி.மு. 1000 ஆண்டுகள் எத்தனை முறை கதிரவன் மறைவு ஏற்பட்டன என்பதைக் கணக்கிட்டு, எம்மறைவு நாளில் போர் முடிந்தது எனக் கூறுவது இயலாத செயலாகும். இதன் வழியில் ஏதோவொரு கதிரவன் மறைவு நாளைக் கணக்கிட்டு, எ.சு. தாஸ் என்பவர், இரிக்கு வேதம் எழுதப்பட்டது கி.மு. 20000 ஆண்டுகளில் என்று கூறி னார். ஜாகோபி என்பார், கி.மு. 4000 எனக் குறித்தார். இக்கருத்தை பாலகங்காதரதிலகர் ஏற்றுக் கொள்கிறார். மாக்ஸ் முல்லர் ஏற்கனவே குறித்த கி.மு. 1000 ஆண்டே பொருத்தமானது என பலரும் ஏற்றுக்கொள்கின்றனர்.[30]

வேதகாலம் என்ற இரிக்குவேதம் எழுதப்பட்ட (சொல்லப் பட்ட) காலத்துக்கு 1000 ஆண்டுகள் முன்னதாகக் கணக்கிட்டு, ஆரியர்களின் இந்திய வருகை கி.மு. 2000 எனக் கணக்கிட்டதில் தவறிருக்க வாய்ப்பில்லை. ஆனால் ஆரியச்சார்புடைய ஆய்வாளர் கள், இக்காலத்தைப் பலவாயிரம் ஆண்டுகள் முன்னதாகக் காட்டமுனைவதும், ஆரியர்கள் இந்தியக் குடியினரே எனக் காட்ட முற்பட்டதால் ஏற்பட்ட குழப்பமான கொள்கையாகும்.

இந்திய வரலாற்றைத் தொகுத்தவர்கள், அடியிற்கண்ட கால அளவுகளை ஏற்றுக் கொண்டுள்ளனர்.

---

29. Ibid.

30. இந்திய வரலாறு, ப. 31.

1. சிந்துவெளி நரகரிகம் - கி.மு. 3500
(தற்போது கி.மு. 7500 என உறுதி செய்யப்பட்டுள்ளது.)
2. சிந்துவெளி அழிவு - கி.மு. 1800-1500.
3. ஆரியர்களின் இந்திய வருகை-கி.மு. 2000-1500.
4. இராமாயண காலம் - கி.மு. 1500-1250.
5. மகாபாரத காலம் - கி.மு. 1250-1000.
6. இரிக்கு வேதம் சொல்லப்பட்டது - கி.மு. 1000.
7. சூத்திரர்களின் ஆட்சி - கி.மு. 700-320.
8. அலெக்சாந்தரின் படை எடுப்பு - கி.மு. 326.
9. மௌரியர் ஆட்சியின் தொடக்கம் - கி.மு. 325.
10. புத்தரின் வாழ்நாட் காலம் - கி.மு. 567-487.
11. மகாவீரரின் பிறப்பு - இறப்பு - கி.மு. 540-467.

மேற்கண்ட செய்திகளின் ஆண்டுக் கணக்குகளை யொட்டியே, இந்திய வரலாறு எழுதப்பட்டுள்ளது. மேற்கண்ட ஆண்டுக் கணக்குகளைப் பெரும்பாலான வரலாற்றாசிரியர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர்.[31]

OOO

31. Bhishma's History of Tamilakam, p. 2.

2

## விவிலியம் கூறும் ஆரியம்

விவிலியத்தின் பழைய ஏற்பாட்டுச் செய்தியில், உலகில் ஏற்பட்ட பெருவெள்ளத்தில், நோவா என்ற ஒருவனும், அவன் இல்லத்தாரும் தப்பிப் பிழைத்ததாக ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது.[32] நோவா செய்து கொண்ட மரக்கலம், அவன் உயிரைக் காத்தது என்பது விவிலியச் செய்தி. இந்த நோவாவின் மரக்காலம், அராரத்து (Ararat) என்ற மலை முகட்டில் தங்கி நிலை கொண்டதாகவும், அங்கிருந்து அவன், பாபிலோன் நாட்டிலுள்ள, தைகிரிசு (சின்னாறு) ஆற்றின் கிழக்குப் பகுதியில் குடியமர்ந்ததாகவும்,[33] விவிலியம் கூறுகிறது. இவனுக்கு முன்று ஆண்மக்கள் இருந்தனர். இவர்களில் இளையவன் பெயர் யாபெத் (Ya-Pet) என்று சொல்லப்பட்டுள்ளது. யாபெத் என்பனின் மகன் யாவன் (Yavan). இவன் கிரேக்க நாட்டில் குடியேறியதாகவும், கிரேக்கமும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளில் இவனது மரபார் பல்கிப் பெருகிக் கிளைத்து வாழ்ந்து வந்தனர் என்றும், விவிலியக் குறிப்புகள் கூறுகின்றன.[34]

யாவன் என்பது, தென்திசையினின்றும் வந்தவன் என்ற பொருளைத் தருவதாகவும் சொல்லப்படுகின்றது.[35] யாவன்

---

32. Ten., 5:29.
33. Gen., 11:2.
34. The New American Bible, Dict. p. 224.
35. Ibid, p. 96.
    Javan: Son of Jephet. (Gen. 10:2). As a geographical name, it designates the Greek colonies of the western cost of Asia Minor, Continental Greece and the Greco-Macedonian Kingdom.

என்பானின் மரபினரையே, தமிழ் இலக்கியங்கள் யவனர்கள் என்று குறிப்பிடுகின்றன. யவனர் என்ற சொல்லுக்குப் பொது வாக கிரேக்கர் என்று பொருள் உரைக்கப்பட்டாலும், யவனர் என்ற சொல்லுக்கான பொருளைத் தமிழ் இலக்கியங்கள் கூற வில்லை. இந்த யாவன்வழி வந்த மக்களே இந்திய-ஐரோப்பிய இனத்தவர் என்றும் விவிலியக் குறிப்புகள் கூறுகின்றன. இதன் வழியில் நோவா என்பான் பேசிய மொழியினின்றும், யாவன் என்பான் மரபு வழி பேசிய மொழி தொடர்பு கொள்கிறது. யாவன் என்பான் மரபார் பேசிய மொழிகளாக, மேலை ஆரியம், அதன் வழி செர்மானியம், ஆங்கிலோ சாக்சன், இலத்தீன், கிரேக்கம் என்ற மொழிகள் கிளைத்தன என்றும் கூறப்படு கின்றது.[36]

நோவா என்பான் பேசிய மொழி யாதென விவிலியம் விளக்கவில்லை. ஆனால் நோவா என்பானின் பெயரும், அவன் மக்கள் பெயர்களும், அவன் குடியமர்ந்ததாகச் சொல்லப்படும் இடங்களும், அவன் மரபு வழி மக்களின் பெயர்களும், தமிழ் மொழியின் திரிபுப் பெயர்களாகவே உள்ளன. நோவா என்பதே, நாவாய் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். இந்த நோக்கில், இந்திய ஐரோப்பிய மொழிகளும் தமிழ் மூலத்தினின்றும் கிளைத்த மொழிகளே எனக் கூறவும், அதனை மெய்ப்பிக்கவும், ஏராளமான மொழியியல் தொடர்புடைய சான்றுகள் உள்ளன. எனவே நோவாவின் முதல் மகன் சிமை (செம்) எனப்பட்டான். அடுத்தவன் அம் எனப்பட்டான். முதல் மகனின் மரபார் பேசிய மொழியே செமிட்டிக் (Semitic) என்ற மொழியாகும். இம்மொழி யில், பாபிலோனியம் (அக்காடியம்), சுமேரியம், ஃபோனீசியம், எபிரேயம், அறமாயிக் போன்ற மொழிகள் அடங்கும். இம் மொழிகளில் எல்லாம் தமிழ் மொழியின் தாக்கங்களும், சொற் களிடையே ஒற்றுமையும், ஒலிப்புகளிடையே ஒருமைப்பாடு களும் உள்ளன. எனவே செமிட்டிக் என்ற மொழியினமே, தமிழ் மொழியின் கிளைமொழியே எனலாம். நடுமகன் அம் என்பானின் மரபார் பேசிய மொழிகளாக, அராபியம், கனானியம், எகிப்தியம், எத்தியோப்பியம் போன்ற பிறமொழிகளும் அடங்கும், இவை களுக்கும் தமிழுக்கும் நெருங்கிய தொடர்புகள் இருப்பதை மொழியியல் ஆய்வுகள் மெய்ப்பிக்கின்றன. எனவே, செமிட்டிக்

36. Ibid, p. 224.

வகை மொழிகளும், அரபுவழி மொழிகளும், மேலை ஆரிய வகை மொழிகளும் தமிழினின்றும் கிளைத்த மொழிகளே என்ற நிலைப்பாட்டை உறுதி செய்யும் வகையில் நோவா என்ற மாந்தன் அடிப்படையாகின்றான். இவன் குமரிக்கண்டத்தி னின்றும் வெள்ளப் பாழின் பிடியிலிருந்து தப்பிப் பிழைத்த தமிழனே என்பதற்கான கரணியங்கள் வலுவாக உள்ளன. மேலும் விளக்கங்களை ஆசிரியரின், "எபிரேயத்தின் தாய் மொழி தமிழே" என்ற நூலில் காண்க.

விவிலியம் சொல்வது கதை யென்று எடுத்துக் கொண் டாலும், அது சொல்லும் செய்தியில் உண்மை பொதிந்து கிடப்பதை மறக்கவியலாது. எனவே பாபிலோனில் ஒரு காலத் தில் (கி.மு. 10000) தமிழே பேசப்பட்டது என்றும், அம்மொழி உலகின் ஒரு மொழியாய் இருந்தது என்றும் மேலும் மேலும் விளக்கங்களை விவிலியம் கூறுகிறது.[37] அவ்வொரு மொழி (தமிழ்) பலகிளைகளாகப் பிரிந்தது என்றும், அக்கிளை மொழி களையே மேற்கண்ட செய்தியில் கூறப்பட்ட மக்கள் பேசினர் என்றும் சொல்லப்படுகின்றது. எனவே மேலை ஆரிய மொழியில் தமிழ்ச் சொற்கள் பொதிந்து கிடக்கும் நிலை, தற்செயலானது என்றோ, வணிகத் தொடர்பால் வந்தது என்றோ கருதிவிடக் கூடாது. தமிழினின்றும் பிரிந்த தெலுங்கும் கன்னடமும் எவ்வாறு தமிழ்ச் சொற்களைக் கொண்டுள்ளனவோ, அதே அளவுக்குத் தமிழ்ச் சொற்களை மேலை ஆரியத்திலும் செமிட்டிக் மற்றும் அரபு மொழிகளில் காணவியலும். கடந்த 10 ஆயிரம் அண்டுகளில் இம்மொழிகள் முற்றிலும் பேச்சு எழுத்து வழக்கு களில் மாறிப் போனாலும், விவிலியத்தில் கூறப்பட்டுள்ள எபிரேய மொழியின் இலக்கியத்தன்மை இன்றும் மாறாமல் உள்ளது. எபிரேய விவிலியத்தில் ஏராளமான தமிழ்ச் சொற்கள் பொதிந்து கிடப்பதைக் காணமுடியும். அவ்வாறே மேலை ஆரியம், தமிழின் கிளைமொழியே என்பதால், அம்மேலை ஆரியம் கிளைத்த மொழிகளிலும் தமிழன் தாக்கம் உள்ளது. மேலை ஆரியத்தின் நாடோடி மொழியைப் பேசிய கூட்டமே, இந்திய நாட்டிற்குள் நுழைந்த ஆரிய இனமாகும். இந்தியாவுக்குள் நுழையுமுன்பே, அவர்கள் பேசிய நாடோடி மொழியில் தமிழின் தாக்கங்கள் இருந்தன. சிந்துவெளியில் தமிழ் மக்களோடு அவர்கள் கொண்ட தொடர்பு, அம்மொழியை மேலும் செம்மைப்படுத்தி, அதனை

37. Gen., 11:1.

சமற்கிருதம் என்ற மொழியாக மாற்றியது. சமற்கிருதம் என்பதற் குச் செம்மைப்படுத்தப்பட்ட மொழி யென்றே பொருளாகும்.

மேற்கூறப்பட்ட மேலை ஆரியம் தொடர்பான தமிழ் வழிச்சிந்தனை, பலருக்குப் புதிய கூற்றாக இருக்கலாம். இருப்பி னும் மேலை ஆரியமொழியில் பொதிந்து கிடக்கும் தமிழ்ச் சொற்கள், அம்மொழியில் எவ்வாறு இடம்பெற்றன என்பதற்கு இதுவரையில் கூறப்பட்ட கரணியங்கள் ஏற்புடையதாய் இல்லை என்பது தெளிவு. நோவா வழிச் சிந்தனை சிக்கலற்றதாகவும், நடைமுறைக்கு ஏற்புடையதாகவும் உள்ளது. மொழியியல் தொடர்பான எதிர்கால ஆய்வுகள், இக்கொள்கைக்கு வலு சேர்க்கும் என நம்பலாம்.

சமற்கிருத மொழியில் 40 விழுக்காடு தமிழ்ச் சொற்கள் வள்ளனவென்று பாவாணர் கருத்துரைக்கின்றார். சரியான மொழிவழி ஆய்வுகள், இந்த 40 விழுக்காட்டையும் விட அதிகப் படுத்தும் எனலாம். ஒரு தமிழ்ச் சொல், ஆரிய மொழியான சமற்கிருதத்திலும், எபிரேயத்திலும், கிரேக்கத்திலும், செர்மானி யத்திலும் ஆங்கிலத்திலும் கிளைபோல் ஓடிப்பரவி நிற்பதைப் பல சொற்களின் வாயிலாக நிறுவலாம். எடுத்துக்காட்டாக, உம்பர் (மேலே) என்ற தமிழ்ச் சொல்லின் நீட்சி எவ்வாறு உள்ளதெனக் காண்போம். உம்பர் (தமிழ்) - Uppar (சமற்கிருதம்) - Ubar (செர்மானியம்) - Huper (கிரக்கம்) - Super (இலத்தீன்) - Ober (சாக்சானியம்) - Upper (ஆங்கிலம்). உபாரி என்ற சமற்கிருதச் சொல்லே, ஊப்பர் என்று இந்தியில் திரிந்தது.

இந்திய வரலாறு என்பது, வடக்கில் தொடங்கி தெற்கில் முடிவதாக உள்ளது. அதனாலேயே வரலாற்று நிகழ்வுகளில் தொடர்புகள் அறுந்தபோவதுடன், பல செய்திகளுக்கான அடிப்படைகளும் விளங்கவில்லை. அதனாலேயே வின்செண்ட் ஸ்மித் என்னும் வரலாற்றாசிரியர், “இந்திய வரலாற்றைத் தெற் கிலிருந்து (தமிழ் நாட்டிலிருந்து) தொடங்காதவரை, இந்திய வரலாற்றைத் தொடர்பாகச் சொல்ல இயலாது, என்று கூறு கிறார். இதன் வழியில் உலக வரலாற்றைக் குமரிக் கண்டம், மற்றும் அதன் அழிவினின்றும் தொடங்காத வரை, குழப்பங்கள் இருந்து கொண்டுதானிருக்கும் என்பது தெளிவு.

மொழியியல் தொடர்பாக இதுவரை வெளியிடப்பட்ட கொள்கைகள் யாவும் குறைபாடுகள் கொண்டவைகளே. உலகில்

தோன்றிய முதன்மொழியாம் தமிழ் மொழியை, துரானிய மொழிக்குடும்பத்தில் இணைத்த மேலைநாட்டு மொழியிலார், தமிழின் முழுமையை அறிந்துதிருக்கவில்லை. இந்திய மொழிகளில் திராவிடமொழிக் குடும்பத்தின் மொழியாக தமிழில் சொல்லப்படுவதும், இத்திராவிட மொழிக் குடும்பத்திற்கும். செமிட்டிக் மொழியினத்துக்கும் தொடர்பில்லை என வரையரை செய்ததும், சரியான மொழியியல் கொள்கை என ஏற்கவியலாது. ஒவ்வொரு மொழியைப் பேசும் இனத்தாரின் வரலாறு, அவர்தம் தோற்றங்களும் தெளிவுற விளக்கப்படாதவரை, அவ்வினத்தாரின் மொழிகள் பற்றிய ஆய்வுகளும் முழுமை பெறாது. உலகில் முதலில் முகிழ்த்த மொழி தமிழே என்றும், அதன் வழியில் கிளைத்த மொழிகளே மேலை நாட்டு மொழிகள் என்றும், கீழை ஆரியமான சமற்கிருதமும் தமிழ் மூலத்தினின்றும் பிறந்ததுவே என்றும், புது ஆய்வுக் கண்கொண்டு நோக்காத வரை, உலக மொழியியல் தொடர்பாக, எந்த இறுதி முடிவையும், யாராலும் எடுக்க இயலாது என்பது தெளிவு.

ooo

3

## இரிக்கு வேதம் சொல்லும் செய்திகள்

ஆரியர்களின் வேதமான இரிக்கு கி.மு. 1000 ஆண்டுகளில் சொல்லப்பட்டது என்ற கருத்தைப் பெரும்பாலான வரலாற்று ஆய்வாளர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். வாய்மொழியாகவே தலைமுறையினருக்கு மாற்றம் செய்யப்பட்ட இரிக்கு வேதம், அதனை எழுதுவதற்கு வரிவடிவம் இன்மையால், எழுதப்படா மலேயே சொல்லப்பட்டு வந்தது. மேலை ஆரிய மொழியும், சிந்துவெளித் தமிழும் கலந்த சமற்கிருதம் என்ற மொழிக்கு கிறித்து பிறப்பாண்டுகளிலேயே புதிய வரிவடிவங்கள் கொடுக்கப் பட்டன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில்தான் இரிக்கு வேதமும், மற்றவைகளும், தொன்மக் கதைகளும் எழுத்து வடிவில் பதிவு செய்யப்பட்டன என்பர். இவ்வாறு ஆயிரம் ஆண்டுகளாகச் சொல்லப்பட்டு வந்த இவ்வேதத்தில், அவ்வப்போது ஏற்படும் புதிய சிந்தனைகளும், கருத்துக்களும், அவ்வப்போது இணைக்கப் பட்டன. இந்த இணைப்புகளும் இடைச் செறுகல்களும் தொடரு வதற்கு, இரிக்கு வேதம் எழுதப்படாமல் இருந்ததும் நல்வாய்ப் பாகவே அமைந்திருந்தது. இவ்வாறு இணைக்கப்பட்ட பகுதி களில், புருஷ சூக்தம் என்ற பத்தாவது பிரிவு கி.மு. 500-200 ஆண்டுகளில் இணைக்கப்பட்டதாகக் கூறப்படுகின்றது.[38]

தொடக்ககால ஆரியரின் வேதத்திலும், அவர்களின் இறை வணக்க முறைகளிலும், குழப்பங்கள் பெருமளவில் குறைந்தே காணப்பட்டன. சமயச் சடங்குகளைச் செய்ய எந்தவொரு கோயிலும் அப்போது தேவைப்படவில்லை. திறந்த வெளிகளில் வேள்விகளையும் யாகங்களையும் செய்துவந்தனர். தொடக்க கால ஆரியர்களின் வாழ்க்கையில் சாதிவேறுபாடுகள் என்ற

38. சூத்திரர்கள் யார்? டாக்டர் அம்பேத்தார், ப. 19.

வர்ணாசிரமக் கொள்கை இல்லை. அக்காலத்தில் அவர்களுக்கு இப்படியொரு முறை தேவைப்படவும் இல்லை. இரிக்கு வேதம் என்பது தொடக்கத்தில் ஆரியர்களின் விருப்பங்களையும், அவர்களுக்கு ஏற்பட்டிருந்த பட்டறிவுகளையும், அவர்கள் வாழ்ந்திருந்த குமுகாயத்தின் நடப்புகளையும் அடிப்படை யாகக் கொண்டு, நாட்டுப்புறப்பாடல்கள் போன்ற உருவில் மட்டுமே பாடப்பெற்றன. இவ்வேதத்துக்குப் பிற்காலத்தில் பெரும் சிறப்பு ஏற்படும் என்பதையும் அவர்கள் அப்போது எண்ணவில்லை. ஆரியர்களின் வாழ்க்கை முறையில் நிலையான தன்மை ஏற்பட்ட காலங்களில், தங்களுடைய நிலைப்பாட்டை உறுதி செய்து கொள்ள, சில உத்திகள் தேவைப்பட்டன. அந்த உத்திகளையெல்லாம், சமயச் சடங்குகளோடு இணைத்து, இவைகள் யாவும் கடவுளரின் விருப்பமாக மக்களிடையே சொல்லிவைத்தனர். இடையில் ஏற்பட்ட சமண, புத்த சமயங் களின் தாக்குதல்களால் நிலைகுலைந்துபோன ஆரிய சமயம், எதிர்த்தாக்குதல் தொடுக்க வழியறியாது திகைத்தது. சமண புத்த சமயங்கள், மக்களுக்குப் புரியும் வகையில் எளிமையான கொள்கைகளைக் கொண்டிருந்தன. மக்களின் தாய்மொழியான பாலிமொழியிலேயே அச்சமய விளக்கங்கள் இருந்தன. மிகப் பெரும் செலவில், மன்னரும் செல்வரும் மட்டுமே செய்யக்கூடிய வேள்விகளை, அவ்விரு சமயங்களும் கடுமையாகச் சாடின. மழை, ஆண்டாண்டு காலம் தோறும் பெய்யும் என்றும், வேள்வி கள் செய்வதால் மட்டுமே மழை பெய்வதாகக் கூறும் ஆரியர் களின் சூழ்ச்சி ஏமாற்று வேலை என்றும், மன்னர்களையும் செல்வர்களையும் அவ்விரு சமயங்களும் நம்ப வைத்தன. வேள்வி செய்வதாலேயே மன்னன் போரில் வெல்ல முடியும் என்ற கொள்கையை மாற்றி, போரே இல்லாத உலகைப் படைக்க அவ் விருசமயங்களும் முயற்சித்தன. அவ்விரு சமயங்களின் வழி வந்தோர் புத்தரைப் பற்றியும், மகாவீரரைப் பற்றியும் ஏராள மான செய்திகளை உள்ளடக்கி, அவர்களின் கொள்கைகளை யும் கருத்துக்களையும், கதைகள் போன்ற வடிவத்தில் வெளிப் படுத்தினர். இவைகளே புத்த சாதகக் கதைகள் எனப்படுபவை கள் ஆகும்.

இவ்வாறான தாக்குதல்களால் அதிர்ந்து போன ஆரியர்கள், தங்கள் நிலைப்பாடுகளை மாற்றிக் கொண்டாலொழிய, மக்க ளிடையே தங்கள் செல்வாக்கு மங்கிப் போகும் என்பதை உணர்ந்து, புதுப்புது உத்திகளை உள்ளடக்கி, அவைகளைத்

தங்களது வேத நூல்களில் இணைத்துக் கொண்டனர். புத்த சாதகக் கதைகளுக்குப் போட்டியாக சொல்லப்பட்டவைகளே புராணங்களும், இதிகாசக் கதைகளுமாகும்.[39] எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமையும், அன்புணர்வுமே இவ்விரு சமயங்களின் அடிப்படைகள் ஆகும். அவாவுதலை அடியோடு வெறுத்து, அதுவே இன்னல்களுக்கும் இடுக்கண்களுக்கும் கரணியங்கள் என்று சொன்ன, புத்த சமயம், ஆரிய சமயத்துக்கு முற்றிலும் மாறுபாடாய் இருந்ததை மக்களும் உணர்ந்து கொண்டிருந்தனர்.

பிரித்தாள்வதால் மட்டுமே நிலைத்திருக்க முடியும் என்று எண்ணிய ஆரியர், வன்முறைகள் பற்றியோ, போர்கள் பற்றியோ, மக்களிடையே அமைதியின்மை நிலவுவது பற்றியோ கவலை கொள்ளவில்லை. தன் மக்களும் இனமும் வாழ யாரையும் காவு (பலி) கொடுக்க, ஆரியர்கள் தயங்கவில்லை. நாட்டில் ஒழுக்கக் கேட்டையும், போர்களையும், உயிரினங்களைக் காவு கொடுப் பதையும் தூண்டியது ஆரிய சமயமே. இவ்வாறு அடிப்படை யிலேயே மாந்த நேயமற்று தொடங்கப்பட்ட ஆரியச் சமயம், புத்த சமய தாக்குதல்களால் பொலிவிழந்து போனதில் வியப் பேதுமில்லை. ஆரியச் சமயத்தை வரவேற்ற மன்னர்களும் சிலர் இருந்தனர். அவர்கள், ஆரியர் கூறிய மயக்க மொழிகளை நம்பினர். வேள்விகள் செய்வதாலேயே மழை பெய்யும் என்றும், வேள்விகளை இயற்றவல்லார் ஆரியரே என்றும், ஆரியர் இல்லாத நாடு வறண்டு போகுமென்றும் மன்னர்களை நம்ப வைத்தனர். சிவந்த உடலும், உயர்ந்த உருவமும் இயற்கையிலே அவர்களுக்கு அமையப் பெற்றிருந்ததால், தங்களைக் கடவுளின் பகராட்கள் (Agent) என்றும், தங்கள் மொழியாகிய சமற்கிருதத்தை மட்டுமே கடவுள் அறிவார் என்றும், வேறு எம்மொழியில் அவரைக் கூப்பிட்டாலும் அவருக்கு விளங்காது என்றும், திரும்பத் திரும்பச் சொன்னதை, பகுத்தறியும் பண்புகளில்லா மன்னர் சிலரும் நம்பினர். இவ்வாறு நம்பாத மன்னர்களை வீழ்த்தவும், கொல்லவும், தங்களை நம்பிய மன்னர்களை ஆரியர்கள் தூண் டினர். பொய்யுரைகளிலும் புகழுரைகளிலும் மயங்கிய மன்னர்கள், ஆரியர்களின் பேச்சை நம்பி, தன் இனத்தாராகிய பிற மன்னர் கள் மீது போர் தொடுத்தனர். வெற்றி பெற்ற மன்னர்களிடம், தங்களது வேள்வியாலேயே அவ்வெற்றி கிட்டியதாகவும் கூறி, மன்னன் போருக்குச் செல்லுமுன் வேள்வி செய்யும் வழக்கையும் திணித்தனர்.

---

39. The History of Religion.

இவ்வளவு நடவடிக்கைகளையும் மீறி, நந்தர்கள் என்ற மன்னர் மரபார், ஆரியர்களைத் தம் பக்கம் அனுமதிக்கவில்லை. ஆரியச் சமயத்தையும் அவர்கள் ஏற்கவில்லை. கி.மு. 700-300 ஆண்டுகளில் நடைபெற்ற நந்தர்களின் ஆட்சியைக் கவிழ்க்க, ஆரியர்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகளையும், சூழ்ச்சிகளை யும், வரலாறு படிப்போர் அறிந்து கொண்டிருப்பர். நந்தர்களின் ஆட்சியைச் சூத்திரர்களின் ஆட்சியென்றும், கடவுள் இம்மன்னர் களை விரும்பவில்லையென்றும், மக்களிடையே பொய்யுரை களைப் பரப்பினர்.[40] அரசியல் குழப்பங்களாலும், அலெக்சாண்டர் என்ற மாபெரும் போர்க்கலையை அறிந்த கிரேக்க மன்னராலும் அழிவுபட்ட நந்தர் மரபு ஆட்சியை, கவிழ்த்தது தாமே என்றும் கூறிக்கொண்டனர். இவ்வாறு நாட்டில் அமைதியின்மை நிலவு வதே, தமக்கும் தம் இனத்தாருக்கும் ஏற்ற சூழல் எனக் கருதிய ஆரியர், கடந்த 4000 ஆண்டுகளாக, இந்திய அரசியலை, தங்கள் இன நல நோக்கத்தோடு குலைத்து வருவதை வரலாறு தெளி வாக்கும். இந்திய மன்னர்களிடை ஒற்றுமையைக் குலைத்ததின் கரணியமாகவே இசுலாமியர் இந்தியாவின் மீது படை எடுத்தனர். வேற்று சமயத்தார் என்றும் நோக்காமல், பல இசுலாமிய சுல்தான்களுக்கும் அறிவுரை கூறுபவர்களாக ஆரியர்கள் இருந்தனர் என்பது, தங்கள் சமயத்தையும் கொள்கையையும் கூட வயிற்றுப் பிழைப்புக்காக ஒதுக்கி வைப்பவர்கள் ஆரியர் கள் என்ற கூற்றை நிலைப்படுத்தும். தமிழ்நாட்டில் இடைக் காலத்தில் நடைபெற்ற சமயப் போர்களுக்கும், அதன் கரணிய மாகச் சொல்லப்பட்ட பலவாயிரம் சமண சமயத்தாரின் அழிவுக்கும், தமிழ்நாட்டின் சமயங்களான சிவனிய-மாலியப் பிணக்குகளுக்கும் ஆரியரே பின்னணியில் இருந்தனர்.

இடைக்காலச் சோழர்களின் காலம், ஆரியச் சமயத்தார்க் குப் பொற்காலமாக அமைந்தது. கி.பி. முதல் நூற்றாண்டு முதல், ஆரிய மயமாக்கப்பட்ட தமிழ்ச் சயமங்களான சிவனியமும் மாலியமும், கி.பி. பத்தாம் நூற்றாண்டுகளில் முற்றிலுமாக ஆரியச் சமயமாக்கப்பட்டன. தமிழ்ச் சமயம் மறைந்து, ஆரியச் சமயத்துக்கு இந்து சமயம் என்ற புதுப்பெயர் சூட்டப்பெற்ற சூழ்நிலைகள் உருவாயின. வறுமைப் பிடியில் வாடிய பிராமணர் களுக்கு, மண்டிலங்கள் எங்கும் மானியங்களும், ஊர்கள் தோறும் நிலங்களும், வீதிகள் தோறும் அக்கிரகாரங்களும் தோன்றும்

40. Bhishma's History of Tamilakam, p. 2.

காலமாகச் சோழர்களின் ஆட்சி அமைந்தது.[41] தஞ்சைப் பெரு வுடையார் கோயில், பிற்காலத்தில் பிரஹதீஸ்வரர் கோயில் என மாற்றப்பட்டது.

இந்துப் பேரரசை நிறுவியவர் என்று இன்று பிராமணர் களால் பெருமைப்படுத்தப்படும் சிவாஜிக்கு எதிரான அறிவுரை களை, அக்காலத்து பிராமணர்கள், இசுலாமிய அரசர்களுக்கு வழங்கினர் என்பது வரலாற்றுச் செய்தியாகும். விசய நகரப் பேரரசும், தன்னளிப்புப் பகுதியாக, பிராமணர்களுக்கு நிலங் களையும் செல்வங்களையும் வாரி வழங்கியது. ஆங்கிலேயர் ஆண்ட காலத்தும், பிராமணர்களே மொழி பெயர்ப்பாளர் களாகவும், அவர்களுக்கு அணுக்கத் தொழில் செய்பவர்களாகவும் இருந்தனர். விடுதலைப் போரிலும் பிராமண அமைப்புகள், பேராயக் கட்சியை எதிர்த்தே வந்துள்ளன. விடுதலைப் போரில் ஈடுபட்ட சில பிராமணர்களும், விடுதலைக்குப் பின் ஆரியர் களின் ஆட்சியை நிறுவும் நோக்கத்துடனேயே, விடுதலைப் போரிலும் ஈடுபட்டனர். விடுதலைக்குப் பிறகும் தங்கள் எண்ணம் ஈடேற இயலாமற் போய்விடுமோ என்ற அச்சத்தினாலும், காந்தியார் தங்கள் இலக்கிற்குத் தடையாய் இருப்பார் என்று கருதியதாலும், காந்தியாரையும் காவு கொடுத்தனர். விடுதலை பெற்ற இந்தியாவிலும், ஆரியதர்மம் என அழைக்கப்பட்ட, மாந்த நேயமற்ற மனுவின் சட்டங்களையே அடிப்படையாகக் கொண்டு, இந்திய அரசியல் சட்டம் வகுக்கப்பட்டது. இந்தக் குழுவிலும் பிராமணர்களின் செல்வாக்கே உயர்ந்திருந்தது. டாக்டர் அம்பேத்கரும் உறுப்பினராயிருந்த அக்குழுவில், "என்னால் சூத்திரர்களுக்குச் செய்ய முடிந்தது இவ்வளவுதான்", என நொந்து கொள்ளும் நிலை ஏற்பட்டது. எனவே, வரலாறு தொடங்கிய காலத்திலிருந்தே, ஆரியர்களின் சூழ்ச்சி, இந்தியா வையும், இந்நாட்டு மக்களையும் ஆட்டிப்படைத்து வருகின்றது.

இந்தியாவின் வளர்ச்சிக்கு முட்டுக் கட்டைகளாக இருப் பவைகளில் முதல் கரணியமாகக் கருதப்படுவது, சாதிப் பாகு பாட்டுப் பிரிவுகளே என்பதை மேலை நாட்டாரும் சுட்டிக் காட்டுகின்றனர்.[42] விடுதலை பெற்ற இந்தியாவின் வளர்ச்சிக்குத் தடையாய் இருப்பது, பெரும் மக்கள் தொகையே என்றும்,

---

41. The History of Tamil Nad, N. Subramaniyan, p. 335.
42. The History of Religion, p. 180.

சாதிப் பிரிவினைகள் கரணியம் அல்லவென்றும் சொல்லப் பட்டது. இந்தியாவும் சீனாவும் ஏறக்குறைய ஒரு கால அளவில் தான் தன்னாட்சி பெற்றன. இந்தியாவைவிட மக்கள் தொகையை பெருமளவில் கொண்ட சீனா, இன்று உலக அரங்கில் முதலி டத்தை நோக்கி முன்னேறி வருகிறது. மக்கள் தொகையே வளர்ச் சிக்குத் தடை என்ற பொய்யானதொரு கொள்கையை, சீனா இன்று பொய்யாக்கிவிட்டது. இந்தியாவில் ஆரியர்கள் வித்திட்ட சாதிப் பாகுபாட்டுமுறை இருக்கும் வரையில், இந்திய நாட்டின் வளர்ச்சி ஒரு பகற்கனவாகவேயிருக்கும் என்பது திண்ணம்.

இரிக்கு வேதத்தின் முதல் பகுதிகளுக்கும், பின்பகுதியான புருஷ சூக்தத்துக்கும் இடையிலான வேறுபாடுகளை, இலக்கிய நடைகளை, சொற்களின் அமைப்பு முறைகளை எடுத்துக்காட்டி, புருஷ சூக்தம் ஒரு இடைச் செறுகலே என்ற ஆய்வாளர்கள், அப்பகுதியின் இணைப்புக்காலம், கி.பி. ஆண்டுகளில் கூட நிகழ்வுற்றிருக்கலாம் என்பர். இரிக்கு வேதத்தில் 1028 பாக்கள் கூறப்பட்டுள்ளன. இவைகளில் பெரும்பாலான பாடல்கள் (250) இந்திரனைப் புகழ்ந்தே பாடப்பெற்றுள்ளன. அசுவினி, சோமன், தீ, வருணன் என பல்வேறு தேவர்களையும் புகழ்ந்து பாடல்கள் உள்ளன.

இந்திரன் என்பான் யாரெனக் கூறுவதில் பல முரண்பாடு கள் உள்ளன. இந்திரன் வடசொல்லே என்றும், அதற்கான வேர்ச்சொல், பிந்த் (Bindh) என்பதே என்றும் மாக்ஸ் முல்லர் கூறுகிறார். பிந்த் என்பதற்கு, நீர்மைத் தன்மை (Liquid State) என்றும் பொருள் கூறுகிறார். பிந்த் என்ற சொல்லினின்றே, பிந்த்-பிந்த்ர - இந்த்ர என்ற சொல் நீண்டதாகவும் மாக்ஸ் முல்லர் கூறுகிறார். மாக்ஸ் முல்லரின் கருத்தை உறுதிப்படுத்தும் வகையில் மாதளி (Matali) என்ற சொல், இந்திரனைக் குறித்து இரிக்கு வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது.[43] மாதளி என்பது சரியான தமிழ்ச் சொல்லாகும். தளி என்பது மழையைக் குறிக்கும். மாதளி = பெருமழை எனப்படும். எனவே இந்திரன் என்ற சொல், நீரோடும் மழையோடும் தொடர்புடைய சொல்லாகவே வட மொழி கூறுகிறது. மாக்ஸ் முல்லர் கூறும் பிந்த் என்ற சமற்கிருத மூலச்சொல், விந்து என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்று பாவாணர் விளக்குகிறார். விந்து என்ற சொல், சிறப்பாக ஆணின்

43. Rig Veda Sanhita, H.H. Wilson, Vol. 6: Sukta XIV:3.

உயிரணுக்களைக் குறித்தாலும், அது நீரைச் சுட்டும் சொல்லே யாகும். விண் + துளி = விந்துளி-விந்து என நீண்டது. விண்துளி என்பது மழையே.

ஆரிய வேதம் கூறும் இந்திரனுக்குப் பலவாயிரம் ஆண்டு களாக, காவிரிப் பூம்பட்டினத்தில் விழாவெடுத்த செய்திகள் தமிழகத்தில் உள்ளன. வேனில் காலத்து முழுமதி நாளில் இந்திர விழாவெடுத்தது பற்றிய செய்திகளைக் கடைக்கழக இலக்கியங் கள் கூறுகின்றன. சிலப்பதிகாரம் இந்திரவிழவூரெடுத்த காதை என்ற தனித் தலைப்பு ஒன்றைக் கொடுத்துள்ளது. அகத்திய முனிவரின் வேண்டுகோளின்படி, பூம்புகாரில் நடைபெற்ற இந்திரவிழா, தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியன் என்னும் மன்னனால் தொடங்கப்பட்டு, ஒவ்வொரு ஆண்டும் நடைபெற்றது. சோழ மரபினர் இந்திரவிழாவைத் தங்கள் இல்லத்தின் விழா போன்றே எடுத்துச் சிறப்பித்தனர். இடையில் வந்த நெடுமுடிக் கிள்ளி என்னும் மன்னன் இதனைச் செய்யாது விடுத்தான். இதனால் பூம்புகாரைக் கடல் கொண்டது.[44] இந்திர கோடணை விழாவென்றும் இவ்விழாவை மணிமேகலை கூறு கிறது. இந்திரவிழா இருபத்தெட்டு நாட்கள் நடைபெற்றதாக வும் மணிமேகலை கூறுகிறது.

**நாலேழ் நாளினு நன்கினி துறைகென — மணிமேகலை,[45] 1:8.**

நாலேழ்நாள் என்பது இருபத்தெட்டு நாட்களாகும்.

**இந்திர விகாரம் ஏழும்ஏத் துதலின் — மணிமேகலை,[46] 26:55.**

பூம்புகாரில் இந்திரனால் ஏற்படுத்தப்பட்ட எழு அரங்குகள், புத்தவிகாரத்தில் இருந்த செய்தியையும் மணிமேகலை விளக்கு கிறது.

மருதநில மக்களின் கடவுளாக இந்திரன் எண்ணப்பட்டான். இந்திரன் வேந்தன் என்றும் சொல்லப்பட்டான். மருத நிலத்திற் குத் தேவைப்பட்டது மழையே.

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும் — தொல்காப்பியம், பொருள்[47] 951.**

---

44. மணிமேகலை கூறும் செய்திகள், 1. விழாவறை காதை, 2. மலர்வனம் புக்க காதை, 3. துயிலெழுப்பிய காதை.

45. மேலதே, 1:8.

46. மேலதே, 26:55.

47. தொல்காப்பியம் பொருள். 951.

மழையை நம்பியிருந்த வேளாண் தொழிலுக்கு, வேந்தனே கடவுளாவான். நீரோடும் மழையோடும் தொடர்புபடுத்தப்பட்ட வேந்தன், பிந்து என்ற வடமொழிச் சொல்லுக்கு மூலச் சொல் லாகும். விந்து-விந்தன்-வேந்தன்-வேந்திரன்-இந்திரன் ஆகிய பெயர்கள் அனைத்தும் தமிழ்ப் பெயர்களே. இந்திரன் என்ற வடமொழிச் சொல்லுக்கான அனைத்து வேர்ச் சொற்களும் தமிழ் மொழியிலேயே உள்ளன.

நிலத்தை நானிலமாகப் பிரித்தும், அதற்குரிய கடவுளர் களைக் கொண்டிருந்ததும் தமிழர் வழக்கேயாகும். நானிலப் பாகுபாடு, ஆரியர் இந்தியாவுக்குள் நுழையுமுன்பே தமிழர் கொண்டிருந்தவைகளாகும். இந்நானிலத்துக்கும் உரிய தெய்வங் களுக்கும் தமிழ்த் தெய்வங்களே. இந்நான்கு தெய்வங்களும் ஆரியரால் எடுத்துக் கொள்ளப்பட்டனர். மாயோனை மகா விஷ்ணு எனவும், சேயோனைச் சுப்பிரமணியன் எனவும், வேந்தன் இந்திரனை இந்திரன் எனவும், வாரணனை வருணன் எனவும் கொண்டனர். பாலை நிலம் என்று பகுக்கப்பட்டது பிற்கால ஒதுக்கீடு என்பர். சிந்துவெளி மக்களும் இந்நான்கு நிலப்பாகு பாட்டுடன், பாலை என்ற நிலத்தையும் (இன்றைய இராஜஸ்தான் பாலை நிலம்) இணைத்து ஐந்நிலமாக்கிக் கொண்டனர். பாலைக்குக் கொற்றவை தெய்வமாக்கப்பட்டாள். முல்லையும் குறிஞ்சியும் வறட்சியில் புணரும் போது, பாலை எனப்பட்ட தாகக் கூறப்பட்டாலும், பாலை-சிந்துவெளி மக்களுடன் தமிழர் கொண்டிருந்த தொடர்பால் கூறப்பட்டதே என்ற கருத்தும் உண்டு. வார்-வாரி என்பதும், வாரணன் என்ற சொற்பெயருக்கு மூலச் சொல்லாகும் என்று பாவாணர் விளக்குகிறார். வரி என்னும் வேர்ச்சொல்லே வாரணன் என்று விரிந்ததாகவும் கூறுகிறார். ஆரியர்கள் கூறும் அனைத்துத் தெய்வங்களும் (பிரம்மனைத் தவிர) தமிழர் தெய்வங்களே.

**மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே**

**– தொல்காப்பியம், பொருள்,[48] 951.**

---

48. மேலதே.

இந்திரன் என்பானை தெய்வமாக சிந்துவெளி மக்களும் கொண்டிருந்தனர். ஐயாற்று நீரின் வழியில் வேளாண்மைத் தொழில் சிறப்புற்றிருந்த சிந்துவெளியில், மருதநிலத் தலைவனாக இந்திரன் போற்றப்பட்டான். சோழர்கள் இந்திரனை வழிபட்டது போல், சோழர் மரபிற் பிறந்த சிந்துவெளி மன்னர்களும், இந்திரனை வழிபட்டிருக்க வேண்டும். இவ்வாறு இந்திரனை வழிபட்ட மன்னனையே, இந்திரனாக இரிக்கு வேதம் கூறுவதாகப் பாவாணர் கூறுகிறார். விரித்திரன் என்ற மன்னன் மிகுந்த ஆற்றலுள்ள மாமன்னனாகச் சிந்துவெளியில் ஆண்டு கொண்டிருந்தவன். இவன் ஆரியர்களின் பொய்யுரை, புகழுரைகளில் மயங்கவில்லை. தமக்கு ஏற்புடையோராயில்லாத மன்னர்களை வீழ்த்தச் சூழ்ச்சி செய்வது ஆரியருக்குக் கைவந்த கலையாகும். விரித்திரனை வீழ்த்த பன்முறையும் முயன்று தோற்ற ஆரியர், விரித்திரனைப் பற்றி முழுதும் அறிந்த இந்திரன் என்னும் தமிழ் மன்னனை நாடி, அவனைப் புகழ்ந்துரைத்து விருந்து வைத்து, அவனை விரித்திரன் மேல் ஏவினர்.[49] இதனையே இரிக்கு வேதம் 210 பாடல்களில் விளக்கமாகக் கூறுகிறது. விரித்திரனைத் தேள் என்றும் கொடியவன் என்றும் வேதம் கூறுகிறது. விரித்திரனை உருவகித்துச் சொல்லப்பட்டதே விரிச்சிக ஓரையாகும். விரித்திரனை இகழ்ந்துரைக்கும் வேதம், அவர்களையறியாமல் பல புகழுரைகளையும் கூறுகிறது. ஆற்று நீரையெல்லாம் தன் கட்டுப்பாட்டில் விருத்திரன் வைத்திருந்தான் என்ற செய்தி, ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டிருந்த அணைகளைக் குறித்தே சொல்லப்பட்டன. வேளாண்மைக்கென பெரும் அணைகளைக் கட்டும் ஆற்றலும் தொழில் நுட்பமும் அறிவியலும், அக்காலச் சிந்துவெளி மக்களுக்கு இருந்த செய்தியை இரிக்கு வேதம் தெளிவுபடுத்துகிறது. விரித்திரனின் கட்டுப்பாட்டில் இருந்த நீரினை, இந்திரன் விடுவித்தான் என்ற வேதச் செய்தி, இந்திரனால் பல அணைகள் உடைக்கப்பட்டன என்பதையே உணர வைக்கின்றது. சகானி கூறும் சிந்துவெளி அழிவுக்கான கரணியமும், இரிக்கு வேதம் சொல்லும் அணைகளை உடைத்த செய்தியையும் நோக்கும் போது, வெள்ளப்பாழ் நிகழ்வே சிந்துவெளி மக்களை அழித்தது அறியக்கிடக்கின்றது.

இந்திரன், தேவதச்சனாகிய விசுவகர்மாவிடம் சென்று ஈட்டி ஒன்றை வடிவமைத்துக் கொடுக்கச் சொன்னானாம். விரித்திரனை

---

49. Rig Veda Sanhita, H.H. Wilson, Vol. 6, Sukta II:14.

ஈட்டி கொண்டு தாக்குவதே சிறந்தது எனக் கருதிய இந்திரன், விசுவகர்மாவை அணுகிய போது, அவன் கேட்டை மீன்களை (கேட்டை நான்கும் ஈட்டியைப் போல என்பது பழமொழி). ஈட்டியாக்கி, அதன் நுனியைக் கூரேற்றிக் கொடுத்தானாம். இந்த ஈட்டியைக் கொண்டே (Antares என்ற விண்மீன்) விரித்திரன் என்ற விரிச்சிகத்தைக் கொன்றதாக இரிக்வேதம் கூறுவது. இந்திரன்-விரித்திரன் போரை, வானியல் கொள்கையில் ஏற்றிச் சொல்லப்பட்ட நிகழ்வே, விரிச்சிக இராசி என வடமொழியில் கூறப்பட்டுள்ளது. தமிழர் கற்றுத் தந்த வானியல் கொள்கைகள் பல இரிக்கு வேதத்தில் காணக்கிடக்கின்றன.[50] இவ்வேதம் கூறும் வானியல் தொடர்பான சொற்கள் அனைத்தும், தமிழ் வேர்ச் சொற்களைக் கொண்டவைகளே. விளக்கம், ஆசிரியரின் "வானியலின் மூலவர் தமிழரே" என்ற நூலில் விரித்துரைக்கப் பட்டுள்ளது.



50. கேட்டையும் மூலமும், எஸ். சுந்தரம், தினமணிச்சுடர், 1.7.89, ப. 3.

4

## அசுவினி என்ற புரவி

புரவி என்ற சொல் தமிழுக்குப் புதியதன்று. கி.மு. 1500 ஆண்டுகட்கு இணையாக, புரவியின் பயன்பாடு தமிழகத்தில் அறிமுகமாயிருக்க வேண்டும். கடைக்கழக காலங்களில், புரவியின் விலை உயர்ந்திருந்ததால், மன்னர்களும் செல்வர்களுமே இதனைப் பயன்படுத்தினர். புரத்தல் என்றால், பாதுகாத்தல் என்று பொருளாகும். தமிழ்நாட்டில் புரவிகளை கண்ணுங் கருத்துமாய்க் காக்க வேண்டியிருந்தது. தமிழ்நாட்டின் வெப்பம் புரவிகள் நீண்ட நாள் உயிர்வாழ ஊறுவிளைவிப்பதாயிருந்தது. புர-புரவி என்று சொல்லப்பட்டது. குதித்துக் குதித்து ஓடுவதால் குதிரை என்றும் சொல்லப்பட்டது. நீண்ட வழிப் பயணத்துக்குப் பயன்பட்டதால் பரி என்றும் அழைக்கப்பட்டது. பரி = வழி. வானவியலில் 27 மீன்களில் முதல் மீனை, புரவி என்று அழைக்கும் வழக்கு பிற்காலத் தமிழ் வழக்காகும். தொல்தமிழர் புரவி என்ற முதல் மீனை ஏறு என்றே அழைத்தனர். ஏறு என்பதற்கு, விலங்குகளில் ஆண் என்றே பொருள்படும். எருதுகளைக் குறிக்கவும் ஏறு என்ற சொல்லைப் பயன்படுத்தினர். ஏறு தழுவுதல் என்பது தமிழர் வழக்கு. இந்த வகையில், ஆண் புரவியையும் ஏறு என்று சொல்வதில் தவறில்லை. ஏறு என்ற சொல், ஆங்கிலத்தில் ஆர்ஸ் (Horse) என்று திரிந்துள்ளது. இது ஆண் புரவியைக் குறித்த சொல்லே. இதற்குப் பெண்பாற் சொல்லாக Mare-மேர் எனப் பட்டது. இது மறி என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. மறி என்பது ஆட்டின் பெண்பாற் சொல்லாகும்.

புரவியை அறிமுகப்படுத்தியவர்கள் ஆரியர்களே என்று சொல்லப்படுகின்றது. பரந்து விரிந்த எல்லைகளில் மேய்ந்து கொண்டிருக்கும் கால்நடைகளை வளைத்து ஒருங்கிணைப்பதற்குப் புரவிகள் பெருமளவில் அவர்களுக்குப் பயன்பட்டன.

கி.மு. 3000-2000 ஆண்டுகளில் புரவியைப் பயன்படுத்தத் தொடங்கினர் என அறியலாம். எப்போது முதன்முதல் புரவிகள் மக்களின் பயன்பாட்டுக்கு வந்தன என்பதை தெளிவாகக் கூற இயலாது என்பது ஆய்வாளர்களின் கருத்து. கி.மு. 2500 ஆண்டுகளில் புரவிகளின் பயன்பாடு அறியப்பட்டதாக உணரலாம்.[51] நடுத்தரைக் கடலின் கிழக்கு நாடுகளில் கி.மு. 1700 ஆண்டுகளில் புரவிகள் போருக்குப் பயன்படுத்தப்பட்டதாக, எகிப்திய வரலாறு கூறுகிறது. இக்சோஸ் (Hyksos) என்ற மரபார் கி.மு. 1670ஆம் ஆண்டில் எகிப்து நாட்டை வெற்றி கொண்டனர். இக்சோஸ் என்ற பெயருக்கு வெளிநாட்டவர் என்று எகிப்து மொழியில் பொருள் கூறுவர். இந்த மரபு கி.மு. 1570ஆம் ஆண்டுவரை எகிப்தை ஆண்டது. இவர்களே, தேரில் புரவியைப் பூட்டி, அதனைப் போர் நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்தியவர்கள் என்று கூறப்படுகிறது.[52] நடைப் போராளிகளினின்றும் விரைந்து சென்று தாக்கும் போர்முறையை இவர்களே இப்பகுதிக்கு அறிமுகம் செய்தவர்களாவர். இம்மரபினர் இந்தோ-ஆரியர்கள் என்றும், மெசப்பத்தோமியாவின் வடக்குப் பகுதியினின்றும் பாலத்தீனம், எகிப்து நாடுகள் மீது படை எடுத்தனர் என்றும் கூறுவர். பாலத்தீனத்தில் இருந்த யூத மக்கள், இப்படை எடுப்புக்கு அஞ்சியே, எகிப்து நாட்டில் சென்று குடியேறியதாகவும் சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[53]

கி.மு. 1800 ஆண்டுகளில் சிந்துவெளி நாகரிகம் முடிவுக்கு வந்ததாக, வரலாற்று ஆய்வாளர்கள் முடிவு செய்துள்ளனர். இக்காலம் வரையிலும், சிந்துவெளியில் புரவிகள் பயன்பாட்டுக்கு வரவில்லை என்பதைத் தெளிவாகக் கூறலாம். எனவே, ஆரியர்களின் இந்திய வருகை, கி.மு. 2000 ஆண்டுகளுக்குப் பிறகு நடைபெற்றதே என்பதை, புரவியின் பயன்பாட்டுச் சான்று கொண்டும் நிறுவலாம். ஆரியர்களின் வேதங்களில் கூறப்படும் புரவிகள் பற்றிய செய்திகள், அவ்வேதங்கள் கி.மு. 1500க்குப் பிறகே எழுதப்பட்டன என்பதை உறுதிப்படுத்தும்.

---

51. The New American Bible, Dict. p. 64.
    The horse was introduced into The Middle East by people of Indo-European origins who steamed into the zone as early as the third millm. and during the second millm. The horse was used by them to draw chariots in war. Hyksos brought this practice to Egypt.
52. Ibid.



5

இரிக்கு வேதத்தில் சொல்லப்பட்ட அசுவினிகள், தேவர் உலகின் மருத்துவர்கள் என்று சொல்லப்படுகின்றனர்.[54] இவர்கள், ஆரியர்களுக்கு மருத்துவம் செய்தவர்களாக இருத்தல் கூடும். விரைவு கருதி, புரவிகளில் சென்று மருத்துவம் பார்த்த கரணியம் பற்றி, புரவி மருத்துவர்கள், புரவிகளாகவே சொல்லப்பட்டிருக்க வேண்டும். போர்க் காலங்களிலும், கொள்ளை நோய்கள் தோன்றும் காலங்களிலும் மருத்துவர்களின் உதவி மிகவும் தேவைப்படுவதாகும். எனவேதான் இம்மருத்துவர்களை உருவகப் படுத்தி, அவர்களை அசுவினிப் புரவிகளாகச் சொல்லி, அவர்களின் உதவியை வேண்டிய ஆசிரியர், தங்கள் வேத நூலிலும் அவர்களைப் பெருமைப்படுத்தியிருக்கலாம். ஏறு என்ற தமிழர் கூறிய முதல் விண்மீன் கூட்டம், ஆரியர்களின் வருகைக்குப் பிறகே அசுவினி-புரவி என்று மாற்றம் பெற்றது எனலாம்.

## சோமன்

சோமபானம், சுரா பானம் என்ற தேறல் (மது) வகைகளை ஆரியர் குடித்தனர் என்று அறியப்படுகின்றது. பானம் என்பது நீரைக் குறித்த வடசொல் என்பர். பானி என்று இந்தியில் சொல்லப்படுகிறது. வான் + நீர் என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே பான்-பானி என்றானது. பனி என்ற சொல்லுக்கும் மழை என்ற பொருளும் உண்டு. பனி + நீர் = பன்னீர். பனித்தல் = விடாது மழை பெய்தல். சோம்புதல்-சோம்பு என்ற சொற்கள், மயக்கமுறுதல் என்ற பொருளைத் தருவது. சோம்பு என்பது தமிழ்ச் சொல்லே. சுள்-சுறுப்பு-சுறும்பு = சுற்றிச் சுற்றி வருதல். சுனும்பு-சோம்பு = மதுவுண்டதால் ஏற்பட்ட மயக்கம் அடைதல். மதி என்பது அறிவைக் குறித்த தமிழ்ச் சொல்லாகும். மதியைப் பிறழ வைப்பது மது எனப்படும். மதுத்தன்மையைக் கொண்டிருப்பதால் நிலவும் மதி எனப்பட்டது. மது-சோமம் ஆகியவை ஒரு பொருள் குறித்தவைகளே.

சோம மதுவை, ஆரியர்கள் இந்தியாவிற்கு வருமுன்பே அறிந்திருந்தனரா என்பது பற்றிய செய்திகள் தெளிவாக இல்லை. சோமம் என்ற சொல், தமிழ்ச் சொல்லாக இருப்பதால், இச்சோம மதுவை, சிந்துவெளி மக்களிடமிருந்தே இவர்கள் பெற்றிருக்க வேண்டும். அசுவினி-தமிழ் மூலத்தினின்று வரும் சொல்லே. எனவே அசுவினியை தமிழ்ச் சொல்லாகவே கொள்

ளலாம். சோமம், தமிழ் மூலத்தினின்றும் வருவதால், சோம மது, தமிழர்கள் படைத்த மதுவாகவே கொள்ள வேண்டும்.

சோம மதுவைத் தமிழர்களிடமிருந்து பெற்று அருந்திய ஆரியர்கள், அதன் கிறக்கமும் சுவையும் பிடித்துப் போகவே, நாளடைவில் சோம மதுவின்றி அவர்களால் இருக்க இயல வில்லை. சமயச் சடங்குகளின் போதும், விழாக்காலங்களிலும், சோம மது ஆரியரின் வாழ்க்கையில் சிறப்பான இடத்தைப் பிடித்தது. இம்மதுவை இறக்கித் தரும் மக்களை சோமர்கள் என்றே அழைத்தனர். இச்சோம மதுவை இறக்கும் முறையை ஆரியர்களுக்குத் தமிழர்கள் கற்றுக் கொடுக்கவில்லை போலும். எனவே சோம மக்களை எப்போதும் அணுகி அவர்களின் அன்பைப் பெற்றிருக்க முயன்றனர். இவ்வாறு இம்மது இறக்கு வோரை தன்வயப்படுத்த, அவர்களுக்கு விருந்துகளும் அளித்துச் சிறப்பித்தனர். இரிக்கு வேதம் சொல்லும் சோமன்,[55] மது இறக்கித் தரும் தமிழனே ஆவான்.

சோமச் செடி, காசறுகீரை (புளிச்சைக் கீரை)யைப் போன்று தோற்றமளிப்பது. தடித்த தோல் பட்டையைக் கொண்டது. இத்தோல் பட்டையினின்றும் பிழியப்படும் நீரை முறைப்படுத்தி, அதனின்றும் சோமக்கள் இறக்கப்பட்டது. இச்சோமச் செடியை Asclepias acida அல்லது Sacrostemma என்ற கிரேக்கச் சொற்களால் அழைக்கின்றனர். இச்செடி, முழுநிலவு நாளன்று, தனது தண்டு களில், நீரைப் பெருமளவில் தேக்கி வைத்திருக்கும் என்று சொல்லப்படுகின்றது. அன்றே இச்செடியைப் பறித்து, சோமக் கள் இறக்குவர். நிலவுக்கும் சோமம் என்ற சொல், வடமொழியில் உணரப்பட்டது. சோமத்தின் முழு நாளில் (வெள்ளுவா) இக்கள் இறக்கப்பட்டதாலும், மயக்கத்தைத் தருவதாலும், சோமம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. இந்தக் கள் இறக்கும் தொழிலைச் செய்தோரை, தங்களுடைய தேவைகளுக்கான வட்டத்தில் ஆரியர் வைத்திருந்தனர். எனவேதான், சோமனைப் புகழ்ந்து இரிக்கு வேதத்தில் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

---

53. Ibid.
54. ரிக் வேத சம்ஹிதை. தொகுப்பு : சிவத்தியாநாநந்த மகரிஷி, மண் 1: அனு. 1, சூக்தம் 3, பாடல் 2.
55. மேலதே, மண் 1: அனு 2: சூக்தம் 2: பாடல் 4.

சோமன் = சோமக்கள் இறக்குவோன். அவனையும் தேவர்கள் (தேவைப்பட்டவர்கள்) பட்டியலில் ஆரியர் இணைத்திருந்தனர்.

வாரணன்:[56] வருணா என்று இரிக்கு வேதம் சொல்லும் மழைக்கான தெய்வம், தமிழர் தெய்வமே. கடல் தெய்வமாக வாரணனை, தொல்காப்பியம் கூறுகிறது. வாரணம் என்பது கடலைக் குறித்த தமிழ்ச் சொல்லே. வரி என்பது, நீண்ட அல்லது வளைந்த என்ற பொருளைத் தரும். வரிசங்கு = வளைந்த சங்கு. வரிக்குதிரை = நீண்ட கோடுகளையுடைய குதிரை. வரி-வார் என்று நீண்டது. வார் = நீண்ட தோல். நீண்ட காலத்தையும், நீண்ட பொருளையும் குறித்தது. வார்-வாரம் = நீண்ட கால குத்தகை. வார்-வாரம் = ஏழு நாட்களைக் கொண்ட கிழமை. இதனை வார் என்று வடமொழியில் திரித்துக் கொண்டனர். வாரம் (week) தமிழ்ச் சொல்லே. இந்த உலகத்தை வளைத்துக் கொண்டிருப்பதால், கடலுக்கும் வாரி என்ற சொல் பொருத்த முடையது. வாரணம் என்பது கடலைக் குறித்த தமிழ்ச் சொல்லே என்று பாவாணரும் உரைக்கின்றார். "வாரணஞ் சூழ் புவி" எனும் சொற்றொடர் இக்கருத்தை உறுதிப்படுத்தும்.

ஆனால் வடமொழியாளர்கள், வ்ரு (Vru or Varu) என்னும் வேர்ச் சொல்லினின்றே வ்ருணா (Vruna) என்ற சொல் பிறந்த தாகவும்,[57] வருணா வடசொல்லே என்று கூறப்படுவதையும், பாவாணர் மறுக்கிறார். வரிதல் என்ற பொருளில், வானத்தை வளைத்து மூடும் முகிலையும், முகில் வழி மழையையும் குறிப் பிடும் பாவாணர், வாரணன் என்பவன், கடற்கடவுள் என்பதை விட மழைக்கடவுள் எனச் சொல்வதே பொருத்தமானது என்கிறார். ஆகவே, நீரோடு தொடர்புகொண்ட கடலும் மழையும் ஒன்றெனவே சொல்லப்பட்டு, வாரணன் நீரோடு தொடர் புடைய தெய்வமாக்கப்பட்டான். இன்று மழைக்கான கடவுளாக 'வருண பகவான்' சொல்லப்படுகிறான்.

இரிக்கு வேதத்தில் சொல்லப்படும் வருணன், பெரிய நீர் நிலைகளையும், பரந்து விரிந்த புல்வெளிகளையும் தன்னிடம் வைத்திருந்த மன்னனாகவோ, பெருஞ்செல்வனாகவோ இருந் திருக்க வேண்டும். கால்நடைகளுக்குத் தேவையான புல்வெளி

---

56. மேலதே, மண் 2: அனு 1: சூக்தம் 2: பாடல் 7.

57. Rig Veda Sanhita, H.H. Wilson, Vol. 6, Sukta 2.

களும், அவைகளின் நீர்த் தேவையைப் போக்கும் நீர்நிலைகளும் அம்மன்னனுக்கு உரிமைகளாய் இருந்திருக்க வேண்டும். இத்தகை யோரின் நட்பும் ஆரியருக்குத் தேவைப்பட்டன. ஆரியருடைய ஆநிரையெல்லாம் கவர்ந்து கொண்டு போய், அவைகளை யெல்லாம் ஒரு குகையில் விரித்திரன் அடைத்து வைத்திருந்த தாகவும், அவைகளை விடுவித்துக் கொடுக்குமாறு, ஆரியர்கள் இந்திரனை வேண்டியதாகவும் ஒரு செய்தி இரிக்கு வேதத்தில் காணப்படுகின்றது. ஆற்றின் குறுக்கே அணைகளைத் தேக்கி, நீரையெல்லாம் தன் கட்டுப்பாட்டில் விரித்திரன் வைத்திருந்த தாகவும் இரிக்கு வேதம் கூறுகிறது.[58] சம்பரன் என்ற மன்னனைப் பற்றியும் இவ்வாறான செய்தி கொடுக்கப்பட்டுள்ளது. எனவே நீரினை அளிக்கவல்ல மன்னனைத் தங்கள் பக்கம் இணைத்துக் கொள்ளவே, அவனுக்கு விருந்து (வேள்வி) வைத்தனர். இம் மன்னனே, வாரணன் என்ற வடிவில், இரிக்கு வேதத்தில் தேவனாக உருவகப்படுத்தப்பட்டுள்ளான். வருணனை அசுரன் என்றே இரிக்கு வேதம் சொல்வதும்,[59] மேற்கண்ட செய்திகளை உறுதிப் படுத்துகின்றது எனலாம். இந்திரனும் வாரணனும் மழைத் தெய்வங்களாகவே சொல்லப்பட்டுள்ளனர். ஒரு திங்களுக்கு 30 நாள் என, 12 திங்களுக்கும் 360 நாள் வரை, எஞ்சியுள்ள நாள் பற்றிய கணக்கு வாரணனுக்குத் தெரியும் என்று சத்பத பிரமாணம் கூறுகிறது.[60] ஏராளமான மூலிகைகள் பற்றிய அறிவும் வாரணனுக்கு இருந்ததாகவும் ஆரிய நூல்கள் கூறு கின்றன.[61] 'வானியல் பற்றிய தமிழரின் கணக்கு முறைகளும், பச்சிலை மருத்துவமும் அறிந்த வாரணனை அசுரன் என்று ஆரிய வேதங்கள் சொல்வதன் மூலம், வாரணன் தமிழனே என்பதை, ஆரிய நூல்களே சொல்லாமல் சொல்கின்றன.

---

58. ரிக்வேத சம்ஹிதை, மண் 1, அனு 7: சூக்தம் 2: பாடல் 11.
"விருத்திரனது காவலிற்றங்கினவையுமான ஜலங்கள் கட்டுப்பட டிருந்தன. இந்திரன் விருத்திராசுரனை யழித்தபோது நீர் கட்டுப் பட்டிருந்த பிலத் துவாரத்தையும் திறந்துவிட்டான்"
- ரிக்வேத சம்ஹிதை.

59. Rig Veda, VII:36:2.

60. சத்பத பிரமாணம், IV:I:IV:X.

61. Rig Veda, VII:XXXIII:XI:XIII.

## வேள்விகள்

அழல் என்ற அக்கினியை (Agni)ப் போற்றி 200 பாடல்கள் இரிக்கு வேதத்தில் உள்ளன.[62] அழலைத் தீ என்றும், விண்மீன் என்றும், கதிரவன் என்றும் உருவகம் செய்தவர் தமிழர். ஞாயிற்றின் சிவந்த உருவையும், மூதிரையின் சிவந்த தோற்றத்தையும் கண்டு, அத்தீக்களை சிவனாக உருவகம் செய்து வழிபட்டவர்களும் தமிழர்களே. சிந்துவெளி மக்களின் ஒரு பிரிவினராகிய பாரசீக மக்கள், தங்கள் வழிபாட்டு முறைகளில் அழலுக்கே சிறப்பு செய்திருந்தனர். தீயே அவர்களது முழுமுதல் கடவுளாகும்.[63] அவர்களுடைய நாடு, அக்காலத்தில் பார்த்தியா (Parthia) என அழைக்கப்பட்டது. அதுவே பெர்சியா (Persia) என்று பிற்காலத் தில் அழைக்கப்பட்டது. பார் + தீ = பார்த்தீ என்பது, தீயை வணங்கும் நாடு என்றே சொல்லப்பட்டு, பார்த்தியா என்று திரிந்தது. இவ்வழிகளில், ஆரியரும் தீயை வணங்கினர்.

அக்கினி என்ற அழல் வேள்வியில் வளர்க்கப்பட்டது. ஆவின் நெய்யை ஊற்றி அத்தீயை வளர்த்தனர். கொழுந்து விட்டு எரியும் தீயின் முன், படையல் பொருட்களான பால், அவியுணவு, தேன், சோமக்கள் அவைகளைப் பரப்பி வைத் திருந்தனர். இவ்வேள்வியின் செலவுக்கு ஏற்றவாறு, ஒருவரோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்டவரோ, வேள்விப் பணிகளில் ஈடுபட்டனர்.[64] தீக்கு நெய் வார்க்க ஒருவரும், படைக்க ஒருவரும், மந்திரங்கள் ஓத ஒருவரும் என்றவாறு, பணி செய்வோர்களின் எண்ணிக்கை இருந்தது. மந்திரங்களைக் கூறி தெய்வங்களை அழைப்பவன் ஹோதா (ஓது - என்ற தமிழ்ச்சொல்லே) என்றும், தீயை வளர்த்தவன், அத்வர்யூ (தீ + வரி = தீவரி என்பதே) என்றும், மந்திரங்களை உரக்கப்பாடுபவன், உத்கதா என்றும் அழைக்கப்பட்டனர். மன் + திறம் என்ற தமிழ்ச் சொல்லே, மந்திரம் என வடமொழியில் திரிந்ததாகப் பாவாணர் கூறு கிறார். மன்-மன்னுதல் = மனதில் நினைத்தல். தன்னுடைய திறமையால் சில அருஞ்செயல்களைச் செய்வதும் தந்திரம் எனப்பட்டது. தன் + திறம் என்க. அத்வர்யூ என்ற சொல், அத்தீயை

---

62. History of Religion, p. 163.
63. Ibid, p. 213.
64. Ibid, p. 165.

வரியாக நிலைப்படுத்துதல் என்ற தமிழ்ச் சொற்களை மூலமாகக் கொண்டதே. இப்பணியைச் செய்தவனைத், தீக்கையன் என்று சதுரகராதி கூறுகிறது.[65] தீயும்-நெய்யும்-கையுமாக இருப்பவன் என்று பொருள். தீக்கையன் என்பது வேள்வி செய்யும் பணி யாளனைக் குறித்தது. தீக்கையன் என்ற தமிழ்ச் சொல்லே, தீக்ஷிதன் என்று வடமொழியில் திரிந்தது. தில்லையில் வாழும் அந்தணர்களை மட்டுமே தீக்ஷிதர் என அழைப்பர். இவர்கள் தேவர் உலகினின்றும், வேள்விகள் செய்வதற்காகவே, சிவனு டைய உதவியால், உலகத்துக்கு வந்தவர்கள் என்று, தொன்மக் கதைகள் கூறுகின்றன. இவர்கள் தமிழரே என்பதும், ஆரிய வழியில் தங்களையும் ஆரியர் என அறிவித்துக் கொண்டு, தீக்கை யராக மாறினர் என்றும் எண்ண இடமுண்டு. பிரம்மன் ஒரு முறை இவர்களை, வடநாட்டுக்கு யாகம் வளர்க்க வருமாறு அழைத்தானாம். தீக்ஷிதர்கள் மறுத்துவிட்டதாகவும் சொல்லப் படுகின்றது. சிவனை விட பெரிய தெய்வம் பிரம்மன் இல்லை என்பதால், அவர்கள் மறுத்துவிட்டதாகவும் சொல்லப்படுகின்றது. இக்கதையின் வழியாக, வடநாடு-தென்னாட்டு இன உணர்வு கள் வெளிப்படுகின்றன. தீக்கையரின் மரபார் என்று சொல்லிக் கொள்ளும் சிலர், அப்பெயரிலேயே (Dixit), இன்றும் வட இந்தியாவில் உள்ளனர். தொடக்க காலத்தில் தீக்கையர்களாக மகளிரும் பணியாற்றினர், பூணூலும் அணிந்து கொண்டனர்.

வேதகாலத்தில், பூசாரிகள் என்ற பிரிவு தனியாக இருந் திருக்கவில்லை. மந்திரங்களை ஓதத் தெரிந்த எவரும் வேள்வி கள் செய்யலாம். இவ்வேள்வியில் படைக்கப்படும் பொருட்கள் பற்றிய செய்திகளை, அக்கினி மேலே சென்று, தேவர்களிடம் கூறும். இப்பொருட்களின் சுவையையும் எண்ணிக்கையையும் கருத்தில் கொண்டு செய்தி சொல்லப்பட்ட கடவுள் கீழிறங்கி வந்து, இப்படையல் பொருட்களை உண்டு மகிழும். உண்டு மகிழ்ந்தவுடன், எங்கே உங்களது கொடை (வரம்) என்று, வேள்வி செய்வோர் கடவுளைப் பார்த்துக் கேட்பர். இதனை உருசிய வரலாற்றாசிரியர் தாக்கரேவ் என்பார், "Here is some butter, now where are your gifts?" என்று கடவுளைக் கேட்டதாகக் கூறுகிறார்.[66] மிகப்பெரிய அருஞ்செயல்களை, உணவு கொடுத்தே

65. சதுரகராதி, ப. 100.

66. History of Religion, p. 165.

கடவுளரிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம் என்று நினைத்தனர். தேவர் உலகத்தில் கிடைக்காத இவ்வுணவுப் பொருட்களை, கடவுளரும் விரும்பியுண்டு கொடைகளை (வரங்களை)க் கொடுத்தனர். இவ்வேள்விகள் தமக்கும், தமக்கு வேண்டியவர்களுக்கும் தன்னலம் கருதி செய்யப்பட்டாலும், தமக்குப் பகைவர்களாயிருந்தவர்களை (தமிழர்களை) அழிப்பதற்கே, பெரும்பாலும் செய்யப்பட்டன. தான் படைத்த மக்களில் ஒரு பிரிவினரைத் தானே அழிப்பது முறையற்ற செயல் என்று, கடவுளரும் சிந்தித்துப் பார்க்கவில்லை.

அக்கி என்ற தமிழ்ச் சொல்லுக்குக் கண் என்ற பொருளுமுண்டு. தீயின் நாவில் தோன்றும் கருமை, கருவிழி'பாகக் கருதப்பட்டு, தீ நாக்கையும் அக்கி என்று கொள்ளலாம். அவ்வழியில், அக்கி என்ற தமிழ்ச் சொல்லே அக்னி என்று திரிந்தது. நிலம், நீர், தீ, காற்று என்ற நால்வகையும் சேர்ந்தே, அணுவாக (atom) இருப்பதாக, மணிமேகலை கூறுகிறது.

நிலநீர் தீக்காற் றெநால் வகையின — மணிமேகலை.[67]

இந்நால்வகையணுக்களும் சேர்ந்தே இப்பேரண்டம் உருவாயிற்று என்றும் கூறுகிறது. இவைகள், மலை-மரம்-உடல் என்றவாறு திரண்டு கொள்ளும் என்றும் விளக்குகிறது. இந்த அடிப்படை அணுக்கள் நான்கையும், ஆரிய வேதங்கள், கடவுளராகச் சொல்கின்றன.

மலைமர முடம்பெனத் திரள்வதும் செய்யும் — மணிமேகலை.[68]

நிலத்தை பூமாதேவியென்றும், நீரை வருணன் என்றும், தீயை அக்னியென்றும், காற்றை மாருதி என்றும் கூறிக் கடவுளர்களாக அழைத்தனர்.

இவ்வாறான சிறப்பு வேள்வியின் போது, பிரமணாஸ்பதி என்ற மந்திரங்களுக்கான கடவுள் தோன்றியதாகவும் கூறப்பட்டது. வேத காலத்தில் சிறிதளவே சொல்லப்பட்ட பிரமணாஸ்பதி, பிற்காலத்தில் பிரகஸ்பதி என்றும் பிரமன் என்றும் உயர்வு பெற்றான். பிரமணாஸ்பதி-பிராமணர்களின் தலைவன். பிரகஸ்பதி -பெரிய வடிவங் கொண்டவன். பிற்காலத்தில் வியாழன் என்ற

67. மணிமேகலை, 27:116.

68. மேலதே, 117.

கோளுக்கும் அப்பெயர் சூட்டப்பட்டது. பெரும் அமணன் என்பதே, பிராமணன் என்று திரிந்தது. பெருங்கோள் என்பதே பிரகஸ் என்றும் திரிந்தது. வேத காலத்தில் பிரமனின் சிறப்பு குறைவாகவே இருந்தது. பிற்காலத்தில் இரிக்கு வேதத்தில் இணைக்கப்பட்ட புருஷசூக்தம், பிரமனைப் பற்றி விரிவாகச் சொல்கிறது.

பிராமணங்கள் என்று சொல்லப்படுபவை, வேள்விகளின் சிறப்புக்களைப் பற்றி விளக்கமாகக் கூறும் உரைநடை நூல் களாகும். இவை வேத மந்திரங்களின் பொருளை விரித்துக் கூறுபவைகள் ஆகும். பிரமாணங்களில் சிறப்புடையதாக, சத்பத பிரமாணம் சொல்லப்படுகிறது. இப்பிராமணங்கள் யாவும், பிற்காலத்தில் ஆரியர்கள், பஞ்சாபினின்றும், கங்கைவெளியில் நிலைப்பட்ட காலங்களில் எழுதப்பட்டவைகள் ஆகும். வேள்விகள் அரசனுக்காக, நாட்டில் மழை பெய்யவும், போரில் வெல்லவும், பகை மன்னர்களை செயலிழக்கச் செய்யவும் என பல்வேறு அரச நோக்கங்களுக்காகச் செய்யப்பட்டன. இவை இராஜசூயம் எனப்பட்டன. தமிழ் நாட்டிலும் இவ்வேள்வி களைச் செய்தோர் பட்டியலில், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியும், பெருநற்கிள்ளியும், பல்யானைச் செல்குழு குட்டுவனும் இடம்பெறுகின்றனர். பிர என்னும் முன்னொட்டுச் சொல்லில் ஏராளமான வடசொற்கள் உள்ளன. பிரகாசம், பிரகாரம், பிரசங்கம், பிரசன்னம், பிரசித்தம், பிரஸ்தாபம், பிரணவம், பிரதாபம், பிரதானி, பிரபஞ்சம், பிரபந்தம், பிரபலம், பிரயோகம், பிரமோதூத, பிரமன், பிரதானம், பிரளயம் என்ற வாறு மேலும் விரியும். பிர என்ற முன்னொட்டுச் சொல், பெரும் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. பிரமன் என்பது, பெருமன் என்றே சொல்லப்பட்டது. பிரமன், பெருமன் இரண்டு சொற் களும் ஒரு பொருளைக் குறித்தவைகளே. இவ்வாறே மேற்கண்ட பிர என்று தொடங்கும் வடசொற்களில், பெரும் என்ற சொல் லைச் சேர்த்தால், தமிழ்ப் பொருளே கிடைக்கும். பெரும் அமணனே, பிராமணன் எனப்பட்டான்.

இரிக்கு வேதம் கூறும் வேள்விகள், இந்திரன்-வாரணன்-வாயு-அக்னி-அசுவினி போன்றவர்களை மையமாக வைத்துச் செய்யப்பட்டவைகளே. வேள்விகளை இயற்ற, பிராமணனே அனுமதிக்கப்பட்டான். உலகின் நன்மைக்காகவும், மன்னன்

(சத்ரியன்), வணிகன் (வைசியன்) ஆகியோரின் நன்மைக்காகவும் வேள்விகள் இயற்றப்பெற்றன. சூத்திரனுக்காக வேள்வி செய்வதை, மனுநூல் தடை செய்கிறது. சூத்திரன் வேள்வி செய்யப்படும் இடத்திற்கே அனுமதிக்கப்படவில்லை. மேற்கண்ட இருவருக்கு மட்டுமே வேள்விகள் செய்து வந்த காலத்தில், பிராமணர்களுக்கு வருவாய் குறைந்து போகவே, பிற்காலத்தில் சூத்திரர்களுக்கும் வேள்விகள் செய்தனர். மனுவின் சட்டம் வருவாய்க்கு முன் மதிப்பிழந்து போயிற்று.

ooo

5

## ஆரிய வேதங்கள் கூறும் வானியல்

ஆரியர்கள் இந்தியாவுக்கு வருகை தருமுன்னரே, தமிழ்க் கணியர்கள் வானியல் பற்றிய கண்டுபிடிப்புகளையும், வானியல் விளக்கங்களையும், மக்களுக்கு அறிவியலாகக் கூறிவந்தனர். ஆரிய வேதத்தில் சொல்லப்படும் அனைத்து வானியல் செய்திகளும், தமிழர்களின் கண்டுபிடிப்புகளே. சிலப்பதிகாரமும், மணிமேகலையும், பரிபாடலும் கூறும் வானியல் பற்றிய செய்திகளுக்கான மூலநூலும் முதனூலும் தெரியவில்லை. இவ்விலக்கியங்களை எழுதிய ஆசிரியர்களும், வானியல் தொடர்பாகச் சொல்லப்பட்டுள்ள செய்திகளை, எந்நூற்களின் வழியே கற்றனர் என்ற விளக்கங்களும் கொடுக்கப்படவில்லை. தமிழர்தம் படைப்புக்களான ஏராளமான வானியல் நூற்கள், வடமொழியில் மாற்றம் செய்யப்பட்டு, மூலநூல்கள் அழிக்கப்பட்டனவாக கருத இடம் உண்டு. ஆரிய வேதம் கூறும் வானியலே, முதன் முதலில் மக்களுக்கு வானியலைக் கற்றுத் தந்தது என்ற தோற்றத்தைப் பிற்காலத்தவர் ஏற்படுத்தி விட்டனர். தமிழ்க் கணியர்கள், வானத்து மீன்களை, நாள்மீனாகவும், கோள் மீனாகவும் வகைப் படுத்தினர். நாள்மீன்கள் தன்னொளி கொண்டும், கோள்மீன்கள் எதிரொளி கொண்டும் மின்னின. பரந்த வெளியில் காணப் பெறும் விண்மீன்களைப் பன்னிரு ஓரைகளாகவும், அப்பன்னிரு ஓரைகளில் அடங்கியனவாக 27 மீன் கூட்டங்களையும், இவைகளில் சேர்க்கப்படாத பிற விண்மீன்களையும் கண்டறிந்து, அவைகளுக்குப் பெயரும் சூட்டியிருந்தனர். விண்மீன்கள், கோள்களின் இயக்கங்கள் பற்றிய அறிவு பண்டைத் தமிழரிடம் மிகுந்திருந்தது.

தமிழர் கண்டறிந்த வானியல் பற்றிய மூல நூல்கள் அழிந்துபட்டு அல்லது அழிக்கப்பட்ட சூழ்நிலைகள் எக்காலத்து

நிகழ்வுற்றன என்பதைக் கணக்கிட இயலவில்லை. தமிழர்களே வானியலின் மூலவர்கள் என்பதை இன்று நிறுவுதற்கான நூற் சான்றுகள் இல்லாத நிலையில், உலகின் பல்வேறு மொழி களிலும் கூறப்பட்டுள்ள விண்மீன்கள் தொடர்பான பெயர்கள் யாவும், தமிழ் மூலத்தையே கொண்டுள்ளதால், வானியலின் மூலவர் தமிழரே என்பது தெளிவு. மேலை நாடுகளில், வானி யலை அறிமுகம் செய்தோர் கிரேக்கர்களே என்றும், தாலமியே (Ptolemy) வானியலின் தந்தை என்றும் போற்றப்படுகிறார். தாலமி பெயரிட்டுள்ளதாக 1022 விண்மீன்களின் பட்டியலொன்று கூறப்பட்டுள்ளது.[69] புரவி (அசுவினி) முதல் தோணி (இரேவதி) வரையிலான 27 மீன்களுக்கான தமிழ்ப் பெயர்கள், தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றன. கிரேக்கர்கள் கூறும் பட்டியலில், ஏறக்குறைய 13 மீன்களின் பெயர்கள் காணப்பட வில்லை. அவைகள் ஆல்பா, பீட்டா, காமா என்ற ஒளிகளை வரிசைப்படுத்தும் சொல்லாகவே பயன்படுத்தப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, முறம் என்ற விசாகத்தை, அயோட்டா லிப்ரா என்று (1 Libra) குறிப்பிடுகின்றனர். துலை ஓரையில் ஒளி குறைந்த மீன் என்றே இதன் பொருளாகும்.

கிரேக்கர்கள் அளித்துள்ள விண்மீன்களுக்கான பெயர்ப் பட்டியலில் காணப்படும் சொற்களில் பெரும்பாலானவை, தமிழ் மூலத்தையே கொண்டுள்ளன. அதைப் போன்றே ஆரிய வேதங்கள் கூறும் வானியல் பெயர்கள் அனைத்தும், தமிழ் மூலச் சொற்களின் திரிபுச் சொற்களே. உலகின் வானியல் தொடர்பான கலைச் சொற்களும், தமிழ் மூலத்தினின்றே பிரிந் துள்ளன. ஆரியர்கள் முறையான மொழியையும், அதற்கான வரிவடிவத்தையும், வானியல் பற்றிய செய்திகளை அவர்கள் கூறிய காலங்களில் (கி.மு. 1000) பெற்றிருக்கவில்லை. தமிழ் வானியல் செய்திகளை, வடஇந்தியத் தமிழரான சிந்துவெளி மக்கள் வழியே அறிந்து கொண்டு அவைகளைத் தம் வேதங் களில் குறிப்பிட்டுள்ளனர் என்பதே உண்மையாகும். அனைத்து விண்மீன்கள் தொடர்பான வடமொழிப் பெயர்களும் தமிழ் மூலத்தையே கொண்டுள்ளன. அஸ்வ என்பது மேலை ஆரிய மொழியென்று சிலரும், சுஸ் என்ற எபிரேய மொழிச் சொல்லே அஸ்வ எனத் திரிந்ததாகச் சிலரும் கூறுவர். சித்திரை முதல்

69. Fixed Stars, p. 11.

பங்குனி வரையிலான பெயர்களும், 60 ஆண்டுக்கணக்கில் கூறப்பட்டுள்ள பெயர்களும் தமிழ் மூலத்தைக் கொண்டவை களே. சில பெயர்களுக்கான பொருள் தெரியாதவிடத்து, தமிழ்ப் பெயர்களை அப்படியே சொல்லிவிட்டனர். பரணி என்பது தமிழ்ச் சொல்லே. பரண், உயர்வு, உயர்ந்த என விரியும். பரதேசம் என்ற விண்ணுலகம் தமிழ்ச் சொல்லே. தேயம் என்பதே தேசம் என்றானது. Paradise என்ற ஆங்கிலச் சொல்லும் பரதேயம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. பரணிக்குச் சொல் இல்லாது, வடமொழியிலும் அவ்வாறே சொல்லப்பட்டது. மீன் என்ற (Fish) உயிரினத்துக்கு வடமொழியில் சொல்லேயில்லை. மகரம், மச்சம் என்பதெல்லாம் தமிழ்ச் சொற்களே. மனு, மெனு என்ற வடசொற்களும், மீன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுகளே. மீன் பற்றியும் மீன்களைப் பெருமளவில் கொண்டுள்ள கடல்பற்றி யும், ஆரியர்கள் அறியாதவர்கள். தொடக்க வேதகாலத்தில், ஆரியர்கள் கடலையே பார்த்திருக்க வாய்ப்பில்லை. மீன் உணவும் அவர்களின் உணவுப் பட்டியலில் இடம் பெற்றதாகத் தெரியவில்லை. அதனால் மீன் பற்றிய விளக்கங்கள் ஆரியர் களுக்கு பிற்காலத்தில் ஏற்பட்ட, கிடைக்கப் பெற்ற செய்திகளே. தொல்தமிழ் ம என்ற எழுத்து, மீனைப் போன்ற வடிவமைப்பு கொண்டது. மீனைக் குறிப்பிட, மகரம் என்ற எழுத்தையே தமிழர் குறித்தனர். அகரம் இகரம் உகரம் போன்றதே மகரம் என்பதுமாகும். ம என்ற எழுத்து குழூஉக் குறிபோன்று தமிழர் களால் சொல்லப்பட்டது. ம போன்ற அச்சாகவே மீன் இருந்த தால், அதனை ம வின் அச்சு என்ற பொருளில், ம + அச்சு = மச்சு என்றனர். மச்சு என்ற சொல், மச்சம், மச்ச என்ற வடசொல்லில் திரிந்தது. அச்சு = ஒன்றைப் போலவே இருக்கும் இன்னொன்று. ம என்ற எழுத்து மீனைக் குறித்து மகரமாகவும், மச்சு என்ற சொல் மச்ச என்றும் வடமொழியில், தமிழின் பொருள் புரியாமலேயே ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மீன் என்ற தமிழ்ச் சொல்லே, உலகின் பல்வேறு மொழி களிலும், பல்வேறு சொற்களாக உருப்பெற்று, திரிந்துள்ளன.

மனு-மெனு-மச்ச-மகரம் = வடமொழியில், மனு என்பானை யும், திருமாலின் திருப்பிறப்புகளையும் குறித்த சொற்கள்.

மானஸ் (Manes) = எகிப்திய சொல், கீழ் மேல் எகிப்து நாடுகளை இணைத்தவன்.

மீனோஸ் (Minos) = கிரேக்கச் சொல், ஒரு கடவுளையும் குறித்தது.

மனு-எல் (Manu-el) = எபிரேயச் சொல், கடவுளை அல்லது இயேசுவைக் குறித்தது.

மெனு (Menu) என்ற ஆங்கிலச் சொல், உணவு வகைகளைக் குறித்த பட்டியல் என்ற பொருளைத் தருவது. இதுவும் மீன் என்ற சொல்லின் திரிபே.

திதி-அத்தி: பன்னிரு உருத்திரர்கள் (ஒளி மிகுகொண்ட உருக்கள்) வானில் உள்ளனர் என்றும், அப்பன்னிருவரையும் பெற்றவளே அதிதி என்றும் இரிக்கு வேதம் கூறுகிறது. பன்னிரு உருத்திரர்கள் என்பதைவிட, வானில் தெரியும் அனைத்து உடுக்களையும் பெற்றவளே அதிதி என்பதே பொருளாகும். எண்ணற்ற விண்மீன்களைத் தனது குடங்கில் அணைத்துக் கொண்டிருக்கும் தாய் போன்றவள் அதிதி. விண்மீன்கள் கொண்ட அகன்ற பரந்த வான்வெளியையே, அதிதி என்று வடமொழியில் உருவகம் செய்துள்ளனர். திதி என்பது, பார்க்கக் கூடியனவாகும். தீ + தீ = தீதீ என்பது விண்மீன்களைக் குறித்த தமிழ்ச் சொல்லே. விண்மீன்கள் கண்ணுக்குப் புலனாகக் கூடியவை. அவைகளிலும் தென் கோளரையிலுள்ள (Southern Hemisphere) விண்மீன் மிகுந்த ஒளியுடன் தெரியக் கூடியவை என்று பொருள்பட தீதீக்கள் என்றனர். வடமொழியில் திதி எனப் பட்டது. திதி என்பதற்கு நிலவின் பக்கம், நிலவின் நாள் என்ற பொருளும், பார்க்கக் கூடிய என்ற பொருளில் சொல்லப் பட்டது. திதி = பார்க்கக் கூடியவை. திதிக்கு எதிரான வடசொல் அதிதி = பார்க்க இயலாதது. கவிந்த கிண்ணமாகக் காட்சி யளிக்கும் வான முகட்டைக் காணவியலாது என்ற பொருளில் அதிதி என்றனர். இதனால் தமிழர்களால் பார்க்க இயலாத வடகோள ரையையும் (Northern Hemisphere) அதிதி என்ற சொல் குறித்தது.

தக்கன் என்ற தெற்கத்தியானுக்குப் பிறந்த அதிதி,[70] வடக்கே கைலாயத்தில் வாழ்ந்திருந்த சிவனுக்கு வாழ்க்கைப்பட்டாள் என்பதும், அதிதி வடக்கைக் குறித்த பொருளைத் தருவதாகும். தக்கன் என்பவன், முனிவர்களும் (ரிஷிகளும்), அறிஞர்களுமான

70. Rig Veda Sanhita, H.H. Wilson, Vol. 6, Suk. V:10.

கூட்டத்திற்கு முதல்வனாக இருந்தவன் என்றும் வேதம் கூறுவது. தமிழர்களே அறிவு சார்ந்த அனைத்திற்கும் முதலாயிருந்தனர் என்ற உண்மையைப் புலப்படுத்தும். அதிதியும், திதியும், வானியல் அமைப்பின் உருவகங்களே ஆவர்.

**பூசன்**

கிரேக்கத்தில் சொல்லப்படும் Auriga என்ற விண்மீன் கூட்டமே பூசன் என்று வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது. இவனையொரு தேரோட்டி எனக் கூறுவர். பூச மீன் கூட்டம் வடகோளரையில் உள்ளதாகும். ஆடு ஒன்றைத் தோளில் தாங்கிய படி பூசன் தேருக்குள் அமர்ந்திருப்பது போன்று இவன் உருவகப் படுத்தப்படுகிறான்.[71] பூசன் என்ற சொல், புஷ்ய என்ற வட சொல்லேயாகும். புஷ்ய என்பதற்கு, உருண்டு திரண்ட அல்லது கொழுத்த என்பதே பொருளாகும். புஷ்ய என்ற வடசொல், பூசு என்ற தமிழ் மூலத்தின் திரிபே. பூசுதல்-கொழுத்தல். புசுபுசு வென ஊதிப்போதல் என்பது வழக்குச் சொல்லாகும். பூசனை, கரம்பாட் எனும் சொல்லாலும் வேதம் அழைக்கிறது. பயிரிடப் படாத நிலத்தில் மேய்ந்து கொழுத்துத் திரியும் ஆடு என்று பொருள் கொள்ளப்படும். கரம்பு + ஆடு = கரம்பாடு என்ற தமிழ்ச் சொல்லையே வேதமும் பயன்படுத்தியிருப்பது, பூசனைப் பற்றிய செய்தியை, ஆரியர்கள் தமிழரிடமிருந்தே அறிந்து கொண்டார்கள் என்பதை விளக்கும். புரவி வேள்வியொன்றில், காவு (பலி) கொடுப்பதற்காக, பூசனின் ஆடு கட்டப்பட்டிருந்த செய்திகளையும் இரிக்கு வேதம் கூறுகிறது. பூச மீன்கூட்டம், மேழ ஓரைக்கு அருகில் இருந்ததையே இச்செய்தி விளக்குவதாக அறியலாம். மேலும் பூசனை, கால்நடைகளின் காவலனாகவும் சொல்வர். மேற்சொன்னவாறு, மேழ ஓரைக்கு அருகில் பூச மீன் கூட்டம் இருப்பது பற்றியே, பூசன் கால் நடைகளின் காவலன் எனப்பட்டான்.

○○○

71. Studies on Rig Vedic Dieties, Cosmo Publications, New Delhi, 1983, p. 91.

6

## அசுரர்–தாசர்–இராக்கதர்

ஆரியர் தமக்குப் பகைவராகக் கருதப்பட்ட மூன்று பிரிவினரை, அசுரர்-தாசர்-இராக்கதர் என அழைத்தனர். தம் இனத்தாராக இல்லாதவிடத்தும், தமக்கு உதவி செய்தவரை அசுரர் என்றும், தமக்கு வேலை செய்யத் தகுதியுடையோரை, தாசர் என்றும், தம்மை எதிர்த்த வெளிப்பகையை இராக்கதர் என்றும் குறிப்பிட்டனர். இந்திரன், வருணன், வாயு, அக்னி, சோமன், அசுவினி ஆகியோர், ஆரியருக்கு நண்பர்களாயிருந்தனர். எனினும் ஆரிய மரபைச் சாராததால், அவர் அசுரர் எனப் பட்டனர். சுரர் என்பார் தேவமக்கள் என்றும், அதற்கு எதிர்ச் சொல்லான அசுரர் தேவரல்லாதவர் என்றும் குறிப்பிடப்பட்டனர் என்று பாவாணர் கூறுகிறார். சுரர்-அசுரர் என்றவாறு, வட மொழியில் அ கரம் முன்னிறுத்தப்பட்டு, எதிர்மறைப் பொரு ளைத் தந்தது. இதுவும் கூட தமிழர் வழக்கே என்றும் பாவாணர் கருதுகிறார். சுரர்-அசுரர், வலம்-அவலம் போன்ற சொற்களை எடுத்துக் காட்டுகிறார்.

சுள் என்ற வேர்ச் சொல்லினின்றும் நீண்ட, சுர-சுரப்பு-சுரத்தல் ஆகியவை, நீளுதல், வளர்தல், பெருகுதல், வாழ்தல் போன்ற பொருள்களைக் கொடுப்பதாகும்.

சுள்-சுர-சுரப்பு = தொடர்ந்து வெளிப்பட்டுக் கொண் டிருத்தல்.

சுர நதி = கங்கையில் நீர் சுரந்து கொண்டேயிருப்பதால்
(வற்றாமல்) அவ்வாறு சொல்லப்பட்டது.

சுரபி = வற்றாது பாலைத்தரும் பசு. காமதேனு.

சுரபு = மரப்பட்டையின் வழியே தொடர்ந்து வெளியேறும் பிசின்.

சுரபுன்னை = வளர்ந்து கொண்டே இருக்கும் கடற்கரையில்
வளரும் மரவகை.

தீம்பால் சுரப்போ டன்முலை போன்றே —மணிமேகலை[72] 11:115.

சுரப்பு = தொடர்ந்து ஊறும் நீர், பால் முதலியன.

சுரத்தல் = வளர்தல், நீளுதல் என்ற பொருளிலும் சொல்லப்பட்டது, சுரபுன்னை.

சுரை-சுரைக்காய் = பெருத்து வளரும் காய்.

சுரர் = வாழ்வோர், நீண்ட நாள் இறவாமை பெற்றோர், வளர்வோர், ஆரியர் தம்மைச் சுரர் என்று அழைத்துக் கொண்டது, தாங்கள் இறவாமை பெற்றவர்கள் என்ற கருத்தின்படியே. சூத்திரர் அல்லது தமிழர் சாகும் தன்மை கொண்டவர்கள். இதன் மூலம் மறுபிறப்பு என்ற கொள்கை ஆரியரால் வலியுறுத்தப் பட்டது. ஆசீவகர்கள் என்போர், வடமொழியில் பழங்கால நூல்களில் அறிபப்படுகின்றனர். இவர்களைச் சமணத் துறவிகள் என்று கருதி வந்தனர். ஆசீவகர்கள் சமணத்துறவிகள் அல்லர் என்றும், அவர்கள் தமிழ்நாட்டினின்றும் வடதிசைச் சென்று, அங்கு இலக்கணப் பள்ளிகளை நடத்திய கணியர்களே என்றும், வெங்காலூர் குணா குறிப்பிடுகிறார்.[73] சீவகர் என்போர் ஆரியரே. ஏனெனில் அவர்களுக்கு இறப்பு இல்லை. சீவன் = உயிர். ஆசீவகர் என்போர் இறந்துபடுபவர். அவர்களுக்கு மீண்டும் வாழ்வு இல்லை. சமணர்கள் மறுபிறவியை ஏற்றுக் கொண்ட வர்கள் என்பதால், ஆசீவகர் என்ற சொல் அவர்களுக்குப் பொருந்தாது. மறுபிறவிக் கொள்கையை எதிர்த்து வந்த தமிழ்க் கணியர்களுக்கே இச்சொல் பொருத்தமானது. சுரத்தல் என்ற பொருளில் வரும் சுரர்-அசுரர் ஆகிய சொற்கள் தமிழ்ச் சொற்களே, தமிழரைக் குறிப்பதுவேயாகும்.

**தஸ்யூ—தாசன்**

தஸ்யூ என்ற வடசொல்லுக்கு, திருடன், கள்வன் என்றே இரிக்கு வேதத்தில் பொருள் சொல்லப்பட்டுள்ளது. "இந்திரனே! அவியுணவையுண்டு, மந்திரங்களின் மறைவான பொருளையும் உணர்ந்து, அம்மந்திரங்கள் கேட்டுக் கொண்டபடி தஸ்யுக்க ளாகிய கள்வர்களை நீ நாசமாக்கினாய்" என்று இரிக்கு வேதத் தின் தமிழ்ப் பதிப்பு கூறுகிறது. இரிக்கு வேதம் விரித்திரனைத் தஸ்யு என்கிறது. கையினால் திருடும் மக்கள், தஸ்யுக்கள் எனப்

72. மணிமேகலை, 11:115.

73. வள்ளுவத்தின் வீழ்ச்சி, முன்னுரை.

பட்டனர். ஆரியர்களின் பகைவர்களைத் திருடர்கள் என்றே இரிக்குவேதம் கூறுகிறது. தஸ்யூ என்ற வடசொல், பொதுவாகத் திருட்டைக் குறித்தும், சிறப்பாகக் கையைக் குறித்தும் சொல்லப் பட்டது. தஸ்யூ என்ற வடசொல் தஸ் என்ற பாரசீகச் சொல்லே. அம்மொழியில் தஸ் என்பது கையைக் குறித்தது. தஸ்கத் = கையெழுத்து; தஸ்கர் = களவு, திருட்டு; தஸ்தக்-கைக்கொடை. தஸ்தாவேஜ் = கையெழுத்துச் சான்று. தஸ்தா = கையால் எழுதப் பட்ட காகிதக்கட்டு. மேற்கண்ட சொற்கள் அனைத்தும் பாரசீகச் சொற்களே. பாரசீகத்தில் கையையும் களவையும் குறித்த தஸ் என்ற சொல், வடமொழியில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

மேற்கண்ட பாரசீகச் சொற்கள், தை என்ற தமிழ் வேர்ச் சொல்லினின்றும் நீண்ட சொற்களே. தை-தைத்தல் = இணைத்தல், கைகளால் கோர்த்தல். தை-தைச்சன்-தச்சன் = மரங்களை வெட்டித் தைப்பவன், இணைப்பவன். தச்சு = கைகளால் செய்யப்படும் மரவேலை.

கைகளுக்கும், கைகளால் செய்யப்படுகின்ற வேலைகளுக் கும், கைகளால் கன்னமிட்டுத் திருடுவோருக்கும், தஸ் என்ற சொல்லே, பாரசீக மொழியில் உள்ளதால், களவு என்ற பொருளில் சொல்லப்பட்டதை மட்டும் வடமொழி எடுத்துக் கொண்டு, திருடர்களைத் தஸ்யு என்றது. தை என்ற வேர்ச் சொல்லினின் றும், பாரசீக மொழியும், வடமொழியும், தஸ் என்ற சொல்லை நீட்டித்துக் கொண்டன. அசுரர்களைப்போல் அல்லாமல், தஸ்யூக்கள் ஆரியர்களுக்குத் துன்பம் விளைத்தவர்கள் என்றே இரிக்கு வேதம் கூறுகிறது. தஸ்யூக்கள் என்று சொல்லப்படுவோர், சிந்துவெளி மக்களே.

**இராக்கதர்**

இராக்ஷசர் (Rakshas) எனப்படுவோர், கரிய நிறம் கொண்ட அரக்கர்கள் என்றே இரிக்கு வேதம் கூறுகிறது. இர்-இர-இரா-இராவு போன்ற சொற்கள், கருமையை விளக்கும் சொற்களே. இரவு = இருட்டு, மையிருட்டு. இராவணன் என்பதும் கருமை நிறம் கொண்டவன் என்பது பற்றியே. இராமன் என்பதும் கறுப்பு நிறத்தைக் குறித்த சொல்லே. இராமன் கறுப்பனே என்று இராமாயணம் கூறுகிறது. இராக்கதர் என்போரும் கரிய நிறங் கொண்ட தமிழர்களே. இரா என்று தொடங்கும் வடசொற்கள் கருமை நிறத்தைக் குறித்தனவே.

இராதம் = எரிந்து போன கரித்துண்டு. கரிக்கட்டை.

இராத்திரி = கரிய இருள் சூழ்ந்த வேளை. இரவு.

இராமடம் = கரிய நிறமுள்ள பெருங்காயம் (assafoetida)

இராமன் = கரிநிறங் கொண்ட மன்னன்

இராவணன் = கரிய நிறங் கொண்ட லங்காப்பகுதி மன்னன்.

இராவுத்தன் = கரிய நிறங்கொண்ட புரவி வணிகன்.

மேற்கண்ட சொற்கள் யாவும் வடமொழிச் சொற்களே. இவையாவும் கருமை நிறத்தைக் குறிப்பனவே. இராக்கம்மாள், இராக்காயி போன்ற பெயர்கள் தமிழ்நாட்டில் இன்றும் வழக்கில் உள்ளன. இராக்-எல் (Rach-el) என்ற விவிலியப் பெயரும், கரிய நிறம் கொண்ட பெண்ணைப் பற்றிய எபிரேயச் சொல்லே.

இர்-என்ற வேர்ச்சொல்லின் வழியே, இரும்பு என்ற சொல்லும் பிறந்தது. இரு என்ற தமிழின் முன் சொல்லே, Ir-Iron என்று ஆங்கிலத்தில் இரும்பைக் குறித்த சொல் பிறக்க மூலமா யிற்று. தமிழரைக் குறிக்க, ஆரியர் கையாண்ட மூன்று சொற் களும், தமிழ் மூலத்தைக் கொண்ட சொற்களே.

○○○

7

## யாமன் என்ற எமன்

முன்னோர்களின் நினைவைப் போற்றும் வகையில் நீத்தாரின் நினைவு நாளைக் கடைப்பிடித்தல் தமிழரின் வழக்காகும். இல்லத்தின் தலைவனோ, முதியவனோ இறந்துபட, ஆண்டுக்காண்டு அவர்களை நினைவு கூர்ந்த தமிழர், பெரும் பேரழிவில் மாண்டுபோன இலக்கக் கணக்காக தமிழர்களை எவ்வாறு நினைவு கூற கூறாமல் இருப்பர். இதன் அடிப்படையில் எழுந்த வழக்கே, தென்புலத்தார் வணக்க முறையாகும். குமரிக்கண்டம் தென்திசையில் நிலைபெற்றிருந்தது. கடற்கோள்கள் தமிழர்தம் முன்னோரைக் காவு கொண்டன. எண்ணற்ற அறிஞர் பெருமக்களும், அவர்தம் இலக்கியங்களும் கூட அழிந்துபட்டன. தென்புலத்துத் தமிழர்க்குக் கடனிறுப்பதை, ஆண்டுதோறும் தமிழர் கடைப்பிடித்தனர்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தார் ஓம்பல் தலை — திருக்குறள்,[74] 43

தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும் — புறநானூறு,[74] 9:3–4

தமிழர்தம் இனம் வாழும் அளவும், குமரிநாட்டுத் தமிழர்களை நினைவு கூர்தல் என்பது வாழ்க்கைக் கடனாகவே இருந்து வந்துள்ளதை நோக்குமிடத்து, தமிழர் தம் முன்னோர் மீது கொண்டிருந்த பற்று புலனாகும்.

சிந்துவெளியில் வாழ்ந்திருந்த ஆரியர், தங்கள் இனத்தில் மறைந்தோரை, புதைத்தும் எரித்தும் வந்ததாகச் செய்திகள் கூறுகின்றன. பிற்காலத்திலேயே எரிக்கும் வழக்கை அவர்

---

74. திருக்குறள், 43.

மேற்கொண்டனர். நாடோடிகளாகத் திரிந்த ஆரியர் வாழ்க்கையில், முன்னோர்களைப் புதைத்த அல்லது எரித்த இடத்திற்கு வெகு தொலைவில், அடுத்த ஆண்டில் இருப்பர். எனவே, ஆரியர் வழக்கில் நினைவு நாள் என்ற வழக்கு இல்லை. சிந்து வெளியில் தமிழரோடு வாழ்ந்த காலத்து, தமிழர்தம் முன்னோருக்குச் செய்யும் கடமைகளைக் கண்டு, தாமும் அவ்வாறு செய்ய வேண்டும் என்ற எண்ணம் மிகவே, தமிழரின் வழக்கை ஆரியரும் மேற்கொண்டனர். இறந்த முன்னோர்கள், நடு ஆசியாவினின்றும் இந்திய எல்லை வரை புதைக்கப்பட்டனர் அல்லது எரிக்கப்பட்டனர். ஆனால் தமிழர் தம் மரபுப்படியே, இறந்த ஆரியரின் முன்னோரும் தென்திசையிலேயே இறந்ததாகக் கருதிக் கொண்டனர். இதைப் பெருமையாகவும் சொல்லிக் கொண்டனர். இறந்தோரைப் பிதிர்கள் (Pitr) என அழைத்தனர்.

இறந்து போன பிதிர்கள், விண்மீன்களாக மாறி, தென் கோளரையில் மின்னிக் கொண்டிருப்பதாகவும், அவர்கள் இறந்துபட்ட நாளில், காக்கை உருக்கொண்டு வந்து, தம் இல்லத்தார் அளிக்கும் சோற்றை (பிண்டத்தை) உண்பதாகவும், ஆரியர்கள் கூறினர். இவ்வாறான தங்கள் முன்னோர்களான விசுவாமித்திரன், அக்கினி போன்றோர் தென்திசையில் உடுக்களாக உள்ளனர் என்றும் கூறினர். மேலும் தென்புலத்திலுள்ள உடுக்களையே தென்புலத்தாராக உருவகம் செய்து, தேவர்-அசுரர் பூசல்களையும் ஏற்றி, வானியல் குறிப்புகளைக் கொண்டே, தொன்மக்கதைகளையும் புனைந்து கொண்டனர்.

மகம் என்ற நாள் மீனின் தலைத் தெய்வமாக எமன் கருதப் படுகிறான். பனி முடங்கும் காலத்தில் ஞாயிறு தோன்றுகையில், அதற்கு முன்பாக மகமீன் உயர்ந்தெழும் என்ற வானியல் நிகழ்வை, எமன் ஆளுகை செய்வதாக உருவகப்படுத்திக் கொண்டனர். எமன் தென்திசையில் வாழ்ந்திருந்த தமிழனேயாவான். அவனது கரிய உருவமும், அவனது கரிய எருமையும், தமிழரோடு அவனைத் தொடர்புபடுத்தும். மாந்தர்களில் முதலில் இறந்தவன் எமன்தான் என்று வேதம் கூறுகிறது. முதலில் பிறந்தவன் முதலில் இறப்பது உலக வழக்கு. முதலில் இறந்தோன் என்பது, முதல் மாந்த இனம் அழிந்தது பற்றிய செய்தியாகக் கூட இருக்கலாம். சிவன், எமனை தென்திசைக்குத் தலைவனாக ஆக்கினான் என்று திருமந்திரம் கூறுகிறது.

மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனாம்[76]

யமன்-யமா என்ற வடசொல், யாமன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபேயாகும். யாமம் என்பது நடுநிசியைக் குறிக்கும். நடுநிசியில் வந்து உயிர்களைப் பறிப்பவன் என்ற பொருளில் யாமன் என்றும், உயிர்களைக் கூறுபோடுபவன் என்ற பொருளில் கூற்றுவன் என்றும், கால நேரம் பார்க்காது, உயிர்களைக் கவர்வதால் காலன் என்றும் அழைக்கப்பட்டான்.

யா என்பது தென்திசையைக் குறித்த சொல் என்றும், யாத்திசை என்பது தென்திசையே என்றும், யாமன் என்பான் தென்திசையின் தலைவன் என்றும் பொருள் கொள்ளலாம். யாமம் என்ற சொல்லிற்குத் தென்திசையென்றே தமிழ் அகர முதலிகள் பொருள் கூறுகின்றன. யாத்திசை என்பது தென் திசையே என்று யமுனை என்ற வடபுலத்து ஆற்றின் பொருளில் அறியலாம். யாமனின் தங்கை யமுனா எனப்பட்டாள். இவள் வடதிசையினின்றும் ஓடிவந்து தென்முனையில்-யாமுனையில், கங்கையில் சேர்கிறாள். யாமுனை = தென்முனை. யாமுனை என்ற தமிழ்ச் சொல்லே, யமுனா (யமபகினி என்று வடசொல் லால் கூறுவர்) என்று திரிந்தது.

விவிலியத்தில் கூறப்படும் நோவா என்பானின் பெயரன், யாவன் எனப்பட்டான். யாவன் என்றே எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ளது. தமிழுக்கு உரிய 'ன்' விகுதி முடிவுப்படி, இச்சொல் தமிழ்ச் சொல்லாகவேயுள்ளது. யாவன் என்ற பெயர் திசையைக் குறித்த சொல்லே என்று விவிலிய விளக்கம் கூறுகிறது. தென்திசையினின்றும் (குமரி நாட்டினின்றும்) தப்பிப் பிழைத்த நோவா என்பான், தன் பெயரனுக்குத் தெற்கித்தியான் என்ற பொருளில், யாவன் எனப் பெயரிட்டிருக்கலாம். பாபிலோனின் வடபகுதியில், யாவன் என்பார் மரபு விரிந்து, இறுதியில் கிரேக்கத்தில் நிலைபெற்றதாகவும், விவிலியக் குறிப்புகள் கூறுகின்றன.[78] பாபிலோன் பகுதியைத் தென்பகுதி எனக் குறிக்க, யாவன் என்றும் சொல்லப்பட்டிருக்கலாம். எவ்வாறாயினும் யாவன் என்பது தென்திசையைக் குறித்த சொல்லாகவே

75. புறநானூறு, 9:3-4.

76. திருமந்திரம், கடவுள் வாழ்த்து, 2:3.

78. The New American Bible, Dict. p.

எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ளது. யாமன் = யாவன் என்ற இருதமிழ்ச் சொற்களுக்கும் பொருள் வேறுபாடு இல்லை என்பது தெளிவு.

விவிலியத்தின் மற்றொரு செய்தியாக, யாமன் என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது. யாமன் என்ற சொல்லுக் குத் தெற்கித்தியான் என்றே (Southerner) விவிலியம் பொருள் சொல்கிறது.[79] பின்-யாமன் என்ற எபிரேயச் சொல், ஆங்கிலத்தில் Ben-jamin என்று திரிபுபட்டுள்ளது. பெஞ்சமின் என்ற ஆங்கிலச் சொல் யாமன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. பின் என்ற எபிரேயச் சொல்லும், பின்னால், பிறகு, தந்தைக்குப் பின், என்ற பொருளில் கையாளப்படும் சொல்லே. Abu-Ben-Adam என்பது, பள்ளிகளில் மாணவர்களுக்குப் பரவலாகத் தெரியும் பெயர். Ozama-Bin-Laiden என்பது, தற்போது அடிக்கடி சொல்லப்படும் அரபு மொழிப் பெயராகும். Ben என்ற எபிரேயச் சொல், Bin என்று அரபு மொழியில் சொல்லப்பட்டுள்ளது. லெய்டனுக்குப் பின் வந்த ஓசாமா என்பதே இப்பெயரின் பொருளாகும். ஓசாமா என்பான் தந்தை, லெய்டன் என்பான் மகன் என்ற விளக்கத்தை நோக்குக. தந்தைக்குப் பின் (Ben or Bin) மகன் என்ற தமிழர் வழக்கையும் நோக்குக.

பிதிர் என்ற வடசொல்லுக்கு, முன்னோர் என்ற பொருள் சொல்லப்படுகிறது. பெறு-பெறுதல்-பெற்றவர்-பெற்றோர் என்ற சொல் நீட்சிப்படி, பெற்று என்ற சொல்லே, பித்ரு (Pitr) என்றும், நீண்டது. பெற்றல்-பெத்தல், பெத்து-பெத்தவன் என்ற சொல் வழக்கையும் நோக்குக. போத்து என்ற தமிழ்ச் சொல்லே, பிதா என்றும் திரிந்தது.* இச்சொல்லே, Pater (தந்தை) என்ற இலத்தீன் சொல்லுக்கும், Father என்ற ஆங்கிலச் சொல்லுக்கும் மூலச் சொல்லானது. பொதுவாகத் தமிழில் உள்ள சொற்களான அம்மா, அப்பா என்ற சொற்களே, உலகின் அனைத்து மொழி களிலும் சிறுசிறு ஒலிப்பு மாற்றங்களுடன் சொல்லப்படுகின்றன.

தென்புலத்தாரைப் பற்றிய தமிழரின் செய்திகளே, யமா என்ற கடவுளின் செயல்பாடுகள் பற்றிய கதைகளாக ஆரிய வேதத்தில் சொல்லப்பட்டுள்ளன. வள்ளுவர், கணியர் போன்ற

---

79. Ibid.

* போத்து: ஆண்மகன்.

அறிஞர் பெருமக்களே, வேதத்தில் பிதிர்களாகக் கூறப்பட் டுள்ளனர் என்பதை, பிதிர்களே வானியலை அறிவித்தவர்கள் என்ற செய்திகளால் அறியலாம். தென் புலத்தாரைத் தமது முன்னோரெனப் போற்றுவதும், வள்ளுவக் கணியர்களையே பிதிர்கள் என வழிபடுவதும், தமிழ்க்கணிய மரபைத் தம்வய மாக்கிக் கொண்ட அறிவுக் களவால் (Plagiarism) வந்தனவே, இரிக்கு வேதத்தின் கணிய அடிப்படைகள் என்பதைப் புலப் படுத்துவன என்று வெங்காலூர் குணா குறிப்பிடுகின்றார்.[80]

## பிரஜாபதி

குடிமக்களின் தலைவன் என்று பொருள்படக் கூடிய வட சொல் இது. உலகிலுள்ள மக்களையெல்லாம் படைத்தவன் என்றும் பொருள் கொள்ளலாம். பிரசாபதி என்பதற்கு, பிரம்மா என்றும், அரசன் என்றும் பொருள் சொல்லப்பட்டுள்ளது. மேலும் ஆண்குறிக்கும் இச்சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர். ஆண்குறியைக் கடவுளாகவும் சிவனாகவும் (இலிங்கம்) தமிழர் கள் உருவகம் செய்தனர். தமிழர்களின் இவ்வுருவகம், பிரசா பதிக்கும் ஏற்றிச் சொல்லப்பட்டுள்ளது. பிள்ளைகளைப் பிறக்க வைப்பது பிரசாபதியின் வேலையாகக் கருதப்பட்டது. சேய் என்பது குழந்தையைக் குறிக்கும். பெருஞ்சேய் = பெரும் அளவிலான பிள்ளைகள். பெருஞ்சேய்ப்பதி என்ற தமிழ்ச் சொல்லே, பிரஜாபதி எனப்பட்டது.

தமிழில் க எனப்பட்ட உயிர்மெய் எழுத்தை, தமிழரின் முதற்கடவுளான சிவனோடு தொடர்புபடுத்துவர். சிந்துவெளி யிலும் க என்ற எழுத்துக்கான வரிவடிவம், சிவனையே நினை வுறுத்துவதாகக் கருதுவர். க என்பது முதல் உயிர்மெய் மட்டு மல்லாது, தமிழ் எண் கணக்கில் முதல் எண்ணுமாகும் (Number one). க என்ற தமிழ்ச் சொல்லே (எழுத்தே) ஏக என்று வட மொழியில் திரிந்து, தமிழர் சிவனைச் சொன்னது போல், ஆரியர் பிரசாபதியைச் சொல்லிவைத்தனர். இது, எழுத்து சொல்லோடு, பொருளும் உருவகமும் களவாடப்பட்டதாகவே கருத இட மளிக்கிறது.

பிரசாபதியைப் பற்றி இரிக்கு வேதத்தில் சிறப்பாகச் சொல்லப்படவில்லை. பத்தாவது பகுதியான புருஷசூக்தத்தில்,

80. வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப. 228.

[81] மக்களுடைய படைப்பு பற்றிச் சொல்லப்பட்டுள்ளது. இதன் வழியில், பிரசாபதி-பிரம்மா என்ற கடவுளரின் சிறப்பு, பிற் காலத்தில் உணரப்பட்டு, விளக்கப்பட்டு, பெரிதுபடுத்தப் பட்டதாகவே அறியமுடிகிறது. பிரம்மா இவ்வுலகத்தைப் படைத்தார் என்பதை விட, பிற்கால ஆரியர்களே பிரம்மாவைப் படைத்தார்கள் என்பது சரியான சிந்தனையாகும்.

காதலைப் பற்றியும், களவொழுக்கத்தைப் பற்றியும் விளக்கும் தமிழ் இலக்கியங்கள், அதற்கும் ஓர் ஒழுக்க நெறியைப் பின் பற்றியுள்ளன. தந்தை தனது மகளைப் புணர்ந்ததாகவோ, அண்ணன் தங்கை மீது காமுற்றதாகவோ, கற்பனையில் கூட தமிழர்கள் சிந்திக்கவில்லை என்பதையே தமிழ் இலக்கியங்கள் காட்டுகின்றன. இவ்வாறான பண்பாடற்ற விலங்கியல் தன்மை கள், உயர்ந்த நாகரிகத்தில் வாழ்ந்திருந்த தமிழருக்கு எழுத்தில் கூட வடிக்க இயலாதவைகளாயிருந்தன. உலகிற்கே அனைத்தை யும் கொடுத்ததாகக் கூறும் ஆரிய வேதங்கள் சொல்லும் கதைகள், படிப்பதற்கே அருவருப்பானவைகள் ஆகும்.

பிரசாபதியைப் பற்றி இரிக்கு வேதத்தில் சொல்லப்பட் டுள்ள ஒரு கதையை, அதற்குப் பிறகு எழுதப்பட்ட பிராமணங் கள், விளக்கமாகக் கூறியுள்ளன. பிரசாபதி, தனது மகளான உரோகிணியின் அழகில் மயங்கி, அவளுடன் புணர இருந்த நேரத்தில், உரோகிணியானவள் தனது தந்தையின் அடாத செயலுக்கு அஞ்சி, மான் உருக்கொண்டு ஓட்டம் எடுக்கிறாள். பிரசாபதியும் மான் வடிவம் (ஆண் மான்) கொண்டு மகளைத் துரத்துகிறான். இக்காட்சியை உருத்திரன் (தமிழ்ச் சிவன் தான்) கண்டு, பிரசாபதிமேல் வெறுப்புற்று, அவனைக் கொல்ல அம்பைத் தொடுத்தான். உடனே பிரசாபதி உருத்திரனைப் பார்த்து அம்பெய்யாமல் இருக்குமாறு கேட்டுக் கொண்ட துடன், அவ்வாறு செய்தால், உருத்திரனை விலங்குகளுக்கு அரசனாக்குவதாகவும் வாக்களித்தான். எந்தக் கேடு எங்கு நடந் தால் நமக்கென்ன என்று நினைத்த உருத்திரன், விலங்கரசன் பதவியை கையூட்டாகப் பெற்றுக் கொண்டு, பிரசாபதியின் செயலைக் கண்டுங் காணாதுவிட்டு விட்டான் என்று சத்பத பிராமணம் கூறுகிறது.[82]

---

81. Rig Veda, X:90 onwards.

82. Original Sanskrit Texts, J. Muir, Vol. IV, p. 45.

இக்கதை ஒரு வானியல் உருவகமாகச் சொல்லப்பட்டாலும், ஒழுக்கக் கேடான ஒரு கருவை மையமாக வைத்துக் கதை பின்னியிருப்பது, ஆரியர்களின் பண்பாட்டுக் குறைவையே காட்டுகிறது எனலாம். இதுபோன்றே, நான்முகன் என்ற பிரம்மாவுக்கும் அவன் மகளான ரூபசி என்பாளுக்கும் பிறந்தவனே வசிஷ்டன் என்பவனாவான். வசிஷ்டன், உரோகிணிக்கும் மகனாகப் பிறந்த வேறொரு கதையும் உள்ளது. பிரம்மா மேலும் ஒரு கீழ் சாதிப் பெண்ணைப் புணர்ந்து சத்யபன் என்பானைப் பெற்றான். இந்த சத்யபன் என்பவன் ஒரு பறைச்சியைப் புணர்ந்து பராசரனைப் பெற்றான். பராசரன் ஒரு குறப்பெண்ணைப் புணர்ந்து வியாசனைப் பெற்றான் என்றவாறு கதைகள் புனையப்பட்டுள்ளன. இக்கதைகள் ஒருண்மையை வெளிப்படுத்துகின்றன. **சூத்திரர்கள் என்று சொல்லப்பட்ட தமிழ்ப் பெண்களே மாமுனிவர்களைப் பெற்றவர்கள் என்பதே அது**.

புராணங்களில் வரும் கதைகளில் சொல்லப்படுகின்ற முனிவர்கள், அறிஞர்கள் எல்லோரும் சூத்திரப் பெண்ணுக்குப் பிறந்தவர்களாகவே காட்டப்படுவதும், ஆரியப்பெண்கள், இவ்வுயர்வானவர்களைப் பெற இயலாமற் போனதையும் விளக்கிக் கூறுகின்றன. இதற்கென அவர்களே ஒரு பழமொழியாக, நதிமூலம் ரிஷி மூலம் பார்க்காதீர் என்றும் சொல்லி வைத்தனர்.

வடகோளரையில் உள்ள ஆரிகா (Auriga) என்ற விண்மீன் கூட்டத்தைப் பூசன் என்றும் வேதங்கள் கூறும். பூசன் என்பானே பிரசாபதியாகவும் உருவகம் செய்யப்பட்டு, அக்கூட்டத்துக்கு அருகில் உள்ள விடை ஓரையில் உள்ள சகடு (உரோகிணி) என்ற மீனைப் பெண்ணாகக் கருதி, பிரசாபதி-உரோகிணி, கதையைப் புனைந்துள்ளனர்.

ஊழ் என்பதற்கு வெளிப்படுதல் என்றும், வெளிச்சம்-வெப்பம் என்றும் பொருள் உண்டு. ஊழ்வினை = வெளிப்படும், தொடரும் வினை. ஊழ்-ஊழை-உழை என்றவாறும் சொல்லப்படும். உழை = வெப்பம், வெளிச்சம், வெளிப்படுதல், வெளிச்சம் தோன்றும் காலை. கதிரவனுக்கு வெளிச்சத்தை அளிப்பவள் உழை எனப்படுகிறாள். விடிந்தும் விடியாத காலைப்பொழுதாக, உழை என்ற சொல் விளங்கப் பெறும். உழை என்ற சொல்லில் வரும் ழகரம் ஆரியரின் வாயில் நுழையாததால், ஷ என ஒலித்து,

உஷா என்றனர். ஞாயிற்றுக்கு ஒளியைத் தரும் உஷா, ஞாயிற்றின் மனைவியாக உருவகம் செய்யப்பட்டாள். கதிரவனின் ஒளியால் நிழல் தோன்றும். ஒளியுள்ள இடத்தில் நிழல் தோன்றுவது இயற்கை. நிழலைச் சாயை என்ற தமிழ்ச் சொல்லால் அறியலாம். ஞாயிற்றுக்குச் சாயாதேவி என்றொரு மனைவியும் இருந்ததாக வேதங்கள் கூறுகின்றன. சாய்-சாயை என்ற தமிழ்ச் சொல்லே, சாயா (Chhaya) என்று வடமொழியிலும் சொல்லப்பட்டது. உழை-உஷா என்று சொல்லப்பட்டு, ஞாயிறு தோன்றும் முதல் நிலப்பகுதியான சப்பான் முதல் அரேபியா வரையிலான நிலப் பகுதியும், உஷையா-ஏஷியா (Asia) என்றும் சொல்லப்பட்டது. ஏஷியா என்பதற்குக் கதிரவன் தோன்றும் நாடு என்றே ஆங்கிலத்தில் பொருளாகும். இவையெல்லாம், உழை என்ற தமிழ் மூலத்தினின்றும் திரிந்த சொற்களே. உழை என்ற சொல் லுக்கு மான் என்ற பொருளும் தமிழில் உள்ளதை அறிந்தே, பிரசாபதி-உரோகிணி கதையும் பிராமணங்களில் சொல்லப் பட்டது.

○○○

8

# இராமாயணம்

இராம + அயணம் என்பதே இராமாயணம் என்று சொல்லப் பட்டுள்ளது. ராமா என்ற சொல்லுக்கு அழகு, அழகன் என்று பொருள் சொல்லப்பட்டாலும், கறுப்பன் என்ற பொருளே சரியானதாகும். இர்-இர-இரவு-இரா என்றவாறு தமிழ்ச் சொல் லின் நீட்சியே இராமா என்னும் பெயராகும். அயணம் என்பதற்கு வழி என்றும், பிறப்பு என்றும் பொருள் சொல்லப்பட்டுள்ளது. இராமன் பிறப்பு வளர்ப்பு பற்றிய கதை என்பதால், இராமாயணம் (Ramayan) எனப்பட்டது. இராமன் என்பவன் வரலாற்று மாந்தன் தானா அல்லது கற்பனையாகப் புனையப்பட்ட கதையின் உருவகமா என்பதில் இன்னும் கருத்தொற்றுமை ஏற்படவில்லை. இருந்தாலும் இராமன் என்ற மன்னன் வடநாட்டை ஆண்டவன் என்ற கருத்து ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இராமாயணம் நிகழ்வுற்ற காலம் பற்றிய பல்வேறு கொள்கைகள் குழப்பத்தைத் தருவனவே. கி.மு. 2000 ஆண்டுகட்குப் பிறகே[83] ஆரியர் இந்தியா வுக்குள் நுழைந்தனர் என்ற முடிவின் அடிப்படையில், அதற்குப் பிறகே இராமாயண நிகழ்வு நடைபெற்றது எனக் கூறுவது பொருத்தமாகும்.

வேதகாலம், இதிகாசக் காலம், புராணக் காலம் (பிராமணங் களின்) என்றவாறு, மூன்று பிரிவுகளாக ஆரியர்களின் வட இந்திய நிலைப்பாட்டைச் சிலர் பிரிப்பர். அப்படியெல்லாம் பிரிபடும் காலங்கள் ஏதுமில்லையென்றும், அவை அடுத்தடுத்து நிகழ்வுற்றவைகளே என்பாருமுளர். இதிகாசா (Itihasa) என்ற வடமொழிச் சொல்லுக்கு, இப்படி நடந்தது (thus occurred) என்பதே பொருளாகும். இதி (Iti) என்பதற்கு, இப்படி என்றும்,

83. History of Tamilakam, Bhishma, p. 3.

இது இப்படி என்றும் பொருள் உணரலாம். இது என்ற தமிழ்ச் சொல்லின் உட்பொருளும் இதி என்ற வடசொல்லில் உள்ளது. அர்த்த சாஸ்திரம் என்னும் நூலில், இதி கௌடில்யோ, என்ற வாறு பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளன. இதற்கு, இப்படி கொடில்யர் சொல்கிறார் எனப் பொருள் உரைப்பர். இதனால், கௌடில்யர் அந்நூலை எழுதவில்லை என்று கூறுவாரும் உளர்.

இராமாயணம் நிகழ்வுற்ற காலம் கி.மு. 1500-1250 என்று வரலாற்றாய்வாளர்கள் கணித்துள்ளனர்.[84] கி.மு. 20000, 10000, 8000, 5500 என்ற ஒவ்வொருவரின் கணக்குகளும் கற்பனை யானவைகளே. இராமன் என்பானை வரலாற்று மாந்தனாகக் கொள்ளச் சான்றுகள் ஏதுமில்லை. ஆனால், விவிலியம் கூறும் மோயீசன் (Moses) போன்றே, மரபு வழிச் செய்திகளின் அடிப் படையில், இராமனும் வரலாற்று மாந்தனாக ஏற்றுக் கொள்ளப் படுகின்றான். இராமனின் முன்னோர் பற்றியும் அவர்கள் சூரிய குலத்தைச் சார்ந்தவர்கள் பற்றியும், இராமாயணம் விளக்க மாகக் கூறுகிறது. ஞாயிற்று மரபாகக் கருதப்படும் இராமனின் முன்னோர், அதே மரபைச் சேர்ந்த சோழர் குடியின், வடபுலத்து மன்னர்களே எனலாம். பாண்டியர்கள் திங்கள் மரபையும், சோழர்கள் ஞாயிற்று மரபையும் கொண்டவர்களாவர்.

இராமனின் முன்னோர்களாக, மனு, பிருது, இசுவாகு, கருத்சன், மாந்தாதா, முசுகுந்தன், சிபி,[85] சாகரன், பகீரதன், இரகு, அசன், தசரதன் போன்றோர் குறிப்பிடப்பட்டுள்ளனர். இப்பெயர்களில் பெரும்பாலானவை தமிழ் மூலத்தைக் கொண்ட திரிபுச் சொற்களாகவே உள்ளன. மனு என்பான் பற்றி பின்னால் விளக்கப்படும். மனுநீதிச் சோழன் என்ற மன்னனைப் பற்றிய செய்திகள், தமிழ் இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. மனுநீதிச் சோழன்[86] காலம் பற்றியும், அவன் ஆட்சி பற்றியும் வரலாற்றுச் செய்திகள் இல்லை. மனு என்பானின் சட்டத்தை முதலாகக் கொண்டு, தமிழகத்தை ஆண்ட சோழ மன்னன் என்ற கருத்தும் உண்டு. தமிழகமே மனுவின் சட்டத்தை ஏற்றுக் கொண்டது என்பதைக் காட்டுவதற்கு, ஆரியர் செய்த இட்டுக் கதையாகவே மனுநீதிச் சோழன் செய்தியுள்ளது. மேற்கண்ட

84. பாவாணர், தமிழர் வரலாறு, ப. 177.

85. சிலப்பதிகாரம், 20:52.

86. மேலதே, 20:54.

பட்டியலில் உள்ள முசுகுந்தன் பற்றிய செய்தியும் சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ளது. இந்திரன் முசுகுந்தச் சோழனை, தனக்குப் பகராளியாக தேவருலகை ஆளுமாறு கேட்டுக் கொண்டு, தேவர் உணவைத் திருடிச் சென்ற கலுழனை (கருடனை)த் தேடிச் சென்றான். முசுகுந்தன் புகார் நகருக்குத் திரும்பிய போது, அதுவரை அவனுக்குத் துணையாக இந்திரனால் துணையாக நிறுத்தப்பட்ட, பூதம் ஒன்றினையும் அழைத்துக் கொண்டு வந்தான். அப்பூதம் நாற்சாலையில் அமர்ந்து நீதி வழங்கிற்று என்ற செய்தியும் உண்டு.[87] முசுப்போல் (குரங்கு) குந்தியிருப்பவன் என்ற பொருளில், முசுகுந்தன் என்ற தமிழ்ச் சொல்லால் அழைக்கப்பட்ட முசுகுந்தன், தமிழ் மன்னனே என்று பாவாணர் கூறுகிறார். முதுகாந்தன் என்ற பெயரே முசுகுந்தன் எனத் திரிந்ததாக, இராவண காவியம் எழுதிய புலவர் குழந்தை குறிப்பிடுகின்றார்.

இராமன் மரபார் சோழர் குலத்தைச் சேர்ந்தவர்களே என்பதும், அவர்கள் தமிழ் மரபினரே என்பதும் பற்றியே தமிழரின் நிறமான கறுப்பு நிறத்தை இராமன் கொண்டிருந்தான் என்ற செய்தியால் அறியலாம். இராவணன் என்ற சொல்லுக்கு, இராவணன்-கருமை வண்ணன் என்று, புலவர் பொன்னம்பலனார் கூறுவார். இராமனும் இராவணனும் ஒரு குடியிற் பிறந்த பங்காளிகளே என்றும், இரா என்ற முன்னொட்டுச் சொல், இருவரையும் தமிழ் மன்னர்களாகவே காட்டுகிறது என்றும் கொள்ளலாம். இந்தியாவில், குறிப்பாக வடநாட்டில், 43 இராமாயணக் கதைகள் உள்ளனவென்று கூறுவர். ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு வகையில், இராமன் பற்றிய உறவு முறைகளைக் கூறுகின்றன. இராவணனின் மகளாகவும், தங்கையாகவும் சீதையைச் சொல்லும் கதைகள் உண்டு. சீதைக்கு இராமன் சிற்றப்பன் என்ற கதையும் வங்காளத்தில் சொல்லப்படுகின்றது.

இவ்வாறான கதைகளில், இராவணன் ஒரு பிராமணனின் மகன் என்றும், அவன் தந்தை விசுஇராவணன்[88] என்ற முனிவன் என்றும் ஆரியக் கதையொன்று கூறுகிறது. இக்கதைகளின் வழியே கூறப்படும் செய்திகளை உண்மை என்று ஏற்பதற்கில்லை என்று ஆய்வாளர்கள் கூறுவர். இராமனை, திருமாலின் பிறப்

87. மேலதே, 6:7-13.

88. Bishmah's Tamilakam, p. 300.

பாகக் கூறும் ஆரியர், இராவணனை இராக்கதன் எனக் கூறி, ஆரியர்-தமிழர் பகையைத் தூண்டினர். ஆரியர், தமிழர் மேல் வெறுப்புற்றதற்கான கரணியங்கள் பலவாகும். தங்களைச் சரிநிகராகத் தமிழர்கள் ஏற்றுக் கொள்ளாததும், ஆரியர்களின் மொழி, பண்பாடு, வாழ்க்கை முறைகள், தமிழரினின்றும் மாறுபட்டிருந்ததும், தமிழறின் அறிவுத் திறமையை ஆரியர் பெற்றிராததும். பெருஞ்செல்வமும், உயர்ந்த நகரிய வாழ்க்கை யைத் தமிழர் கைக்கொண்டிருந்ததும், தமிழரை ஆள நினைத்து, அது முடியாமற் போனதும் என, நீளமான பட்டியலை ஆரிய-தமிழர் பகைமைக்குக் கரணியங்களாகக் கூறலாம். ஆரியர் கொண்டிருந்த பகை உணர்வுகள், ஆரியர்களின் வேத நூலான இரிக்கு வேதத்திலிருந்து, புராணங்கள், பிராமணங்கள், உப நிடதங்கள் வரை காணக்கிடக்கின்றன.

சிபி என்ற சோழ மன்னனும், இராமனின் முன்னோர்கள் பட்டியலில் இடம் பெறுகிறான். செம்பி-செம்பியன் என்ற சோழரின் பெயரே, சிபி என்று வடமொழியில் திரிந்ததாய் பாவாணர் கூறுகிறார். இவ்வாறாகச் சோழர்களோடு தொடர்பு படுத்தப்பட்டுள்ள இராமனின் முன்னோர்கள், தமிழ்நாட்டுச் சோழர் குலத்தின் வடஇந்திய அரச மரபினரே என அறியலாம். ஆரியத் தொன்மங்கள், இராமனைத் தங்கள் கடவுளரின் பிறப் பாகக் கூறிக் கொண்டாலும், அவர்கள் சொல்லும் கதை களிலும் செய்திகளிலும், தமிழினத்தோடு இராமன் கொண்ட தொடர்பு, எதிர்காலத்தில் வெளிப்படும் என்று அவர்கள் எண்ணிப் பார்க்கவில்லை. இராமனின் வரலாற்றை எழுதி யவர்கள், இராம னுடைய தமிழ்த் தொடர்புகளை மறைத்தும் எழுத இயல வில்லை. இராமன், இராவணன் மேல் போர் தொடுத்ததான செய்திகள் யாவும், ஆரிய-தமிழர் பகைமையின் வெளிப்பாடுகளே.

இராவணன் இலங்கையில் மன்னனாக இருந்தான் என்பதற் கான வரலாற்றுச் செய்திகள் ஒன்று கூட இலங்கையில் இல்லை. இலங்கை என்ற சொல்(லங்கா-Lanka)லுக்கு, ஆற்றிடைப்பட்ட தீவு (திருவரங்கம் போன்று) என வடமொழி வல்லுநர்கள் கருத்துக் கூறுகின்றனர்.[89] இலங்கை என்ற சொல்லைத் தமிழி லக்கியங்கள் பயன்படுத்தவுமில்லை. சிங்களம், ஈழம் போன்ற

89. Paper on Valmiki and South India in the Tamilian Antiquity, Quoted by Nilakanda Sastri - 1972.

சொற்களே இலங்கையைக் குறித்துத் தமிழர் பயன்படுத்தியவைகள் ஆகும். லங்கா என்ற இடம், கோதாவரி ஆற்றின் இடையே இருந்த நிலத்திட்டு என்றும், அங்கு பழங்குடியின் மக்களே வாழ்ந்து வந்ததாகவும், இராமாயணம் சொல்லும் லங்கா கோதாவரித் திட்டே என்றும், நீலகண்ட சாத்திரியார் கூறுகிறார். மேலும், இராமன், தமிழ் நாட்டைக் கடந்து ஈழ நாட்டை அடைந்தான் என்ற செய்தியும் உண்மையானதல்ல என்றும் கூறுகிறார்.

இலங்கைக்குச் சென்ற இராமன், குகன் எனப்படும் படகோட்டியைச் சந்திக்கிறான்; அனுமனையும், குரக்கினத் தலைவன் சுக்ரீவனையும், பறவைக்கரசன் சடாயுவையும் சந்திக்கிறான்; ஆனால் தமிழ்நாட்டைக் கடந்து சென்ற இராமன், தமிழன் எவனையும் சந்தித்ததாக இராமாயணம் கூறவில்லை. இராமன் வந்து சென்ற போது, நிலைத்த நினைவிடங்களாகத் தமிழகத்தில் சொல்லப்படும் இடங்கள் யாவும், பிற்கால ஆரியர்கள், இராமனுக்கும் தமிழ் மக்களுக்கும் ஒரு பிடிப்பை ஏற்படுத்திச் சொன்ன கற்பனைச் செய்திகள் ஆகும். எடுத்துக் காட்டாக, பெரம்பலூர் மாவட்டத்திலுள்ள வாலிகண்டபுரம் என்ற ஊரில், வாலியை இராமன் கண்டதாகக் கூறும் செய்திக்கு அடிப்படைகள் ஏதுமில்லை. வாலீஸ்வரர் என்பது சிவனுக்குள்ள பெயர்களில் ஒன்றாகும். வால்-வாலறிவன் என்பது திருக்குறள் சொல்லும் உயர்வான தமிழ்ச் சொல்லாகும். வாலீஸ்வரன் என்பதற்கு மிகவும் உயர்ந்த கடவுள் என்றே பொருளாகும். இந்த வால் என்ற தமிழ்ச் சொல்லை, வாலியுடன் இணைத்து, வாலிகண்ட புரம் எனத் திரித்தது, ஆரியச் சமயத்தோரே ஆவர்.

இராமன் ஈசுவரனைச் (சிவனை) வழிபட்ட இடமாக இராமேசுவரம் சொல்லப்படுவதும், இராமேசுவரத்தின் முனையினின்றும் வில்லெறிந்ததும் (தனுஷ்கோடி) பிற்காலத்தில் சொல்லப்பட்ட செய்திகளாகும். பல்வேறு கடற்கோள்களால் அழிந்துபட்ட தென்னிலப்பகுதிகள், ஈழத்தையும் தமிழ்நாட்டையும் பிரித்தன. இக்கடற்கோள்களே, இராமேசுவரம் முதல், கோடியக்கரை வரையிலுள்ள கடற்பகுதிகளை மண்மேடுகளாக்கின. இன்றும் இப்பகுதியான பாக் நீர்ச்சந்திப்பு ஆழம் குறைந்த, கடல் அலைகள் அதிகமற்ற பகுதிகளாகவேயுள்ளன. ஈழத்தின் மறைவுப் பகுதியான இக்கடற்பகுதி, பெருங்கப்பல்கள்

செல்லவும் தடையாக உள்ளன. இம்மண்மேட்டை, இராமன் கட்டிய சேது (பாலம்) என்று கூறுவது கற்பனையானது. விவிலியம் கூறும் ஆதாம் என்பவன், இராமனுக்கு முன்பே இப்பாலத்தைக் கட்டியதாகக் கூறி, இதற்கு ஆதாமின் பாலம் (Adam's Bridge) என்றும் சொல்லி வைத்தனர். இதுவும் கூட கற்பனையின் அடிப்படையில் கூறப்பட்டதேயாகும். இலங்கையின் குன்றின் மீதுள்ள அடிகள் (Foot) ஆதாமின் பாதம் என்றும் இராமர் பாதம் என்றும் சொல்லப்படுவதும், உண்மைக்குப் புறம்பான செய்திகளே.

குமரிக் கண்டம் நிலைபெற்றிருந்த போது, ஏழு பெரு நாடுகளிலும், அவ்வேழு பெருநாடுகட்கடங்க ஏழுசிறு நாடு களுமாக, 49 சிறுநாடுகள், பாண்டியப் பேரரசில் இருந்தன. இப்போதுள்ள அமெரிக்க ஒன்றிப்பு நாட்டைப் (U.S.A) போன்று எனக் கொள்க. அக்குமரி மாநாட்டின் வடபகுதி, ஏழ்தெங்க நாடு எனப்பட்டது. தென்னை மரங்கள் அடர்ந்த ஏழு சிறிய நாடுகள் எனப்படும். அந்த ஏழ் தெங்க நாடும் கடற் கோளால் அழிந்துபட்டது போக, எஞ்சியிருந்த நிலப்பகுதியே ஈழம் எனப்பட்டது. ஏழ்தெங்கம் என்ற சொல்லின் திரியே ஈழம் என்பர். யாழைமீட்டும் பாணர் வாழ்ந்திருந்ததால், ஈழத்தின் வடபகுதி யாழ்ப்பாணர் நாடெனப்பட்டதாகவும் கூறுவர். ஈழத்தின் தொன்மைக் குடியினர் தமிழரே. அவர் தென் பகுதியை விடுத்து, மீண்டும் கடற்கோள் நேருமோ என அஞ்சி, வட பகுதியில் வாழ்ந்தனர். கி.மு. 1000 ஆண்டுகளில்தான், கலிங்கத் திலிருந்த வடுகரும் மற்றோரும் கடல்வழியே ஈழத்திற்குப் புலம் பெயர்ந்தனர். இவர்கள் ஆரிய எதிர்ப்பாளர்கள் என்றும், கலிங்கம் ஆரிய மயமாக்கப்பட்டதை எதிர்த்தும், ஆரிய சமயத்தில் இணையவும் மறுத்தும் வெளியேறியவர்களே என்றும் கூறப்படுகின்றது. இம்மக்கள், யாழ்ப்பாணத்தில் தமிழர் வாழ்ந் திருந்ததால், தெற்குப் பகுதிகளில் குடியமர்ந்தனர். இவர்களு டைய முன்னோர்களில் மொழி, கொடுந்தமிழ் எனப்பட்ட தெலுங்கு ஆரிய மொழியின் கலப்பு மொழியே. இவர்களுடன் சேரநாட்டுத் தமிழர்களும், தென்னிலங்கையில் குடியேறினர். வட இலங்கைப்பகுதி, சோழ பாண்டியர்களின் ஆளுகைகளிலே இருந்துவந்ததால், சேரநாட்டோர் தென்பகுதியைத் தேர்வு செய்தனர். கலிங்கர் சேரத்தமிழர்களின் கூட்டு இனமே இன்றுள்ள சிங்கள இனமாகும். இம்மொழியும் வடுகமும் தமிழும் கலந்த மொழியே. சிங்கள மொழியைப் பேசுவோரின் ஒலிப்பும்

நடையும் (Sound and style) மலையாள மொழியின் ஒலிப்பை நினைவுபடுத்தும். இவ்வாறு ஆரிய எதிர்ப்பால் சென்ற கலிங்க மக்கள், புத்த சமயத்தை ஏற்பார்கள் என்ற கரணியம் பற்றியே, அசோகன், சங்க மித்திரையையும் மேலும் பலபிக்குகளையும், இலங்கைக்கு அனுப்பிவைத்தான். தொடக்கத்தில் தமிழரும், சிங்களவரும் நட்புறவுடன் தானிருந்தனர். தமிழகத்தில் ஏற்பட்ட ஆரிய-புத்த சமயப்போர், இலங்கையையும் விட்டு வைக்க வில்லை. இவ்வாறே தமிழர்-சிங்களர் பகைமைக்கு வித்தூன்றப் பட்டது. இன்று இலங்கையில் நடைபெறும் அனைத்து வன்முறைகளுக்கும் தொடக்கவிழா, ஆரியக் கொள்கைகளால் தோற்றுவிக்கப்பட்டதே. தமிழர்களைக் கொண்டே சிங்கள-புத்த சமயத்தினரை எதிர்க்கும் சூழலையும் உருவாக்கினர். சேரன் செங்குட்டுவனின் அழைப்பை ஏற்று, கண்ணகி உருவச்சிலை திறப்பு விழாவில், இலங்கையின் சிங்கள மன்னன் இரண்டாம் கயவாகு கலந்து கொண்ட செய்தியை, சிலப்பதிகாரம் தெரி விக்கின்றது.[90] கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் உறவுபட்டிருந்த தமிழர்-சிங்களவர் நட்பு, பிற்காலத்தில் விரிசல் கண்டது வரலாற்று நிகழ்வுகளாகும்.

கடல்சூ ழிலங்கைக் கயவாகு வேந்தனும் – சிலப்பதிகாரம்.

இராமனின் தென்னாட்டு வருகை நிகழவேயில்லை என வரலாற்றாசிரியர்கள் கூறும் நிலையில், இராமனின் தமிழ்நாட்டு பயணவழி இரு வகைகளில் ஆரியர்களால் கூறப்பட்டது. ஒன்று, வாலிகண்ட புரம் வழியே சென்றதாகவும், மற்றொன்று கோடியக் கரை வழியே சென்றதாகவும் கூறப்படுகின்றன. திருமறைக் காட்டில் (வேதாரண்யம்) உள்ள சிவனை, இராமன் வழிபட்ட தாகக் கூறப்படும் செய்தியின்படி, கோடியக்கரையினின்றே இராமன் இலங்கை சென்றதாகவும் கூறப்படுகின்றது. இச்செய்தி களின்படி, தண்டக அடவிகளை (தண்டகாரண்யம்) ஆரியர் கடந்து தென்னாட்டுக்குள் நுழைந்தனர் என்பது உறுதியாகிறது. அகத்தியனும், இராமனும் ஒரு காலத்தவராகவே கருதப்படும் நிலையில்,[91] அகத்தியனுக்குப் பிறகே இராமன் தண்டக அடவி களைக் கடந்து வந்ததாகக் கொள்ளலாம். இந்நிகழ்வு கி.மு. 1500 ஆண்டுகளில் நிகழ்வுற்றிருக்கும் என்பர். தண்டகம் என்பது

---

90. சிலப்பதிகாரம், 30:160.

91. மணிமேகலை, 22:25

குற்றவாளிகளை ஒறுத்தல் என்ற வடசொல்லாகும். கொடுங் குற்றம் புரிந்தோரை, அவர் மீண்டும் வராதிருக்கத் தண்டக அடவிக்குள் அனுப்பி விடுவது வட இந்திய ஆரியர் மரபு என வேதங்களும் புராணங்களும் கூறுகின்றன.

இராமாயணத்தில் கூறப்படும் குரங்கினங்கள், அறிவு முதிர்ச்சி பெறாத காட்டு மக்கள் என்றும், அவர்கள் குரங்கினைக் கடவுளாக வழிபட்டவர்கள் என்றும், பாம்பினை வழிபட்ட வர்கள் நாகர் என்று சொல்லப்பட்டது போன்றதே என்றும், டாக்டர் ந. சுப்பிரமணியம் கூறுகிறார். சடாயு என்ற பறவையும் அவ்வாறான பறவை வழிபாட்டு மாந்தர்களைக் குறிப்பதே என்பர். இராமாயண காலமோ அல்லது அகத்தியன் தென்னாடு வந்ததாகச் சொல்லப்படும் காலமோதான் முதன்முதல் ஆரியர் தென்னாட்டை அடைந்த முதற்குழுவினர் என்றும், இது பாணினி (Panini)யின் காலமான கி.மு. 1400க்கு முற்பட்டது என்றும் கூறுவர். பாணினியின் காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டே யென்று பாவாணர் கூறுகிறார்.[92] பாணினி தொல்காப்பியருக்குப் பிறகு வாழ்ந்தவர் என்றும் கருதுகிறார். அடுத்து இரு குழுக்கள் பல்வேறு கால அளவுகளில் தென்னாட்டுக்கு வந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இராமனின் தமிழக வருகை, புத்தர் தென்னாடு வந்ததைப் போன்ற கற்பனைச் செய்தியே என்றும் கூறப்படுகின்றது.

இராமர் குடியின் முதல் மன்னனான மனுகாலத்தில்தான், கடற்கோள் நிகழ்ந்ததாகக் கூறப்படும் செய்தியும், இக்கடற் கோளுக்குப் பிறகு தென்னகத்தை நோக்கி வந்த முதல் சத்திரிய மன்னன் இராமனே என்றும் புராணங்கள் கூறுகின்றன. இராம னுடைய கதை, தென்தமிழ்நாட்டு மக்களுக்கு, கிறித்து பிறப் பாண்டுகளுக்குப் பிறகே அறியப்பட்டுள்ளன. தலைவன், தலைவி ஒழுக்கத்தைப் பற்றிக் கூறும் தொல்காப்பியப் பொருளதிகாரம், ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாட்டை நிலை நிறுத்தச் சொல்லப்பட்டதாகக் கருதப்படும் இராமாயணம் பற்றிய செய்திகளைக் கூறவில்லை. தொடக்ககாலத்துக் கடைக்கழக நூல்களும், இராமனைப் பற்றிய செய்திகளை அறிவிக்கவில்லை. கி.பி. முதல் நூற்றாண்டுக்குப் பிறகே, இராமாயணம் பற்றிய செய்திகளைத் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. கி.பி. 10ஆம்

---

92. தமிழர் வரலாறு, ப. 225.

நூற்றாண்டளவில் தமிழ் நாட்டில் இராமாயணம் பரவலாக அறியப்பட்டது. இது தமிழ்ப் புலவர்களையும் கவர்ந்த அளவில், கம்பர் தனது இராமாயண காவியத்தை எழுதினார்.

வான்மீகி எழுதிய இராமாயணத்தில், கவாடபுரம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. கிட்கிந்தா காண்டத்தில், குரங்கினங்களுக்கு அறிவுரை வழங்கப்பட்ட செய்தியில், கவாட புரத்தில் பாண்டிய மன்னன் சிறப்பாக ஆட்சி செய்வது பற்றியும், கவாடபுரத்தில் பொன்னும் மணியும் கொட்டிக் கிடப்பது பற்றியும் அதன் அழகில் மயங்கிவிடாமல், செல்லுமாறும் கூறப்பட்டுள்ளதை நோக்குமிடத்து, இரண்டாம் தலைநகரான கவாடபுரம், குமரிக் கண்டத்தில் நிலைபெற்றிருந்ததும், இலங்கை என்ற நாடு அப்போது இருந்திருக்கவில்லையென்பதும், கவாடபுர அழிவிற்குப் பின்னரே இலங்கை நாடு தனித் தீவாயிற்று என்பதும் சொல்லப்படும் செய்திகளாகும். இதன் வழியாக, குமரிக்கண்டம் பற்றிய செய்திகளை வான்மீகி அறிந்திருந்ததை யும், அதன்பிறகு உருவான இலங்கையை, இராமாயணத்தோடு கற்பனையாக இணைத்திருந்ததையுமே அறியமுடிகின்றது. இலங்கை செல்லும் வழியில் கவாடபுரம் இருந்தது என்ற செய்தியும் ஏற்கப்படாத ஒன்றே. தமிழர்கள் வழியாக கேள்விப் பட்ட செய்திகளைக் கொண்டே, இலங்கை தெற்கே இருந்ததை யும், இராமன் தென்னாடு சென்றதையும் இணைத்து, இராமன் இலங்கை சென்றதாக வான்மீகி எழுதினார் என்பதே சரியான சிந்தனையாகும்.

கவாடபுரத்தை இரண்டாம் தமிழ்க்கழகம் நிலைபெற் றிருந்த நகராகத் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன.

கண்ணகப் பரப்பில் கவாடபுர மென்ப – அடியார்க்குநல்லார்.

வடநூல்கள் குறிப்பிடும் கபாட (கவாட)புரம், தற்காலத் தமிழகத்தின் துறைமுக நகரமே என்று இராகவய்யங்கார் கருதுகிறார்.

○○○

9

## மனு

மனுக்கள் அறுவர் என்றும், எழுவர் என்றும் கூறுவர். வைவச்சுதன் (Vaivasuta) என்பவனைப் பற்றியே இரிக்கு வேதம் குறிப்பிடுகிறது. மனு என்ற வடசொல், மீன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என ஏற்கனவே கூறப்பட்டுள்ளது. பல காலங்களில் பலர் மனுக்கள் என்ற பெயரில் இருந்ததாகவும் அறியப்படுகின்றது. வானத்து மீனின் திரிபான மனு என்ற சொல்லும், வானியலின் உருவமாகச் சொல்லப்பட்டதே. திரிசங்கு என்று இரிக்குவேதம் கூறும் தென்குறுக்க(Southern Cross) மீன் கூட்டத்துக்கு அருகேயுள்ள செந்தாரசு (Centaurus) என்ற மீன் கூட்டமே, மனு என்பதாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது.[93] செந்தார் என்பதற்குச் சிவந்த மீன் என்ற தமிழ்ப் பொருளே கொண்டு, கிரேக்கத்தில் செந்தாரசு எனப்பட்டது. இக்கூட்டத்தில் மிகுந்த ஒளியுள்ள தொளிமன் (Toliman) என்ற மீனையே, விசுவமித்திரன் என்று குறிப்பிடுகின்றனர். தொளிமன் என்ற கிரேக்கச் சொல், தெளிமீன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. தெளிவாகத் தெரியும் மீன் எனப்படும்.

வைச்சுதன்[93] என்பானின் மகனாக மனு, மகாபாரதம் வன பருவத்தில் சொல்லப்படுகிறான். ஆற்றலில் பிரசாபதி அளவிற்கு உயர்த்திச் சொல்லப்படுகிறான். மனு என்பான் ஒருமுறை படாரி மலைமீது (படாரி-படர் ஏறி என்ற தமிழ்ச் சொல்லே) ஒற்றைக் காலில் ஒக நிலையில் (தவம்) இருந்தான். இவ்வாறு 10000 ஆண்டுகள் மனு அசைவின்றி இருந்தான். அப்போது சிறு ஆற்று மீன் குஞ்சொன்று. மனுவை அணுகித் தன்னைப் பெருமீன்கள் விழுங்காதிருக்கும் வகையில் காக்க வேண்டியது. மீனை அதன்

93. Glossary of Madras Presidency, p. 465.

வளர்ச்சிக்கேற்றவாறு, குடத்திலும், குளத்திலும், பின்னர்க் கங்கையிலும் விட்டான். பெருத்த உடலை அம்மீன் பெற்று விட்டதால், கங்கையும் அதற்கு ஏற்றவாறு அமையவில்லை. எனவே மனு அம்மீனை ஆழியில் கொண்டு போய்விட்டான். கங்கையே கொள்ளாத அளவுக்குப் பெருத்திருந்த மீனை, மனு எவ்வாறு தூக்கிச் சென்றான் என்பது கேள்வியாகி விடும் என்று எண்ணிய மகாபாரதம், அம்மீனைத் தூக்குவதற்கான ஆற்றல் மனுவிற்கிருந்ததாகவும் கூறுகிறது.

ஆழியில் மீனை விட்ட வேளையில், மீன் மனுவைப் பார்த்து, இவ்வுலகம் அழிவதற்கான காலம் வந்துள்ளது என்றும், மரக்கலம் ஒன்றை கட்டிக் கொண்டு, உலகின் விதைகளை எல்லாம் இனத்திற்கொன்றாக எடுத்து மாக்கலத்தில் வைத்துக் கொள்ளுமாறும் கேட்டுக் கொண்டது. மரக்கலத்தின் நுனியில் வடகயிறு ஒன்றை கட்டிக் கொள்ளுமாறும், கேட்டுக் கொண்ட படி மனு செய்து முடித்தான். பின்னர் ஒரு நாளில் மரக்கலத்தில் ஏறிக் கொண்டு ஆழியில் சென்றான். அவவேளையில் அங்கு வந்த மீனின் மலைபோல் உயர்ந்திருந்த கொம்பில் மரக்கலத்தை இணைத்தான். பெருவெள்ளம் சூழ்ந்து, இடி மழையினூடே மரக்கலம் ஊர்ந்துசென்றது. புயல் காற்று அம்மரக்கலத்தைப் பல வகையிலும் அசைத்தது. அது தேறல் (மது) குடித்த பெண்டிர், குடிவெறியில் தமது தலையை முன்னும் பின்னும் ஆட்டுவது போலிருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. பெண்டிரும் குடிக்கும் வழக்கம் ஆரியரிடையேயிருந்ததை இச்செய்தி தெளிவாக்குகிறது. எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. அண்டமே இருள் சூழ்ந்திருந்த வேளையில், அந்த ஏழு முனிவர்கள் (செண்டாரஸ் மீன் கூட்டம்) மட்டுமே தெரிந்தனர். இறுதியில் மீன், அந்த ஏழு முனிவர் களையும் அழைத்து, மரக்கலத்தை மலையின் உச்சியில் கட்டி விடுமாறு கூறியது. அவ்வாறு மரக்கலம் கட்டப்பட்ட மலை முகடு நாபந்தனா எனப்பட்டது. நாவாய் என்பதே நா என்றும் பற்று என்பதே பத்தன்-பந்தன் என்றும் வடமொழியில் திரிந் துள்ளதையும் நோக்குக.

“நானே பிரசாபதி என்னும் பிரம்மா, இனிமேல் மனுவே உலகின் அனைத்து உயிரினங்களையும் உண்டாக்குவார். கடவுளர் கள், மக்கள், அசுரர்கள் என்ற இனங்களையும், அசையும் அசையாத பொருட்கள் மற்றும் உயிரினங்களையும் மனு

படைப்பார்," என்று அந்த ஏழு முனிவர்களிடம் மீன் கூறியது.[94] இந்தக் கதையில் வரும் செய்தியில், உலகில் தோன்றிய ஊழிப் பெருவெள்ளமும், அப்பெரு வெள்ளத்தினின்று மாந்தன் காக்கப்பட்ட செய்தியும் கூறப்பட்டுள்ளது. மேலும் குமரிக் கண்டத்தில் நிகழ்வுற்ற வெள்ளப் பாழியினின்றும், மீன் கொடி யையுடைய பாண்டியமன்னன், தனது மக்களைக் காத்த செய்தி உருவகமாகக் கூறப்பட்டுள்ளதை நோக்குக.

விவிலியத்தில் சொல்லப்பட்டுள்ள நோவா என்பான் பற்றிய வெள்ளப் பாழ் செய்தியை, மகாபாரதத்தின் வானபருவக் கதையுடன் ஒப்புநோக்குக. விவிலியம் கூறும் நோவா-நாவாய் என்ற தமிழ்ச் சொல்லைக் கொண்டுள்ளதையும், நா பந்தன் என்ற வடசொல், நாவாயைக் குறித்ததையும் நோக்குமிடத்து, இருநிகழ்வுகளும் தமிழ்க் குமரி நாட்டில் நடந்ததையே நினை வூட்டுகின்றன. கிரேக்கக் கதையொன்று, தெக்காலியன் (Decualian) என்பானை, வெள்ளப் பாழினின்றும் யா கடவுள் மீட்டது பற்றிய செய்தியைக் கூறுகிறது.[95] தெக்காலியன் என்ற பெயர், தெற்கு ஆழியன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. தெற்கு ஆழி என்பது, குமரி நாடு இடம்பெற்றிருந்த தென் கடலைக் குறித்த சொல்லேயாகும். உரோமர்கள், தங்களின் முன்னோர்கள் இறந்து பட்ட நிகழ்வை நினைவு நாளாகக் கொண்டாடினர். அக்கல் லறைகள், உரோமர்களின் கல்லறை எனவும், உரோமர் அல்லா தரின் கல்லறை எனவும் இரண்டு வகைகளில் இருந்தன. உரோமர் அல்லாதாரின் கல்லறைகள், ஏதிலிகளின் (அனாதை) கல்லறை கள் எனப்பட்டன, இவர்களுக்கும் நினைவு நாள் வழிபாடு நடை பெற்றது. இதனை உரோம மக்கள் அனைவரும் சேர்ந்து செய்தனர். இவர்கள் யாவர் என்பது பற்றிய விளக்கம் ஊரோமர் களால் கூறப்படவில்லையாயினும், தங்களுக்கு இவர்கள் ஊறு செய்வார்கள் என்ற எண்ணத்தில், வழிபாடுகள் நடை பெற்றன. இக்கல்லறைகளுக்கு இலெமூரியக் கல்லறைகள் என்ற பெயரை இட்டனர். இறந்து போனவர்களில் எதிரிகளை இலெமூர்

---

94. அம்பேத்கரின் சூத்திரர்கள் யார்? பெ. சுந்தரம், சாந்தா பதிப்பகம், 1994, ப. 120.

94. மேலதே. ப. 122.

95. Parallel Myths, p. 127.

(Lemur) என்றே அழைத்தனர்.[96] குமரிக் கண்டத்தை இலெமூரிய என மேலை நாட்டவர் அழைத்ததையும் ஒப்புநோக்குக.

இவ்வாறு உலகின் பல்வேறு சமயங்களும், அதன் தொன்மக் கதைகளும், குமரிக்கண்டத்தின் பேரழிவை, தங்கள் நாட்டுடன் தொடர்புபடுத்திக் கூறியுள்ளதை நோக்கும் போது, குமரிக் கண்டம் பற்றித் தமிழ் இலக்கியங்கள் கூறும் செய்திகள் உண்மை யானவை என்றே கருதப்படல் வேண்டும். மனு என்பானும் குமரிக் கண்டத்தினின்று மீண்டவனாகவே ஆரியத் தொன்மங் களில் கூறப்படுவதாலும், மனுவே உலகின் படைப்பிற்கு முதலா மவன் என அறியப்படுவதாலும், மாந்த இனத்தின் தோற்றமும் வளர்ச்சியும், குமரிக்கண்டத்திலேயே நிகழ்வுற்றதைத் தெளிவாக்கு கின்றன. மகாபாரதத்தின் செய்தியைப் போன்ற வேறொரு கதையை சப்தபிராமணம் கூறுகிறது என்பதும் நோக்கத்தக்கது.

பாகவத புராணம் கூறும் செய்தியின் படியும், அதனை உறுதி செய்யும் மனுஸ்மிருதியின் கூற்றின்படியும், சுயம்புவான மனு (தன்னிலே தோன்றியவன்) பன்னிரு பிரசாபதிகளுடன் வானுலகத்திலிருந்தும் இறங்கி, திரசடாவதி ஆற்றுக்கும் இடைப் பட்ட சிறு பகுதியில் தங்கினார் என்று சொல்லப்பட்டுள்ளது. இது நடைபெற்ற காலம் கி.மு. 29000 ஆண்டுகள் ஆகும்.[97] இங்கிருந்தே பிரசாபதிகள் விந்திய, இமயமலைப் பகுதிகளுக்கும் குடிபெர்ந்தனர். இமயமலைப் பகுதி பிரம்மரிஷி தேசம் எனப் பட்டது. வானிலிருந்து இறங்கிய இடம் பிரம்மவர்த்தம் என்றும், இடம்பெயர்ந்தது பிரம்ம ரிஷி தேசம் என்றும் சொல்லப்படுவ தினின்று, பிரம்மன் என்பதே முழுமுதற் பொருளாகக் காட்டப் பெறுகிறான். இதன்பிறகு மத்திய தேசம், ஆரியவர்த்தம் ஆகிய பகுதிகளுக்கும் பிரசாபதிகள் சென்றனர். இந்தியா முழுமைக்கும் உள்ள பெயராகவும் அரியவர்த்தம் கூறப்படுகின்றது. சத்திய வர்த்தம் என்பது தமிழ் நாட்டைக் குறித்தது. சத்தியவர்த்த மனு (பிரசாபதி) என்பானே திராவிட தேசத்தை அடைந்து அதனை வளப்படுத்தியதால், அவன் திராவிடேஸ்வரன் எனப்பட்டான்.[98] அவனே தமிழையும் சமற்கிருதத்தையும் வளர்த்தவன். இதனை அடுத்து அடுத்த வெள்ளப்பாழ் நிகழ்வுற்று, நாடு அழிந்து

---

96. History of Religion, p. 283.
97. Bhishma's Tamilakam, p. 300.
98. Ibid.

பட்டது. அதுவரையில் நிலை பெற்றிருந்த நாகரிக வாழ்வும் மறைந்து போயிற்று. அதன் பிறகு தோன்றிய அகத்தியனே, சமற்கிருதத்தையும் தமிழையும் வளர்த்தான். ஆகவேதான் தமிழும் வட மொழியும் ஒன்றுபோலவே தோன்றுகின்றன. தமிழே சமற்கிருதம், சமற்கிருதமே தமிழ் எனப்பட்டது. தமிழுக்கும் வடமொழிக்கும் இருந்த ஏற்றத்தாழ்வுகளை அகத்தியனே சரி செய்தான் என்ற கருத்தையே, தென்னாடும் வட நாடும் சரி நிலை பெற்ற அகத்தியன் கதை கூறுகிறது.

இந்திரன் அகத்தியனுக்குத் தமிழ் கற்றுக்கொடுத்து, தமிழில் காப்பியம் படைக்கத்தூண்டினான். தமிழும் வடமொழியும் ஓரிடத்தில் தோன்றிய இரு கிளைகளே என்பதை, வடநாட்டில் வாழ்ந்த சில வன்முறையைத் தூண்டும் பள்ளிகள் (நிறுவனங்கள்) எதிர்த்தன. அவை தமிழே முதன் மொழியென்றும், வடமொழி பிற்றை நாள் மொழியே என்றும் எதிர்வாதங்கள் செய்தன.

மேற்கண்ட செய்திகள், ஆரியச்சார்புடைய புராணங்களால் அறியப்படும் நிகழ்வுகளாகும். இந்நிகழ்வுகளின் கருவைப் பார்க்கும் போது, குமரிக் கண்டத்துக் கடற் கோளுக்குப் பிறகு தமிழர் வட இந்தியப் பகுதியில் குடியேறியதையும், மனு என்ற தமிழன் தலைமையில், அப்பகுதிகளில் வாழ்க்கைப் பணிகள் தொடங்கப் பெற்றதையும், பன்னிரு பிரசாபதிகள் என்ற தமிழ் அறிஞர் பெருமக்கள் அப்பணிகளில் ஈடுபட்டதையும் அறிய லாம். வடமொழியான சமற்கிருதத்தை. ஒரு மொழியாகவே தமிழர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதை ஆரிய எதிர்ப்பு வன்முறைக்குழு (Terrorist elements belonging to Non-Aryan school were the fanatics who organised squads against these Aryans) என்று வரலாற்றாசிரியர்கள் எழுதுகின்றனர்.[99] எனவே, ஆரியம் தமிழ் மீது திணிக்கப்பட்ட காலத்தே, அதனைக் கடுமையாக எதிர்த்த (வன்முறை) குழுவொன்று வடநாட்டில் இருந்ததை, ஆரியச் சார்பாளர்களே ஏற்றுக் கொள்கின்றனர். இப்பெரும் மொழிப் போரில், தமிழர்களை அமைதிப்படுத்தவே, ஆரியர் களின் தூதுவனாக, அகத்தியன் அனுபப்பட்டிருக்க வேண்டும். இந்த (வன்முறை) எதிர்ப்புக்குழு, கணியக் கூட்டத்தினரே என்றும், அவர்களை ஆசீவர்கள் என்று ஆரியர் அழைத்தனர் என்றும், அவர்களே வடநாட்டில் இலக்கணப் பள்ளிகளை

99. Ibid, p. 300.

அமைத்துத் தமிழை அப்பகுதிகளில் வளர்த்தவர்கள் என்றும், ஆரியக் கதைகளின் வாயிலாகவே அறியமுடிகின்றது. ஆசீவர்கள் அரைகுறை ஆடையுடன் திரிபவர்கள் என்றும், அவர்களைப் பின்பற்றியே பிற்காலச் சமண சமயத் துறவிகளும் அரை குறை யான ஆடைகளை அணிந்தனர் என்றும், சிலர் அம்மணமாகவே திரிந்தனர் என்றும் கூறப்படுகின்றது.

இவ்வாறு சுயம்புவான மனுவுடன் பிரம்மவர்த்தத்தில் வந்திறங்கிய பிரசாபதிகள் நாளடைவில் பலவிடங்களுக்கும் சென்று வாழ்ந்தனர். சிந்துவெளியில் (பஞ்சாபில்) குடியேற்றம் அப்போதுதான் நிகழ்வுற்றது. தொடர்ந்து காஷ்மீர் பள்ளத் தாக்குப் பகுதிகள், சிந்துவைக் கடந்து சென்று நிலைத்த காந்தாரப் பகுதிகள், (ஆப்கானிஸ்தான்), ஈரான், பால்க், மெசபத்தோமியா, காகசஸ் மலைப்பகுதிகள், காஸ்பியன் (கசப்புக்கடல்) கடற்கரைப் பகுதிகள், என நீண்டு, எகிப்திலும் பரவி வாழ்ந்தனர். பாமிர் உயர் நிலப் பகுதிகளிலும் இவர்களே பரவி வாழ்ந்தனர் என்று கூறப்படுகிறது.[100]

மேற்கண்ட செய்திகள், குமரிக்கண்ட அழிவிற்குப் பிறகு, தமிழரின் நாடுகள் தழுவிய பரவல் வரலாற்றை உறுதி செய்வதாக உள்ளன. தமிழர்களின் வரலாற்றை ஆரியர்களின் வரலாறாகவே சொல்லிக் கொண்டனர். சிந்துவெளியினின்றும் மேற்கு நோக்கிச் சென்ற ஆரியர்கள், மீண்டும் சிந்து வெளிக்குத் திரும்பியது வரலாற்றில் முரண்பாடான செய்தியாகும். மேலை ஆரிய மொழிகளில் காணப்பெறும் தமிழ்ச் சொற்கள், மேற்கண்ட பரவலைக் கொண்டிருந்தவர் தமிழரே என உறுதிப்படுத்தும். விவிலிய மாந்தன் நோவாவின் மரபினரே பாபிலோனில் நிலைத்து, ஐரோப்பாவின் வடபகுதிகள், கிரேக்கம், மரசிடோனியப் பகுதிகளில் பரவியவர் என்றும், நோவாவின் வழியில் அவர் தமிழ் மரபரே என்பதும், விவிலியக் கூற்றின் வாயிலாக அறியலாம்.[101] மேலை ஆரிய மொழிகளான செர்மானியம், ஆங்கிலோ சாக்சன், கிரேக்கம், இலத்தீன் ஆகிய மொழிகளில் பொதிந்து கிடக்கும் தமிழ்ச் சொற்கள், தமிழரின் மேலை நாட்டுக் குடியேற்றங்களால் நிகழ்வுற்றவைகளே. தமிழரின் தொன்மைக்கால வரலாறு, ஆரிய வரலாறாகத் திரிக்கப்பட்டது

100. Ibid, p. 295.

101. The New American Bible, Dict. p.

என்பதே உண்மையாகும். ஆரியரின் தொடக்கம், வாழ்ந்த இடம் நடு ஆசிய அல்லது கிழக்கு ஐரோப்பியப் பகுதிகளே என வரலாறு சொல்லும் செய்திகளுக்கும், மனு ஸ்மிருதி கூறும் செய்திகளுக்கும் உள்ள முரண்பாடுகளை நோக்கும் போது, மனு ஸ்மிருதி தமிழர் வரலாற்றையே கூறுகிறது எனத் தெளியலாம்.

பிரம்மாவே மனுவைப் படைத்தார் என்று சில செய்திகளும், பிரம்மாவின் ஆற்றல் மனுவுக்கும் உள்ளதெனவும், பிரம்மாவே மனுவாகப் பிறந்தார் என்றும் பலவாறு கூறப்படுகின்றன. ஏழு மனுக்களில் எந்த மனு எக்காலத்தில் தோன்றினார் என்பதும் குழப்பானதே. மனு நூல்களுக்குப் பின்னால் விளக்கமளித்தவர்களும் மனு என்றே சொல்லப்பட்டிருக்க வேண்டும். சுயம்பு மனு, தர்மசாத்திரத்தைப் பிரம்மாவிடமிருந்தே கற்றான் எனவும், இதனை ரிஷிகள் எனப்பட்ட முனிவர்களுக்குப் பின்னர் கற்றுத் தந்தான் எனவும் மனு நூல் (I:58) கூறுகிறது.[102] பிறகு படைக்கின்ற தொழிலைத் தனது முதன்மையான தொண்டர் பிகுரு முனிவனுக்கு அளித்துவிட்டதாகவும் மனு நூல் கூறுகிறது. 12 தலைப்புக்களில் (அத்யாயம்), 2694 வரிகளில் மனுநூல் இயற்றப்பட்டதாம். இரிக்கு வேதம் சொல்லப்பட்டதே கி.மு. 1000 என முடிவு செய்யப்பட்ட நிலையில், மனு நூல் கி.மு. 29000 ஆண்டுகளில் அல்லது அதற்கு முன்பாக சொல்லப்பட்டது என்பது மிகையானது. கி.மு. 500 ஆண்டுகளில் தான் மனுநூல் எழுதப்பட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இராமாயணம், பாரதப் போர் நடைபெற்ற காலங்களில் மனு நூல் எழுதப்படவில்லை. பாணினி காலத்திலோ (கி.மு. 500) அதற்கு சில ஆண்டுகள் முன்னரோ மனுநூல் எழுதப்பட்டிருக்க வேண்டும். முறையாக தொகுக்கப்பட்டது கி.மு. 200-கி.பி. 100 என்பர்.[103]

இரிக்கு வேதத்தின் 10வது தலைப்பான புருஷ சூத்தம், தொடக்ககாலத்தில் எழுதப்படவில்லை என்பதும், அது கி.மு. 500-300 ஆண்டுகளிலேயே பின்னால் வந்த ஒருவரால் எழுதி இடைச்செறுகலாகத் திணிக்கப்பட்டது என்றும் டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார்.[104] வடமொழிப் புலமை மிக்க அம்பேத்கர்.

---

102. மநுதர்மம், தமிழ் நாடன், குயில் பண்ணை, சேலம், 1987. I:58.

103. Bhishma's Tamilakam, p. 19.

104. சூத்திரர்கள் யார்?, ப. 19.

தொடக்ககால இரிக்வேத நடை (Style)க்கும், புருஷ சூக்த நடைக்கும் பெருத்த வேறுபாடுள்ளதையும் சுட்டிக் காட்டு கிறார். ஆரியச் சமயத்தினும் மூத்த யூத, பாபிலோனிய, எகிப்திய சமயங்களில், உலகின் தோற்றம், மாந்தனின் படைப்பு, உயிரினங் களின் படைப்பு போன்ற செய்திகள் கூறப்பட்டுள்ளன. ஆனால் இதுபோன்ற படைப்பு பற்றிய செய்திகள் வேதங்களில் சொல்லப் படாததால், ஆரியச் சமயத்தை உயர்வான சமயமாகப் பலர் ஏற்கத் தயங்குவதையுணர்ந்த ஆரியர், மேற்கண்ட சமயங்களை விட சிக்கலானதும், புரிந்துகொள்ள இயலாததும், மாந்தப் பண்பிற்கு மாறுபட்டதுமான பல்வேறு கட்டுக்களை இணைத்து, அதனை புருஷ சூக்தம் என்ற பெயரில், இரிக்கு வேதத்தில் இணைத்துவிட்டனர்.

புருஷ சூக்தம் இடைச் செறுகலே என்றும், அவை வேதக் கொள்கைகள் அல்லவென்றும், ரிக்-சம்ஹிதா என்ற இரிக்கு வேதத் தமிழ் நூலை எழுதிய சிவத்தியா நாநந்த மகரிஷி கூறு கிறார் “ஒரு சில வேத ஸூக்தங்களை, புருஷ ஸூக்தம், ஸ்ரீ ஸூக்தம், பஞ்சருத்ரியம் என வலிந்து பொருள் படுத்திக் கூறித் தங்கள் தங்கள் மதங்களைப் பிடிவாதமாக சாதிக்கலாயினர். ஆனால் உண்மையான வேத தர்மம் அவையல. இவ்வுண்மையை யறிந்த வேறு சிலர், வேதத்தையே வேண்டாமெனக் கைவிட்டுப் பிரபந்தங்களையும், திருமறைகளையும் மட்டுமே வேதமாகக் கொள்ளத் தலைப்பட்டனர்.”

மேற்கண்ட செய்தியில், புருஷ சூக்தம் சொல்லும் படைப்பு பற்றிய கொள்கைகளும், சாதிப் பிரிவினைகளும் உண்மையான வேத தர்மம் அல்ல எனப் பலர் அன்றே வெளிப்படுத்தினர் என்பதை மகரிஷி ஒப்புக்கொள்கிறார்.

இரிக்கு வேதத்தின் பத்தாவது மண்டலம், 90ஆவது பகுதி யினின்று தொடங்கும் புருஷ சூக்தம் பற்றியே செய்திகள்.[105]

1. புருஷா என்போன் 1000 கண்கள், 1000 கால்கள் (2000 கால்கள் எனச் சொல்லியிருக்கலாம், அதுவே பொருத்த மாயிருந்திருக்கும்) கொண்டிருந்தவன். ஒவ்வொரு பக்கத் திலும் பத்துப்பத்து விரல்களை விரித்து அதற்குள் அடக்கி வைக்கப்பட்டுள்ள பரந்த இடமே இவ்வுலகமாகும்.

105. மேலதே, ப. 19.

2. புருஷா எங்கும் நிறைந்துள்ளான். சாவில்லாதவன். உலகிற்கு உணவளிப்பவர் இவனே

3. புருஷாவிடமிருந்து பிறந்தவந்தான் விராஜ். விராஜிட மிருந்தும் புருஷா பிறக்கிறான்.

4. பரந்த அண்ட வெளியில், காற்றலைகளில் மிதந்து கொண் டிருந்த இரிக்கு வேதப் பாடல்களை, முனிவர்கள் தங்கள் ஆற்றலால் ஈர்த்து அதற்கும் பொருள் கொண்டு சொல்லி வைத்தனர். (இந்த ஈர்ப்பாற்றல் சிலரிடமேயிருந்தது என்க)

5. அங்கிருந்தே புரவிகள் தோன்றின. பின்னர் பசுக்கள் ஆடுகள் தோன்றின.

6. கடவுளர்கள் புருஷாவை பல பகுதிகளாகப் பிளந்தார்கள், அவ்வாறு பிளந்த போது, புருஷாவின் வாயினின்று பிராமணனும், கைகளினின்று ராஜன்யாவும் (சத்திரியன்), தொடையிலிருந்து வைசிகனும், பாதங்களினின்று சூத்திரர் களும் தோன்றினார்கள், (பஞ்சமர்கள் எவ்வாறு தோன்றி னார்கள் என்று சொல்லப்படவில்லை.)

7. புருஷாவின் மனத்திலிருந்து நிலாவும், கண்ணிலிருந்து கதிரவனும், வாயிலிருந்து அழரும் (தீ) இந்திரனும், மூச்சி லிருந்து காற்றும் (வாயு) தோன்றின.

8. தொப்புளிலிருந்து காற்றும், தலையிலிருந்து வான்வெளி யும், பாதங்களிலிருந்து உலகும் காதுகளிலிருந்து திசை களும் தோன்றின.

மேற்கண்ட செய்திகளில், நால்வகை வர்ணத்தை (சாதிப் பிரிவுகளை)க் கடவுளே படைத்தார் என்றதும், அப்பிரிவுகளை மாற்ற யாருக்கும் உரிமை அளிக்கப்படவில்லை என்றதும், பிராமணனே அனைத்திற்கும் முதலாமவன் என்று சொன்னதும், சூத்திரனை ஏவல்பணி செய்யும் வேலையாள் என்றதும் உள் நோக்கம் கொண்ட திணிப்பாகும். உலகில் தோன்றிய எந்தச் சமயமும், இவ்வாறு சாதிகளைக் கடவுள் படைத்தார் எனக் கூறவேயில்லை. அவைகள் சாதிகள் பற்றிப் பேசவும் இல்லை. இவ்வாறான புருஷாவின் படைப்புக்கு விளக்கங்கள் மனுஸ் மிருதியில் காணப்படுகின்றன. மனுவின் விளக்கங்கள் புருஷாவின் எண்ணங்களை விடக் கொடுமையானதாகத் தெரிகின்றன.

உலகின் முதல் சட்டதொகுப்பை அறித்தவன் மனு என்று கூறப்படுவதிலும் உண்மையில்லை.[106] கிரேக்க அறிஞர் பிளேட்டோவிற்கு முன்னதாக மனுவின் சட்டம் வெளிவந்திருக்கலாம். பிளோட்டோவின் அரசியல் சட்டத்துக்கும் மனுவின் சட்டத்திற்கும் அடிப்படையிலேயே பெரும் வேறுபாடுகள் உள்ளன. கி.மு. 10000 ஆண்டுகளிலேயே அரசியல் சட்டத் தொகுப்பு நூல்களை தமிழர் அறிவித்திருந்தனர். இறையனார் அகப் பொருளுரை கூறும் ஐம்பத்தொன்பது இடைக்கழகப் புலவர்கள் அளித்திருந்த நூல்களில் எத்தனை நூல்கள் சட்டதொகுப்பாக அமைந்திருந்தனவோ? வியாழமாலை என்ற நூலில், தமிழரின் வானியல் கண்டுபிடிப்புகள் எல்லாம் சொல்லப்பட்டிருக்க வேண்டும். தற்போது கிடைத்துள்ள சட்ட நூல்களில் மூப்புடைய நூலாக, மோயீசன் எழுதிய யூத சமய மற்றும் அரசியல் தொகுப்பு நூலே முதல் சட்ட நூலாக் கொள்ள வேண்டும். எகிப்திய நாட்டு பாப்பிரஸ் சுருள்களின் சான்றுகளின் படி, கி.மு. 1250ஆம் ஆண்டுகளில் யூதர் சட்டம் இயற்றப்பட்டுள்ளது.[107] இந்த யூதர் சட்டத்தில் பல, தமிழரின் வாழ்க்கை முறைகளை கவளிப்படுத்துவனவாக உள்ளன. பல கடவுளர்களை வணங்கி வந்த மக்களிடையே ஒரு கடவுள் வணக்க முறையை முதலில் தோற்றுவித்தவன் மோயீசனே. மோயீசனின் சட்டத்தில் குற்றத் திற்கேற்றவாறு ஒறுப்பு வழங்கப்பட்டுள்ளதேயன்றி, மனுவின் சட்டம் போல் சாதிக்கேற்றவாறு ஒறுப்பு வழங்கப்படவில்லை. மோயீசன் காலத்தில் எகிப்து நாட்டில் அடிமைகளை வைத் திருக்கும் வழக்கு இருந்து வந்தது. அது நாடுகளாலும் அனுமதிக்கப் பட்டிருந்தது. ஏறக்குறைய மனு கூறும் சூத்திரர்கள் போன்ற நிலையை, அடிமைகள் பெற்றிருந்தனர். இச்சூழலில் வெளிவந்த மோயீசன் சட்டத்தில், அடிமைகளிடமும், வேலைக்காரரிடமும் அன்புடன் நடந்து கொள்ளுமாறு அறிவுறுத்தப்பட்டுள்ளது. "நீங்களும் ஒரு காலத்தில் அடிமைகளாயிருந்தீர்கள் (எகிப்து நாட்டில்) என்பதை மறந்து விடாதீர்கள்; எனவே அடிமை முறையை அகற்றுங்கள்," என்று மோயீசன் சொல்வதாக விவிலியம் கூறுகிறது. எனவே, உலகில் தோன்றிய, எழுதப்பட்ட சட்டங்களில் மனுவின் சட்டம் போல், மக்களைப் பிளவுபடுத்தும்

106. Bhishma's Tamilakam, p. 20.

107. The Men and Message of the Old Testament.

இழிவானதொரு சட்டம், எங்குமே இயற்றப்படவில்லை. உரோமர்களின் சட்டங்கள் கூட, உரோம நாட்டுக் குடிகளை உயர்வாகவும், மற்ற நாட்டினரை இரண்டாம் நிலையிலும் நிறுத்தியது.[108] தன் நாட்டுக் குடிகளை எந்தவொரு நாட்டின் சட்டமும், அடிமைகளாக நடத்தியதேயில்லை.

மாந்த நேயமற்ற மனுவின் சட்டத்தை, ஆரியர்கள் தங்களது நலன்களுக்காகவும், தங்கள் எதிர்கால நிலைப்புத் தன்மைக்காக வும் எழுதிக் கொண்டனர். மக்களிடையே, ஒவ்வொரு மாந்த னுக்கும் ஒவ்வோர் முறை ஒறுப்பு (தண்டனை) என்பது, மனுவின் சட்டத்தை நீக்கி உலகில் எங்கும் காணவியலாது.

மனுவின் 'மாந்த நேயமற்ற சட்டத்திற்குச் சில எடுத்துக் காட்டுகளாவன:

**I பிராமணன்**

1. பிராமணன் பிரம்மாவின் தூய்மையான முகத்திலிருந்து தோன்றியவன். அவன் பிறவியிலேயே வேதங்கள் பெற்றவனா கிறான். படைப்புகளில் மேலானவன் அவனே.[109]
2. பிராமணன் தர்மத்தின் வடிவம்
3. பிராமணன் பிரம்மாவின் படைப்புலகில் காணப்படும் அனைத்துச் செல்வத்தையும் தனதாக்கிக் கொள்ள உரிமை படைத்தவன்.[110]
4. பிராமணன் மற்ற மூவரிடமிருந்தும் (சத்திரியன், வைசியன், சூத்திரன்) பெறுகிற உணவு, உடை, பொருள் மற்றெதுவா னாலும், அவன் தன்னுடையதைத் தான் அவர்களிடமிருந்து பெறுகிறான். ஏனெனில் அம்மூவரும் பிராமணனின் உடைமையை வைத்துத்தான் வாழ்ந்து வருகின்றனர்.[111]
5. பிராமணன் சாத்திரங்கள் (கல்வி) கற்கலாம், கற்பிக்கலாம். மற்ற மூவரும் அத்தொழிலைச் செய்யக் கூடாது.[112]

---

108. சூத்திரர்கள் யார், முன்னுரை.

109. மனுதர்மம், II : 77.

110. II : 83.

111. II : 84.

112. II. 85.

6. பிராமணனிடத்தில் தான் மற்ற மூன்று வகுப்பாரும் தத்தம் கடமைகள் என்னவென்று கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.[113]

7. பிராமணன் உண்ணுவதை யாரும் பார்க்கக் கூடாது. கோழி, நாய், பன்றி, சண்டாளன், விலக்கான பெண் ஆகியோர் காணாதபடி காவல்புரிய வேண்டும்.[114]

**பெண்களின் பற்றிய சட்டங்கள்**

1. கற்புடைய பெண்ணுக்குக் கணவனே கண் கண்ட தெய்வம். கணவன் நற்குணம் அற்றவன் எனினும், இழிந்த நடத்தை யுடையவன் எனினும், பரத்தையோடு ஒழுகினவன் எனினும், அவளுக்கு அவனே தெய்வம்.[115] *(VI :41)*

2. கணவன் இறந்து போனால், காய் கனி கிழங்கு புல்லுணவு இவைகளை உண்டு அவள் காலம் கழிக்க வேண்டும்.[116] *(VI : 44)*

3. மறுமணம் செய்து கொள்ளாதவளே கற்புடையவள்[117] *(VI : 50)*

4. மனைவி இறந்து போனால், ஆண் மறுமணம் செய்து கொள்ளலாம்[118] *(VI : 54)*

5. பிராமணப் பெண்ணை சூத்திரன் புணர்ந்ததால் அவனது ஆணுறுப்பை வெட்டுக.[119] *(IX : 301)*

**சூத்திரர்கள் பற்றிய சட்டங்கள்**

1. பிராமணர்களுக்குத் தொண்டு செய்வதே சூத்திர தர்மம் ஆகும். சூத்திரர்க்கு அதுவே மோட்சம் செல்லும் வழி.[120] *(X : 276)*

2. சூத்திரர் உயர் வருவணத்தாரை தாழ உரைக்கலாகாது. அவருக்குத் தற்பெருமை கூடாது.[121] *(X : 278)*

---

113. III : 13.
114. IV : 131.
115. VI : 41.
116. VI : 44.
117. VI : 50.
118. VI : 54.
119. IX : 301.
120. X : 276.
121. X. 278.

3. சூத்திரப் பெண்ணை வைப்பாட்டியாக பிராமணன் வைத்துக் கொள்ளலாம். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைக்கு, வைப்பாட்டியான சூத்திரப் பெண்ணின் கணவன் சொத்தில் பங்கு கொடுக்க வேண்டும்.[122] *(X : 155)*
4. சூத்திரன் சூத்திரப் பெண்ணைதான் மணக்க வேண்டும். பிராமணன் நான்கு வருணத்துப் பெண்களையும் மணக்கத் தடையில்லை[123] *(X :149)*
5. பிராமணப் பெண்ணை சூத்திரன் வலிந்து கூடினால் அவனுக்கு மரணத் தீர்ப்பு வழங்க வேண்டும்[124] *(IX :305)*

மேற்கண்ட செய்திகள், மனுத் தொகுப்பிலுள்ளவைகளில் சிலவே. இம்மனுச் சட்டங்கள் கி.மு. 500 முதல் இன்று வரையில் இந்திய மக்களின் வாழ்க்கையில் பின்னிப் பிணைந்துவிட்டன. கடவுள் முன்னால் மக்கள் அனைவரும் சரிநிலையில் உள்ளவரே என்று எல்லாச் சமயங்களும் சொல்கின்றன. மக்களிடம் இவ்வாறான வேறுபாடுகள் காட்டப்படுவதை கடவுள் ஏற்றுக் கொள்வதில்லை என்றும் கூறுகின்றன. ஆனால் நடைமுறையில் அவ்வாறு இல்லை. மனுசட்டம் நடைமுறைப்படுத்தப்பட்ட போது. அச்சட்டங்களை புத்த சமண சமயங்கள் கடுமையாக எதிர்த்தன. ஆசீவகர்கள் என்ற கணியத் துறவிகளும் எதிர்த்தனர். இவ்வெதிர்ப்புகளுக்குக் கரணியங்கள் பலவிருந்தன.

1. மனுச்சட்டம் ஒரு நாட்டிலுள்ள மக்களை இனம் பிரித்து, அவர்களின் ஒற்றுமையைக் குலைக்கிறது.
2. மக்களின் உயர்ந்தோர் பிராமணரே என்றும், உலகிலுள்ள அனைத்துச் செல்வங்களும் அவர்களுக்கு உரியதே என்றும், எந்த வேளையிலும், யாரிடமிருந்தும், எப்பொருளையும் அவர்களைக் கேளாமலேயே பிராமணர் எடுத்துக் கொள்ளலாம் என்பது உழைக்காமல் உண்ணும் தந்திரமாகவே உள்ளது.
3. ஏழுபிறப்பு உண்டென் என்பதும், அப்பிறப்புகளில் பிராமணனைத் தொழாதவன் சூத்திரனாகவே பிறப்பான் என்பதும், சூத்திரனைச் சூத்திரனாகவே வைத்திருக்கவே மனுசட்டங்கள் இயற்றப்பட்டன என்பதும் தெளிவு.

---

122. X : 155.

123. X : 149.

124. IX. 305.

இம்மனுச் சட்டக்களைப் போற்றி, பிற்காலத்தில் வந்த ஆரியச் சார்புடையோரும் ஆரியரும் மக்களிடையே கருத்துப் பரப்பினர். மனுவின் சட்டங்களைப் பயன்படுத்தி மேல் வகுப்பார், சூத்திரரைப் கொடுமைப் படுத்தியதாக இது வரையில் வரலாற்றில் எந்த செய்தியும் சொல்லப்படவில்லை என்பது ஆரிய சார்பாளரின் கருத்துரைகளாகும். கி.பி. 1700 முதல் 1857 வரை ஆங்கிலேயர்கள் வைத்திருந்த குறிப்புகளில், சூத்திரர்கள் மேல் சாதிக்காரர்களால் கொடுமைப் படுத்தப்பட்டதாக, அவர்கள் ஏதும் குறித்து வைக்கவில்லை என்றும் உரைத்தனர்.[125] கிறித்துவ சமயத்தை இந்தியாவில் பரப்புவதற்காக வந்த சேசு அவையின் ஊழியர் அப்துபோ (Abbe Dubois) என்பவர் தனது Hindu Manners, Customs and Ceremonies என்ற நூலில், "இந்து சமயத்திலுள்ள சாதிப்பிரிவுகள், அச்சாதிப்பிரிவினரிடையே மகிழ்ச்சியைத் தூண்டியுள்ளது. நாட்டில் தொழில் வளரவும், நாடு முன்னேறவும், காட்டு மக்கள் வாழ்க்கை முறையை (Barbarism) மாற்றியமைக்கவும் இந்து சமயச் சட்டங்கள், இந்திய நாட்டிற்கு உறுதுணையாய் நிற்கின்றன," என்று எழுதுகிறார்.[126] இக் கூற்று நாட்டின் உண்மை நிலையை உணராமல் எழுதப்பட்டதாகும்.

எடுத்துக்காட்டாக, தமிழகத்துக்கு கி.பி. 14, 15, 16, 17 நூற்றாண்டுகளில் வந்த கிறித்துவ விடையூழியர் (Missionaries), தங்களது சமயக் கருத்துக்களைத் தமிழில் மொழி பெயர்க்க, தமிழகத்துப் பிராமணர்களையே நாடினர். தமிழ் மொழியில் உள்ள விவிலியம் கூட, பிராமணர்களால் மொழி மாற்றம் செய்து தரப்பட்டதேயாகும். பிராமணர்கள் தங்களின் ஆரியப் பற்றைத் தமிழ் மொழியின் மீது திணித்து, விவிலியத்தை எழுதிக் கொடுத்தனர். இவ்வாறான தொடக்ககாலத் தமிழ் விவிலியம் 60 விழுக்காடு வடசொற்களையும், 40 விழுக்காடு தமிழ்ச் சொற்களையும் கொண்டதே. இதே விவிலியத்தை இன்றும் கூட சில கிறித்துவ அவையினர் பின்பற்றி வருகின்றனர். இந்த விவிலியம் தற்காலத் தமிழ் நடைக்கு முற்றிலும் மாறுபட்டது. அதுபோன்றே, கிறித்துவ சமயத்தின் மன்றாட்டுகளும் (Prayers), பிராமணர் களால் தமிழ்ப்படுத்திக் கொடுக்கப்பட்டவைகளே. இவர்களுக்கு நல்ல ஊதியம் கொடுக்கப்பட்டதால், மொழி மாற்றப் பணிகளைச் செய்து கொடுத்தனர். எடுத்துக்காட்டாக,

---

125. Bhishma's Tamilakam, p. 27.

126. Ibid.

“பரலோகத்தில் இருக்கிற எங்கள் பிதாவே! உம்முடைய நாமம் அர்ச்சிக்கப்படுவதாக! உம்முடைய ராஜ்யம் வருக! உமது சித்தம் பரலோகத்தில் செய்யப்படுவது போல பூலோகத் திலும் செய்யப்படுவதாக! எங்களைச் சோதனையில் பிரவேசிப்பி யாதேயும்!”

மேற்கண்ட தமிழை, இன்றுள்ள தமிழர்களில் எத்தனை பேர் புரிந்து கொள்ளுவார்கள் என்பது கேள்விக்குறியே! இவ்வாறான மணிப்பிரவாள நடையைப் புரிந்துகொள்ள இயலாதோர், விவிலியத்தைப் படித்தால் ஒன்றுமே புரியவில்லை என்பர். மேற்கண்ட மன்றாட்டு (Prayer), விவிலியத்தில், இயேசுக் கிறித்துவால், தனது தொண்டர்களுக்குச் சொல்லப்பட்டது. உலகெங்கிலும் உள்ள கிறித்துவர்கள், தங்கள் தங்கள் மொழியில் இதனை மொழிபெயர்த்து வழிபட்டு வருகின்றனர். தமிழர் மட்டுமே, இவ்வாறான தமிழில் வழிபட்டு வருகின்றனர். இதற்கு மாற்றாகத் தற்போது, சில கிறித்துவ அவையினர், புரியக் கூடிய தற்காலத் தமிழிலும் நடை முறைப்படுத்தி வருகின்றனர். தமிழி லிருந்து தமிழ் மொழி பெயர்ப்பு இதோ,

“விண்ணகத்திலுள்ள எங்கள் தந்தாய்! உமது பெயர் எங்கும் புகழப் படுவதாக! உமது விண்ணரசு இங்கு வரட்டும்! உமது எண்ணம் விண்ணகத்தில் (நீங்கள் நினைத்தபடியே) நிறை வேற்றப்படுவதுபோல், மண்ணகத்திலும் நிறை வேற்றப்படுவ தாகுக! எங்கள் எண்ணங்களைத் தீயவழிகளில் செல்லாமல் காத் தருளும்,” என்றவாறும் தமிழ்மொழி சிறப்பிக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் இன்று பலதமிழ் மொழிகள் பேசப்படுகின்றன. நெல்லைத்தமிழ் ஓரளவுக்குச் சரியான தமிழாகவும், சென்னைத் தமிழ், தமிழுக்கு இழுக்காகவும் உள்ளன. இவையின்றி பிராமணத் தமிழ் ஒன்றும் உள்ளது. இது தமிழைக் கடித்துக் குதறி சின்னா பின்னமாக்கிவிட்டது. பிராமணர்கள் உருவாக்கிக் கொடுத்ததே கிறித்துவத் தமிழ் எனப்படும். சர்வேசுரனுக்கு ஸ்தோத்திரம், கர்த்தர் ஸ்துதிக்கப்படுவாராக போன்ற சொற்கள் எல்லாம் பிராமணர்கள், கிறித்துவர்களுக்குக் கற்றுக் கொடுத்தவைகளே. இவைகள் இக்காலத்து வழக்கில் மாறுபட்டுள்ளன என்பதற் காகவாவது, கிறித்துவ அவையினரால் தமிழ்ப்படுத்தப் பட வேண்டும். தமிழர்கள் எந்தச் சமயத்திலிருந்தாலும், தமிழால் தங்கள் தெய்வத்தைத் தொழட்டும் என்பதே தமிழுணர்வுடன் சொல்லப்படும் வேண்டுகோளாகும்.

கிறித்துவ விடையூழியர்களை, பிராமணர்கள் தங்கள் மொழிநடைக்குத் திருப்பிவிட்டதும், அம்மொழி பெயர்ப்பு களும் பல இடங்களில், கிறித்துவ மெய்யியல்களுக்குப் புறம் பான பொருளைத் தருவதும், கிறித்துவர்களாலேயே அறிந்து கொள்ளப்படவில்லை என்பதை தமிழ் கற்ற வெளிநாட்டுத் துறவி வீரமாமுனிவர் வெளிப்படுத்துகிறார். பிராமணர்களைப் பற்றியும், அவர்களின் சூது எண்ணங்களையும் வீரமாமுனிவர் ஒருவரே புரிந்து கொண்டிருந்தார் என்பது சதுரகாரதி என்னும் அகர முதலிக்கு அவர் எழுதிய முன்னுரையிலிருந்தே தெளிவாகின்றது.

வீரமாமுனிவரின் முன்னுரையைப் படியுங்கள்:[127]

“ஆகையால், இவர்களின் (ஆரியத்) தெய்வங்கள், புராணங் கள், கலைகள், விஞ்ஞானம் பற்றி ஒருவர் முற்றிலும் அறியா திருந்தால், அறிவில் ஓர் ஐயமும் இல்லாமல் இருந்தால், இந்த உயர்மொழியை (தமிழை)ப் பற்றி ஒன்றுமே தெரியாதிருந்தால், இந்நாட்டு மக்களையே நம்ப வேண்டியிருக்கும். இவர்கள், குறிப்பாக அந்தணர்கள் (பிராமணர்கள்), தங்களுக்கு ஒன்றும் தெரியாது என ஒத்துக்கெள்ள மாட்டார்கள். சிறிதும் தயங் காமல் ஆடம்பர ஒலி கொண்ட சொற்களை அளந்து பார்த்து, தங்கள் மனதில் தோன்றும் முதற் சொற்களை, அவை உண்மைக் குப் புறம்பாக இருந்தாலும், முழு அதிகார அரியணைக் கூற்றாகக் கொடுப்பதற்கு அஞ்சமாட்டார்கள். இக்கூற்றுகள் எத்தனை பொய்யானவை என்பது, அவர்களுடைய ஆசிரியர்கள் நூல் களை இங்குமங்கும் படிக்கும்போது தெளிவாகத் தெரியும்.

பழந்தமிழர்கள் கடவுள் பற்றியும் நற்பண்புகள் பற்றியும் உண்மையில் மிகச் சிறப்பாகப் பேசியுள்ளனர். ஆனால் (அந்) நூல்கள் செந்தமிழ் நடை தாங்கியிருக்க, செந்தமிழை முற்றிலும் அறியாதவர் என்ன செய்ய இயலும்?

இந்தியர்கள் (தமிழர்கள்) பகுத்தறிவின் காரண காரிய முறைக்கு இசைவதை விட, பெரியோர் நூலின் பிரமாணங் களுக்கு இசைவு தருவர். யாரையும் நம்ப வைக்கும் உறுதியான வழி, நூல்களிலிருந்து மேற்கோள் கொடுப்பதாகும்.

---

127. சதுரகராதி முன்னுரை.

இறுதியாக, மிகப்பல வார்த்தைகள் வடமொழியிலிருந்து கொண்டு வரப்பட்டுள்ளமையால், வடமொழி நூல்களை நுட்பமாக ஆய்ந்து, தற்செயலாகப் புகுந்த தவறுகளை, உண்மை ஒழுங்குக்கு ஏற்கத் திருத்தவும், அதே (வடமொழிக்) கருவூலத்தி லிருந்து இயன்ற அளவு மிகப்பல சொற்களை எடுக்கவும், அதனால் இந்தத் தமிழ்க் கருவூலத்தை வளம் பெறச் செய்யவும் முயன்றுள்ளேன்."

மேற்கண்ட வரிகள் வீரமாமுனிவரால், சதுரகராதிக்கு முன்னுரையாக உரை நடை வடிவில் எழுதப் பட்டவைகளாகும். தமிழ் மொழி பற்றியும், வடமொழி பற்றியும், தமிழர்களின் நம்பிக்கைகள் பற்றியும், பிராமணங்களின் எண்ணங்கள் பற்றி யும் தெளிவாக விளக்குகிறார். வீரமாமுனிவர், பிராமணர்களைப் புரிந்து கொண்ட அளவில் ஒரு சிறு பகுதியும் கூடத் தமிழறிஞர் களால் புரிந்து கொள்ளப் படவில்லை. பழைய நூல்களில் மேற்கோள்களுக்கு மட்டுமே தமிழர் ஒப்புதல் தருவர் என்ற மனப் போக்கைப் புரிந்து கொண்ட ஆரியர், தங்களது வேதங் களையும், புராணங்களையும், தமிழர்களுக்கு எதிரான கருத்துக் களையும், தங்களின் நூல்களினின்றே காட்டித் தமிழரை ஏமாற்றிவிட்டனர் என்பதற்கு வீரமானமுனிவரின் எழுத்துக் களே சான்று தருபவைகள் ஆகும்.

மனு நீதி கூறும் சட்டங்கள், கிறித்துப்பிறப்பாண்டுகளி லேயே தமிழகத்தில் நடை முறைப்படுத்தப்பட்டன என்பதை, தமிழ் இலக்கியங்கள் வழியாக அறியமுடிகின்றது. தொல்காப்பியர் காலத்தில் (கி.மு. 700) ஆரியரின் சாதிப்பாடுபாட்டுமுறை தமிழகத்தில் இருந்தது பற்றி, ஆய்வாளர்களிடையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. தொன்மைக் காலத்தமிழகத்தில், வினைகள் வழியில் தொழில் செய்வோர் இருந்தனர் என்பதையும், அத்தொழில் செய்வோர், தம் தொழிலைவிடுத்து வேறு தொழில் செய்யவும் முனைந்தனர் என்பதையும், அவ்வாறு தந்தையின் தொழிலையே மகன் செய்ய வேண்டும் என்று எந்த விதியும் கூறப்படவில்லை என்பதை நோக்கும் போது, தொழில் வழியில் மக்களிடையே பாகுபாடு இல்லை என்பதே தெளிவாகிறது. வணிகத்தொழில் செய்துவந்த சீத்தலைச் சாத்தனின் தந்தைக்குப் பிறகு, ஆசிரியர் தொழிலை ஏற்ற சாத்தனை எந்தச் சட்டங்களும் தடை செய்யவில்லை. அரசர் தொழிலைச் செய்த இளங்கோவடி களும் அவ்வாறே.

அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நான்கு பணிகளைச் செய்தோரே தொல் தமிழகத்தின் மக்கள் ஆவார்.[128] அரசனாக வருவதற்குத் தகுதியும் திறமையும் தேவைப்பட்டதேயன்றி, இந்நால் வகுப்பாரில் யார் வேண்டுமானாலும் மன்னனாக வழியிருந்தது. பிற்காலத்துச் சோழர்கள், வேளாளர் குலத்தைச் சார்ந்தவர்களாகவே அறியப்படுகின்றனர். எனவே, செய்து வந்த பணிகளால், யாரும் எந்தத் தகுதிகளையும் இழந்தவிட வில்லை. மனு கூறும் பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற கொள்கை, தமிழ் முறைக்கு முற்றிலும் மாறு பட்டதாகும். தமிழ் முறையில் இரண்டாம் இடத்தில் இருந்த அந்தணர், ஆரியப் பகுப்பில் முதல் இடத்தைப் பிடித்துக் கொண்டனர். தமிழ் நாட்டில் கூறப்பட்ட அந்தணர் என்போர் ஆரியர் அல்லர். அந்தணர் என்போர் அறவோர் என்று மட்டுமே தமிழ்க் குறள் விளக்கம் கொடுக்கிறது. அறத்தொழில் யாத்தோரெல்லாம் அந்தணர் எனப்பட்டனர். அந்தணர் தமிழ்ச் சொல்லே. தமிழ்ச் சொற்களான பார்ப்பான், ஐயன், அந்தணன், மேலோன், உயர்ந்தோன், மறையோன் என்ற பெயர்களைப் பிற்காலத்து ஆரியர் தமக்குரியதாக்கிக் கொண்டு, தமிழ் இலக்கியங்கள் குறிப்பிடும் இப்பெயர்கள் எல்லாம் தங்களைக் குறித்தனவே என்று சொல்லிக் கொண்டனர்.

தமிழ் இலக்கியங்களை யாத்தவர்களில் நக்கீரர், கபிலர் இருவரும் தமிழ்ப் பார்ப்பான்களாக அறியப்படுகின்றனர். மற்ற தமிழ் இலக்கியங்கள் தமிழரால் படைக்கப்பட்டவைகளே. இலக்கியங்களைப் படைக்கும் போது, தமது ஆரியக்கருத்து வெளிப்படும் என்பதையுணர்ந்து, இலக்கியம் படைப்பதைத் தவிர்த்து, படைக்கப்பட்ட இலக்கியங்களுக்கு ஆரியப் பிராமணர்கள் உரைகள் எழுதினர். உரைகளில் எப்படி வேண்டுமானாலும் தங்களுடைய கருத்தைத் திரித்துக் கூறிக் கொள்ளலாம் என்பது அவர்களது தந்திரமாகும். இவ்வாறே திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகர் என்னும் பிராமணன், வள்ளுவர் ஏழு பிறவிகளை வலியுறுத்துகிறார் என்றும், ஆரிய தர்மத்தை மேன்மைப்படுத்துகிறார் என்றும், திருவள்ளுவரை, ஆரியரின் கொள்கை பரப்புச் செயலாளர் போன்று, தமிழகத் திற்குக் காட்டிவிட்டார். மனு கூறும் நால்வகை வர்ணம், தமிழ்

128. தொல்காப்பியம், பொருள். பாடல்கள் 1570 முதல் 1582 முடிய.

முறைகளைப் பின்பற்றி மாற்றம் செய்யப்பட்டதே யென்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

பார்ப்பான் என்ற சொல் இனத்தைக் குறிக்காமல், செய்யும் சமயப் பணியைக் குறித்ததே. பார்பனக்குலத்தில் பிறந்த நக்கீரன், சங்குகளை அரியும் தொழிலைச் செய்துவந்தான் என்பதை நோக்குக. சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள,

மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட[129]

என்ற வரிகள், ஆரியர்களைக் குறித்தனவே என்று, ஆரியச் சார்பாளர்கள் கூறுவதும் தவறான விளக்கமாகும். ஆரியர்கள் தமிழ் நாட்டுக்கு வருமுன்னர், தமிழ்நாட்டில் சமயமும், சமய நெறிகளும் இல்லாதிருந்தன போலவும், இவர்களை தமிழகத்துக் குச் சமயத்தை அறிமுகம் செய்தவர் போலவும் கூறுவது, உண்மைச் செய்திகளை மறைப்பனவாகும். கோவலன் வணிக மரபில் தோன்றியவன் என்பதும், இன்றும் அவ்வணி மரபினரான நகரத்தார், தங்களை இந்துக்கள் என அழைத்துக் கொள்ளாமல், சிவநெறியாளர் என அழைத்துக் கொள்வதும், ஆரிய சமயத்தை அம்மரபார் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதையே காட்டும். "வயதில் முதிர்வுற்ற பார்ப்பான், தமிழ்ச் சமய நெறிமுறைகளைக் காட்டிட" என்பதே சிலம்பு வரிகளின் பொருளாகும். தீயை வலம் வருவது என்பதும் தமிழர் முறையே. தீயையே தெய்வமாகக் கொண்டிருந்தவர் தமிழர். தெய்வம் என்ற தமிழ்ச் சொல்லே, தீ என்ற வேர்ச் சொல்லினின்று பிறிந்ததாகப் பாவாணர் கூறு கிறார். தீயிற்கு உரிமையாளர் ஆரியரே என்பது போல் சொல்லப் படுவதும், மறை என்ற சொல்லை, சமயம் என்று உணராது, ரிக், யசூர், சாம, அதர்வண வேதங்களாகத் திரித்துக் கொண் டதும், ஆரியர்களின் கொள்கைகளை உரை எழுதும்போது புகுத்திய, அடியார்க்கு நல்லாரின் திருத்தொண் டாகும்.

ஆரியக் கடவுளான பிரம்மனை, தமிழர்கள் ஏற்றுக் கொள்ளவேயில்லை என்பதற்கு, தமிழகத்தில் ஒரு கோயில் கூட பிரம்மனுக்கு இல்லை என்பதால் அறியலாம். ஆனால் பிரம்மாவைப் பற்றி கடைக்கழக நூல்களே ஏற்றுக் கொண்ட தாக, டாக்டர் உ.வே.சா. விளக்கவுரை கொடுப்பது தவறான சிந்தனையாகும். புறநானூற்றில் வரும் 194வது பாடலை எழுதி

129. சிலப்பதிகாரம், 1:52.

யுள்ள பக்குடுக்கை நன்கணியனார், படுத்தறிவுக் கருத்துக்களை புகுத்தி எழுதியுள்ள அப்பாடலில்,

படைத்தோர் மன்றவிப் பண்பி லாளன்[130]

என்று கடவுளின் பண்பில்லாத தன்மையை விளக்குகிறார். படைத்தோன் என்ற சொல் பிரம்மனைக் குறிப்பதாகவும், தமிழர்களே பிரம்மனை ஏற்றுக் கொண்டார்கள் என்றும், டாக்டர் உ.வே.சா. கூறுவது, அவரது தன்னிகரற்ற தமிழ்ப் புலமைக்கு இடையே தோன்றும் கரும்புள்ளி போன்றதாகும்.[131] கும்பபோணத்திலும், நாலூரிலும் பிரம்மனுக்கு ஒரு வணக்க முறை ஏற்பட்டது. மிகமிகப் பிந்திய நிகழ்வாகும்.

பிள்ளையார் வணக்கமுறை கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகே தமிழகத்தில் அறிமுகப்படுத்தப்பட்டது. கடைக்கழக நூல்கள் யாதொன்றும் விநாயகரைக் குறிப்பிடவில்லை. ஆனால் உ என்று தமிழர்கள் முதலெழுத்தை வரைந்து எழுதத்தொடங்கு வது, பிள்ளையாரை பழங்காலந்தொட்டே, தமிழர்கள் வணங்கி வந்தனர் எனக் காட்டுவதாகவும் டாக்டர் உ.வே.சா. கூறுகிறார்.[132] உ என்ற எழுத்து உலகம் என்ற சொல்லின் சுருக்கமே என்றும், உலகம் என்ற சொல்லையே முதலெழுத்தாகக் கொண்டே தமிழ் இலக்கியங்கள் யாவும் தொடங்கப்பெற்றன என்பதும் மரபு வழிகளாகும். வள்ளுவரும் கூட உலகு என்ற சொல்லைக் கொண்டே தொடங்குகிறார். உகலெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் என்று சேக்கிழாரும்,[133] உலகம் யாவையும் தாமுளவாக்கலும் என்று வீரமாமுனிவரும்,[134]

உலகமுவப்ப என்று திருமுரு காற்றுப்படையும்,[135] நனந்தலை யுலகம் என்று முல்லைப் பாட்டும்,[136] ஓங்கு திரைவியன் பரப்பின் (உலகின்) என்று மதுரைக் காஞ்சியும்,[137] வையகம்

130. புறநானூறு, 194.

131. சங்கத் தமிழும் பிற்காலத்தமிழும், டாக்டர் உ.வே.சா., ப. 67, 74.

132. மேலதே, ப. 65, 135.

133. முதல் வரி, பெரியபுராணம்,

134. முதல் வரி, தேம்பாவணி.

135. முதல் வரி, திருமுருகாற்றுப்படை.

136. முதல் வரி, முல்லைப்பாட்டு.

137. முதல் வரி, மதுரைக் காஞ்சி.

பணிப்ப என்று நெடுநல்வாடையும்,[138] என பல எடுத்துக்காட்டு களைக் கூறலாம். உலகம் என்ற உலகளாவிய மாந்தநேயத்தைத் தமிழன் கொண்டிருந்தான் என்பதையே, மேற்கண்ட இலக்கியங் களின் முதற் சொல்லான உலகம் என்ற சொல் விளக்குகிறது, யாதும் ஊரே யாவரும்கேளிர் என்பதே தமிழன் கொண்டிருந்த மாந்தநேயத்தின் உலகளாவிய கொள்கையாகும். இந்த வரியின் விரிப்புகளே இன்றுள்ள பல சமயங்களின் கொள்கையுமாகும். யாவரும் கேளிர் என்று அனைத்து மக்களையும் தன் பிணைப்பு களாகக் கூறிய தமிழர் நெறிகளும், மாந்தவினத்தைப் பிரித்த மனுவின் சட்டங்களும், ஒன்றுக்கொன்று எதிரானவைகளாகும். யாதும் ஊரே யாவரும் கேளிர் எனக் கூறுவதற்கு, மிக உயர்ந்த பண்பாடும், ஒழுக்கமும், உயிர்கள் பால் அன்பும் பற்றும் வேண்டப்படுவன. இவ்வுயர்ந்த பண்பாட்டு வாழ்க்கை முறை யைத் தமிழர்கள் கொண்டிருந்தனர் என்பதும், ஆரியர்களுக்கு இவ்வாறான பண்பாட்டு ஒழுக்க முறைகள் இருந்திருக்கவில்லை என்பதையுமே மனு நூல் காட்டுகிறது.

இவ்வாறு, உலகம் என்று தமிழர் கொண்டிருந்த மாந்த நேயமே, உ என்ற ஓரெழுத்தால் சுருக்கி எழுதப்பட்டது. இதனைப் பிள்ளையார் சுழி என்று பிற்காலத்தில் கூறியவர்களும், விநாயகர் வணக்க முறையைத் தமிழகத்தில் தோற்றுவித்தவர்களே எனலாம். உ என்ற எழுத்துக்கும் விநாயகருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதும், இதனைச் சொல்லியவர்களுக் கும் தெரிந்தே சொல்லப்பட்டதாகும். தமிழகத்தில் தங்கள் தங்கள் சமயங்களைப் பரப்புவதற்கு எக்காலத்தும் தடையிருந்த தில்லை. யாதும் உரே யாவரும் கேளிர் என்பதை, தமிழகத்துக்கு வந்த புறச் சமயத்தார் சரியாக உணர்ந்து கொண்டிருந்தனர் போலும். தமிழ் மண்ணில், தமிழ் மரபுகளையும், தமிழ் மொழி யையும் அழிக்க நினைக்கும் எச்சமயத்துக்கும், தமிழ் நாட்டில் இடமில்லை என்பதைத் தமிழர்களும் உணர்ந்து கொண்டுள்ளனர். அதனாலேயே, புத்தமும் சமணமும் கிறித்துவமும் இசுலாமும், தங்கள் சமயப் பணிகளோடு, தமிழையும் வளர்த்தனர். **ஆரியச் சமயம் மட்டுமே, தமிழையும் தமிழ்ச் சமயத்தையும் அழித்தது என்பது வரலாற்று உண்மையாகும்** கி.பி. 1932ஆம் ஆண்டில், தமிழ் நாட்டின் ஆரியச்சமயத் தலைவர் ஒருவர், தமிழை நீச பானஷ என்றும், ஆலயங்களில் தமிழைப் பயன்படுத்தினால்,

---

138. முதல் வரி, நெடுநல்வாடை.

ஆலயத்தின் புனிதம் கெட்டுவிடும் என்றும் கூறியதை, தமிழ்ப் பெரியார்கள் பலரும் எதிர்த்த செய்திகளும் உள்ளன. சில ஆய்வாளர்கள், சமற்கிருதத்தை தேவமொழியென்றும், தமிழை பைசாச அல்லது பேயின் மொழியின்றும் கூறினர்.[139] ஆராயாமல் கூறப்பட்ட இது போன்ற செய்திகளை நம்பி, ஆரியச் சமயத் தைச் சார்ந்தோர், தமிழ் மீதும், தமிழ்ச் சமயத்தின் மீதும் தவறான தகவல்களை அளித்து வந்தனர்.

The attempt of some scholars to state that the Sanskrit is the language of gods and Tamil is Paishachi or the language of the demons, is mischievous and misguided. History of Tamilakam.

ஆரியர் அளித்த சட்டங்களால், பிளவு பட்டுப்போன இந்திய மக்கள், அயல் நாட்டுப்படை எடுப்புகளில் இருந்து தங்களைக் காத்துக்கொள்ள இயாலாமற் போயிற்று என்பது மேற்கத்திய வரலாற்றாய்வாளர்களின் கருத்து. இசுலாமியர் இந்நாட்டினர் படை எடுத்ததற்கு பிரித்விராஜ் சௌகான், தனது உறவு முறையின் மன்னர்களாலேயே காட்டிக் கொடுக்கப் பட்டான் என்பது வரலாற்று உண்மையாகும்.

இந்தியாவின் அளவற்ற செல்வம் அயல் நாட்டிற்குக் கொள்ளை போனதற்கும், மனுச் சட்டங்கள் விளைவித்த ஒற்றுமையின்மையே கரணியம் ஆகும். இசுலாமியர் படை எடுப்புக்கும், பின்னர் வந்த ஆங்கிலேயரின் ஆட்சிக்கும், இதுவே அடிப்படைக் கரணியம் என, This was the reason why India was conquered by Muslims and later submitted to British imperialism, உருசிய வரலாற்றறிஞர், செர்கி தோக்கரேவ் (Sergei Tokerev) கூறுகிறார்.[140] இந்தச் சாதி பாகுபாடுகளினின்றும், அடக்கு முறைகளினின்றும் விடுபடவே, ஏராளமான இந்தியர், இசுலாம் மற்றும் கிறித்துவ சமயங்களைத் தழுவினர் என்பதும் வரலாற்று உண்மையாகும். இந்திய விடுதலைப் போரை முன்னின்று நடத்திய பேராயக் கட்சியினர், நான்கு வருணத்தாரையும் ஒற்றுமைப் படுத்தாதவரை, இந்தியாவிற்கு விடுதலை கிடைக்காது என்பதை யுணர்ந்தே, அனைத்து மக்களையும் ஒருங்கிணைத்தனர். 100 கோடி மக்களைக் கொண்ட இந்திய நாட்டில், 200 கோடிக் கைகள் இருந்தும் இந்நாடு முன்னேற்றம் அடையாமல் இருப்

139. Bhistam's Tamilakam, p. 9.

140. History of Religion, p. 177.

பதற்கு, ஆரியரின் சாதி பாகுபாட்டு முறைகளே முதற் கரணிய மாக அமைந்தது என்பது தெளிவு.

தமிழ் இலக்கியங்கள் கூறும் நான் முறைப் பணியாளர்கள், நால்வருணத்தாரினும் வேறுபட்டதாகும். அந்தணர் என்பார் துறவு நிலையை மேற்கொண்டிருந்தது பற்றி அவர்கள் அகப் பொருளால் குறிக்கப்படவில்லை. எனினும் இல்லறம் கண்டிருந் தவர்கள் என்றும் கருதப்பட்டார்கள். மற்ற அரசர், வணிகர், வேளாளர் பிரிவுகளிலும் அறவாழ்க்கை நடாத்தியோர் அந்தணர் என்றே அழைக்கப்பட்டனர். அந்தணர் என்ற வகுப்பார், தந்தை-மகன்-பெயரன் என்றவாறு மரபு வழியாக இருந்திருக்க வில்லை. வேளாளர் மரபார், உழுதுண்பதும், உழுவித்துண்பது மான பணிகளைச் செய்தவர்கள். இவர்கள் வேளிர் என்ற குறுநில மன்னர்களாகவும் இருந்துள்ளனர். எனவே வேளாளருக்கு உழவுப் பணியே ஒதுக்கப்பட்டது எனக் கொள்ளவும் இட மில்லை. வேளாளர் மன்னர்களாகப் பணியாற்றியது போன்றே, புலமை பெற்றிருந்தோரும் அறிவர்களும் அந்தணர்களாகவே கருதப்பட்டு, மன்னருக்கும் மற்றவர்க்கும் அறிவுரைகள் வழங்கி வந்தனர். அக்காலத்து வணிகர்கள் ஒரு கூட்டமைப்பாகவும், நாடுதழுவிய தொடர்புகள் கொண்டவர்களாகவும் (National network) இருந்தார்கள். இவ்வாறான அமைப்பே, அவர்களுக்குப் பலவிடத்துப் பொருட்களும், பல்வேறு இடங்களுக்கு அனுப்பப் பட வாய்ப்பாக இருந்தன. வேளாண் தொழில் இல்லாத காலத்து, உழவரும் கூட வணிகர்களாயினர். போக்குவரத்து பெருமளவில் இல்லாத அக்காலத்து மாட்டு வண்டிகளில் பொருட்களை எடுத்துச் செல்ல, உழவு மாடுகளே பயன்பட்டன. அவ்வாறான பணிகளை உழவர்களே செய்தனர். மாசாத்துவான் போன்ற வணிகர்களும், மாநாய்கன் போன்ற கடல் வழி வணிகர்களும், இருந்தமை பற்றிய செய்திகளையும் இலக்கியங்கள் கூறுகின்றன.

இவ்வாறான தொழில்களைச் செய்தோரையே ஆரியர் வர்ண முறைகளாக அறிமுகம் செய்தனர். தமிழகத்தின் தொழில் வடிவமே, ஆரியத்தில் வர்ணவடிவமாக மாற்றப்பட்டது என்பது ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. பாவாணர் கூறும் விளக்கப்படி, வர்ணம் என்ற சொல்லும் தமிழ் மூலத்தையும் கொண்டுள்ளதைக் காணமுடிகிறது.

வள்-வண். வளை-வனை. வண்-வண்ணம் = நிறம்.

வான்சுதை வண்ணங் கொளல் – திருக்குறள் 714

வள்-வர்-வரி-வரிதல் = எழுதுதல்.

புன்னை யணிமலர் துறைதொறும் வரிக்கும் – ஐங்குறுநூறு 117

வரி + அணம் = வரணம் = எழுத்து, ஓவியம், நிறம், நிறம் பற்றி நான்கு நிலை. வண்ணம் என்ற சொல்லுக்குரிய பொருள் கள், வரி-வரணம் என்ற சொற்களுக்கும் உண்டென்று பாவாணர் கூறுவதை நோக்குக.[141]

பிராமணன்-வெண்ணிறமும், சத்திரியன்-செந்நிறமும்,

வைசியன்-பொன்னிறமும், சூத்திரன்-கருநிறமும் கொண்டவர்கள்

என்று பற்றிய நால்வகை வண்ணங்கள்-சதுர்வர்ணம் என்று சொல்லப்பட்டது. நிறம் என்ற மற்றொரு தமிழ்ச் சொல், நிரங்-ரங் என்று தற்போது இந்தியில் திரிபுபட்டுள்ளது.

டாக்டர் அம்பேத்கர், மனுதர்மம் பற்றிய தனது கருத்தில் இவ்வாறு எழுதுகிறார்.[142] "இது போன்ற தகடுதத்தம் எந்த ஒரு மத புத்தகத்திலும் இருப்பதைக் காணமுடியாது. இது ஒரு தில்லு முல்லும், ஒரு ஏமாற்று வேலையுமன்றி வேறென்ன? இருக்கின்ற நிலையைச் சிறப்பம்சமாக்கி, அதில் சமத்துவமின் மையை அடிக்கடி கூறுவதைத் தவிர, வேறு பொது நலனொன்று மில்லாத இச்செயல், ஒரு பெரிய அப்பட்டமான சுயநலச் சூதாகுமன்றோ?"

○○○

---

141. தமிழர் வரலாறு, பக். 190-191.

142. சூத்திரர்கள் யார்?, ப. 35.

10

## மா பாரதம்

துஷ்யந்தன் என்ற வடபுல மன்னனின் மகன் பரதன் என்பான், வழிவந்த கௌரவ பாண்டவர்களின் போர் நடவடிக்கைகளைப் பற்றிய செய்தியைக் கொடுப்பது மகாபாரதம் எனப்பட்டது. பரத்-பாரத் (Bharat) என வடமொழிச் சொல்லின் தமிழ் ஒலிப்பே பரதம், பாரதம் எனப்பட்டதாகக் கூறுவர். பரதன் என்பது தமிழ்ச் சொல்லே என்றும், சிந்துவெளியில் வாழ்ந்திருந்த ஒருவரின் பெயரைக் குறித்ததாகவும், சிந்துவெளி அகழ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட சொற்களில் பரதன் என்றும், பரவன், பன்னன் என்றும் எழுதப்பட்டுள்ளதாக, சிந்துவெளி எழுத்துக் களை ஆய்வு செய்து, அவைகளுக்குப் பொருள் கூறிய டாக்டர் இரா. மதிவாணன் குறிப்பிடுகிறார்.[143] பர-பரத்தல் என்ற தமிழ் மூலச்சொல், அகன்றிருத்தல்-விரிந்திருத்தல் என்ற பொருளைத் தருவதாகும். பரந்த கடலில் மீன்பிடிப்போர், பரவர் என்றும், பரதவர் என்றும் சொல்லப்பட்டனர். பரத்தல் என்ற சொல்லி னின்றே பார்-உலகம் என்ற சொல்லும் நீண்டது. பார் = பார்க்கும் பரந்தவெளி என்றும் பொருள் கொள்ளலாம்.

பரசு = வாய் விரிந்து அகன்றிருந்த கோடரி. பரசுராமன்

பரட்டை = அகன்ற மயிரை விரித்த நிலையில் உள்ள தலை.

பரணி = ஒரு பொருளைப் பற்றி விரிவாகப் பாடப் பெறும் நூல்.

பரதம் = அகன்ற இடத்தில் ஆடப்பெறும் நாட்டியம்.

பரதன் = அகன்ற நாட்டை ஆண்ட மன்னன். இராமனின் தம்பி.

பரத்தை = பலராலும் விரும்பப்படும் பெண்.

அகன்ற வடிவில் உள்ள பூ.

பர + உலகம் = பரலோகம்; விரிந்து பரந்த விண்ணுலகம்.

---

143. Indus script Among Dravidian speakers, Dr. R. Mathivanan.

பரதேசி = பரந்த நாட்டை (தேயம்-தேசம்-தேசி)ச் சுற்றும் துறவி.

பரத்துவாசன் = பரந்த நாட்டில், இடத்தில் வசித்தவன்.

வசி என்பது,

வை-வைத்தல் என்ற வேர்ச்சொல்லினின்றும் திரிந்த வடசொல்லே.

வை-வசி-வாசம் (குடியிருப்பு)-ஸ்ரீநிவாசன் என்றவாறு திரிந்தது.

பரதன், பாரதம், பாரத நாடு, பாரத தேசம் அனைத்தும் தமிழ் மூலச் சொற்களின்றும் பிறந்தவைகளே. மா பாரதம் என்பதே மகா பாரதம் என்று திரிந்தது. மா = மகா (வடமொழி) -மெகா (Mega) கிரேக்கம். மெகா சீரியல் (Mega Serial) என்று தொலைக்காட்சிகளில் சொல்லப்படும் ஆங்கிலச் சொல் தமிழ் மூலத்தைக் கொண்டதே. சீர் = ஒழுங்குபடுத்தப்பட்ட, வரிசை யான என்றவாறு பொருள்படும். சீர் செய்தல் = குறைகளைக் களைதல். சீர்ப்பு = வரிசையான பற்களைக் கொண்ட மயிர்ச் சிக்கலை அகற்றும் கருவி. சீர்ப்பு என்ற சொல்லே, சீப்பு என்று சொல்லப்பட்டது. சீர் + இயல் சீரியல் என்பது, ஒழுங்கு படுத்தப் பட்ட உரை நடை. இயல், இசை, நாடகம் என்பதில், இயல் என்பது எழுதப்பட்ட உரைநடைத் தொகுப்பாகும். மாச்சீரியல் என்ற தமிழ்ச் சொல்லே மெகா சீரியல் எனப்பட்டது..

இராமாயணம் போன்றே. மகாபாரதம் நடை பெற்ற காலத்தில் அதனை உறுதிப்படுத்துவதிலும் ஆய்வாளர்களி டையே கருத்து வேறுபாடுகள் உள்ளன. இராமாயணம் கி.மு. 1500-1250 ஆண்டுகளில் நடை பெற்றதாகக் கொண்டால், மகா பாரதம் கி.மு. 1250-1000 ஆண்டுகளில் நடைபெற்றதாகக் கொள்ளலாம் என்பது பெரும்பலான ஆய்வாளர்களின் முடிவு களாகும்.[144] இராமாயணம் முதலில் நிகழ்ந்ததும், அடுத்து பாரதம் நிகழ்ந்ததும் என வகைப்படுத்துவர். இராமாயணம் அது நடைபெற்ற 1500-2000 ஆண்டுகட்குப் பிறகே, தமிழர் களிடத்தில் வந்து சேர்ந்தது. இராமாயணக் கதை, தமிழர்களோடு தொடர்புபடாததே இதற்குக் கரணியம் ஆகும். இராமாயணக் கதையில் சொல்லப்படும் நிகழ்வுகள் தமிழகத்தில் நடைபெற் றிருக்க வாய்ப்புகள் இல்லை என்பதையே இச்செய்திகள் காட்டு கின்றன. கி.பி. 1000 ஆண்டுகளில் தான் கம்பர், தமிழில் இராமா யணத்தை எழுதினார். ஆனால் பாரதக்கதை தமிழ் நாட்டோடு தொடர்புடையது. தமிழ் மன்னர்களும் அதில் பங்கெடுத்துள் ளனர் என்பதாலும், தமிழ்நாட்டு மக்களுக்கு அந்நிகழ்வுகள்

பற்றி அறிந்திருந்ததாலும், பாரதக் கதை முதன் முதலில் கி.மு. 500-300 ஆண்டுகளில், தமிழில் வழங்கப்பட்டது. கடைக்கழகக் காலத்துக்கு முன்பிருந்த பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற புலவர் இருந்தது பற்றிய செய்திகள் கடைக்கழக இலக்கியங்கள் வாயிலாக அறியக் கிடக்கின்றது. பெருந்தேவனார் பாடிய பாரதம் கிடைக்கவில்லை. அந்நூல் அழிந்துபட்டதா அல்லது அழிக்கப்பட்டதா என்பதற்குச் சான்றுகள் இல்லை. பெருந் தேவனாரின் பாரதக் காப்பியத்தில், ஆரியர்கள் பிற்காலத்தில் இட்டுக் கட்டிய கதைகள் இல்லாமல், உண்மை நிகழ்வுகளை அந்நூல் வெளிப்படுத்தியிருக்க வேண்டும் என்றே எண்ணத் தோன்றுகிறது. அந்நூல் மட்டும் கிடைத்திருப்பின், ஆரியர்களின் வரலாறு தெளிவாக வெளிப்பட்டிருக்கும். இதன் கரணியம் பற்றியே இந்நூல் அழிக்கப்பட்டிருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

பாரதப்போர் கி.மு. 1000 ஆண்டுகளில் நடைபெற்றது என்பதைப் பெரும்பாலான ஆய்வாளர்கள் ஏற்றுக் கொண் டுள்ளனர். டாக்டர் ஏ.டி. புசால்கர்[144] (Pusalkar) பாரதப்போர், கி.மு. 1500-1000 ஆண்டுகளில் நிகழ்வுற்றதாகவும், இரிக்கு வேதம் கி.மு. 1000 ஆண்டுகளில் தொகுக்கப்பட்டதாகவும் கூறுகிறார். பாரதப் போரில் ஈடுபட்ட, கௌரவ-பாண்டவர்களுடைய பாட்டனாகிய வியாசன் என்பான், மேற்கண்ட பாரதக் கதையை யும், இரிக்கு வேதத்தையும் தொகுத்தான் என்று கூறுகிறார். ஆர்.சி. மஜூம்தார்[145] (Mujumdar), ஏறக்குறைய இக்கருத்தை ஏற்றுக் கொள்வதோடு, வேதகாலம் கி.மு. 300 வரையில் தொடர்ந்தது என்றும் கூறுகிறார். முதலில் சூத்திரர்கள் காலம் (சிந்துவெளி நாகரிகம்) நிகழ்வுற்று, பின்னர் வேதகாலம் தொடங்கி (கி.மு. 1500-1000) பின்னர் சூத்திரர் காலமே (கி.மு. 700-320) நடைபெற்றதாகவும் கூறுவர். பிற்காலச் சூத்திரர் காலம், தமிழர் வழித் தொடர்புகள் கொண்ட நந்தர்களில் காலமேயாகும். அலெக்சாந்தர் படை எடுப்பு (கி.மு. 326) மட்டும் இந்தியாவில் நிகழ்வுற்றிருக்காவிட்டால், ஆரியர்களுடைய பொய்யான வரலாற்றுக் கணக்குகள் நிலைப்படுத்தப்பட்டிருக்கும்.

---

144. Bhishma's Tamilakam, Introduction.
Bhishma's Tamilakam, p. 1.
145. Ibid.

பரத்துவாசன் என்ற முனிவன், இராமன் இலங்கையிலிருந்து திரும்பிய காலை அவனை அயோத்தியில் வரவேற்றவர்களில் ஒருவனாகச் சொல்லப்படுகிறான். இவனே பாரதப்போரில் முதுபெரும் கிழவனாகச் சொல்லப்பட்டுள்ள துரோணாச்சாரி யனின் தந்தை எனப்படுகிறான். இராமாயண காலத்திலிருந்தவன் தந்தையென்றும், மகாபாரதக்காலத்திலிருந்தவன் மகன் என்றும் கொண்டால், இவ்விரண்டு நிகழ்வுகளுக்குமான இடைவெளி குறைவானதே, தந்தையையும் மகனையும் முதியவர்களாகக் கணக்கில் கொண்டாலும் 100-150 ஆண்டுகள் இடைவெளி என்பதே சரியான சிந்தனையாக இருக்கும். மேலும், இராமனின் இணைகாலத்தவனான பரசிராமன், பீஷ்மருக்கு வில்வித்தையைக் கற்றுக் கொடுத்ததாகவும் கூறப்படுகிறது. எனவே, இராமாயண -பாரத கால இடைவெளி மேற்சொன்னவாறு குறுகியதாகவே இருந்திருக்க வேண்டும்.

ஏற்கனவே குறிப்பிட்டவாறு, பாரதக் கதையில் சொல்லப் பட்டிருப்பவர்களோடு தமிழகத்தில் இருந்தோர் தொடர்பு கொண்டிருந்ததால், இராமாயணம் முந்திய நிகழ்வாயிருந்தும் தமிழர்களால் அறியப்படாமல், பாரதம் அறியப்பட்டிருந்தது. பீஷ்மன் அவன் தந்தை சந்தனு உள்ளிட்ட, பாண்டவர்-கௌர வர்கள் திங்கள் மரபைச் சார்ந்தவராவர். திங்கள் மரபு பாண்டிய ருடையதே. பாண்டவ-கௌரவ மரபு என்பது, வடபுலத்தை ஆண்ட பாண்டியனின் வழிமரபே என்பர். இக்கரணியம் பற்றியே, பாண்டியர்கள், பாண்டவர்கள் பக்கம் நின்று பாரதப்போரில் ஈடுபட்டதாகவும் கூறுவர். பாண்டியருடன் இணைந்து சோழர் களும் பாண்டவர் பக்கமே நின்ற வேளையில், சேரன் மட்டும் நடுநிலை கொண்டு, போர்க்காலங்களில், இரு தரப்பார்க்கும் உணவளித்தான் என்றும் கூறப்படுகிறது. உதியன் சேரலாதன், போர்நடைபெற்ற பதினெட்டு நாளும், இருபக்கத்தார்க்கும் உணவளித்தான் என்று புறநானூறு கூறுகிறது. ஏறக்குறைய இன்று அறியப்பட்டுள்ள செஞ்சிலுவை (Red Cross) என்ற அமைப்பின் பணிகளை, அக்காலத்தில் சேரன் தொடங்கி வைத்தான் எனவும் அறியலாம்.

யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந
வான வரம்பனை நீயோ பெரும
அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ
நிலந்தலைக் கொண்ட பொலம்பூந் தும்பை

யீரைம் பதின்மரும் பொருதுகளத் தொழியப்
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்
– புறநானூறு,[146] 2.

இப்பாடல், சேரனைப் பெருஞ்சோற்று உதியனாகக் காட்டு கிறது. முரஞ்சியூர் முடிநாகராயர் கூறும் இச்செய்தி, பாரதப் போரில் தமிழ் மன்னர்களின் தொடர்பைக் காட்டுகிறது. பாண்டவர்-பாண்டியர் சொற்களின் ஒற்றுமையும்கூட, இவ்விரு மரபுகளுக்கும் இடையேயுள்ள ஒற்றுமையைக் காட்டும்.

கண்ணன் என்ற கிருஷ்ணனைப் பற்றி பாரத காலத்துக்குப் பிறகு வந்த கதைகள், பெருமளவில் புகழ்ந்துரைக்கின்றன. கண் என்ற தமிழ்ச் சொல்லுக்குக் கருமை என்ற பொருளும் உண்டு. உடலில் காயம்பட்ட இடம் கருத்துப் போதலை, கண்ணிப் போதல் என்றும் உரைப்பது தமிழர் வழக்கு. கண்ணனைக் கரியவனாகவே வடமொழி நூல்களும் கூறுகின்றன. கரிய நிறம் கொண்டவர்கள் தாஸ்யூக்களும் இராட்சகர்களுமே என்று ஆரிய வேதங்களும் புராணங்களும் கூடக் கூறுகின்றன. கரு-கருமை என்ற தமிழ்ச்சொல்லே, கிரு-கிருஷ்ணன் என்று வட மொழியில் திரிந்தது. கண்ணன், தமிழரின் ஆயர்குடி மரபில் பிறந்த, வடபுலத்து மன்னனே. இன்றும் வடநாட்டில் யாதவ் என அறியப்படும் மக்களின் முன்னோர் தமிழரே. ஆடுமேய்ப் பவரே ஆயர் எனப்பட்டனர். ஆடு என்ற தமிழ்ச்சொல்லை யாடு என்றும் அழைப்பர்.

பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை யிடைமகன் சென்னி – குறுந்தொகை,[147] 221

யாடு மேய்த்தவர், யாடவர் என்றும் சொல்லப்பட்டனர். யாடவர் என்பதே யாதவர் என்று சொல்லப்படுகின்றது. யாதவ் என்பது வடபுலத்தில் சொல்லப்படுகின்றது. இன்று தமிழகத்தின் ஆயர் குலத்தைச் சார்ந்தவர்களும், வடநாட்டு வழியில், யாதவ் என்ற அடைமொழியைச் சேர்த்துக் கொள்கின்றனர். இது தமிழ்ச் சொல்லே என்பதும், தெற்கிலிருந்து வடக்கே சென்று அது மீண்டும் தெற்கு நோக்கி வந்துள்ளதையும் நோக்குக.

கண்ணன் தமிழகத்தின் ஆயர்குடியில் பிறந்தவன் என்பதால் தமிழரின் வழக்கப்படியே ஏறுதழுவி, கோசலநாட்டு மன்னன்

146. புறநானூறு, 2.

147. குறுந்தொகை, 221.



9

மகள் நப்பின்னையை மணந்தான். அவன் பிறந்த ஊராகக் கருதப்படும் மதுரா என்ற நகரமும், மதுரையின் நினைவாகத் தமிழர்கள் வடபுலத்தில் சூட்டிய பெயரே. வடமதுரை என்ற சொல்லே நாளடைவில் மதுரா என்று நிலைத்தது. மதுரையில் மன்னனாக ஆண்டுகொண்டிருந்த காலத்தில், துவாரகை (துவரை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்று பாவாணர் கூறுகிறார்) எனப்படும் குசராத் பகுதியை, காளயவனர் எனப்படும் கடற் கொள்ளைக்காரர்கள் அடிக்கடி தாக்கி வந்ததால், அவர்களின் இந்திய நுழைவையும், கடற்கொள்ளைச் செயல்களையும் தடுத்து நிறுத்த வேண்டி, துவாரகைக்குத் தனது தலை நகரையே மாற்றிக் கொண்டான்.

காள யவனர் எனப்படுவோர் யாவரென்ற செய்தி தெளி வாக்கப்படவில்லை. யவனர் என்போர் யாவனர் என்பாரே என்பதையும், அவர்கள் கிரேக்கர்கள் என்பதையும் அறியலாம். பின்னர் இவர், இந்தோ-ஆரியர் என அறியப்பட்டனர். இவர் களைக் கிரேக்கர் என அறிவதைவிட, கிரேக்கத்துக்குத் தெற்கே யுள்ள கரட்டுத் தீவு (Crete island) என்ற நண்ணிலக் கடல் தீவின் மக்களே என அறியலாம். இவர்கள் எகிப்திலும், பாலத்தீனத் திலும் குடியேற முயன்றவர்கள். எகிப்தில் விரட்டியடிக்கப் பட்டனர். பாலத்தீனத்தின் மேற்குக் கடற்கரைப் பகுதியில் (காசா-Gaza) சில குழுக்கள் போராட்டத்திற்கிடையே குடி யமர்ந்தன. மேலும் பல குழுக்கள் தங்குவதற்கு நாடின்றி, கடல் வழியே அலைந்து கொண்டிருந்தனர். சாலமோன் மன்னன் (கி.மு. 10ஆம் நூற்றாண்டு) காலத்தில், இத்தகையோர், அம்மன்ன னுக்குத் தொல்லைகள் கொடுத்து வந்தனர்.[148] சாலமன் மன்ன னுக்குக் கீழை நாடுகளான இந்தியா, இந்தோனேசியா போன்ற நாடுகளினின்றும் கப்பலில் சென்று பொன், வெள்ளி, நறுமணப் பொருட்களை, இக்கொள்ளையர் ஓபீர் (Ophir) என்ற செங் கடல் துறைமுக நகருக்கு அருகில் கொள்ளையிட்டனர். இக் கொள்ளையரைக் கடுமையாக ஒறுத்த சாலமன் மன்னன், அவர்களை செங்கடல் பகுதியினின்றும் விரட்டியடித்தான் என்ற செய்திகளை விவிலிய விளக்கங்கள் கூறுகின்றன. இவ்வாறு விரட்டியடிக்கப்பட்ட இக்கொள்ளைக் குழுவினர், கிழக்குப் பகுதியில் சுற்றித் திரிந்தனர். அரபுக்கடல் பகுதியில் இவர்கள் அடிக்கடி கொள்ளையிட்டு வந்தனர். இவர்களே துவாரகைக்

148. Bible, O.T. I Kings, 9:26, 10:11, 12:2.

கருகில் கடற்கொள்ளையில் ஈடுபட்டவர்கள். இறுதியில் துவாரகை நகரில் உட்புகவும் திட்டமிட்டனர். இவர்களை முறியடிக்கவே, கண்ணன் தனது தலைநகரைத் துவாரகைக்கு மாற்றினான். காள யவனர் என்று கூறப்படும் இக்கொள்ளைக் கூட்டத்தார், கண்ணனால் முற்றிலுமாக முறியடிக்கப்பட்டு விரட்டப்பட்டனர். (காளயாவனர் = கறுப்பு யாவனர்).

இச்செய்திகளை ஒற்றுமைப்படுத்திப் பார்க்கும்போது, கண்ணனுடைய காலமும், இசுரேல் நாட்டு மன்னன் சாலமனுடைய காலமும் ஒற்றுமைப்படுகின்றன. கண்ணனும் சாலமனும் இணை காலத்தவரே என்பதில் குழப்பங்களும் இல்லை எனலாம் இருவருக்கும் இடையூறுகளைக் கொடுத்து வந்த கால யவனர்களை அழித்ததில், கண்ணனும் சாலமோனும் கூட்டாகவும் செயல்பட்டிருக்கலாம். இக்கால அளவுகளில் ஒற்றுமைப்படும், உதியன் சேரலாதன் என்ற சேரமன்னனே, சாலமன் எருசலேம் நகரில் உருவாக்கிய தேவாலயத்திற்கும், அரண்மனைக்கும் தேவைப்பட்ட தேக்கு மரங்களை, அனுப்பி வைத்தவன் எனக் கொள்ளலாம். இவைகள் ஃபோனீசியக் கப்பல்கள் மூலமாக, ஓபீர் துறைமுகத்தில் இறக்கப்பட்டன. சாலமனின் தேவாலய மற்றும் அரண்மனைப் பணிகளில், செம்பு வேலை செய்யும் தமிழ்க் கன்னாரும் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பதற்கான சான்றுக்கோடுகளும் தெரிகின்றன.

இக்காள யவனரை, அராபியர் அல்லது சோனகர் என்று பாவாணர் கூறுகிறார். இவர்கள், நண்ணிலக் கடல் தீவான கரட்டுத் தீவின் பழங்குடி மக்கள் என்பதே, வரலாற்று நிகழ்வுகளுக்கு ஏற்புடையனவாக உள்ளது எனலாம்.

அக்காலத்தில் சேரநாடு, வடக்கே குசராத்து வரையில் நீண்டிருந்தது. இச்சேர மரபில் தோன்றிய வாணன் என்ற மன்னன், குசராத்துப் பகுதியில் சோநகரம் என்ற ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்தான். இவன் மகளான உஷா (உழை) என்ற பெண், கண்ணனின் பெயரனான ஆநிருத்தன் (ஆநிரை-கால்நடைகள்) என்பவனைக் காதலித்தாள். இதனால் சினம் கொண்ட வாணன், ஆநிருத்தனைச் சிறைப்பிடித்தான்.

உடனே கண்ணன் தன் பெயரனுக்காக வலிந்து வந்தான். வாணன் தனது தவற்றையுணர்ந்து, தனது மகளான உழையை, ஆநிருத்தனுக்கு மணமுடித்து வைத்தான். இம்மகிழ்வான நாளில், ஆநிருத்தனின் தந்தையாகிய பிரத்தியும்னன் என்பான், கூத்து

நிகழ்வொன்றை ஆடினான். இது தமிழகத்தில் தொன்மைக் காலத்திலிருந்து நடைபெற்ற வாகைக் கூத்து என்ற புறநட வகையைச் சார்ந்தது என்று பாவாணர் கூறுகிறார்.

சுரியற் றாடி மருள்படு பூங்குழற்
பவளச் செவ்வாய்த் தவள வாணகை
யொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக்
கருங்கொடிப் புருவத்து மருங்குவளை பிறைநுதற்
காந்தளஞ் செய்கை யேந்திள வனமுலை
யகன்ற வல்கு லந்துண் மருங்கு
லிகந்த வட்டுடைய யெழுதுவரிக் கோலத்து
வாணன் பேரூர் மறுஇடைத் தோன்றி
நீணில மலிந்தோன் மகன்முன் னாடிய
பேடிக் கோலத்துப் பேடுகாண் குறளும்

– மணிமேகலை,[149] 3:116–125

இச்செய்தியைச் சிலப்பதிகாரமும் எடுத்துரைக்கின்றது. இச்செய்தி, கண்ணனையும் அவன் வழி காமனையும் ஆநிருத் தனையும் தமிழர் மரபான ஆயர்குலத்தோடு தொடர்புபடுத்து கின்றது எனலாம். தமிழகத்தில் ஆடப்பட்ட 11 வகைக் கூத்து களில் பேடிக் கூத்தும் ஒன்றாகும். ஆண்களே, பேடியர் போல் வேடமணிந்து ஆடும் இக்கூத்து, நாளடைவில் வழக்கொழிந்து போயிற்று. சிலப்பதிகாரம் கூறும் குன்றக்குரவையும், கண்ணனைத் தமிழ் மரபோடு தொடர்புபடுத்தும்.

பாடகச் சீறடி யாரியப் பேடி – சிலப்பதிகாரம்,[150] 27:186

ஆண்மைதிரிந்த பெண்மைக் கோலத்துக்
காமனாடிய பேடி யாடலும் – சிலப்பதிகாரம்[156] 6, 56:57

வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணில மளந்தோ னாடிய – சிலப்பதிகாரம்,[152] 6:54–35

புறநாடகம் பற்றிய வெண்பா:[153]

---

149. மணிமேகலை, 3:116-125.

150. சிலப்பதிகாரம், 27:186.

151. மேலதே, 6:56-57.

152. மேலதே, 6:54-55.

153. மணிமேகலை உரை, டாக்டர் உ.வே.சா., ப. 37.

கடையமயி ராணி மரக் கால்விந்தை கந்தன்
குடைதுடிமா வல்லியமற் கும்பம்–சுடர்விழியாற்
பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கம்
கொட்டியினவ காண்பதினோர் கூத்து.

– மணிமேகலைக்கு உ.வே.சா. உரை. ப. 37.

பாரதப்போர் என்பது, பங்காளிகட்குள் நடந்த பதவிபிடிச் சண்டையே என்பதும், கண்ணன் என்பான், பாண்டவர் பக்க மிருந்து போரிட்டதையும், அப்போரில் போருக்கான நெறி முறைகள் எல்லாம் கண்ணனால் மீறப்பட்டதையும், வஞ்சகமும் சூதுமே, அப்போரை வென்றெடுத்தது என்பதையும் வியாசரின் பாரத காவியம் எடுத்துக் காட்டுகிறது. கண்ணன் அருளியதாகச் சொல்லப்படும் பகவத்கீதை என்ற தொகுப்பு, கண்ணனால் சொல்லப்பட்டவையல்ல என்று பாவாணர் கூறுகிறார்.[154] திருமாலின் பத்துப் பிறப்புக் கொள்கையும், அத்வைதம் எனப் படும் இரட்டைத் தன்மையும் கொண்ட மாலிய மெய்யியல் (Philosophy) கொள்கையும் உருவாக்கப்பட்டதற்கும பிறகே, பகவத்கீதை இயற்றப்பட்டு, அது மென்மேலும் விரிவுபடுத்தப் பட்டு, இன்றுள்ள நிலையை எட்டியுள்ளதாகப் பாவாணர் கருதுகிறார்.

பாரதப் போருக்குப் பின்னரே அதர்வண வேதம் தொகுக்கப் பட்டது என்றும், அதன் பிறகே நான்காக வேதங்கள் பிரிக்கப் பட்டன என்றும், அந்நான்கு பிரிவுகளையும் வகுத்தவர் வியாசரே என்றும், அதனாலேயே அவர் வேத வியாசர் எனப்பட்டார் என்றும் பாவாணர் கருதுகிறார். இரிக்கு, யசூர், சாம வேதங் களில் சொல்லப்படாத பல செய்திகள், அக்காலத்தில் சமய விளக்கங்களுக்கு வெற்றிடமாக இருந்ததால், பிற்காலச் சூழ் நிலைக்கு ஏற்பவும், ஆரியரின் நிலைப்பாட்டுக்கு உகந்தவை களையும், இடைச் செறுகலாக, முற்கூறப்பட்ட இரிக்கு சாம வேதச் சுலோகங்களுடன் இணைத்து, அதர்வண வேதம் தொகுக்கப்பட்டது. பேய் பூதங்களில் நம்பிக்கை கொண்டிருந்த இந்திய மக்களின் மனவியலை அறிந்து, பேய்களின் மந்திர தந்திரங்கள், ஆக்கல் அழித்தல் வேலைகள், செய்வினை, பில்லி சூனியம் போன்ற பகுதிகளையெல்லாம் சேர்த்து, அதர்வண

154. தமிழர் வரலாறு, ப. 201.

வேதத்தை உருவாக்கினர் எனலாம். இந்தச் செய்திகள், மற்ற சமயங்கள் சொல்லும் பேய்க் கதைகளைவிட சிறப்பானதாக அமைந்திருந்தன என்பதால், மக்களும் அவற்றில் ஈடுபாடு கொள்ளலாயினர். மக்களை வாழ்க்கை நெறிப்படுத்த இலக் கியங்கள் எழுதப்பட்ட காலங்களில், மக்கள் எதிர்பார்க்கும் செய்திகளையும் இலக்கியங்களாக வடித்தனர் என்பதற்கு அதர்வண வேதம் சான்றளிப்பதாகும்.

ooo

11

## தமிழ்மொழி – ஆரிய மொழி

உலக மொழிகளை வரிசைப்படுத்தி, பல்வேறு குடும்பங் களாகப் பிரித்த மேலை நாட்டினர், தங்களுடைய விரிந்த மொழிப் புலமை கொண்டு, அவைகளை இனப்படுத்தியதாகத் தெரியவில்லை. கிழக்கே பேசப்படும் சீன சப்பானிய மொழி களையும், தென், நடு ஆப்பிரிக்க மொழிகளையும், வடதென் அமெரிக்க மொழிகளையும் விடுத்து, இந்தோனேசியா தொடங்கி ஸ்பெயின் வரையிலான, ஆசிய ஐரோப்பியப் பகுதிகளில் பேசப் பட்ட மொழிகளை, இனம் பிரித்தனர். கி.மு. 2000 ஆண்டுகளில் உலகம் என்பதே, பாபிலோனைச் சுற்றியிருந்த நாடுகளும், இந்தியாவும், வடமேல் ஐரோப்பிய நாடுகளை உள்ளடக்கிய தாகவே கூறியிருந்தனர். இறைவனின் படைப்புத் தொழிலை அறிவிக்கும் விவிலியத்தின் முதல் அதிகாரம், நீளாறு (Nile) தொடங்கி சிந்து ஆறு வரையிலும், அதற்கிடைப்பட்ட நாடு களையுமே குறிப்பிடுகின்றது. இடன் (Eden) தோட்டத்தில் பாய்ந்த ஆறுகளாக, நீளாறு, இப்புறத்து ஆறு (Euphrates), சின்னாறு (Shinar-Tigris), சிந்து ஆறு ஆகியவைகளே குறிப்பிடப் படுகின்றன.[155]

உலகில் மொழிகள் எவ்வாறு தோன்றின என்பதைப் பல்வேறு மொழியியல் அறிஞர்களும் விளக்கியுள்ளனர். எம் மொழி மிகப் பழமையான மொழி என்று சொல்வதில் அறிஞர் களிடையே கருத்தொற்றுமை ஏற்படவில்லை. மேலை நாட்டு மொழிகளை ஆய்வு செய்தவர்கள், சுமேரிய (Sumerian) மொழியே, கி.மு. 5000 ஆண்டுகளில் வரி வடிவங்களைப் பெற்றிருந்ததாகவும், சுமேரிய மொழியினின்றே பாபிலோனியம் (அக்காடியம்-Accad), ஃபோனீசியம், கனானியம், எபிரேயம், அரபு என்ற அராபியம்,

155. The New American Bible, Dict. p. 47.

எகிப்தியம் போன்ற மொழிகள் கிளைத்தன எனக் கூறுவர். இம்மொழிகளை செமிட்டிக் (Semitic) என்ற குடும்பமாக இணைத்தனர். இவைகளை யடுத்து அல்லது இவை பேசப்பட்ட காலத்திலேயே, இந்தோ-ஆரியம் என்ற ஐரோப்பிய மொழியும் பேசப்பட்டதாகக் கூறுவர். இந்தோ-ஆரியம் என்ற சொல், பிற்காலத்தில் சுட்டப்பெற்ற சொல்லாகும். ஐரோப்பிய மொழி களை, இந்தோ என்ற சொல்லோடு இணைத்தது, இந்திய மொழியில் உள்ள சொற்கள், ஐரோப்பிய மொழிகளிலும் காணப்படுவதால், ஐரோப்பிய மொழியை, இந்தோ-ஆரிய மொழி என்றனர்.

மொழிகள் பற்றிய குழப்பமான, நுணுக்கமான ஆய்வு களைப் புரிந்து கொள்வதைவிட, பொதுவான கொள்கையால் புரிந்து கொள்வது எளிதாகும். இவ்வகையில் இந்தோ-ஆரிய மொழியில், கிரேக்கம், உரோமானியம் என்ற இலத்தீன், செர்மானியம், ஆங்கிலோ சாக்சன் (பிற்கால ஆங்கிலம்), ஃபிரெஞ்சு, ஸ்பானிஷ், உருசியம் போன்ற பல்வேறு மொழிகள் இணைக்கப்பட்டு, அவையெல்லாம் ஒரு குடும்பமாகச் சொல்லப் பட்டுள்ளன. எனவே செமிட்டிக் குடும்பமும், இந்தோ-ஆரியக் குடும்பமும், மேலை ஆசியா மற்றும் ஐரோப்பியா நாடுகளின் மொழிகளாக அறியப்படுகின்றன.

இந்த செமிட்டிக் இனமும், மேலை-கீழை ஐரோப்பிய நாடுகளில் பேசப்பட்ட இந்தோ-ஆரிய இனத்தின் தோற்றம் எதுவென்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. விவிலியம் ஒரு கருத்தை வலியுறுத்துகிறது. இவ்விரு மொழிக் குடும்பங்களும் ஒரு மொழியினின்றும் பிரிந்த கிளைகளே என்கிறது. ஆனால் அந்த ஒரு மொழி எதுவென்று விவிலியம் கூறவில்லை. அந்த ஒரு மொழியினின்றும் பிரிந்த இரு குடும்பங்களின் சொற்களை ஆய்வு செய்யும்போது, விவிலியக் கூற்று உண்மையாகவே உள்ளது. உலகில் தோன்றிய மொழிகள் பற்றிய செய்திகளை, விவிலியம் தரும் விளக்கம் கூர்மைப்படுத்தி, ஒரு புள்ளியில் கொண்டு வந்து நிறுத்துகிறது.

விவிலியம் கூறும் செய்திகள் அனைத்தும் உண்மையான வரலாற்று நிகழ்வுகள்தான் என்று ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனாலும் வரலாற்றை ஆய்வு செய்வதற்கான சில செய்திகளை விவிலியம் கூறுகிறது. மொழிகள் எங்கிருந்து தோன்றின என்ற ஆய்வாளர்களின் முயற்சிகளுக்கு, நோவா

என்ற மாந்தன் பேசிய மொழியினின்றே தோன்றின என்ற குறிப்பை விவிலியம் காட்டுகிறது. நோவா என்ன மொழி பேசினான் என்பதை விவிலியம் விளக்கவில்லை. இந்நிலையில் நோவா எனப் படுபவன் யார்? அவனது நாடு எது? அவனது முன்னோர் யாவர் என்பதற்கு விவிலியம் விளக்கம் அளிக்கவில்லை. பலவாயிரம் ஆண்டுகளாக வாய்மொழியாகச் சொல்லப்பட்டு வந்த தொன்மைக் காலத்து மக்களின் வரலாறுகள், பல உண்மைக்குப் புறம்பாகவும், சில உண்மையாகவும் இருக்கும். ஆரிய வேதங்களும் புராணங்களும் கூறும் செய்திகளும், பல உண்மைக்குப் புறம்பாயிருப்பினும், சில வரலாற்றின் வேர்கள் எதுவென்று காட்டுகின்றன. இவ்வகையில் விவிலியம் கூறும் மொழிகள் தொடர்பான செய்திகள், குழம்பிக் கொண்டிருந்த வரலாற்று-மொழியியல் ஆய்வாளர்களுக்கு, ஒரு திசையைக் காட்டுகிறது எனலாம். அத்திசை வழி சென்று மேலும் மேலும் பல உண்மைகளை வெளிக்கொணர்வதே ஆய்வின் நோக்கமாக அமைய வேண்டும்.

அக்காலத்தில் ஒரு மொழியே பேசப்பட்டது என்ற செய்தியை விவிலியம் கூறுகிறது.[156] அம்மொழியைப் பேசியவன் நோவாவும் அவனது இல்லத்தாரும் உறவினருமேயாவர். நோவா வின் இனம் பல்கிப் பெருகி, பாபிலோன் பகுதியில் நிறைந்த காலத்தில், மக்கள் செருக்குற்று, இறைவனை மறந்து வாழ்ந் திருந்தார்கள். இக்காலை, தங்களது விருப்பமாக, உயர்ந்த கோபுரம் ஒன்றைக் கட்டத் துணிந்தார்கள். அப்பணிகள் தொடங்கி நடைபெற்றுக் கொண்டிருந்தன. அப்போது, இறைவன், இம்மக்களுடைய மொழியைப் பல மொழிகளாக மாற்றியதின் வழியாக, ஒருவர் சொல்வது மற்றவர்க்குப் புரியாமல் போகவே, கோபுரக் கட்டுமானப் பணி நின்று போனதாக விவிலியம் உரைக்கின்றது.[157] இச்செய்திகள் வழியாக அறியப் படும் உண்மை, மக்கள் பல்கிப் பெருகிய காலத்தில், மொழி களும் கிளைத்தன என்பதே. ஒரே நாளில், மக்களின் மொழிகள் மாற்றப்பட்டதாகக் கொள்ள இயலாது. இதற்குப் பலவாயிரம் ஆண்டுகள் தேவைப்பட்டிருக்கும். அப்பலவாயிரம் ஆண்டு களைச் சுருக்கி, ஒரு நாளில் பன்மொழிகளை இறைவன் மாற்றி னார் என்ற கூற்று, சமய நோக்கில் சொல்லப்பட்டதாகும்.

156. Bible, O.T., 11:1.

157. Ibid, 11:9.

நோவா காலத்திற்குப் பிறகே மொழிகள் கிளைத்தன என்ற செய்தியை மட்டும் ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. நோவா என்பானைப் பற்றிய மேலும் சில செய்தி களை விவிலியம் கூறுகிறது. தற்போது ஈராக் நாட்டில் ஓடும் தைகிரீசு (Tigris) ஆறு, சின்னாறு (Shinar) என்றே விவிலியத்தில் கூறப்பட்டுள்ளது. பெரும் வெள்ளத்தினின்றும் மரக்கலத்தின் உதவியால் உயிர் பிழைத்த நோவா, கிழக்குத் திசையினின்றும் வந்து, சின்னாற்றங்கரையில் குடியமர்ந்தான் என்று விவிலியம் கூறுகிறது.[158] விவிலியம் கூறும் கிழக்குத் திசை, இந்தியாவையும், சிந்துவெளியையும் சுட்டுவதேயாகும். நோவாவின் வெள்ள நிகழ்வுகள் பற்றிய விவிலியச் செய்திகள், மகாபாரதம் வான பருவத்தில், மனு என்பான் பற்றிய செய்தியில் கூறப்பட்டுள்ளது. நோவாவும் மனுவும் பெயர்களில் வேறுபடுகின்றனரேயன்றி, நிகழ்வுகள் ஒன்றாகவேயுள்ளன. நாவாய் என்ற தமிழ்ச் சொல் லையே கொண்ட நோவாவும், மீன் என்ற தமிழ்ச் சொல்லைக் கொண்ட மனுவும், குமரிக்கண்டம் அழிந்துபட்ட செய்தியை யும், அதன் வழியில் மீண்டு சென்று உயிர் பிழைத்த தமிழர் களையும் பற்றிய செய்திகளையுமே தருகின்றனர். மேலும் நோவாவின் முன்னோர்கள் பற்றிய செய்திகளை விவிலியம் கூறுகிறது. ஆதாம் தொடங்கி நோவா வரையில் 11 அதிகாரங்கள் விவிலியத்தில் கூறப்படுகின்றன. இந்த 11 அதிகாரங்களிலும் ஏராளமான தமிழ்ச் சொற்கள் உள்ளன. விவிலியம் எழுதப்பட்ட எபிரேய மொழியில் காணப்படும் பல ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்கள், எபிரேய மொழி, தமிழ் மொழியினின்றும் கிளைத்த மொழியே எனக்காட்டும். ஆசிரியரின் "எபிரேயத்தின் தாய் மொழி தமிழே" என்ற நூலில், தமிழ்-எபிரேய மொழி களின் ஒப்புமை ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

இவ்வழியில் நோவா என்பான் தமிழனே என்றும், அவன் குமரிக் கண்டத்தினின்றும் தப்பிப் பிழைத்து மேலை நாடுகளில் சென்று குடியேறியவனே என்றும், விவிலியச் செய்திகளையும், அதன் சொற்களையும் கொண்டு தெளிவாக நிறுவலாம். நோவா தமிழனே என்பதால், நோவா பேசிய மொழியே, செமிட்டிக்-இந்தோ ஐரோப்பிய மொழிகளாகக் கிளைத்தன என்ற விவிலியக் கூற்றின்படி, தமிழ்மொழியே செமிட்டிக் மற்றும் இந்தோ-ஐரோப்பிய மொழிகளுக்கும் தாயாக உள்ளது என்பது தெளிவு.

---

158. Ibid, 11:2.

கடந்த 19, 20ஆம் நூற்றாண்டுகளில், உலகின் மொழிகள் பற்றியும், அவைகளின் தோற்றம் பற்றிய சிந்தனைகள் ஆய்வாளர் களிடையே விரிவடைந்தன. தமிழ் மொழியின் சொற்கள், செமிட்டிக் மற்றும் ஐரோப்பிய மொழிகளில் பரவலாகப் பொதிந்து கிடப்பதை பல்வேறு ஆய்வாளர்கள் கண்டுணர்ந்தனர். சிந்துவெளியில் தொன்மைக்காலத்தில் தமிழர்கள் வாழ்ந்திருந்த செய்திகள் உறுதிப்படுத்தப்பட்ட பின்னர், உலக ஆய்வாளர் களின் கவனம் தமிழின் பக்கம் திரும்பியது. ஐரோப்பிய மொழி களில் பொதிந்து கிடக்கும் தமிழ்ச் சொற்களைக் கண்டு, அவை வணிகத் தொடர்பால் ஏற்பட்டவைகளாக இருக்கலாம் என முதலில் முடிவு செய்தனர். பின்னர், வணிகத் தொடர்புக் காலங்களுக்கு முன்னரே, தமிழ்ச்சொற்களின் தாக்கங்கள், ஐரோப்பிய மொழிகளில் உள்ளதைக் கண்டுணர்ந்தனர். இவை எவ்வாறு நிகழ்வுற்றன என ஆய்வாளர்களால் முடிவுசெய்ய இயலவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பார்வையில், இதனை அணுகினர். ஒருவருடைய முடிவும் சரியாக அமையவில்லை. இறுதியாக, மேலை நாட்டில் குறிப்பாக, பாபிலோனில் வாழ்ந் திருந்த மக்களே, இந்தியாவில் குடியேறினர் என்ற தலைகீழ்க் கொள்கையை வகுத்தனர்.

சிந்துவெளியில் பேசப்பட்ட மொழிக்கும் சுமேரிய-பாபிலோனிய மொழிகளுக்கும் தொடர்புள்ளதைக் கண்டறிந்த மேலை நாட்டு ஆய்வாளர்கள், பாபிலோனிய மக்களே சிந்து வெளியில் குடியேறியதாகக் கூறினர். தமிழ் மொழி, பாபிலோனில் பேசப்பட்டதாகவும், அங்கிருந்தே சிந்துவெளி வழியாகத் தமிழகத்திற்கு வந்து சேர்ந்தது என்றும், டாக்டர் இலெகோவரி என்பார் கூறினார்.[159] மாக்சு முல்லர் என்பார், ஆரியமே உலகின் முதன் மொழி என்றும், ஆரியத்தினின்றே தமிழ் பிறந்ததாகவும், ஆரிய மொழியே மேலை நாடுகளின் தாய்மொழி எனப்படுவதால், மேலைநாட்டு மொழிகளில் காணப்படும் தமிழ்ச் சொற்கள், உண்மையில் ஆரியச் சொற்களே என்றும் உரைத்தார். எப்படி யிருப்பினும், தமிழ் மொழியின் தாக்கம் ஐரோப்பிய மொழி களில் இருப்பதை அனைவரும் ஏற்றுக் கொண்டனர். இந்த ஆய்வுகள் எல்லாம், தவறான தொடக்கப்புள்ளியினின்றும் தொடரப்பட்டதால், அறுந்துபோகாத சங்கிலித்தொடர் போன்ற

159. The History of Tamilnad, p. 36.

ஆய்வு முடிவுகளை அவர்களால் கொடுக்க முடியவில்லை. ஊகத்தின் அடிப்படையிலும், உன்னிப்பாராத வகையிலும் அவர்களின் ஆய்வுகள் இருந்தன.

உலகின் முதன் மொழி தமிழே என்றும், அது குமரிக் கண்டத்தில் தோன்றியதே என்றும், பல்வேறு வெள்ளப்பாழ் களால் குமரிக் கண்டம் சிதைவுற்ற போது, அங்கிருந்து வெளி யேறிய தமிழ் மக்கள் மேலை நாடுகளில் குடியேறினர் என்றும், அத்தமிழ் மக்களின் வாயிலாகவே, மேலை நாட்டு மொழிகள் தமிழ் மொழியினின்றும் கிளைத்தன என்றும், இன்றுள்ள செமிட்டிக்-இந்தோ ஐரோப்பிய மொழிகள், குடியேற்றத் தமிழர்களால் பேசப்பட்ட தமிழ் மொழியின் கிளை மொழிகளே என்றும் கொண்டு ஆய்வுகளைத் தொடர்ந்திருந்ததால், மிகச் சரியான மொழிக் கொள்கை உருவாக்கப்பட்டிருக்கும். இவ்வளவு குறைபாடுகளும் குழப்பங்களும் அவர்தம் கொள்கைகளில் இருந்திருக்காது.

சுமேரிய நாகரிகம் தமிழர் நாகரிகமே என்றும், பாபிலோனியர் தமிழரே என்றும், யூதமக்கள் திங்கள் மரபைச் சார்ந்த தமிழ் மக்களே என்றும் கடந்த நூற்றாண்டில் பல்வேறு அறிஞர்கள் சுட்டிக் காட்டினர். சுவாமி சாக்கியானந்தா (A monk of the Ramakrishna Order, Trichur, Kerala) என்பார்,[160] "பாபிலோன்-எகிப்து போன்ற மேலை நாடுகளில் பண்பாட்டு நாகரிகத்தை வளர்த்தவர் தமிழரே என்றும், சுமேரியர், பாபிலோனியர், ஃபோனீசியர், யூதர் அனைவரும் தமிழ் மரபிற் பிறந்தவர்களே என்றும், சாம்பலிலிருந்து உயிர் பெற்றெழும் பீனிக்ஸ் (Phoenix) பறவையைப் போன்று, குமரிக்கண்டப் பேரழிவிற்குப் பிறகு மேலைநாடுகளில் சிறப்புற்றிருந்தனர்", என்று கூறுகிறார். வரலாற்று அறிஞர்களான, பி.டி. சீனிவாசய்யங்கார், சேஷய்யங் கார், நீலகண்ட சாத்திரியார், தேவநேயப் பாவாணர் போன் றோர், தமிழரின் மேலை நாட்டுப் பரவல் கொள்கையைச் சார்ந்தே நின்றுள்ளனர். டாக்டர் இலெகோவரி, ஸ்பெயின் தொடக்கம் இந்தோனேசிய வரையில், தொன்மைக்காலத்தில் தமிழே பேசப்பட்டது என்கிறார். தமிழ்-திராவிடமொழிகளை ஆய்வு செய்த எமினோ-பர்ரோ போன்ற அறிஞர்களும் தமிழின் முதன்மொழி நிலைப்பாட்டை உறுதி செய்கின்றனர்.

---

160. Bhishma's Tamilakam, p. 49.

இந்தோ-ஐரோப்பிய மொழிகளை, மேலை நாட்டவர் மேலை ஆரியம்-கீழை ஆரியம் என வகுத்தனர். மேலை ஆரியத்தில் இன்றுள்ள ஐரோப்பிய மொழிகளையும், கீழை ஆரியத்தில் சமற்கிருதத்தையும் வைத்தனர். பாபிலோன் நாட்டினின்றே, ஐரோப்பிய மொழிகளாகத் தமிழ் கிளைத்தது என்பதற்கு விவிலியத்தின் கூற்றைச் சான்றாகக் கொள்ளலாம். மேலும் நோவா என்பானின் பெயரன் யாவன் என்பானின் மரபுவழியினர் கிரேக்கத்திலும் அதனைச் சுற்றியுள்ள நாடுகளிலும் பல்கிப் பெருகினர் என்றும், யாவனின் மரபார் பேசிய மொழியே, இந்தோ-ஐரோப்பிய மொழிகள் என்றும் விவிலியக் குறிப்புகள் கூறுகின்றன. யாவன் என்பது தமிழ் பெயரே என ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. மக்கள் பாபிலோன் பகுதியினின்றே, மேற்கு, வடக்கு ஐரோப்பிய நாடுகளில் பரவினர் என்ற கூற்றின் படி, இந்தியாவுக்கு வருகை தந்த ஆரியர் ஐரோப்பாவின் கிழக்குப் பகுதி, ஆசியாவின் மேற்குப் பகுதிகளை உள்ளடக்கிய, இன்றைய உக்ரெய்ன் (Ukraine) அதற்குக் கிழக்கு பகுதிகளான கசக்கிஸ்தான் (Kazakhstan) ஆகிய நாடுகளின்றே, இந்தியாவுக்குள் ஈரான் நாட்டு வழியே நுழைந்தனர்.

மேற்கண்ட பகுதிகளில், ஆரியர் நாடோடிகளாய் வாழ்ந் திருந்த காலத்தில் அவர்கள் பேசிய கொச்சை மொழியிலேயே தமிழ்ச் சொற்கள் கலந்திருந்தன. இவ்வழியில் ஆரிய மொழிக்கும், பாபிலோனிய-எபிரேய மொழிக்கும் உள்ள தொடர்பு, அவர்கள் இந்தியாவுக்கு வருகை தருமுன்னரே இருந்தனவாகும். சமற் கிருதத்தில் உள்ள பல சொற்கள் எபிரேய மொழியிலும் உள்ளன. அரிமா என்ற தமிழ்ச் சொல், அரியமா என்று வடமொழியிலும், அரியா என்று எபிரேய மொழியிலும் சொல்லப்படுகின்றன. அரியா என்ற எபிரேயச் சொல், அரியமா என்ற சொல்லின் திரிபன்று. அரிமா என்ற தமிழ்ச் சொல்லே, எபிரேயத்தில் அரியா எனத் திரிந்தது. அரியா என்ற சொல்லே ஆரிய மொழி யிலும் சொல்லப்பட்டு, ஆரியர்கள் இந்தியா வந்தபின்னரே அரியமா என்று, தமிழ்த் தாக்கம் பெற்றதால் சொல்லப்பட் டிருக்க வேண்டும். ஆரியர்கள் இந்தியாவுக்குள் நுழைந்த காலத்தே அவர்கள் கொச்சை மொழியில் இருந்த பல தமிழ்ச் சொற்கள் சிந்துவெளி மக்கள் தொடர்பால், மீண்டும் மாற்றம் பெற்றன. இவ்வாறு ஆரியத்தில் இரண்டாவது முறையாகத் தமிழ்த்தாக்கம் இந்தியாவில் நிகழ்வுற்றது. அதன் கரணியம் பற்றியே, மேலை ஆரிய மொழியில் உள்ள தமிழ்ச் சொற்களை

விட, கீழை ஆரியமான சமற்கிருதத்தில், தமிழின் தாக்கமும் சொற்களும் அதிகமுள்ளன. தமிழோடு கலந்த பின்னரே ஆரிய நாடோடி மொழி செம்மை பெற்று, அது செம்மைப்படுத்த மொழி எனப்பட்டது. சமற்கிருதம்=செம்மைப்படுத்தப்பட்ட மொழி. சமஸ்கிருத் (Samskrith) என்ற சொல்லே, செம்மை என்ற தமிழ் மூலச்சொல்லை முன்னொட்டாகக் கொண்டுள்ளதை நோக்குக. செம்-சம் எனத் திரிந்துள்ளது. குருத் என்ற சொல், கருத்து, குருத்து என்ற தமிழ்ச் சொற்களின் திரிபே. குருத்து= வளர்ச்சி. பாணினியின் செம்மைப்படுத்தப்பட்ட சமற்கிருதத்தை விட வேதகால சமற்கிருதம் தமிழோடு நெருக்கமான தொடர் புள்ளதாகக் கருதப்படுவதாக, ஆய்வாளர்கள் தெரிவிக்கின்றனர்.[161]

ஆரியர்களின் முன்னோர்கள் பற்றியும், அவர்களது மொழி பற்றியும், அவர்களின் வாழ்க்கை முறைமைகள் பற்றியும் தெளி வாகக் கூறிவிட்டால், அவர்களுக்கு எந்தச் சிறப்புகளும் இல்லை என்பது தெரிந்துவிடும் என்பது பற்றியே, ஆரியச் சார்புடை யோர், தெளிவான கொள்கைகளைக் கூற மறுக்கின்றனர். கி.மு. 2000 ஆண்டுகளில், ஆரியர் இந்தியாவுக்குள் நுழைந்தபோது, அவர்தம் மொழிக்கு வரிவடிவம் இல்லாதிருந்தது. இராமாயண, மகாபாரதக் காலத்தில் கூட அதற்கு வரிவடிம் இல்லை. கி.மு. 500 ஆண்டுகளிலேயே, அதற்கு முறையான வரிவடிவங்களும், இலக்கண அமைப்புக்களும் உருவாக்கப்பட்டன. ஆரியத்தைச் செம்மைப் படுத்திய பணியில், பாணினிக்குப் பெரும் பங்குண்டு.

ஆரிய மொழியின் இலக்கண நூல் ஐந்திரவியாகரணம் என்பர். இச்சொல் முழுதும் தமிழ்ச்சொல்லே. ஐந்திரம் என்பது ஐந்திறம் என்றும் அறியப்படும். ஐந்து வகையான பகுதிகள், ஐந்து திறமைகளை வளர்க்கும் பகுதிகள் எனவும் அறியப்படும். வியாகரணம் என்பது விரிந்த தொகுப்பு எனப்படும். வியல் என்ற தமிழ்ச்சொல்லுக்கு விரிவு என்றே பொருளாகும். வியல்-வியலுதல்-விரித்தல் என்ற பொருளில் வியாசன் என்ற பெயரும் தமிழ்ப்பெயரே. வியாழன் என்பது விரிந்து பரந்திருக்கும் பெரிய கோள் என்றே பொருள்படும். ஐந்திரவியாகரணம் என்பது தமிழ்ச்சொல்லாகவேயிருப்பதால், தமிழ் இலக்கணத்தை

---

161. Bhishma's Tamilakam, p. 300.

161. Vedic Sanskrit is nearer to Tamil than the Classical Sanskrit of Panini.

யொட்டியதே இவ்வடமொழி இலக்கண நூல் என்பதும் தெளி வாகும். இதன் பயன்பாடு பெரிதும் உணரப்படாததால் அறிய இயலவில்லை. தமிழ் இலக்கணத்தையொற்றி எழுதப்பட்ட இந்நூல், தமிழகத்திலேயே, தமிழும் வடமொழியும் அறிந்த ஒருவரால் இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்பர். இதனை இயற்றியவன் இந்திரன் என்று ஆரியர் கூறினர். கடவுளே தங்கள் மொழிக்கு இலக்கண அமைவுகளை உருவாக்கிக் கொடுத்தார் என்பதற்காகவும், தேவ மொழியாகையால், இந்திரன் இதற்கான இலக்கணத்தை வகுத்தான் என்பதை அறிவிக்கவும், இந்திரன் எழுதினான் என்றும் உரைத்தனர். ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன் என்ற அடைமொழியால், ஐந்திரம் என்ற சொல், தமிழகத்திலேயே வழக்கில் இருந்ததும், அந்தப் பெயரே வடமொழி இலக்கண நூலுக்குச் சூட்டப்பட்டதும், தமிழ் இலக்கணத்தையொட்டியே, வடமொழி இலக்கணம் வகுக்கப் பட்டது என்பதை விளக்கும்.

தொல்காப்பியர் தொகுத்த தமிழ் இலக்கண விதிகளை முதநூலாகக் கொண்டே பாணினி என்பான், வடமொழியில் அஷ்ட அத்யாயி என்னும் எட்டு அதிகாரங்கள் கொண்ட இலக்கண நூலை வகுத்தான் என்பர். அடிகளை மிகவும் சுருக்கி யும், உரைக்க வந்த பொருளை தெளிவாக உரைக்காமலும் அந்நூல் எழுதப்பட்டதென்பர். பாணினியின் காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டு எனவும், பாணினி தொல்காப்பியருக்கும் காலத்தால் பிந்தியவன் எனவும் பாவாணர் கூறுகிறார். பிராகுரிதி என்ற அழைக்கப்பட்ட ஆரியமொழியே செம்மைப்படுத்தப் பட்ட பின்பு (தமிழின் இலக்கண முறைகளை ஏற்றுக் கொண்ட பிறகு) சமற்கிருதம் எனப்பட்டது. தமிழ் இலக்கணம் போன்றே ஆரிய இலக்கணமும் மொழியியல் அமைப்புகளும் இருப்பது கண்ட பிற்காலத்து ஆரியர், தங்கள் மொழியின் பெருமை குன்றிவிடக்கூடாது என்றும், தேவபாஷை என்று சொன்னது பொய்த்துவிடக்கூடாது என்றும் எண்ணி புதுக்கதையொன்றை யும் கட்டிவிட்டனர்.

கீர்வாணம் என்பதும் ஆரியத்துக்கு ஒரு பெயராக இருந்தது. அதனின்றும் செம்மைப்படுத்தப்பட்ட மொழியே சமற்கிருதம் என்று சொல்லப்பட்டதாக, மகரிஷி கூறுகிறார். பாணினி இலக்கணத்துக்குப் பலகாலம் முந்தியது தொல்காப்பியம் என்றும் கூறுகிறார். இந்தக் கீர்வாண இலக்கணம் என்பதே ஐந்திர

ஒழுங்கு என்றும் மகரிஷி கூறுகிறார்.[162] பாணினி, வைதிகசப்த விவரணம் என்ற வேதவிளக்க நூலையும் எழுதியதாகக் கூறப் படுகின்றது. இவ்வேத விளக்கங்கள் உண்மையான வேத உட் பொருளை மறைத்தும் திரித்தும் கூறப்பட்டதாக, பேராசிரியர் தியோடர் என்பார் கருதுகிறார்.[163] பாணினிக்கு முன்பே வேத விளக்கங்கள் கொடுத்த, யாங்கர் மகீதார், சாயணர் கருத்து களுக்கு பாணினியின் கருத்து மாறுபட்டதாகும் என்றும் கூறுகிறார்.

தமிழ்மொழியின் இலக்கணத்தைக் கற்பிக்குமாறு சிவனிடம் அகத்தியன் வேண்டினான். அதற்கிணங்கிய சிவனும் தனது உடுக்கையை அடித்தான். உடுக்கையின் வலப்பக்கத்திலிருந்து ஆரியமும், இடப்பக்கத்திலிருந்து தமிழும் தோன்றின. இரண்டு மொழிகளுக்கான இலக்கண விதிகளையும் சிவன் அகத்திய னுக்குக் கற்பித்தான். அதுபற்றியே இரு மொழிகளின் இலக்கண விதிகள் ஒன்றாகவுள்ளன. தமிழ் மக்களின் கடவுளான சிவன், வடமொழியையும் தோற்றுவித்தான் என்பது. தமிழரை ஏமாற்றிய உத்தியாகும். வலப்பக்கம் வலிமையின் பக்கம் என்பதால், தமிழினும் வலுவுள்ள ஆரியமொழி வலப்பக்கத்திலிருந்தே தோன்றியது என்றனர். தமிழுக்கு இலக்கணம் வகுத்த அகத்திய னுக்கும், அகத்தியன் வழியில் வடமொழிக்கு இலக்கணம் வகுத்த பாணினிக்கும் கால இடைவெளி பற்றியெல்லாம் ஆரியர் கவலை கொள்ளவில்லை. இன்னும் சிலர், ஆரியரும் திராவிடரும் ஆரியரே என்றும், மொழி வழியில் திராவிடர் எனப்பட்டனர் என்றும் புதிய கருத்துக்களைக் கூறினர். ஆனால் எவ்வழியிலும், ஆரியத்தைவிட தமிழ் சிறப்பு பெற்றுவிடக் கூடாது என்பதில் கண்ணுங் கருத்துமாயிருந்தனர்.

ஆரியம் என்ற சொல் எம்மொழிக்கு உரியது, இச்சொல்லை அவ்வினத்துக்குச் சூட்டியது யார், ஆரியர் என்ற சொல்லுக்கான வேர்ச்சொல் பிராகுரித மொழியில் அல்லது சமற்கிருதத்தில் உள்ளதா என்பதற்கான பதில்கள் இதுவரையில் தெளி வாக்கப்படவில்லை. ஆர்க்கோஸ் (Archos) என்ற கிரேக்கச் சொல்லுக்கு முதன்மையானவன் என்று பொருள். இதனை இலத்தீன் மொழி Arch (ஆர்ச் அல்லது ஆர்ச்) என்று க ஒலியைச்

---

162. ரிக்வேத சம்ஹிதை, முன்னுரை.

163. மேலதே.

ச ஒலியாக மாற்றி ஒலித்தது. ஆர்ச் என்ற இலத்தீன் சொல்லுக்கு வணக்கத்திற்குரிய என்பது பொருளாகும். Arch-Bishop என்ற சொல், கிறித்துவத்தில் முதன்மை ஆயரைக் குறிக்கும் சொல்லாகும். இதனை அடிப்படையாகக் கொண்டும். சிஷ்ட என்ற வடமொழிச் சொல்லை இணைத்தும், அர்ச்சியசிஷ்ட என்ற இலத்தீன் சமற் கிருதச் சொல் ஒன்று, கிறித்துவ மறையில் உருவாக்கப்பட்டது. அர்ச்சியசிஷ்டர் என்பது, தூயவர் (Saint) என்று உரோமை அறிவிக்கும் புனிதர்களுக்கு வழங்கப்பட்டது. இந்த அர்ச் என்ற சொல்லே, ஆர்-ஆர்ய என்ற சொல்லுக்கு மூலச்சொல் என இங்குள்ள பிராமணர்கள் சொல்லிக் கொண்டனர். செருமானிய அறிஞர் மாக்சு முல்லர், Ar (ஏர்) என்ற இலத்தீன் சொல்லை எடுத்துக் கொண்டார். தமிழில் கலப்பையைக் குறித்த ஏர் என்ற தமிழ்ச்சொல், இலத்தீன் மொழியிலும் ஏர் (plough) என்றே சொல்லப்பட்டது. ஏர்த்தொழில் செய்தோர் (வேளாண்மை) ஆரியர் எனப்பட்டனர் என்று மாக்சு முல்லர், இந்திய ஆரியர் களுக்கு விளக்கம் கொடுத்தார். இந்திய ஆரியர்கள் வேளாண் மையில் ஈடுபட்டவர்கள் அல்லர் என்பதும், ஆடுமாடுகளை மேய்த்து வந்த நாடோடி மக்களே என்பதும், மாக்சுமுல்லருக்குத் தெரியாமலிருந்திருக்க இயலாது. இருப்பினும், ஏதோவொரு உயர்வான தொழிலை ஆரியர் செய்ததாகக் காட்டுவதற்கு, இவ்வாறெல்லாம் சுற்றி வளைத்துச் சொன்னார்.

தங்களைத் தேவசாதியார் என்றும், மாந்தர்களில் உயர்ந் தோர் என்றும் சொல்லிக் கொண்டதை முதன்முதலில் சிந்து வெளித் தமிழரும், பிறகு தென்னிந்தியத் தமிழரும் உண்மை தான் என்று நம்பினர். ஏனெனில் இந்தியத் தமிழர்களினின்றும் மாறுபட்ட உருவமும் நிறமும் அவர்களை அவ்வாறு நம்ப வைத்தன. உயர்ந்தோரையும், பண்பாளரையும் ஆரியர் என்று தமிழர்கள் அழைத்தனர். பார்ப்பான், ஐயன், அந்தணன் போன்ற தமிழரைக் குறித்த தமிழ்ச் சொற்களைப் போன்றே, ஆரியர் என்ற சொல்லும் தமிழ்ச் சொல்லே. இதனை ஆரியர் தமக்குரிய தாக்கிக் கொண்டனர். பிற்காலத்தில் அப்பெயரே நிலைத்து, இச்சொல்லையே ஐரோப்பியரும் பயன்படுத்தினர். மேலை ஆரியம் என்றும், கீழை ஆரியம் என்றும் விளக்கம் கொடுத்தவர் களும் அவர்களே.

ஆரியர் என்ற சொல், ஆரியச் சார்பாளர்களால் விளக்கப் படும் தன்மை, ஏற்றுக் கொள்ள இயலாத அளவில் உள்ளன.

ஆனால், தமிழ்மொழியோடு நேரிடையான தொடர்பைக் கொண்டுள்ளது. ஆர் என்ற வேர்ச் சொல்லினின்றே ஆரியன் என்ற சொல் நீண்டது. ஆர் என்ற தமிழ்ச் சொல்லுக்கு, நிறைவு-முழுமை என்றவாறு பொருள் விரியும். உயர்ந்த மக்களை ஆர் விகுதி கொடுத்து அழைப்பது தமிழர் மரபு. ஆர்மை என்ற சொல் லுக்கு உயர்ந்த (height) என்றும், உயர்ந்த மதிற்சுவர் என்றும் பொருளுண்டு. சத்திரியனான இராமனை, ஆரியன் என்றே கம்பர் கூறுகிறார். யூத சமயத்தினனான சூசை என்பானை, ஆரியன் என்றே தேம்பாவணியில், வீரமாமுனிவர் குறிப்பிடுகிறார்.

ஆரியாங்கனை என்ற சொல், உயர்ந்த பெண்ணைக் குறித்தும், அவள் துறவு ஒழுக்கம் பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. கணவன் உயிருடன் இருக்கும்போதே துறவு பூண்ட பெண்டிரை, ஆரியாங்கனை (வீராங்கனை என்பது போல) என அழைத்தனர்.

கணவனிற் றுறவின் மன்னு ஆரியாங் கனைகள்
– திருவிளையாடற் புராணம் 63:17

தமிழர்கள் குறித்த தமிழ்ச் சொல்லான ஆரியர் என்ற சொல்லை, ஆரியர்கள் தெரிந்தோ, தெரியாமலோ ஆரியர்கள் ஏற்றுக் கொண்டுவிட்டனர் என்று பாவாணர் கருதுகிறார்.

அருமை என்ற சொல்லுக்கு பெறுதற்கரிய, காண்பதற்கரிய என்று பொருளாகும். அரு-அரி-ஆரி=மேன்மை, உயர்வு, சிறப்பு எனப் பொருள்படும். ஆரியம்=மேன்மை.

ஆரியந் தனி யைங்கரக் களிறு – கம்பராமாயணம்[165]

அஞ்சிலே யொன்றா றாக வாரியற் காகவேகி
– கம்பராமாயணம்[166]

ஐயுற லுளதடை யாளம் ஆரியன் – கம்பராமாயணம்[167]

ஆரிய னுரைப்ப தானா னனைவரு மதனைக் கேட்டார்
– கம்பராமாயணம்[168]

---

164. திருவிளையாடற் புராணம், 63:17.

165. கம்பராமாயணம், ஊர்தேடு, 11.

166. மேலதே, பாயிரம்.

167. மேலதே, 25.

168. மேலதே, வீபீடணன், 106.

துரை என்று ஆங்கிலேயர்களைக் குறித்துத் தமிழர் வைத்த பெயர் போன்றே, ஆரியர் என்ற பெயரையும் தமிழரே வைத்தனர் என்று பாவாணர் கூறுகின்றார்.

ஆரியத்தையும் அவர்தம் வேதங்களையும் மேல் நாட்டினர் பலர் விரும்பிக் கற்றனர். கி.பி. 14ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு இந்தியாவுக்கு வணிகத் தொடர்பாகவும், சமயப் பரப்பிற்காக வும் வந்த ஐரோப்பியர், வடமொழியைக் கற்றனர். இவ்வார்வம், புதிய புதிய மொழிகளைக் கற்பதும், அம்மொழிகளில் கூறப் பட்டுள்ள செய்திகளை அறிந்து கொள்வதும் என்ற நோக்கி லேயே இருந்தன. இந்தியாவுக்கு வந்த ஐரோப்பியர், சமற்கிருத மொழியைக் கற்று, அதன் வாயிலாக இந்தியர்களில் சமய வழி களை உணர்ந்தனர். இச்செயல்கள், தாங்கள் இந்திய வரலாற்றைக் கற்றுக் கொண்டவர்கள் என்றும், புதுப்புது செய்திகளை, இந்தியர்களே அறியாதிருந்ததை, தாம் அவர்களுக்குக் கண்டு பிடித்துச் சொன்னவர்கள் என்றும், தங்கள் நாட்டு அறிவாளி களை வியக்கச் செய்து, அதன் மூலம் தாங்கள் பெரிய ஆராய்ச்சி யாளர்கள் எனக் காட்டிக் கொள்ளவும், தங்கள் நாட்டில், தாங்களும் பெரிய அறிவாளிகளே எனக் காட்டிக் கொள்ளவும், செய்யப்பட்ட முயற்சிகளே. தங்கள் அறிவு மேன்மையே (Intel-lectual supermacy) பறைசாற்றிக் கொள்ளவே, ஐரோப்பியர் வடமொழியைப் பயின்றனர். இவர் ஒரு வகையினர் என்றால், இந்திய (ஆரிய) சமயத்தில், பகுத்தறிவுக்கு ஒவ்வாத நம்பிக்கை களும், குருட்டு நம்பிக்கைகளும் உள்ளன என்பதை, முதன் முதலில் கண்டறிந்தவர் தாங்களே என்று பெருமைபட்டுக் கொள்ளவும், இவைகளையே வாதப் பொருட்களாக வைத்து, கிறித்துவ மறையைப் பரப்பவும் சிலர் வேதங்களைப் படித்தனர். முதன் முதலில் சமற்கிருதம் கற்ற ஐரோப்பியர்கள் கிறித்துவ மறை பரப்பாளர்களே.

கி.பி. 1651ஆம் ஆண்டில், மறைத்திரு அப்றகாம் ரோஜர் (Rev.Fr. Abraham Roger) என்பார், சுபஷித திரிசதி என்ற பர்த்திருஹரி என்பார் எழுதிய சமற்கிருத நூலை, முதலில் போர்த்துகீசிய மொழியிலும், பின்னர் டச்சு மொழியிலும் மாற்றம் செய்தார்.[169] அதே காலத்தில் வாழ்ந்திருந்த, கத்தோலிக்க மறை யின் இயேசு அவைத் தொண்டர், இராபர் டி நொபிலி

---

169. ரிக்வேத சம்ஹிதை, மேனாட்டு கீர்வாண பண்டிதர்களின் வரலாறு, ப. XXII.

(Rev. Fr. Robert de Nobili) என்பார்,[170] சென்னையில் யசூர் வேதத் தின்படி யொன்றை கண்டுபிடித்ததாகக் கூறிக் கொண்டார். தத்துவ போதகர் என்ற வடமொழித் தமிழில் தமது பெயரை மாற்றிக் கொண்டு, வேதங்களில் உள்ள குறைகளையெல்லாம் படித்துக் காண முற்பட்டார்.

மதுரை நாயக்க மன்னர்களை கிறித்துவ மறைக்கு மாற்று வதற்கான பெருமுயற்சிகளை மேற்கொண்டார். பிராமணர் களிடம் வடமொழி பயின்று (வீரமாமுனிவர் பிற்றை ஆண்டு களில் தமிழ் கற்றது போன்றே), பிராமணர்கள் சொல்லிய வேத மந்திரங்களைத் தாமும் சொல்லி, ஆரிய வேதம் என்பது எவரா லும் படிக்கவோ புரிந்து கொள்ளவோ இயலாது ஒரு வேதம் அன்று என்பதை மெய்ப்பித்தார். அக்காலத்தில் தமிழ் நாட்டில், பிராமணர்களைத் தவிர, தமிழர் எவருக்கும் வேதங்கள் பற்றிய அறிவோ, வடமொழிப் புலமையோ இருந்திருக்க வில்லை. பிராமணர்கள் சொல்லுவதை யெல்லாம் அப்படியே ஏற்றுக் கொள்ளும் மன நிலையிலேயே தமிழர் இருந்தனர். சமற்கிருதம் தேவ மொழி என்பதால் அதைப் புரிந்துகொள்ள இயலாது என்றும், தேவர்களின் பிறப்பான பிராமணர்களால் மட்டுமே அம்மொழியைப் புரிந்துகொள்ள முடியும் என்றும், தமிழர் களுக்கு வடமொழியைப் படிக்க அறிவில்லை என்றும் பிராமணர் கள் கூறிவந்ததை உண்மையென்றே தமிழர்கள் கருதிவந்த நாட்களில், இராபர்ட்-டி-நொபிலியின் சமற்கிருத விளக்கம் தமிழர்களை வியப்பில் ஆழ்த்தியது. வேதங்களைப் படித்த நொபிலி அவ்வேதங்களில் பொய்யும் புழுகுமே நிறைந்திருப்ப தாக கூறியதைக் கேட்ட தமிழர், நொபிலி சொல்வதும் உண்மை யென்றே நம்பினர். தமிழர்களால் கற்க இயலாத வடமொழியை ஒரு ஐரோப்பியர் கற்றுத் தெளிந்துவிட்டார் என எண்ணும் போது, நாமுங்கூட வடமொழியைக் கற்கலாம் என்றும் தமிழர் நினைத்தனர். தமது சமயப் பணிக்கு ஏற்ற ஒரு மாபெரும் உத்தியாகவே, நோபிலி வடமொழியில் பேசித் தள்ளினார் என்பதையும் மக்கள் புரிந்து கொள்ளவில்லை. நோபிலியின் இந்த சமயப்பரப்பு உத்தியும் கூட மக்களிடம் எடுபட்டது.

நொபிலி, தமிழ் நாட்டிலிருந்து கிடைத்த யசூர் வேதத்தின் படியை (copy) ஐரோப்பாவில் அறிமுகம் செய்தார். இதன் மூலம் நொபிலியும் பெரிய ஆய்வாளரே என்ற கருத்து ஐரோப்

170. மேலதே. முன்னுரை.

பாவில் நிலை பெற்றது. இந்த நூலின் ஒரு படியை பிரெஞ்ச் அறிஞர் வால்டேர் (voltaire) என்பார், பாரீஸ் நகரத்து நூல் நிலையத்தில் சேர்ப்பித்தார். பின்னர் கர்னல் போலியர் (Colonel Polier) என்பார், நான்கு வேதங்களையும் இலண்டனிலுள்ள அருங்காட்சியகத்தில், கி.பி. 1798ஆம் ஆண்டில் சேர்ப்பித்தார். இவைகள் ஐரேப்பாவில் மாறுபட்ட சிந்தனைகளைத் தோற்று வித்தன. அலெக்சாந்தர் படை எடுப்புக்குப் பின்னர், கிரேக்கர் களோடு பழகிய ஆரியபிராமணர்கள், கிரேக்க மொழியைக் கற்றுக் கொண்டு, கி.மு. 300 ஆண்டுகளுக்குப் பிறகே, சமற் கிருதம் என்ற மொழியைப் படைத்துக் கொண்டு, அப்போது இந்தியாவிலிருந்த சமயங்களைத் தம்வழியாக்கிக் கொண்டு, அவைகளுக்கு வேதங்கள் என்று புதுப்பெயர் கொடுத்து, அவ் வேதங்களின், பொய்யான படிகளை (copys) ஐரோப்பியாவில் பரப்பிய ஆரிய வேத ஆய்வாளர்களை, ஐரோப்பிய அறிஞர் கள் கடுமையாகச் சாடினர். கிரேக்க உரோமத் தொன்மக் கதைகளை விஞ்சும் கட்டுக்கதைகள் ஆரியர்கள் வேதங்களில் இருப்பதைச் சுட்டிக் காட்டி, இவைகள் நாகரிகமற்றவர்களின் நாடோடிக் கதைகள் என்றும் நையாண்டிசெய்தனர். மேற் கண்ட தகவலை மகிரிஷி என்பார் தனது ரிக் சம்ஹிதை என்ற நூலின் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.[170]

வில்சன் என்ற ஆங்கிலேயர், ரிக்வேத சங்கிடா (Rig Veda Sanhita) என்ற நூலை ஆங்கிலத்தில் எழுதினார். இரிக்கு வேதத்தை, வடமொழி அறியாதவர்கள் புரிந்து கொள்ள இந்நூல் பெரிதும் உதவுகிறது. மாக்ஸ்முல்லர் (Prof. Friedrich Max Muller, *1823-1900* A.D.) என்ற செர்மானியர், சமற்கிருதத்தைக் கற்று, வேதங்களுக்குப் பொருள் உரைத்தார். ஆரியச் சொற்களுக்கான வேர்ச் சொற்கள் பலவற்றிற்கும் விளக்கம் கொடுத்துள்ளனர். மாக்ஸ் முல்லர் தமிழ் மொழியைப் பற்றி அறிந்திராததால், அவர் கொடுத்த பல விளக்கங்கள், தமிழ் மொழியின் வேர்ச் சொற்களாகவே யுள்ளன. இரிக்கு வேதத்தை *(1849-75)* அச்சிட்டு வெளியிட்டவர். *பிராசீன சம்ஸ்கிருத சாரஸ்தவ சரிதா, பாரதீய தர்ஷன் ஷட்க, பிராச்சிய சாரஸ்வத பவித்திர கிரந்தாவளி* போன்ற நூல்களை வெளியிட்டார். ஆரியத்தில் கூறப்பட்டுள்ள தொன்மக்கதை களை ஆய்ந்து, பல நூல்களை (Comparative Mythology) வெளி யிட்டுள்ளார்.[171] இவர் ஆரிய மொழியில் காட்டிய ஆர்வம்,

171. மேலதே, வரலாறு.

முதலில் சொல்லப்பட்ட இரு கரணியங்களுக்கும் மாறுபட்டது. செர்மானிய மொழி மேலை ஆரியம் என்றும், சமற்கிருதம் கீழை ஆரியம் என்றும் சொல்லப்பட்டதும், ஆரியர்கள் செர்மன் நாட்டிலிருந்து இந்தியாவில் குடியேறியவர்கள் என்பதும், ஆரியர்கள் மீது இயற்கையான பற்றுதலை மாக்சு முல்லருக்கு ஏற்படுத்தின. உலகின் உயர்ந்த இனம் ஆரிய இனமே என்று, 20ஆம் நூற்றாண்டில் இட்லர் போன்ற தலைவர்கள் வலியுறுத்திச் சொன்னதற்கான அடிப்படையான செய்திகளைத் தந்தவர் மாக்ஸ் முல்லரே. இந்திய ஆரியத்தை போற்றுவதின் வழியாகவும், ஆரிய வேதத்தை உயர்த்துவதின் மூலமும், உலகிற்கே மருத்துவம், ஓகம், வானவியல், அறிவியல் போன்ற அறிவுச் செல்வங்களை ஆரியர்களே அளித்தனர் என நிலை நாட்ட முடியும் என்று நம்பினார். இந்திய ஆரியத்தைப் போற்றுவதின் மூலம் செர் மானிய ஆரியம் போற்றப்படும் என்றும் எண்ணினார். ஐரோப்பியர்களில் அறிவிற்சிறந்தோர் செர்மானியரே என்ற நிலைப்பாட்டை உறுதிசெய்து கொள்ளவே, மாக்ஸ் முல்லர் இந்திய ஆரியத்தைத் தாங்கிப்பிடித்தார்.

மேலை நாட்டோர், ஆரிய வேதங்களுக்கு விளக்கங்கள் கொடுத்தபிறகே, தமிழர்களும் இந்தியர்களும் ஆங்கில வழி நூலைக் கற்று வேதங்களைப் பற்றித் தெளிவு பெற்றனர். சூத்திரன் வேதம் படிக்கக் கூடாது. கேட்கக் கூடாது என்ற நடைமுறை பிற்காலத்தில் ஐரோப்பியரால் மீறப்பட்டதால், சூத்திரர்களும் வேதம் படித்தனர். இதுவரை மறை பொருளாக வைக்கப்பட் டிருந்த வேதங்கள் இவ்வளவுதானா என்று கேட்கும் அளவுக்கு, வேதங்களைப் பற்றிய ஆய்வுகள் நீண்டன. இருபதாம் நூற் றாண்டின் பிற்பகுதியிலேயே, வேதங்களைப் பற்றிய ஆய்வுகள் பலராலும் மேற்கொள்ளப்பட்டன. வேதங்கள் கூறும், செய்தி கள், சிந்துவெளித் தமிழர்களையும், அவர்கள் வாழ்க்கை முறை களையும் விளக்கம் அளிப்பவைகளேயென்றும், தமிழரின் நம்பிக்கைகளும், தொன்மக்கதைகளுமே, இரிக்கு வேதத்தில் உள்ளனவென்றும், குருவிக்கரம்பை வேலு என்பார், தனது அரப்பாவில் தமிழர் நாகரிகம் என்ற நூலில் குறிப்பிடுகிறார்.

○○○

12

# தமிழ் இலக்கியங்களில் ஆரியத்தின் தக்கமும் ஊடுருவலும்

கி.மு. 500 ஆண்டுகளிலேயே, ஆரிய மொழி, சமயம், நெறி முறைகள், அவர்தம் தொன்மக்கதைகள் பலவும் தமிழ்நாட்டில் பரவத்தொடங்கின. கடைக்கழக நூல்கள் யாவும் ஆரியக் கதை களையும் ஆரிய மொழிச் சொற்களையுமே பரவலாகக் கொண்டிருக்கின்றன. திருக்குறள் மட்டுமே, தனித்தமிழில், மொழிக்கலப்பற்று, எழுதப்பட்டும், ஆரியத் தொன்மக் கதை களை விலக்கியும் எழுதப்பட்ட நூலாக விளங்குகிறது. தொல் காப்பியத்திலும் (கி.மு. 700) ஆரியத்தின் தாக்கம் படர்ந்துள்ள தாகப் பாவாணர் கூறுகிறார். தொல்கப்பியத்தில் கூறப்பட்டுள்ள இலக்கண அமைவுகளும், தமிழர்தம் வழக்காறுகளும், தொல் காப்பியர் காலத்துக்குப் பலவாயிரம் ஆண்டுகட்கு முன்பே வழக்கில் இருந்து வந்துள்ளன. அவைகளையெல்லாம் படித்தும், அறிந்தும், முந்து நூல்களில் உள்ள செய்திகளைக் கொண்டும், தொல்காப்பியம் இயற்றப்பட்டதாகப் பனம்பாரணனார் கூறு கிறார். தொல்காப்பியர் பயின்ற, அறிந்த நூல்கள் எல்லாம் அழிந்து பட்டன என்பதால், அவர் பயின்ற நூல்கள் பற்றிய செய்திகளை அறியமுடியவில்லை.

செந்தமி ழியற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்

என்ற பனம்பாரனார் வரிகள்,[172] தொல்காப்பியத்திற்கு முன் பிருந்த நூல்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அந்நூல்கள் அனைத்தும் தனித்தமிழிலேயே இருந்தன என்பது தெளிவு.

172. தொல்காப்பியம், சிறப்புப் பாயிரம்.

தொல்காப்பியர் காலத்தில் வடமொழியின் தாக்கம் உணரத் தொடங்கியது பற்றியே,

**இயற்சொல் திரிசொல் திசைச் சொல் வடசொலென்**
**றனைத்தே செய்யுள் ஈட்டச்சொல்லே. –தொல்காப்பியம்[173] 880**

என்ற சொய்தி, வடசொல்லையும்* தமிழ்மரபில் செய்யுளில் பயன்படுத்துவதில் தவறில்லை என்றே சுட்டுகிறது. விசேஷம் என்பதை, விசேடம் எனப் பயன்படுத்தலாம் என்ற வகையில்.

**நூலே கரகம் முக்கோல் மணையே**
**ஆயுங் காலை அந்தணர்க் குரிய – தொல்காப்பியம்.[174]**

ஆரியர்கள் முக்கோலைப் பயன்படுத்திய செய்தியும் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளதால், ஆரியர்களின் வருகை, தமிழகத்தில் நிலைபெற்றிருந்ததையே காட்டுகிறது. (ஆரியர் பற்றிய தொல்காப்பியச் செய்திகள் யாவும் இடைச்செறுகல் களே - ஆசிரியர்) அந்தணர் என்ற தமிழ்ச் சொல்லையே தொல் காப்பியர் பயன்படுத்தியதால், ஆரியத் துறவிகளுக்கு அவர்கள் மொழியில் என்னபெயர் இருந்தது என்பது தெரியவில்லை. அவர்களின் பெயர் ஒலிக்கவும் எழுதவும் இடற்பாடாய் இருந் திருக்க வேண்டும் அல்லது ஏது மில்லாமலும் இருந்திருக்க லாம் என்றே எண்ணத்தோன்றுகிறது.

ஆரியரின் தமிழ்நாட்டு வருகை கி.மு. 1000-700 ஆண்டு களில் நடைபெற்றிருக்க வாய்ப்புகள் உண்டு. பாரதப்போர் இவ்விணைப்புக்கு வழிகோலியிருக்க வேண்டும். தமிழ் மன்னர் கள் அனைவரும், வடபுலத்தில் நடைபெற்ற பாரதப்போரில் ஈடுபட்ட காலத்தில், ஆரியர்களுக்கும் தமிழர்களுக்கும் இடை யேயான தொடர்புகள் உருவாகியிருக்க வேண்டும். இவ்வுறவின் தொடர்ச்சியாக, ஆரியர்கள் தென்னாட்டுக்கு வருகை தரும் வாய்ப்புகள் பெருகி வளர்ந்தன. என்றே கூறலாம். அறிமுக மில்லாதவர்களிடம் பழகுவதற்கும், ஏற்கனவே அறிமுகமானவர் களிடம் பழகுவதற்கும் உள்ள நெருக்கம் கூடுதலாகவே அமையும். இலக்கியச் செய்திகளில் அடிப்படையில் நோக்கும் போதும்,

---

173. தொல்காப்பியம், சொல், 880.

174. தொல்காப்பியம், பொருள், 1570.

* வடசொல் என்பது சமற்கிருதம் அன்று என்பதை நூலாசிரியரின் "தொல்காப்பியச் சிந்தனை" என்ற நூலில் காண்க.

ஆரியக் கதைகள் சொல்லும் செய்திகளின் அடிப்படையிலும், பரசிராமன் தென்னாட்டுக்கு வந்த செய்தியைக் கருதுகின்ற போதும், பாரதப் போருக்குப் பின்னரே ஆரியரின் வருகை தமிழ் நாட்டில் நிகழ்வுற்றது எனக் கொள்ளலாம். இந்த ஆரிய-தமிழர் உறவின்படியே, பாணினியின் நூலும் தொல்காப்பியத்தை அடியொற்றி எழுதப்பட்டிருப்பதும், தொல்காப்பியம் கூறும் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் செய்திகளே, ஆரியரின் நால்வகை வருணங்களாக மாற்றப்பட்டன எனவும் தெளியலாம், இராமாயண காலத்திலும், பாரத காலத்திலும் நால்வருணங்கள் பற்றிய செய்திகள் சிறப்பித்துக் கூறப்படவில்லை. அவ்வாறு ஒன்றிரண்டு கூறப்பட்டுள்ள செய்திகளும் தொழிலை அடிப் படையாகக் கொண்டவைகளே என்றும், அதன்வழியில் சூத்திரர்கள் என்றவாறு எவரும் நடத்தப்படவில்லை. என்பதையும் அறியலாம்.

தொல்காப்பியர் ஆரியரே என்ற கருத்தும் உண்டு. என்றாலும் அவர் சேர நாட்டுத் தமிழரே என்ற கருத்தும் உண்டு. தொல்காப்பியர் பல தவறுகளைச் செய்துள்ளார் என்றும், விரிக்க வேண்டியதைச் சுருக்கியும், சுருக்க வேண்டியதை விரித்தும் கூறியுள்ளார் என்றும் பாவாணர் கருதினாலும், பண்டைத் தமிழர் நாகரிகத்தையும் பண்பாட்டையும் தாங்கி நிற்கும் பெரும் தூணைப் போன்றே உள்ளார் எனவும் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியம் என்ற நூல் மட்டும் கிட்டாமற் போயிருந்தால், உலகம் உள்ளளவும் தமிழன் ஆரிய னுக்கு அடிமையாகவே வாழ்ந்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கும் எனவும் விளக்குகிறார். **குமரி நாட்டுத் தமிழன் தன் நுண்மான் நுழை புலத்தால் வகுத்த பொருளிலக்கணம், தொல்காப்பியத்தில் வெளிப்பட்டுள்ளதையும் பாவாணர் புகழ்ந்துரைக்கின்றார்.**

தொல்காப்பியரின் தவறான விளக்கங்களாகப் பாவாணர் குறிப்பிடும் செய்திகள், தொல்காப்பியரினும் விஞ்சிய இலக்கண அறிவைப் பாவாணர் பெற்றிருந்தார் என்பதையே காட்டுகின்றன. சகரக்கிளவி (ச என்ற எழுத்து) தமிழ்ச் சொல்லுக்கு முதலில் வாராது என்ற தொல்காப்பியரின் கூற்றை மறுத்து, பலநூறு சொற்கள் தமிழில் உள்ளதையும், அவற்றிற்கான தமிழ் வேரினையும் காட்டுகிறார். தொல்காப்பியர் உலக வழக்கைச் சரியாக ஆராயாமல், பல இளைமையைச் சுட்டும் (Juvenile) பெயர்களை விட்டுவிட்டதையும், பல ஆண்பாற்-பெண்யாற்

பெயர்களை விட்டுவிட்டதையும் குறிப்பிடுகின்றார். ஒன்பது என்ற புதிய சொல்லை, தொண்டு என்பதற்குப் பதிலாகச் சொல்லி புதிய குழப்பத்தை ஏற்படுத்திவிட்டதையும், புணர்ச்சி விதிகளில் இலக்கண மரபுகள் பின்பற்றப்படவில்லை என்றும் எடுத்துக்காட்டுகிறார். ஆரியத்தின் தாக்கம் தொல்காப்பியத்தில் இருந்தது ஒரு வகையில் தமிழுக்கு நன்மை என்றும், அவ்வாறான ஆரியத் தொடர்பு தொல்காப்பியத்துக்கு இல்லாது போயிருந் தால், தொல்காப்பிய நூலையே தமிழ்ப்பகைவர் அழித்திருப்பர் என்றும் கூறுகிறார்.*

தொல்காப்பியர் கூறும் நால்வகை வருணம், ஆரிய வகுப் பினின்று மாறுபட்டிருந்தாலும், ஆரிய வருணம் போன்றே சொல்லப்பட்டுள்ளதால், வருணப்பிரிவு தொல்காப்பியர் காலத்தில் தொடக்கம் பெற்று, பின்னர் வளர்ந்திருக்கலாம் என்பர்.*

நூலே கரகம் முக்கோல் மணையே
ஆயுங் காலை அந்தணர்க் குரிய[175]

அந்த ணாளர்க் குரியவும் அரசர்க்
கொன்றிய வரூஉம் பொருளுமா ருளவே[176]

அந்த ணாளர்க் கரசுவரை வின்றே[177]

என அந்தணர் பற்றியும்,

படையுங் கொடியுங் குடையும் முரசும்
நடைநவில் புரவியுங் களிறுந் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவுகொள் செங்கோல் அரசர்க் குரிய[178]

என அரசர் பற்றியும்,

வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை[179]

என வணிகர்கள் பற்றியும்,

175. மேலதே,
176. மேலதே, 1572.
177. மேலதே, 1574.
178. மேலதே, 1571.
179. மேலதே, 1578.

* ஆரியரின் இடைச்செருகல் என்றும் கூறலாம் மேலும் விளக்கங்களுக்கு ஆசிரியரின் தொல்காப்பியச் சிந்தனைகள் என்ற நூலைக் காண்க.

வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி[180]

என வேளாளர் பற்றியும், தொல்காப்பியம் கூறுகிறது.

பொதுமக்களில் அனைத்துத் தொழில் செய்தோரும், அரசராக வருவதற்கு வாய்ப்பு இருந்தது. ஆனால் சத்திரியர் மற்றுமே அரசனாகலாம் என்று மனுதர்மம் கூறுவது, தமிழர் வழக்கிற்கு மாறுபட்டது. இடைக்காலத்தில் சிவாஜி என்ற மராட்டிய மன்னன் பட்ட மேற்கும் விழாவிற்கு (பட்டாபிஷேகம்) பிராமணர்கள் வர மறுத்துவிட்டனர் என்பதற்கு, சிவாஜி சத்திரியன் அல்லன் என்றும், அவன் சூத்திரனே என்றும், பிராமணர்கள் கருதினர் என்ற செய்தி சொல்லப்படுள்ளது. பின்னர் சிவாஜி, தான் சூத்திரன் அல்லன் (உண்மையில் சூத்திரனே) என்றும், சத்திரியனே என்றும் மெய்ப்பிக்க படாதபாடுபட்டு, பணத்திற்கு அவாவுற்ற பிராமணர்களுக்கு ஏராளமான பொன்னும் பொருளும் கையூட்டாக அளித்து, பட்டாபிஷேகம் செய்து கொண்டான் என்று வரலாறு கூறுகிறது. ஆனால் அக்காலத்துத் தமிழகத்தில் அவ்வாறான நிலை இருந்திருக்கவில்லை.

வில்லும் வேலுங் கழலுங் கண்ணியும்
தாரும் ஆரமுந் தேரும் வாளும்
மன்பெறு மரபின் ஏனோர்க்கு முரிய[181]

அன்ன ராயினும் இழிந்தோர்க் கில்லை[182]

என்ற வரிகளை மேற்கோள் காட்டி, சூத்திரர்க்கு அரசராகும் தகுதி இல்லை என உரைத்தனர். இழிந்தோர் என்போர் மேற்கண்ட நால்வருள்ளும், இழிந்த நடத்தையைக் (ill morality) கொண்டிருந்தோரே எனப் பொருள் உணர்தலே பொருத்தமானதாகும். வணிகர் வேளாளர்க்கு மேற்கூறியவை இல்லை என்பது சரியான பொருளைத் தருவதாகத் தெரியவில்லை.

கீழ்க்கணக்கு என்ற சொல்லைப் பயன்படுத்தி, பதினெட்டு நூல்களைப் பிற்காலத்து உரையாசிரியர்கள் வகைப்படுத்தினர். கடைக்கழக நூல்கள் ஆசிரியப் பாவகையில் எழுதப்பட்ட

---

180. மேலதே, 1581.

181. மேலதே, 1583.

182. மேலதே, 1584.

இவைகள், வெண்பா வகையில் எழுதப்பட்டன. பதினெண் கிழ்க்கணக்கு நூல்களில் பதினொன்று நல்லொழுக்கத்தைப் பற்றியும், ஆறு அகப்பொருள் பற்றியும், ஒன்று புறப்பொருள் பற்றியும் சொல்லப்பட்டன. இந்நூற்கள் கி.பி. 250-600 காலங் களில் எழுதப்பட்டிருக்கலாம் என்ற கருத்துமுண்டு. திருக்குறள் கி.மு. முதல் அல்லது கி.பி. முதல் நூற்றாண்டென்பர். முதுமொழிக் காஞ்சியும் ஆசாரக்கோவையும் கி.பி. 600 களில் எழுதப்பட்டன என்ற கருத்துமுண்டு.

திருக்குறளுக்கு மற்ற நூல்களைவிட சிறப்பு உண்டு. தமிழில் எழுதப்பட்ட நூல்களில் திருக்குறளின் இடத்தை வேறு எந்த வொரு நூலாலும் நிரப்ப இயலாது. தமிழறிஞர் இளமுருகனார் கூறும் ஒரு கருத்துப்படி, "உலகின் உயர்வான பளிங்குக் கற்களால் கட்டப்பட்ட தாஜ்மகால் என்ற கட்டிடத்தில், ஒரு பளிங்குக் கல்லை எடுத்துவிட்டு, அவ்விடத்தில் தற்காலத்தில் கிடைக்கும் அதே நிறத்திலான கல்லை வைத்துப் பூசிவிட்டால், புதிதாகப் பதிக்கப்பட்ட கல்லை, அடையாளங் கண்டுகொள்ளாமல் செய்துவிட முடியும். திருக்குறளில் உள்ள 9310 சொற்களில், ஒரு சொல்லை எடுத்துவிட்டு, அதற்கு மாற்றான ஒரு சொல்லை, அவ்விடத்தில் வைக்க இயலாது, என்று கூறுவார்.[183] திருக்குறள் அதுபற்றியே, இன்று வரையிலும் பல்வேறு அறிஞர்களால் கவரப்பட்டு, புதுப்புது உரைகளும் எழுதப்பட்டு வருகின்றன. விவிலியத்துக்கு அடுத்ததாக, உலகில் மொழிபெயர்க்கப்பட்ட நூலாகவும், இலக்கிய வரிசையில் முதல் நூலாகவும் திருக்குறள் போற்றப்படுகின்றது.

திருக்குறளை எழுதியது ஒரு பறையனே என்று வின்ஸ்லோ என்ற ஆங்கிலேயர், கி.பி. 1862ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட அகரமுதலியின் முன்னுரையில் குறிப்பிடுகிறார்.[184] இருந்தாலும் அவரைப் புனிதப் பறையன் (Sacred Paraiyah) என்கிறார். அகத்தியன் போன்ற ஆரியரே இந்நூலை எழுதினார் என்று கருத இடமில்லை என்பது தெளிவு. திருவள்ளுவரைப் பறையன் என்றது தமிழ்க்குடியின் பெருமையை உயர்த்திச் சொன்ன தாகவே கொள்ள வேண்டும். ஆனால் பலருக்கு (தமிழருக்குதான்) இது நெருடலாகத் தெரிந்தது. உயர்வான ஒரு நூலை ஒரு பறையன்

183. அரியலூர்த் தமிழ்ச் சங்க சொற்பொழிவு, இளங்குமரனார், நாள் 24.4.04

184. வின்ஸ்லோ அகரமுதலி, ஆங்கில முன்னுரை.

எழுதியதாகக் கொள்வதா என்று நினைத்து, வள்ளுவர் வேளாளர் மரபில் தோன்றி, நெசவுத் தொழில் செய்துவந்தவர் என்றும், ஈழத்து வணிகன் ஏலேல சிங்கனிடம், அடிக்கடி நூல் (Yarn) வாங்க மைலாப்பூர் வருவார் என்றும் கதை கட்டினர்.[185] மேலும் சிலர் ஆதி என்ற புலைப்பெண்ணுக்கும் (ஐந்தாம் வகுப் பான பஞ்சமன்) பகவன் என்ற வள்ளுவனுக்கும் பிறந்தவரே என்றனர்.[186] திருவள்ளுவரைத் தமிழன் என்று எண்ணியவாறு எந்தக் கதையும் சொல்லப்படவில்லை. பிராமணனான பாரதியே, வான்புகழ் வள்ளுவன் என்று சொல்லி, வள்ளுவனைத் தமிழகம் ஈன்றெடுத்ததால், தமிழகம் உலக அளவில் பெருமை பெற்றது என்றார். தமிழகத்தில் பற்றியிருந்த (இருக்கின்ற) சாதிகளின் பிணைப்பு திருவள்ளுவரையும் விட்டுவைக்கவில்லை என்ப தற்கு மேற்கண்ட செய்திகள் எடுத்துக் காட்டுகளாகும்.

திருக்குறளே, மற்ற நூல்களைவிட, வடமொழிச்சொற்கள் கலக்கப்படாத நூலாகும். பகவன் என்ற சொல், வடசொல் லெனவும், அது பகவான் (Bagwan) என்ற கடவுளைக் குறித்ததே என்றும் கூறுகின்றனர். பகவன் என்பது தமிழ்ச் சொல்லே.

பகு - பகுத்தல், பிரித்தல் என்ற மூலச் சொல்லினின்றும் நீண்ட பகல், பகலன் என்ற சொற்கள் ஞாயிற்றைக் குறித்தன. கோள்களெல்லாம் ஞாயிற்றின் பிண்டங்களே என்பதும், ஞாயிறே உலகின் உயிரினத் தோற்றுவாய்க்கும் வளர்ச்சிக்கும் முதன்மையானவன் என்ற பொருளிலும், ஞாயிறே பகவன் என்றும், அவன் முன்னிலும் முதன்மை பெற்றவன் என்பதால் ஆதிபகவன் எனப்பட்டதாகவும் கொள்ளவேண்டும். யாடு என்ற சொல், விண்மீன்களையும் ஞாயிற்றையும் குறித்த தமிழ்ச் சொல்லே, யாடு - யாது ஆதி என்றவாறு பழமையைக் குறித்தும் சொல்லப்பட்டது. ஆதிபகவன். தொன்மைமிக்க ஞாயிறு. எழுத்துக்களுக்கு அகரம் முதன்மை பெற்றதுபோல், உலகிற்கு ஞாயிறே முதன்மை பெற்றது என உணர்வதே சரியான சிந்தனை யாக அமையும். ஆதி-பகவன் என்ற சொற்கள் வடசொற்கள் என்று பிராமணர்கள் கருதியதாலும், திருக்குறள் ஆரியத்தின் கொள்கையை விளக்கும் நூலே என்று உணர்ந்ததாலும், பரிமேலழகர் போன்ற பிராமணர் இதற்கு உரை எழுதியதாலும்,

185. கபிலர் அகவல் மற்றும் திருவள்ளுவ மணிமாலை.

186. மேலதே.

திருக்குறள் அழிவினின்றும் தப்பித்தது எனலாம். இப்போது அறியப்படுவதுபோல் அது தமிழர்தம் நூலே என்று அப்போது அறியப்பட்டிருந்ததால், திருக்குறளும் அழிக்கப்பட்டிருக்கும்.

திருக்குறளை ஒவ்வொரு சமயத்தாரும் தமது நூலாகவே கூறிக் கொள்வதே. அது சமயங்களையும் கடந்து நிற்கும் பெருமை மிக்க நூலெனப் புலப்படும். ஆதிபகவன் என்ற சொல், விஷ்ணு வைக் குறிப்பதாகவும், ஆதிமுலமான விஷ்ணுவையே இச்சொல் குறிப்பதாகவும், இது பகவத்கீதையின் சிலவரிகளுடன் ஒற்றுமைப் படுவதாகவும் கூறி,[187] திருவள்ளுவர் மாலியத்தைச் சார்ந்தவரே என்பர். மூன்றடியால் உலகளந்த மாலைப்போன்று, குறுகிய அடிகளால் உலகளந்தவர் திருவள்ளுவர் என்றும் உரைப்பர். சிவமரபைச் சார்ந்தோர், குறள் எண்கள் 1, 3, 4, 6, 7, 9 ஆகியவை சிவனைக் குறித்துச் சொல்லப்பட்டதாகவே கருதுகின்றனர்.

**மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்**
**பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்**

எனும் குறள்,[188] ஆரியர்களின் சமயத்தையும், பிராமணர்களை யும் குறித்துப் பாடப்பெற்றதே என்பர்.

**அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்**
**உயிர்செகுத் துண்ணாமை நன்று**

என்ற பாடல் ஆரியர்களையும், சமய வேள்விகளையும் சாடும் பாடல் என்று, புத்தசமயத்தார் உரைப்பர்.[189]

குறுக்கம் (சிலுவை) என்ற பொறியில், ஐந்து புண்களை உடலில் பெற்ற இயேசுவின் நெறி நின்றார் நீடுவாழ்வரென்று கிறித்துவர் கூறுவர்.[190] சென்ற நூற்றான்டின் இடையில், திருக்குறள் கிறித்துவ நூலே என்றும், அதனை மெய்ப்பிப்பதற் கானச் சான்றுகள் உள்ளனவென்றும் கூறி, சென்னையைச் சேர்ந்த பிராமணர் ஒருவர், கிறித்துவ சமயத் தலைவர் ஒருவ ரிடம் பல இலக்கக்கணக்கான உருபாய்களைப் பெற்றுக்

---

187. Geetha, Chapter 18, Sloka 61.
Chapter 10, Sloka 33.

188. திருக்குறள், 134.

189. மேலதே, 259.

190. ஏழு எழுபது, புலவர் தெய்வநாயகம்.

கொண்டு ஏமாற்றிவிட்டார் என்பது பலருக்கும் தெரிந்த செய்தியே. இரிக்குவேதம் கூறும் இந்திரனை திருவள்ளுவரும் மேற்கோள்காட்டி, அகல்விசும்புளார் கோமான் என்று கூறி யிருப்பதை,[191] ஆரியர் சமய வழி வந்தோர் சுட்டுகின்றனர். இந்திரன் என்ற ஒரு பெயரைத் தவிர்த்து வேறுபெயர்கள் திருக்குறளில் சொல்லப்படவில்லை என்பது நோக்கத்தக்கது. இந்திரன் தமிழ்க் கடவுளே என்றும், மருதநிலத் தெய்வம் என்றும், பூம்புகாரில் நடைபெற்ற இந்திரவிழா நிகழ்வுகள், ஆரியரின் இரிக்கு வேதம் எழுதப்படுவதற்கு முற் காலங்களிலேயே கொண்டாடப்பட்டது என்றும், அப்பெயர் விந்து என்ற தமிழ்ச் சொல்லின் நீட்சியே என்றும் பாவாணர் விளக்குகிறார்.

இன்னா நாற்பது, கபிலர் இயற்றிய 40 பாக்களைக் கொண்டது. கீழ்க்கணக்கில் நான்காவது நூலாகும். இவை இன்னிசை வெண்பாக்களால் ஆனவை. விலக்கப்பட வேண்டி யவைகளைக் கூறுவதே இன்னா நாற்பது. தமிழகத்தின் குமுகாய, பண்பாடுச் செய்திகளை இந்நூல் விளக்குகிறது. நூல் முழுதும் ஆரியரின் கருத்துக்கள் பரவலாகப் புகுத்தப்பட்டுள்ளன. தமிழகத்தில் ஆரியத்தின் தாக்கமும் ஊடுறுவலும் இந்நூலின் வாயிலாக வெளிப்படுகின்றன. பிராமணர்களின் வீட்டில் சமைக்கப்படும் உணவு,[192] அவர்கள் வளர்த்த கோழி மற்றும் நாய்,[193] பரதவர் கீழ்நிலை மக்களாகக் கருதப்பட்டது,[194] இவர் களோடு மற்ற வகுப்பார் கலக்காமல் ஒதுங்கியிருந்தது,[195] விலங்குகள் மற்றும் மரக்கறி உணவுகள்,[196] சுடரியம் என்ற சோதிடம்[197] பற்றிய ஆரியச் சார்புடைய செய்திகள் இந்நூலில் காணப் பெறுகின்றன. இதனை எழுதிய கபிலர் ஒரு பிராமணரே.

இனியவை நாற்பது, மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்சேந்தனார் இயற்றியது. இன்னா நாற்பதை விட இலக்கிய வளத்தில் குறைவு பட்டிருந்தாலும், கருத்துச் செறிவில் அதனினும்

191. திருக்குறள், 25.

192. இன்னாநாற்பது, 1:3.

193. மேலதே, 2:1.

194. மேலதே, 12:2; 34:3.

195. மேலதே, 21:4.

196. மேலதே, 2:3, 22:2.

197. மேலதே, 31:2.

முந்தி நிற்பது. ஏற்றுக் கெள்ளப்பட வேண்டியவைகள் பற்றிக் கூறுவதே இனியவை நாற்பதாகும். தமிழகத்தில் ஆரிய சமயத்தின் நிலைப்பாடுகள் பற்றியும்,[198] சமணர்களின் கொள்கைகள் பற்றியும் இனியவை நாற்பது கூறுகின்றது. ஆரியச்சமயக் கருத்துக்களும், பிராமணக் கடமைகளில் முன்றாவதான சந்நியாசம் பற்றியும்,[199] உலக வாழ்க்கையை விலக்குதல் குறித்தும்,[200] இன்னாசெய்யாமை (அகிம்சை) பற்றியும்,[201] பிராமணர்களுக்குப் பொன்னும் பசுவும் அளிக்க வேண்டிய கடமைகள் பற்றியும்,[202] பிராமணர்கள் பற்றியும்[203] அவர்தம் வேதங்கள் பற்றியும் இனியவை நாற்பது எடுத்துரைக்கின்றது. இது ஆரியச் சார்புடைய நூலே எலைாம்.

திரிகடுகம், ஏலாதி, சிறுபஞ்சமூலம் ஆகிய நூல்கள், இயற்கையான இலை மூலிகை மருத்துவம் பற்றிய செய்திகளைத் தரும் மருத்துவ நூற்களாகும். பிராமணர்கள் இருப்பதாலேயே நாட்டில் மழை பெய்வதாகவும், வேளாண் மக்கள் பிராமணர்களுக்கு உறுதுணையாக இருக்கவும் அவர்களைப் போற்ற வேண்டுமென்றும்,[204] வேதங்கற்ற பிராமணர்கள் குமுகாயத்துக்கு மிகவும் தேவைப்பட்டவர்கள் என்றும் கூறுகிறது. சிறுபஞ்சமூலம் சொல்லும் செய்திகளில் ஒருசிலரே பிறன்மனை நோக்காமல் இருந்தனர் என்றும், பரத்தையின் வீடு செல்பவன் நாயினும் கடையன் என்று கூறப்பட்டுள்ளன.[205] நாண்மணிக் கடிகை, பிராமணர்களே நாட்டின் உயர் பிறவிகள் என்றும்,[206] அவர்கள் வேள்வி செய்வதால் மட்டுமே வேளாண்மை சிறப்பதாகவும் கூறுகிறது.[207] ஆசாரக்கோவை, கடைக்கழகம் அருகிய காலத்தில் பாடப்பட்டதாகக் கருதுவர். மற்ற நூல்களைவிட

198. இனியவை நாற்பது, 1:1.

199. மேலதே, 39:2.

200. மேலதே, 2, 3,4.

201. மேலதே, 5:1.

202. மேலதே, 23:2

203. மேலதே, 7:1.

204. திரிகடுகம், 98.

205. சிறுபஞ்ச மூலம், 50.

206. நான்மணிக்கடிகை, 32.

207. மேலதே, 51.

பிராமணர்களை மிகவும் உயர்வாகவும் புகழ்ச்சியோடும் கூறு கிறது. பிராமணனிடம் பசுவைப் பெறாதீர்கள் ஆனால் கொடுங்கள் என்றும்,[208] நாட்டில் நடைபெறும் அனைத்துச் சமய விழாக் களும், பிராமணர்களின் அனுமதியின்றியோ, அவர்களின் வழிகாட்டுதல் இன்றியோ நடைபெறக்கூடாது எனவும்,[209] பிராமணனுடைய வழியில் குறுக்கிட எவருக்கும் உரிமையில்லை யென்றும், மக்களில் உயர்ந்தோர் பிராமணரே[210] என்றும் ஆசாரக்கோவை கூறுகிறது.

புத்தமும் சமணமும் ஆரியர்களுக்கு எதிராகத் தோன்றிய சமயங்கள் என்றாலும், தமிழகத்தில் ஒரு கொள்கையையும் வடநாட்டில் வேறு கொள்கையையும், ஆரியர்பால் கொண் டிருந்தன களப்பிரர்கள் ஆட்சிகாலத்தில் (கி.பி. 250-600), புத்தமும் சமணமும் வடஇந்தியாவின் மேற்குப் பகுதிகளில் சிறப்புற்றிருந்தன. ஆந்திரத்தின் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளில் புத்தம் செழித்திருந்தது. தமிழகத்தின் காஞ்சி, புத்தர்களின் மைய நகரமாக விளங்கிற்று.[211] இக்காலங்களிலேயே, தமிழகத்தின் இரட்டைக் காப்பியங்களும், சமண புத்த சமய இலக்கியங் களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் தோன்றின என்றும், களப்பிரர் ஆட்சியே இச்சமயங்களுக்குப் பாதுகாப்பாக இருந்தது என்றும் கே.கே. பிள்ளை கூறுகிறார். ஆனால் இவையிரண்டும் கி.பி. 150-200 ஆண்டுகளில் எழுதப்பட்டவைகளே என்று, கயவாகு வருகையை மேற்கோள்காட்டிக் கூறுவர்.

சிலப்பதிகாரம் மணிமேகலையையும்விட சிறந்த இலக்கிய அமைவுகளையும், சொற்சுவைகளும் பொருட்சுவைகளும் கொண்டது பற்றியே, நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்று போற்றப் படுகின்றது. தமிழர்களின் அக்காலத்து வாழ்க்கை முறைகளை படம்பிடித்துகாட்டும் ஒழுங்கில், சிலப்பதிகாரத் தினும், சிறந்த இலக்கியத்தைக் காணவியலாது. சிலம்பு கூறும் இசை நுணுக்கம், இன்னும் கூடத் தெரிந்து கொள்ளவும், புரிந்து கொள்ளவும் இயலாத தமிழரின் இசைத்துறையின் மேன்மையை

---

208. ஆசாரக்கோவை, 90.

209. மேலதே, 61.

210. மேலதே, 31.

211. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், அ. வேலுப்பிள்ளை, பாரிபதிப்பகப் பண்ணை, சென்னை, 1978, p. 39-40, 49.

விளக்குவதாக உள்ளது.[212] சிலப்பதிகாரம் கூறும் தமிழிசையே, இன்றைய கர்நாடக, இந்துஸ்தானி போன்ற இசைகளுக்கு மூல இசையாகும். கர்நாடக இசை என்பது, தமிழிசையினின்றும் களவாடப்பட்ட இசையே என்று, குடந்தைப் பண்ணாராய்ச்சி வித்தகர் சுந்தரேசனார் கூறுகிறார். ஆய்ச்சியர் இசை, குறவர் இசை எனப் பல்வேறு இசைத் தொடர்பான செய்திகள் சிலப்பதி காரத்தில் மட்டுமே காணப்படுகின்றன. சமணசமய இலக்கிய மாகக் கருதப்பட்டாலும், தமிழ்ச்சமயக் கருத்துக்களும், ஆரியச் சமயத்தின் கொள்கைகளும், ஆரியத்தின் தொன்மக் கதைகளும், பரவலாகப் பாடப்பெற்றுள்ளன. வழக்கில் மரபாகக் கூறப்பட்ட தலைவன் - தலைவி முறையைவிடுத்து, தலைவியை முன்னிலைப் படுத்தி எழுதப்பட்டவைகளே சிலம்பும் மேகலையும் ஆகும். கவுந்தி அடிகள் என்ற பெண் துறவியின் கருத்துக்கள், சமண சமயத்தின் கொள்கைகளைக் கூறுவன.

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஐந்து சமணத்தையும், ஐந்து சிவநெறியையும், மாலியம் நான்கையும் தாங்குகின்றன. எஞ்சிய நான்கும் எச்சமயத்தைத் தாங்குகின்றன என உறுதியாகச் சொல்ல இயலவில்லை. மாலியமும் சமணமும் ஒன்பான் நூல் களை பின்னிப்பிணைந்தே விளக்குகின்றன. பதினெட்டு நூல் களில் ஒன்பது நூல்கள், ஆரியருடைய கொள்கைகளையும் சமயத்தையும் உயர்வாக விளக்குகின்றன. களப்பிரர் ஆட்சிக் காலமான (கி.பி. 250-600) 350 ஆண்டுகள், தமிழக வரலாற்றில் இருண்ட காலம் என்பர். இக்காலத்தில் சமணமும் புத்தமும் ஏற்றம் பெற்றதாகவும், சிவனியம் அச்சுறுத்தப்பட்டதாகவும் செய்திகள் கூறுகின்றன.

இக்காலத்தில் தான் திருமந்திரம் என்ற நூலைத் திருமூலர் இயற்றியதாகவும் சொல்லப்படுகின்றது. 3000 வரிகளுக்கு மேற் கொண்ட திருமந்திரம், தமிழிலக்கிய வரிசையில் ஒரு சிறப்பான நூலாகும். காரைக்காலம்மையார் எழுதிய அற்புததிருவந்தாதி, இரட்டை மணிமாலை ஆகியவைகளும் இக்கால இலக்கியங் களே. களப்பிரர்கள் மதுரையை ஆண்டபோது, காரைக்கால் அம்மையார் மதுரை சென்றதாகவும், மதுரையில் சிவநெறி அச்சுறுத்தலுக்கு ஆளாகி இருந்த நிலையில், மீண்டும் காரைக்கால் திரும்பியதாகவும் செய்திகள் கூறுகின்றன.

○○○

---

212. சிலப்பதிகாரம், அரங்கேற்று காதை.

13

# தமிழர் சமயம்

குமரி நாடே முதல் மாந்தனின் தோற்ற நாடு என அறியப் படும் நிலையில், மாந்த இனப்பெருக்கம் நிகழ்வுற்ற குமரி நாட்டில் தான் முதல் சமயமும் தோன்றியிருக்க வேண்டும். குறிஞ்சி நிலமே மாந்தனின் முதல் உறைவிடமாகவும் இருந்தது. காடுகளிலும் மலைகளிலும் வாழ்ந்திருந்த முதல் இனத்தின் மக்கள், தங்கள் பகைகளான விலங்குகள், இடி, மின்னல், மழை போன்ற இயற்கையின் சீற்றறங்களுக்கும் ஆட்பட்டனர். பகலில் வேட்டையாடியுண்டு பொழுதைக் கழித்த மக்களுக்கு, இரவு நேரங்களில் பல்வேறு அச்சுறுத்தல்கள் இருந்தன. மரங்களி லேயே வாழ்ந்திருந்த குறிஞ்சி நிலமக்கள், மரங்கள் பாதுகாப் பற்றவைகளாக உணர்ந்து, மலையின் குடைவுகளான குகை களில் குடியேறினர். குகைகள் அவர்களுக்குப் பாதுகாப்பாய் இருந்தன. இரவு நேரங்களில், விலங்குகளின் தாக்குதலுக்கு உட்படலாம் என்ற எண்ணத்தில், குகைகளுக்கு முன்பு தீயை மூட்டினர். இயற்கையால் எரிந்து கொண்டிருந்த தீயை வேண்டும் போது பெற, கற்களை உரசி தீயைப் பெற்றனர். உலகின் முதல் அறவியல் கண்டுபிடிப்பாக, தீயை உண்டாக்க மாந்தன் அறிந்து கொண்ட நிகழ்வையே சொல்லலாம். இரவு வேளைகள், மக்க ளுக்கு அச்சத்தையே உண்டு பண்ணின. பகல் வேளைக்காக இரவு முழுதும் காத்திருந்தனர். பகல் பொழுதே அவர்களுக்கு பாதுகாப்பாய் அமைந்திருந்தது பற்றி, ஞாயிற்றை தமக்கு வேண்டியவனாகக் கருதினர் ஞாயிற்றின் வருகையை ஒவ்வொரு நாளும் ஆவலுடன் எதிர்பார்த்தனர்.

இவ்வாறு, ஞாயிறு பழங்காலத்துக்கு குறிஞ்சி நில மக்க ளுக்குப் பாதுகாப்பாய் இருந்தான். ஞாயிற்றின் உதவியைப் பெற்றுக் கொண்ட மக்கள், ஞாயிற்றையே காலப்போக்கில்

தெய்வமாக்கினர். ஞாயிற்றைத் தீயின்வடிவில் மக்கள் வழிபட்டனர் உணவைச் சுடவும், இரவு வேளைகளில் ஒளியைப் பெறவும் தீயையே மக்கள் நம்பியிருந்தனர். இந்தத் தீயை ஞாயிறே உலகிற்கு அளித்ததாகவும் நம்பினர். ஞாயிறு தெய்வமாக ஏற்கப்பட்டது. தீயும் ஞாயிறும் ஒன்றென எண்ணிய மக்கள் இரண்டையும் வழிபட்டனர். உலகின் முதல் தெய்வ வணக்கம் ஞாயிற்றை அடிப்படையாகக் கொண்டதே. ஞாயிற்றின் சிவந்த கதிர்களும், தீயின் சிவந்த நாவும், இறுதியில் சிவனாக அத்தெய்வத்தைச் சுட்டின.

தமிழர்களின் முழுமுதற்தெய்வம் சிவனே ஆவான். சிவன் வடிவில் தீயும் தெய்வமாயிற்று. தீ என்ற தமிழ்ச்சொல்லே, தெய்வம் என்று நீண்டதாகப் பாவாணர் கூறி விளக்குகிறார். தெய்வம், தேவன், தேவர்கள், தேவா (வடசொல்) போன்ற சொற்களும், தியோ (Deo) என்ற இலத்தீன் சொல்லும், டிவைன் (Divine) என்ற ஆங்கிலச் சொல்லும், தீ என்ற தமிழ்ச்சொல்லி னின்றும் பிறந்தவைகளே. சிவந்தது சிவானாகப்பட்டதால், பிற்காலத்தில் மூதிரை என்ற சிவந்த விண்மீனும் சிவனாக உருவகம் செய்யப்பட்டது. மூதிரை மீன் உள்ள ஓரையன் (Orion) கூட்டத்துக்கருகே விளங்கும் விடை ஓரையை (Taurus-ரிஷபம்) சிவனின் ஊர்தியாகவும் உருவகம் செய்தனர். இவ்விரு விண்மீன் கூட்டங்களுக்கும் மேலே படர்ந்து விரிந்திருந்த பால்வெளி எனும் பகுதியைச் சிவனின் முடியாக (சடை) உருவகம் செய்தனர். இவ்வாறு இயற்கையில் காணும் வானியல் உருவகமாகவே சிவன் கருதப்பட்டான்.

தமிழர்களின் முதற் சமயம் சிவ நெறியே என்பதும், அச்சிவநெறியின் தாக்கங்கள், பாபிலோனிய, ஃபோனீசிய, யூத சமயங்களிலும் அறியப்படுகின்றன. என்பதும், உலகளாவி விரிந்து நின்ற சமயமாக, தமிழரின் சிவநெறி ஒரு காலத்தில் விளங்கியது என்பதை உறுதிப்படுத்தும். குறிஞ்சி நிலத்தின் தெய்வமாகக் கருதப்பட்ட சிவன், விலங்குகள் சூழ்ந்த காட்டுச் சூழலில் அமர்ந்தவாறு காட்சி தரும் உருவம், சிந்துவெளி மக்களின் வரிவடிவங்களிலும் காணப்படுகின்றது. சிவனை காட்டுக்கு அரசனாக்கியதாக, பிரசாபதியைப் பற்றி ஆரியத் தொன்மங்களும் கூறுகின்றன. தென்னாட்சித் தெய்வமான சிவன், ஆரியர்களால் சிவா என்றும் உருத்திரன் என்றும்

அழைக்கப்படுகிறான். குமரிக் கண்டத்தின் மேரு மலையில் வீற்றிருந்த சிவனை, இமய மலையில் உள்ள கைலாயத்துக்கு ஆரியர்களே மாற்றினர் எனலாம். சிவனுக்கு இணையாக எந்தப் பெண் தெய்வத்தையும் தமிழர்கள் இணைக்கவில்லை. சக்தி, பார்வதி போன்ற பெண் தெய்வங்கள், ஆரியர்களால் பிற்காலத்தில் இணைக்கப்பட்டவர்களே. காடுகளில் பெருத்து விரிந்திருந்த ஆலமரங்கள், மரங்களின் அரசனாகக் கருதப்படுவதால், சிவன் ஆலமரத்தில் குடியிருப்பதாகக் கருதினர். மரங்களில் ஒரு காலத்தில் வாழ்ந்திருந்த தமிழர்கள், தங்கள் மரபுப்படியே, தங்கள் தெய்வத்தையும் மரத்திலேயே குடியமர்த்தினர்.

ஆலமர் செல்வன், ஆல்கெழு கடவுள்,*

என்ற பெயர்கள், சிவனின் ஆலமரக் குடியிருப்பை உணர்த்தும் பெயர்களாகும். ஆலமரம் வளர்ச்சியின் உருவகமாகத் தமிழர்களால் சொல்லப்பட்டது. ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரோடி என்பது தமிழரின் வாழ்த்தும் வழக்காகும். இந்த ஆலமரத்தைச் சிந்துவெளியில் கண்டெடுக்கப்பட்ட சிவனின் உருவம் கொண்டுள்ளது. சிவ நெறி தமிழ் நாட்டில் அழிக்கப்பட்ட வரலாறே, ஆரியரின் சமயம் தமிழ் நாட்டில் நிலைபெற்ற வரலாறாகும்.

முருகனைப் பற்றிய வணக்கமுறை குறிஞ்சி நிலத்தோடு தொடர்புடையதே. முருகனே முதற் கடவுள் என்றும், சிவன் முருகனுக்குப் பிறகு தோன்றிய கடவுள் என்றும் சிலர் கூறுவர். முருகனும் சிவனும், பிள்ளையும் தந்தையுமாக்கப்பட்டது பிற்காலச் செய்தியாகும். முருகு என்ற சொல்லுக்கு அழகு என்றே பொருளாகும். அவன் மணந்ததாகக் கூறப்படும் வள்ளி என்ற சொல்லுக்கும் அழகு என்றே பொருள். வள்-வளித்தல் = உருண்டு திரண்டு அழகு பெறுதல். தெய்வத்தன்மையில் இளமையும் ஆற்றலும் அழகும் இணைக்கப்பட்டு, முருகன் என்ற உருவகம் வெளிப்பட்டதாகக் கூறுவர். சிவனின் முழுமுதற் கடவுள் தன்மையுடன், இளமையும் அழுகும் இணைக்கப்பட்டு, அவன் முருகனாகத் தோன்றினான் என்றும், முருகனும் சிவனும் ஒரு தெய்வத்தின் இரண்டு வெளிப்பாடுகளே என்றும் கூறுவர். காடு, மலைகள் கொண்ட குறிஞ்சி நிலத்தோடு இவ்விரு தெய்

* மதுரைகாஞ்சி, 611.

வங்களும் தொடர்பு கொண்டுள்ளமையால், முதலில் சிவ வணக்கமும், பிறகு முருக வணக்கமும் தோன்றியதாகக் கொள்ளல் வேண்டும்.

பாபிலோனியத்தின் முழுமுதற் கடவுளான மருதூக் (Maruduk) என்பானே தமிழகத்தில் முருகனாக வணங்கப்பட்டான் என்று டாக்டர் இலெகோவரி கருதுகிறார்.[213] முருகனுக்குள்ள அனைத்து சிறப்புகளும், பாபிலோனியர் கடவுளான மருதூக் கடவுளுக்கும் சொல்லப்பட்டுள்ளன. முருகன் தமிழகத்தில் தோற்றுவிக்கப்பட்ட கடவுள் அல்லன் என்றும், அவன் பாபிலோனியக் கடவுளாகவே தமிழகத்துக்கு வருகை தந்தான் என்ற கூற்றைப் பாவாணர் மறுத்துக் கூறுகிறார். முருகன் என்பது தமிழ்ச்சொல்லே என்றும் முருகன் தமிழ்க் கடவுளே என்றும் கருதுவதே சரியான சிந்தனையாகும். முருகன் குறப்பெண்ணாகிய வள்ளியை மணந்த கதை, தமிழர்களின் தொன்மக் கதையாகும் முருகன் - வள்ளி பற்றிய கதைகள், பழங்காலக் குறிஞ்சிநில மக்களின் வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுவனவாக உள்ளன.

முருகனுக்குத் தெய்வானை என்ற பெண்ணை இணைத்துக் கொள்வது ஆரியர்களின் திணிப்பாகும். தனித்தமிழ்ச் சொல்லான முருகன் என்ற சொல்லை விடுத்து, சுப்பிரமணியன் என்று புதுப்பெயர் சூட்டியதும் ஆரியர்களே. சுப்பிரம் என்பது ஒளியாகும்.[214] மணி என்பது தமிழ்ச் சொல்லாயினும் அதனை வட சொல்லாகவே கருதி, விண்மீன் என்ற பொருளில், ஒளிரும் மணி என்று சுப்பிரமணியனைக் கூறினர். தொல்தமிழர் வணங்கிய தெய்வங்கள், தங்கள் நம்பிக்கை, பாதுகாவல் ஆகிய கரணியங்கள் பற்றியே வணங்கப் பெற்றனர். யாரையும் அழிக்கவோ, கொல்லவோ துன்புறுத்தவோ தமிழர் தம் தெய்வங்களைத் தூண்டியதுமில்லை ஏவியதுமில்லை. ஆரியத் தெய்வங்களாக மாற்றப்பட்ட தமிழ் தெய்வங்கள் எல்லாம் தமிழரை அழிப்பதற்கென்று ஆரியர்களால் படைக்கப்பட்டன. நக்கீரர் என்ற பிராமணன் யாத்த திருமுருகாற்றுப்படை, தமிழ்க் கடவுளான முருகன் தமிழர்களாகக் கருதப்படும் சூரர் கூட்டத்தை அழித்ததாகக் கூறுகிறது. தங்கள் பகைவர்களை அழிக்கும் வன்முறை

213. History of Tamil, Subramaniyan, p. 19.

214. சதுரகராதி, ப.

யாளர்களாகவே கடவுளர்களை ஆரியர்கள் மாற்றினர் என்பதற்கு திருமுருகாற்றுப்படை ஓர் எடுத்துக்காட்டாகும். சிவன், மால், இந்திரன் என்போர் தமிழர்களை அழிக்கவே ஆரியர்களால் படைக்கப்பட்டனர். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள், பதினெட்டு நாட்போரில் பலரைக் கொன்று குவிக்கக் கரணிய மாய் இருந்தமால், விரித்திரன் முதலிய சிந்து வெளியின் தமிழ் மன்னர்களை அழித்த இந்திரன் என்றவாறு, ஒவ்வொருவரின் அழிப்புக் கதைகளும் பெருமளவில் கூறப்பட்டன. இவ்வாறு பலரைக் கொன்றுபோட்ட கடவுள்கள், ஒரு பிராமணனைக் கூட கொன்று போட்டதாக எந்தக் கதையும் கூறவில்லை. நரகாசுரன் என்ற அரசுரனை (தமிழரை) ஆரியத் தெய்வம் கொன்று போட்ட நாள் தமிழர்களைப் பொறுத்தவரை இரங்கல் தெரிவிக்கும் நாளாகக் கொள்ளவேண்டும். ஆனால் அப்படி யொரு நிகழ்வு நடக்கவேயில்லை என்பது வேறு செய்தியாகும். இந்த நரகாசுரன் பற்றிய கதை தமிழ்நாட்டில் மட்டுமே சொல்லப் பட்டது. வடநாட்டில் இக்கதை இல்லை தமிழன் சொல்லப் பட்டதாக ஆரியன் கூறும் நாளை தமிழ்நாட்டில் பெருவிழா வாக (தீபாவளி)க் கொண்டாடும் சூழலை ஆரியர்களே உருவாக் கினர். கடைக்கழக இலக்கியங்கள் எவையும், தீபாவளி தொல் தமிழகத்தில் கொண்டாடப்பட்டதாக எந்த செய்தியையும் தெரிவிக்கவில்லை.

குறிஞ்சி நிலத்துக்குரிய வேட்டையாடும் கருவியாகியே வேல், முருகனின் கையில் இருந்ததால் அவன் வேலன் எனப் பட்டான். முருகனைச் சேயோன் என்றது பிற்கால வழக்காகும் கிரேக்கக் கடவுளான சேயஸ் (Zeus) என்பான் முருகக் கடவுளே என்று மேனாட்டு ஆய்வாளர்களில் சிலர் கருதுகின்றனர். சேயஸ் கையிலுள்ள வேலே (Spear) இவ்வாறு கருத்ததூண்டியது எனலாம்.[214] சேயன் - சேயஸ் என்ற சொற்களின் ஒலிப்புகளி டையே உள்ள தொடர்பும் இவ்வாறு ஒற்றுமைப்படுத்தக் கரணியங்களாயின.

வேலன்,[215] குறிஞ்சிக் கிழவன்,[216] முருகு புணர்ந்தியன்ற வள்ளி[217] போன்ற பெயர்களால் முருகன் அழைக்கப்பட்டான்.

---

215. History of Religion, p. 25.

216. திருமுருகாற்றுப்படை, 256.

217. நற்றிணை, 82:4.

கொற்றவைச் சிறுவன், பழையோள் குழவி என்பன பிற்காலத்துப் பெயர்களாகும். கார் + தீ + சேயன் = கார்த்தீசேயன் என்ற தமிழ்ச் சொல்லே, கார்த்திகேயன் என்று வடமொழியில் திரித்துக் கூறப்பட்டது. கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிறகே, முருகன் ஆரியக் கடவுளாகச் சொல்லப்பட்டான். காட்டுக் கோழியும், கரு முகில் கண்டாடும் மயிலும், வேலும், முருகனைத் தமிழ்க்கடவுளாகவே காட்டும். கார்காலத்தில் பளிச்சிட்டு மின்னும் ஆரல் (கார்த்திகை) என்ற விண்மின் கூட்டமே (pleads) கார்த்தீப் பெண்டிராகத் தமிழரால் உருவகம் செய்யயப்பட்டன. ஆரல் விண்மீன் கூட்டம், மூதிரையைப் போன்று சிறப்புடையதாகும். இக்கூட்டத்தின் ஏழு விண்மீன்கள் உள்ளன.[218] ஒன்று ஒளிகுறைவுடையது. சேயனை வளர்த்த ஆறு பெண்டிர் போன்றொரு கதை, கிரேக்கத்திலும் சேயஸ் கடவுள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. ஏழு மீன்களும் ஏழு புறாக்களாக (Doves)ச் சொல்லப்பட்டு, சேயசை அப்புறாக்களே உணவு கொடுத்து வளர்த்ததாகவும் கூறப்பட்டுள்ளது.[219]

குறிஞ்சி நிலத்துக்கு அடுத்த நிலை முல்லை நிலமாகும். வாழ்க்கையின் வளர்ச்சி வழியில், குறிஞ்சி நிலத்தை விட்டுக் கீழிறங்கிய தமிழர்கள், தரையும் அல்லாத மலைக் காடுகளும் அல்லாத மேட்டு புதர்க்காடுகளில் வாழலாயினர். இவைகள் முல்லை நிலம் எனப்பட்டது. காடுகளில் வாழ்ந்தபோது, தங்களிடம் விருப்புடன் நடந்து கொள்ளும் ஆடு, மாடு, நாய், கோழி, பூனை போன்ற விலங்குகளை நட்பாக்கிக் கொண்டனர். முல்லை நில வாழ்க்கை இந்த விலங்குகளும் இணைந்ததே. இவைகளில் கால்நடைகளே, மாந்தனின் உணவுத் தேவைக்கும், உடைத்தேவைக்கும் ஏற்றவைகளாயிருந்தன. இவைகளைப் பெருமளவில் முல்லை நிலமக்கள் வளர்க்கத் தொடங்கினர். இவைகளுக்குத் தேவையான புல்வெளிகள், மலைச்சாரல் பகுதி களான முல்லை நிலப்பகுதிகளில் இயற்கையில் வளர்ந்தன. பருவ மழை பொய்த்த காலங்களில், கால்நடைகள் உணவின்றித் துன்புற்றன. தொடர்ந்த மழையும், தொடர்ச்சியாகக் கிடைக்கும் புற்களும் கால்நடைகளுக்குத் தேவைப்பட்டதால், மழையைத் தரும் முகிலைத் தெய்வமாக முல்லை நில மக்கள் வழிப்பட்டனர்.

---

218. Fixed stars, p. 237.

219. Outer space: Myths, Names, Meanings, Meanings, Calendars, p. 337.

கரிய நிறங்கொண்ட கார் முகிலே மால் எனப்பட்டான். மால் = கருமை இவ்வாறான மாலியத்தின் தோற்றம் முல்லை நிலத்தில் பிறந்தது. கால்நடைகளை பொருளியலாக்கிய தொழிலும் பிறந்தது. மாந்தன் முதன்முதல் பெற்றிருந்த செல்வம் கால் நடைச் செல்வமே. செல்வத்துக்கு உரிமையாளன் என்ற நிலையை மாந்தனுக்கு உருவாக்கிக் கொடுத்தவை கால்நடை களே. இதன் மரபாகவே இன்றுவரை கால்நடைகளை வணங்கும் முறைகள் தமிழ் நாட்டில் தொடர்கின்றன. எவ்வளவு தான் அறிவியலில் முன்னேற்றம் கண்டாலும், மாட்டு வண்டி தமிழகத் தில் இருந்து கொண்டுதானிருக்கும்.

கருமை நிறம் கொண்ட முகிலின் நிறத்தையே உருவக மாக்கிக் கிருஷ்ணன் என்ற ஆரிய தெய்வத்தைப் படைத்தனர். கரு - என்ற கருப்பனே, கிரு - என்று கிருஷ்ணனாக மாறினான். கி.மு. 1000 ஆண்டுகளில் வாழ்ந்திருந்த தமிழ் ஆயர்குடியின் வடபுலத்து மன்னனான கண்ணனை (கண் = கருமை, கண்ணன், கருமை நிறத்தோன்) ஆரியர்களின் பத்துத் தோற்றக் கடவுளாக மாற்றினர். கண்ணன், விஷ்ணு என்றும் அழைக்கப்பட்டான். சிவனுடைய மைத்துனனாகவும் சொல்லப்பட்டான். முல்லை நிலத்து மால், ஆரியர்களின் மகாவிஷ்ணுவாக மாற்றம் செய்யப் பட்டான். இரிக்கு வேதத்தில் விஷ்ணுவைப் பற்றிய செய்திகள் கூறப்படவில்லை என்பதால், ஆரியர் தமிழகம் வந்த பின்னரே, மால் கடவுளை, கிருஷ்ணக் கடவுளாக மாற்றிக் கொண்டனர் என அறியலாம். சிவனியமும் மாலியமும் தொல்தமிழரின் இரு சமயங்களாகும். இவையிரண்டையும், வளர்த்துப் பெரிதாக்கி, ஆரியக் கருத்துக்களை அவைகளில் புகுத்தி, ஆரியர்களால் உருவாக்கப்பட்டதே இந்து சமயம் ஆகும். அடிப்படையில் தமிழ்ச் சமயங்களிலிருந்து உருவாக்கப்பட்டதே இந்து சமயம் என்றாலும், கொள்கையளவில், தமிழ்ச் சமயம் வேறு இந்து சமயம் வேறு என்பதை அறியலாம். தமிழர் தம் சமயமான தமிழ்ச் சமயத்தை விடுத்து இந்து சமயம் என்ற ஆரியச் சமயத்தை ஏற்றுக் கொண்டிருப்பது, தமிழ்ச் சமயம் போன்றதொரு தோற்றத்தை ஆரியர்கள் தங்கள் சமயத்தில் காட்டியுள்ள தந்திர முறைகள் தாம் இன்றும் கூட நகரத்தார் என்ற மரபுவழித் தமிழர்கள், தங்களை இந்துக்கள் என அழைத்துக் கொள்ளாமல் சிவ நெறியாளர்கள் என்றே அழைத்துக் கொள்வது, தமிழரிலும் தமிழ்ப் பற்றுடையோர் இருப்பதையே காட்டுகிறது எனலாம்.

தமிழர்கள், தங்களது முன்னோர்களின் சமயங்களான சிவனியத்தைப் பற்றியும், மாலியத்தைப்பற்றியும் புரிந்துகொள்ளும் காலங்களில், தமிழ்நாட்டில் ஆரிய சமயம் அற்றுப்போகும் என்பது தெளிவு.

மாயோன் மேய காடுறை உலகமும் - தொல்காப்பியம் - மாயோன் என்பதும் மாலைச் சுட்டும் தமிழ்ச்சொல்லே. மாயம் என்பதற்கும் கருமை என்றே பொருளாகும். மாயம் என்ற கருமை நிறம் குறித்த சொல், மாகம் என்னும் சொல்லப்படும். மாகவிசும்பு என்பது இலக்கிய வழக்கு. மாகம் என்ற தமிழ்ச் சொல், மாகம் என்றே கிரேக்கத்திலும் சொல்லப்பட்டுள்ளது. அதுவும் கருமையைக் குறித்ததே. மாகம் (Mag) என்ற சொல்லே, Magic என்று ஆங்கிலத்தில் திரிந்தது. இதை Black Magic என்றும் அழைத்தனர். வானியலை அறிந்த மேலை நாட்டவரை Maggie என்றே அழைத்தனர். இயேசு பிறந்த போழ்து அவரைக் காண வந்த மூன்று அறிஞர்களை (கீழைநாட்டவர்) மாகி என்றே விவிலியம் கூறுகிறது.[220] மாயம் என்ற தமிழ்ச் சொல்லினின்றே மாயா (Maya) என்ற வடசொல்லும் பிறந்தது.

முல்லை நில நாகரிகம் விரிவடையவே, வேளாண்தொழிலுக் கேற்ற தரை நிலத்தை நோக்கித் (Plain) தமிழர்கள் பெயர்ந்தனர். நிலையான வேளாண்மையும், அதற்கேற்றவாறு நிலங்களுக்கு அருகில் குடியிருப்புகளும் தோன்றின. குடியிருப்புகளின் தொகுப்பே ஊர்களாயின. நகரிய நாகரிகத்தின் நாற்றங்கால், இந்த ஊர் என்ற குடியிருப்புகளே. இயற்கையின் பருவ காலங்களுக்கு ஏற்ப, வேளாண் தொழில் செய்ய முற்பட்ட தமிழர் வாழ்ந்த பகுதியே மருதநிலம் எனப்பட்டது. மருத மரங்கள் பெருமளவில் சூழ்ந்திருந்த பகுதியாதலால் மரத்தின் பெயரால் நிலமும் அழைக்கப்பட்டது. வேளாண்மைக்குத் தேவையான மழையும் வெப்பமும் வேண்டி, வழிபடப்பட்ட தெய்வமே வேந்தன் என்ற இந்திரன் ஆவான்.

வேந்தன் மேய தீம்புனல் உலகமும் – தொல்காப்பியம்.

விண் என்பது வானத்தைக் குறித்தது. விண்-தன்-விந்தன் வேந்தன் என்றவாறு வானத்திலிருந்து பெய்யும் மழையைக் குறித்த சொல்லே வேந்தன் ஆகும். வேளாண் தொழிலுக்குப் பாதுகாவலாக வேந்தன் என்னும் மழை விளங்கியதால், பகை

220. The New American Bible, Dict. p.

வரிடமிருந்து பாதுகாப்பவனையும் வேந்தன் என்றே தமிழர் அழைத்தனர். வேந்தன்-வேன்திரன்- இந்திரன் என்றவாறு திரிந்த சொல்லும், மழையைக் குறித்ததே. இந்திரன் = மழை விந்து என்ற சொல்லும் நீரைக் குறித்தது. விந்து - விந்திரன் - இந்திரன் என்றவாறும் சொல்லப்படும். இந்திரன் மழைத் தெய்வமே என்பதும், அவன் மருத நிலத்தெய்வமே என்றும் பற்றியே மழையைத் தந்த இந்திரனுக்கு தமிழர்கள் விழா எடுத்தனர். இந்திரனை, மாதளி என்று இரிக்கு வேதம் சொல்கிறது. மாதளி என்பது தமிழ்ச் சொல்லே. தளி = மழை, மாதளி = பெருமழை அணைகளை உடைத்து நீரை விடுவித்தவன் இந்திரன் என்று, நீரோடு அவனைத் தொடர்புபடுத்தி இரிக்கு வேதம் கூறுகிறது. இரிக்கு வேதம் கூறும் இந்திரன் என்பான், இந்திரனை வழிபட்ட தமிழ் மன்னனே என்று பாவாணர் கூறுகிறார்.[221] இந்திரனை அசுரன் என்று கூறும் இரிக்கு வேதச் செய்தி, இந்திரன் தமிழ்த் தெய்வமே என்பதையுணர்த்தும். மழை என்றும் நீரென்றும் சொல்லப்பட்ட சமற்கிருத வேர்ச்சொல்லினின்றே (பிந்த் - Bindh) இந்திரா என்ற பிறந்ததாக, மாக்சு முல்லரும் கூறுகிறார் - விண் என்ற சொல்லினின்றும் வேந்தன், இந்திரன் என்ற சொற்கள் பிறந்தது பற்றியே விண்ணவர் கோமானாக இந்திரன் சொல்லபட்டான். இந்திரனைப் பற்றி இரிக்கு வேதம் 250 பாடல்களைத் தருகிறது.[222] இவையாவும், தமிழர் வழக்குகளையும் வழக்காறுகளையும் கொண்டு, இந்திரன் பற்றிய கதைகளை பிற்காலத்தில் ஆரியர் வடித்தனர்.

இக்காலத்தமிழகமும் அழிந்துபட்ட குமரிக்கண்டமும், கடற்பகுதிகளை எல்லைகளாகக் கொண்டிருந்ததால், தமிழர் கடலோடும், கடல்தொடர்புடைய வாணிகத்தோடும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர். மூன்று நிலத்து மக்களுக்கு தேவைப்பட்ட உப்பையும், மீனையும் கடலைச் சார்ந்து வாழ்ந் திருந்த நெய்தல் நில மக்களே அளித்து வந்தனர். உப்பு வணிகம் அக்காலத்தில் சிறப்பாக நடைபெற்ற தொழில்களில் ஒன்றாகும். கருநெய்தல், வெண்ணெய்தல் (Nymphaea alba) என்ற நீர் மலர்கள் பெருமளவில் பூக்கும் கடலைச் சார்ந்த நிலம், நெய்தல் நிலம் எனப்பட்டது. இலவமரம் எனப்பட்ட நெய்தல் மரம் (Silk cotton tree) கடற்கரைப் பகுதியில் வளர்ந்திருந்தன. நெய்தல் நிலம்,

---

221. தமிழர் வரலாறு, பாவாணர்.

222. The History of Religion, p. 163.

அதன் மக்கள், வாழ்க்கை முறை பற்றிய செய்திகளை, கடைக் கழக இலக்கியங்கள் பெரும் அளவில் சொல்லுகின்றன.

வாரணன் என்பான் நெய்தல் நிலத் தெய்வமாவான். வருணன் என்றும் அழைக்கப்பட்டான். வார் - வாரி - என்ற வொல்லின் நீட்சியே வாரணம் ஆகும். வார் என்பதற்கு நீண்ட, அகன்ற, விரிந்த என்றவாறு பொருள் விரியும் வார்க்கோல், இடைவார், போன்ற சொற்கள் நீண்ட என்ற பொருளில் சொல்லப்படுபவையாகும். வாரடை = நீண்ட பனைமரத்தின் ஓலை. வாரம் = ஏழு நாட்கள் கொண்ட கால அளவு வாரம் = மிகுதி. நீண்டு பரந்த கடலை வாரணம் என்ற தமிழ்ச் சொல்லால் அழைத்தனர். வாரி என்பது நீண்ட நீர் வாய்க்காலைக் குறிப்பதே. வாரி என்பது கடலையும் குறிக்கும். கடலைச் சூழ்ந்த நெய்தல் நிலத்துக்கு கடல் தெய்வமாக வாரணன் சொல்லப்பட்டான். இவனை வருணா என்று ஆரியத்தில் அழைத்தனர்.வருணன் மழைக் கடவுளாக வடமொழி வேதத்தில் சொல்லப்படுகிறான். வர் - வரி - வரித்தல் என்றவேர்ச்சொல்லை விளக்கி வாரணன் மழைக்கடவுளே என்பதே பாவாணர் நிறுவுகிறார்.[223]

பாலை என்ற நிலப்பகுதி முல்லையும் மருதமும் வெப்பத் தால் மயங்குகையில் தோன்றும் வறண்ட வெளி என்பர். ஆறலைக் கள்வரும் பிறரும் இப்பகுதியில் வாழ்ந்திருந்தனர் என்றும், அவர்கள் உடல் வலிமை மிக்க முரட்டுக் கூட்டத்தார் என்றும் சொல்லப்பட்டனர்.

கொற்றவை[224] என்ற பெண் தெய்வம், பாலைநிலத்திற்குரிய வளானாள். கரிய நிறத்தோடு நீண்ட நாவையும் கொண்டு, சிவந்த விழிகளால் நோக்கும் கொற்றவை, போர்க்கடவுளாகச் சொல்லப்பட்டாள். போரில் வெல்ல, கொற்றவையை வழிபடும் வழக்குத் தமிழகத்தில் இருந்து வந்துள்ளது. சமரில் வெல்லத் துணை செய்வதால் சமரி என்றும்,[225] கரிய கொண்டதால் காளி என்றும் அங்காளி என்றும் பிற்றை நாளில் கொற்றவை அழைக்கப்பட்டாள். கொல்லும் பாவையே கொற்றவையானாள். சினத்தின் கடவுளாகக் கருதப்பட்ட கொற்றவையை, ஆரியர் சக்தியாகவும், பார்வதியாகவும், காளியாகவும் மாற்றிக் கொண்

223. தமிழர் வரலாறு.

224. சிலப்பதிகாரம்,12:64.

225. மேலதே, 12:67.

டனர். தமிழர்கள் வழிபட்ட தெய்வமாதலால், தமிழ்த்தெய்வ மான சிவனுக்கு அவளை மனைவியாக்கினர். தமிழ்த் தெய்வங்கள் நிலத்திற்கேற்ற தெய்வங்களாக இருந்தனரேயன்றி கணவன் - மனைவி - மைத்துனன் - பிள்ளை என்ற உறவு முறைகளால் அழைக்கப்படவில்லை.

சிவனை உருத்திரனாகவும், முருகனை சுப்பிரமணியனாக வும், கொற்றவையைச் சக்தியாகவும், சிவனின் மனைவியாகவும் முருகனின் தாயாகவும் ஆரியர்களே உருவகம் செய்தனர். இந்திரனும் வாரணனும் ஆரியத் தெய்வங்களாகவும் சொல்லப் பட்டனர். மாயோன் கிருஷ்ணனாகவும் மகாவிஷ்ணுவாகவும் மாற்றம் பெற்றனர். ஆரியச் சமயத்தில் சொல்லப்பட்டுள்ளன. அனைத்துக் கடவுளர்களும், தமிழ்க் கடவுளர்களே. பிரம்மா என்ற கடவுளை பிராமணர்கள் படைத்துக்கொண்டனர். மேற் கண்ட தமிழ்த்தெய்வங்களுக்கு ஆரியர்கள் பல்வேறு கதை களையும் கட்டுக்களையும் கற்பித்துக் கொடுத்த போது தமிழர்கள் அதுபற்றிப் பொருட்படுத்தாமல் நம் கடவுளர்களைத் தானே வழிபடச் சொல்கிறார்கள் என்று எண்ணிவிட்டனர். தமிழ்க் கடவுள்களின் வாயிலாக ஆரியக் கொள்கைகளைத் திணித்த போதும், அதுபற்றித் தமிழர்கள் கவலைப்படவில்லை. தங்க ளுக்கு அறிமுகமில்லாத பிரம்மாவை தமிழர்கள் ஏற்கவில்லை. தமிழர்கள் பிரம்மாவை ஏற்றுக் கொள்ளவில்லையே என்று பற்றி ஆரியமும் கவலை கொள்ளவில்லை. தமிழ்க் கடவுளர் என்ற முகமூடியில் ஆரியக் கொள்கைகள் திணிக்கப்பட்டதை வெள்ளை மனத்தோராயிருந்த அக்காலத் தமிழர் ஏற்றுக் கொண்டதில் வியப்பேதுமில்லை.

இவ்வாறான சூழல்களில் திணிக்கப்பட்ட ஆரியக் கொள் கைகள், கி.பி. 300 முதல் கி.பி. 900 வரையிலான காலங்களில் பெருமளவில் உரம்பெற்றன. இக்காலத்தைச் சமய மறுமலர்ச்சிக் காலம் என்று வரலாற்றில் அழைக்கின்றனர். தமிழச்சமயம் அழிக்கப்பட்டு, ஆரியச்சமயம் திணிக்கப்பட்டதற்கு மறுமலர்ச்சி என்ற பெயரை ஆரியச்சார்பாளர்களே சூட்டி மகிழ்ந்தனர். இதற்கு வாய்ப்பான காலமாகக் களப்பிரர் என்பாருடைய 300 ஆண்டுகால ஆட்சி அமைந்திருந்தது எனலாம்.

○○○

14

# களப்பிரர் காலம் – தமிழ்ச் சமயத்தின் அழிவுக்காலம்

களப்பிரர்கள் யாவர், அவர் எப்பகுதியில் வாழ்ந்திருந்தவர், அவர் எவ்வாறு தமிழ் நாட்டுக்குள் நுழைந்தனர் என்பதற்கான விடைகள் இது வரையில் தெளிவுபடுத்தப்படவில்லை. இருப்பினும் அவர்களைப் பற்றிக் கூறும் வேள்விக்குடிச் செப்பேட்டின் வழியாக அவர்களைக் "கலி" அரசர்கள் எனக் கூறியுள்ளது பற்றி அறியலாம். கலி என்ற சொல்லுக்கான பொருள் என்ன என்பதில் வரலாற்றாசிரியர்கள் வேறுபடுகின்றனர்.

கலி என்பது தமிழ்ச் சொல்லே. கள் - கல் என்ற வேர்ச் சொல்லினின்றும் விரிந்த பல சொற்கள் தமிழில் உள்ளன.

கலி = கடல், போர், வலிமை, வஞ்சகம், சிறுமை என்றவாறு விரியும்.

கலித்தளை, கலித்தாழிசை, கலித்துறை கலிப்பா, கட்டளைக் கலிப்பா என்பன தமிழில் இயற்றப்படும் பாடல்களை விளக்கும் சொற்களாகும்.

கலி என்பதற்கு மகிழ்ச்சி, ஆரவாரம் என்றவாறும் பொருள் கூறப்படும். கலியாணம் என்பதும் தமிழ்ச் சொல்லே. ஆணம் = பிணைப்பு, இணைப்பு, கலப்பு என விரியும். கலியாணம் என்பது மகிழ்ச்சி மிகுந்த, ஆரவாரத்துடன் இணையும் திருமண விழா எனப்படும். இதனைக் கல்யாண் என்று வடமொழியில் திரித்துக் கொண்டனர்.

வேள்விக்குடிச் செப்பேடு கூறும் கலி என்ற சொல், சிறுமை - வஞ்சகம் என்ற பொருளில், எந்த ஒழுக்க இலக்கணங்களும் இல்லாதவர் என்றவாறு சொல்லப்பட்டுள்ளது. கலி என்ற

சொல்லைத் தீமை தீயவர்கள், கெட்டவர்கள் என்றவாறு ஏற்கலாம். களப்பிரர் என்ற சொல்லும், கலி என்ற சொல்லும் எவ்வகையில் தொடர்புபடுகின்றன. என்பதையும் விளக்க இயலவில்லை.

1. சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியின் "கொப்பரம்" செப்பேடுகள், கலிகுல என்ற சொல்லைப் பயன்படுத்து கின்றன.

2. கி.பி. 10ஆம் நூற்றாண்டின் புத்த சமயத் தொடர்பான கல்வெட்டொன்று, கலியப்தம் என்றவாறு சுட்டுகிறது.

3. கலிதேவன் என்ற கடவுள் வணக்கம் கன்னட நாட்டில் பரவலாக இருந்துள்ளது. கலி தேவனை வழிபட்டோர் கலி குலம் என்றவாறு அழைக்கப்பட்டிருக்கலாம்.

4. களவப்ர என்ற வடசொல்லின் கன்னடத் திரிபாக, களைப்பு என்ற சொல் சிரவணமலையில் உள்ள கல்வெட்டொன்றில் காணப்படுகிறது.

5. கன்னடத்தில் ஒரு பழங்குடி இனம் களபோரா என அழைக்கப்படுகிறது.

6. கன்னடத்தில் ஒரு வீரக்கல் சாசனக் கல்வெட்டு களவர நாடு என்ற சொல்லைப் பயன்படுத்துகிறது.

இதன் அடிப்படையில் கலி எனப்பட்ட, களப்பிரர்கள் தென்கன்னட நாட்டைச் சார்ந்தவர்களே என்று சில வரலாற் றாசிரியர்கள் இறுதி செய்கின்றனர். இவர்கள் வடக்கேயுள்ள நந்தி மலைப் பகுதியினின்றும் போந்தவர்களே என்பதை,

பெரும் புகழ் அச்சுதக் கோவே!
நந்தி மா மலை சிலம்ப!
நந்தி நிற்பரவுதல் நாவலர்க் கரிதே!

என்ற பாடலால் அறியலாம். நந்திமலையில் தலைவனாக அச்சுதன் என்பான் இருந்தமை பற்றி இப்பாடல் விளக்குகிறது.

வேள்விக்குடிச் செப்பேடு கூறும் கலியரசனும், அச்சுதன் எனப்படும். அச்சுத விக்ராந்தன் என்பவனும் ஒருவனே என்பது தெளிவாகின்றது. இக்களப்பிர மன்னன், தமிழ்நாட்டில் பெருங் குழப்பத்தையும், அச்சவுணர்வையும் தோற்றுவித்து, தமிழ் மன்னர்களை வென்று ஆட்சியைப் பிடித்துக் கொண்டான்

என்றும் கூறப்படுகின்றது. புத்த தத்தன் என்ற பாலிமொழி யாசிரியர் ஒருவர் திருச்சி - உறையூரில் பிறந்தவர் என்றும், அவர் புத்த சமய நூல்களில் ஆசிரியர் என்றும் அறியப்படுகின்றது. புத்ததத்தர், தான் எழுதிய அபிம்மாவதாரம் என்ற நூலை, பூம்புகாரில் ஆண்டு கொண்டிருந்த அச்சுதக் களப்பாளன் அவையில் அரங்கேற்றியதாகவும், அந்நூலிலேயே புத்த தத்தர் குறிப்பிடுகிறார். இக்குறிப்பின் வாயிலாகச் சோழ நாட்டைக் களப்பிரர்வென்று ஆட்சி செய்தது உறுதியாகின்றது. கி.பி. நான்காம் நூற்றாண்டில் புத்த தத்தர் வாழ்ந்திருந்ததாக அறியப் படுகின்றது. இவருடைய சம காலத்தவராக மற்றொரு புத்த சமயத்துறவி புத்த கோசர் என்பவர் கருதப்படுகின்றார்.[227]

பண்பாடும் நாகரிகமும் இல்லாத மலைக்குடி மரபில் வந்தவர்களாகவே களப்பிரர்கள் கருதப்படுகின்றனர். களப்பிரர் என்ற சொல்லை, ஆரியர்களே இவர்களுக்கு வைத்தனர் என்ற கருத்தும் உண்டு. கள்-களம்-காளம் என்ற வழியில் கள என்ற சொல்லுக்குக் கருமை என்ற பொருளுமுண்டு களிமண்-கறுப்பு மண். தமிழர்கள் கருமை நிறம் கொண்டவர்களே. பிராமணர் கள் தமிழர்களைக் கறுப்பர்கள் (இராக்கதர்கள்) என்றே கூறி வந்துள்ளனர். தமிழரல்லாத வேறொரு கறுப்பர் இனம் என்பதைச் சுட்ட களபிறர் என்ற சொல்லைப் பயன்படுத்தினர். என்றும், களப்பிறர் என்பதே, களப்பிரர் என்றானது என்று கூறுவாரும் உளர்.

பிராமணர்களுக்கு அளிக்கப்பட்ட மானியங்களையும், நிலங்களையும் களப்பிரர்கள் எடுத்துக் கொண்டதாகக் கூறும் செய்தியின் அடிப்படையில், அவர்கள் பிராமணர்களின் பகைவர் களாக இருந்தனர் என்று கூறவிட இயலாது. ஏற்கனவே தமிழ்நாட்டு மன்னர்கள், பள்ளிகள், ஆசிரியர்கள் கோவில்கள் என இவற்றிற்காக அளித்திருந்த அறக்கொடைகளையும் எடுத்துக்கொண்டனர் என்பதால், பிராமணர்களின் பகைவர் களாகக் களப்பிரர்களைக் கருத இடமில்லை. களப்பிரர்களைப் பற்றிய வேள்விக்குடிச் செப்பேடு, தமிழ் - சமஸ்கிருதம் ஆகிய இருமொழிகளும் எழுதப்பட்டுள்ளன என்ற செய்தி, சமஸ்கிருதம்

---

226. தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும், இரா. பன்னீர் செல்வம் வி. மாணிக்கம் கம்பெனி, சென்னை, 1973 பக். 29-31.

227. Bhishma's, Tamilakam, p. 312.

தமிழகத்தில் பெருமளவில் பயன்பாட்டில் இருந்தது என்பதைச் சொல்வதாக உள்ளது. தமிழில் எழுதப்பட்டுள்ளவை வட்டெழுத்து வரிவடிவத்திலும் சமஸ்கிருதம் கிரந்த எழுத்திலும் காணப்படுகின்றன. பத்து ஏடுகளைக்கொண்ட இச்சாசனத்தில் 155 வரிகள் உள்ளன. இவைகளில் 31 முதல் 40 முடியவுள்ள வரிகள் களப்பிரர்கள் பற்றிய செய்திகளைத் தருகின்றன.[228]

கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந்தவிர்த்த
பல்யாக முதுகுடுமிப் பெருழுதியெனும் பாண்டியாதிராசனால்
நாகமா மலர்ச்சோலை நளிர்சினை மிசை வண்டலம்பும்
பாகனூர் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச்
சொற்கணாளர் சொலப்பட்ட சுருதி மார்க்கம் பிழையாத
கொற்கைகிழா னற்கொற்றன் கொண்டவேள்வி முற்றுவிக்கக்
கேள்வியந்த ணாளர் முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விகுடியென் றப்பதியைச்
சீரோடு திருவளரச் செய்தார்வேந்த னப்பொழுதே
நீரோடட்டிக் கொடுத்தமையா னீடுபுக்தி துய்த்தபின்
அளவரிய ஆதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்
களப்ர னென்னும் கலியரசன் கைக்கொண்டதனை யிறக்கிய பின்

ஒரு காலத்தில் பிராமணன் ஒருவனுக்கு, பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற பாண்டிய மன்னனால் நிலக் கொடையாக அளிக்கப்பட்ட ஊரே வேள்விக்குடி என்பதாகும். வேள்வி செய்த பிராமணனுக்கு அளிக்கப்பட்ட ஊர் என்பதாலும், வேள்வி நடைபெற்ற ஊர் என்பதாலும், அவ்வூர் வேள்விக் குடி எனப் பெயர் பெற்றது எனலாம். தனது தலைக்குடுமியானது தரையில் கிடந்த வண்ணம் பிராமணர்களை நாளும் அவன் வீழ்ந்து வணங்கியதால், அவன் அப்பெயரைப் பெற்றான். மன்னர்கள் பிராமணர்களைத் தரையில் விழுந்து வணங்குவது என்பது நடைமுறையில் இருந்த செய்தியால், பிராமணர்களின் செல்வாக்கு எந்த அளவில் உயர்ந்திருந்தது என்பதை இச்சாசனத்தின் பெயரால் அறியலாம்.

இந்த வேள்விக்குடியைப் பிறகுவந்த களப்பிரர்கள் தங்கள் பொறுப்பில் எடுத்துக்கொண்டு, அப்பிராமணனை விரட்டி

---

228. பாண்டியர் செப்பேடுகள் பத்து, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை, 1967, ப. 38.

யடித்துவிட்டனர். நிலத்தை இழந்த பிராமணன் மாண்டு போனான். அப்பிராமணனின் பெயர் கொற்கை கிழான் என்று செப்பேடு கூறுகிறது. அவன் மரபில் வந்த நற்சிங்கன் எனும் பிராமணன், பாண்டியர் ஆட்சி மீண்டும் ஏற்பட்ட போது, தனது முன்னோர்க்கு வழங்கப்பட்ட ஊரைத் திருப்பித் தருமாறு பாண்டியரிடம் வேண்டினான். அவ்வாறே அவனுக்கு அவ்வூர், பராந்தக நெடுஞ்சடையன் என்ற பாண்டிய மன்னன் ஆட்சியில், திருப்பி அளிக்க ஆணையிடப்பட்டது என்பதையும் செப்பேடு கூறுகிறது.

மதுரை நகரில் களப்பிரரின் ஆட்சி நடை பெற்றது பற்றிய செய்திகள் உள்ளன. ஆனால், அவர்களின் பெயர்கள் திட்ட வட்டமாகத் தெரியவில்லை. கருநாடகத்து மன்னர்கள் பாண்டிய நாட்டை ஆண்டது பற்றிச் சேக்கிழார் குறிப்பிடுகின்றார். தமிழகத்தின் சிவநெறியை இம்மன்னர்கள் அழிக்க முற்பட்டனர் என்ற செய்தியால், இவர்கள் சிவநெறியைச் சாராத, சமண சமயத்தைச் சார்ந்தவர்களே என்றும் அறியலாம். காரைக்கால் அம்மையார், தனது சமயக் கடமைகளை மதுரையில் ஆற்ற இயலாமற் திரும்பியதாக, அம்மையாரின் குறிப்புகளினின்றே போதருகின்றன. சிவ நெறியின் வெளிப்படையான வணக்க நிகழ்வுகளையும், திருவிழாக்கள் போன்ற பெருநிகழ்வுகளையும் கூட இவர்கள் தடை செய்திருந்தனர்.

> படைநான் குடன்று பஞ்சவன் துரந்து
> மதுரை வவ்விய கருநடர் வேந்தன்
> அருகர்ச் சார்ந்து நின்று அரன்பணி அடைப்ப

என்ற கல்லாடச் செய்யுள் தெளிவாக்குகின்றது. தமிழ்மக்களின் சமயமான சிவநெறியை, அதுதோன்றிய பல்லாயிரமாண்டுகள் காலத்திலிருந்து, தமிழகத்தில் தடை செய்தது களப்பிரரே என்று அறியும் போது தமிழரின் ஆளுமை குன்றத் தொடங்கிய காலம் அதுவே என்று எண்ணத் தோன்றுகிறது.[229]

களப்பிரர்கள் காலத்தில் காஞ்சி நகரம் அமைதியின்றியே காணப்பட்டது. காஞ்சி நகரம் சிவனிய - மாலியச் சமயநெறி களையும், புத்த - சமண நெறிகளையும் வளர்த்த நகரமாகும். இந்நகரைத் தம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர பன்முறை

229. தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும், பக். 52, 55.

களப்பிரர்கள் முயன்றதாகவும், அவை பல்லவர்களால் முறியடிக்கப்பட்டதாகவும் செய்திகள் கூறுகின்றன. கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில், சிம்மவிஷ்ணு என்ற பல்லவ மன்னன், களப்பிரரை வெற்றி கொண்டதாக, நந்தி வர்மனின் காசாக்குடிச் சாசனச் செய்தி (20) கூறுகின்றது. இரண்டாம் நந்தி வர்மனின் புல்லலூர்ச் செப்பேடுகளும் (6), பட்டத்தாள் மங்கலம் செப்பேடுகளும் (9), களப்பிரர் முறியடிக்கப்பட்ட செய்திகளைக் கூறுகின்றன.

தமிழகத்தின் சமயங்களான சிவனியமும் மாலியமும் தாழ்ந்த நிலைக்குத் தள்ளப்பட்டதை பெரியபுராணம் தெளிவாகக் காட்டுகிறது.

பூழியர் தமிழ்நாட்டுள்ள பொருவில்சீர்ப் பதிகள் எல்லாம்
பாழியும் அருகர்மேவும் பள்ளிகள் பலவுமாகிச்
சூழிருட் குழுக்கள் போலத் தொடைமயிற் பீலியோடு
மூழிநீர் கையிற்பற்றி அமணரேயாகி மொய்ப்ப — தி.ச பு. 601[230]

திருநாவுக்கரசரும் தருமசேனன் என்ற பெயரில் சமணராகவே தொடக்கத்தில் இருந்தார் என்பதும் பெரியபுராணச் செய்தியாகும்.

கி.பி. 250-600 ஆண்டுகளில், புத்தசமயத்தினரின் வளர்ச்சியும், தமிழ்நாட்டில் தொடர்ந்த வண்ணமேயிருந்தது. கி.பி. 550-570 ஆண்டுகளில், களப்பிரரை விரட்டிய பாண்டியன் கடுங்கோனும் சமணசமயத்தினனாகவே இருந்திருக்க வேண்டும். ஏனெனில் அவனுக்குப் பின்வந்த அவனி சூளாமணி, சேந்தன் ஸ்ரீ மாறவர்மன், சோச்சடையன், தேர்மாறன், நெடுஞ்சடையன் (வேள்விக்குடிச் செப்பேட்டை அளித்தவன்) ஆகியோர்களில், மாறவர்மனைத் திருஞானசம்பந்தர் அணுகி, அவனைச் சிவநெறிக்குத் திருப்பியதாகச் செய்திகள் கூறுகின்றன. இவனே (நின்ற சீர் நெடுமாறன்) ஆறு இலக்கத்திற்கும் (6,00,000) மேற்பட்டச் சமணர்களைக் கழுவேற்றியன் என்றும் கூறப்படுகிறது. இது மிகையான எண்ணிக்கையாகக் கூட இருக்கலாம் என்பது சிலரது கருத்தாகும்.

களப்பிரர்கள் காலத்தில் சிவநெறிக்குக் கடுமையான அச்சுறுத்தல் இருந்ததை வரலாற்றாசிரியர் எம் அருணாசலம்

230. பெரியபுராணம், தி.ச.பு. 601.

உறுதிப்படுத்துகிறார்.[231] களர்ப்பிரர் பாண்டியர்களை அகற்றியது போன்றே, அவர்தம் சிவநெறிகளையும் அகற்றினர். சிவ நெறியைப் பின்பற்றத் தடையும் தடையை மீறி ஒழுகியவர்ளுக்கு ஒறுப்பும் கூட வழங்கப்பட்டன. இதனை வாய்ப்பாகக் பயன்படுத்திக் கொண்ட ஆரியப் பிராமணர்கள், சிவ நெறியையும், சிவனையும், ஆரியவழிக்கு (Aryan Pantheon) மாற்றம் நெய்து, சிவநெறியை ஆரியர் நெறியாக்கியது, களப்பிரர் காலமே என்றும் அருணாசலம் கூறுகிறார். சிவனைச் சம்பிகேசுவரன் எனப் பெயர் மாற்றியது இக்காலத்தில் நடைபெற்ற நிகழ்வேயாகும். சிவன் என்பது சிவப்பு என்ற பொருளைக் கொண்ட தமிழ்ச் சொல்லாகும். சிவந்திருந்தது சிவனைக் குறித்தது. செம்பு என்பதும் செந்நிறம் கொண்டதே உரித்துப் பார்த்தால் சிவந்திருந்த நாவல் பழம், இதுபற்றியே ஜம்பு என்று வடமொழியில் கூறப்பட்டது. நாவல் மரத்தின் கீழிருந்த சிவன், ஜம்பு கேஸ்வரன் எனப்பட்டான். இவ்வாறான மாற்றங்களை எதிர்ப்பதற்குத் தமிழர்கள் வெளிப்படையாக முன்வரவில்லை என்பதற்குச் சிவ நெறியைக் களப்பிரர்கள் ஒடுக்கியிருந்ததும் ஒரு கரணியம் ஆகும்.

இக்காலத்தில் பிராமணர்களின் எழுச்சி மேப்பட்டிருந்தது. ஆரியப் பிராமணர்களின் நிலங்களைக் களப்பிரர்கள் எடுத்துக் கொண்டது, பொருளியல் தொடர்பான நிகழ்வே சிவநெறி தடைசெய்யப்பட்ட இடைக்காலத்துக்குப் பிறகு, கோயில்களில் மீண்டும் வழிபாடுகள் தொடங்கப்பெற்ற காலங்களில், பிராமணர்கள் வடமொழியைப் புகுத்திவிட்டனர். 400 ஆண்டு கால இடைவெளியில் பிற்காலத்து மக்களுக்கு, கோயில்களில் வடமொழியே தொன்றுதொட்டுப் பயன்பாட்டில் இருந்ததாக, பிராமணர்களால் நம்பவைக்கப்பட்டது. ஆலயங்களில் தமிழை அகற்றிய பிராமணர்கள், அடுத்தடுத்த ஆட்சிகளில், வடமொழியை அவ்விடத்தில் நிலை நிறுத்தியும் விட்டனர். தமிழில் மந்திரங்கள், ஒலிப்பது நின்று போயிற்று. வடமொழியே இறைவன் அறிந்த மொழியென்றும், அதுவே தேவ பாஷையென்றும் ஆரியர்களால் வலியுறுத்தப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது. தமிழை நீச பாஷை என்றும் இறைவனை வழிபட அது தகுதியற்றது என்றும் கூறப்பட்டதை எதிர்த்துத் திருமூலர், நாவுக்கரசர், ஞானசம்பந்தர் போன்றோர், தமிழிலேயே சிவனைப்

231. The Kalabhras in the Pandya country, M. Arunachalam, University of Madras, p. 94.

போற்றினர். இவ்வாறான வடமொழித் திணிப்பை, இன்று வரையிலும் கூட, ஆலயங்களினின்றும் அகற்ற இயலவில்லை.

கொடுங்கோளின் வெற்றியையடுத்துப் பாண்டியர்களின் அரசு மதுரையில் நிலை பெற்றது. மாறவர்மன், கோச்சடையன் இரணதீரன் இராஜ சிம்மன் போன்றோர் பாண்டியர் ஆட்சியை உறுதிசெய்தனர். கொங்கு, மைசூர்ப் பகுதிகளை இரணதீரன் வென்றதாக வேள்விக் குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. மகராட்டிரத்தின் சாளுக்கிய மன்னனையும் வென்றாக அறியப்படுகின்றது. இராஜசிம்மன் பல்லவமல்லன் நந்தி வர்மனையும் புறங்கண்டான். இடைக்காலச் சோழர் எழுச்சிவரை பாண்டியர் மதுரையை ஆண்டனர். இவர்கள் காலத்தில், ஆரியக்கலப்பை எவ்வகையாலும் இவர்களால் தடுத்து நிறுத்த இயலவில்லை. மாறாக, பிராமணர்களின் தாக்கம் தமிழகத்தில் பிடிப்பு கொள்ளவே தொடங்கியது எனலாம்.

அடுத்து வந்த பல்லவ மரபினரும் தமிழர்கள் அல்லர். பல்லவ மரபு, சோழன் கிள்ளிவளவனுக்கும், மணிபல்லவத்தில் நாக அரசிக்கும் பிறந்தவனால் தோற்றுவிக்கப்பட்டதாகக் கூறப்படும் செய்திகளுக்குச் சான்றுகள் இல்லை. பல்லவர்களின் மரபு வழிபற்றிய கொள்கையில், வரலாற்று ஆசிரியர்கள் கருத்து வேறுபாடுகளைக் கொண்டுள்ளனர். இருப்பினும் வடகலிங்கப் பகுதியைச் சார்ந்த, தமிழைத் தாய் மொழியாகக் கொண்டிருந்த மரபே, பல்லவ மரபு என பெரும்பாலோரால் ஏற்கப்பட்டுள்ளது. தமிழ் நாட்டின் வன்னியர்கள் என்ற இனத்தாரின் முன்னோர்களே பல்லவர்கள் என்பது உண்மையான செய்தியுமன்று. சிம்மவர்மனும், ஸ்கந்தவர்மனும் ஆரியமரபான பரத்வாஜ கோத்திரத்தைச் சார்ந்தவர்களே என்ற குறிப்பும் உள்ளது. சிவஸ்கந்த வர்மன் என்பானே பல்லவமரபைத் தோற்றுவித்ததாகக் கூறப்பட்டாலும், இவர்களது முன்னோர்கள், கி.மு. 300 ஆண்டுகளிலேயே கிருஷ்ணா ஆற்றுப்பகுதிகளில் குறுநில மன்னர்களாகவிருந்தனர் என்றும் கூறப்படுகின்றது.[233]

பல்லவ மன்னர்கள், பிராகிருதம் - சமற்கிருத மொழிகளையே சார்ந்திருந்தனர் என்பதாலும், தொடக்ககாலப் பல்லவர்கள் தமிழை அறியாதிருந்தாலும், இவர்கள் தமிழர்கள் அல்லர்

232. Ibid.

233. Ibid.

என்பதை உறுதி செய்யலாம். இவர்கள் அளித்த கொடைகளும், கல்வெட்டுகளும் தொடக்க காலத்தில் வடமொழியிலேயே சொல்லப்பட்டு இருந்தன. மகேந்திர வர்மன் இம்மரபில் தோன்றியவர்களில் புகழ்பெற்றவனாயிருந்தான். இவனைப் பற்றிய கல்வெட்டுகள், திருச்சி உட்படத் தமிழகத்தின் பல பகுதிகளில் காணப்படுகின்றன இவனுக்குச் சூட்டப் பெற்றிருந்த அடைமொழிகள் யாவும் வடமொழிப் பெயர்களே. இவன் சமண சமயத்தைத் தழுவியிருந்தான். இவனைத் திருநாவுக்கரசர் சிவ நெறிக்கு மாற்றியதாகக் கூறப்படுகின்றது.

“விசித்திர சித்த அரசனால் (மகேந்திர வர்மன்), பிரம்ம - ஈஸ்வர - விஷ்ணு கிருபையை முன்னிட்டு, செங்கல், சாந்து, மரங்கள் இல்லாத இக்கோயில் கட்டப்பட்டுள்ளது.” என கடலூர் மாவட்டம் மண்டகப்பட்டு கல்வெட்டு கூறுகிறது.[234] இவன் சிவநெறிக்கு மாறிய பின்பும், பிராமணர்களின் அறிவுரையின் பேரிலேயே ஆட்சி செய்து வந்தான் என்பது தெளிவு மத்த விலாச பிரகசனம் என்பது, வடமொழியில் இவன் எழுதிய நூலாகச் சொல்லப்படுகின்றது அவனிபஜனன் (உலகநேயன்), சத்ரு மல்லன் (பகைவரை வீழ்த்துபவன்), குனபாரன் (நற்பேராளன்) போன்ற அடைமொழிகளும் இவனுக்குண்டு. எல்லாம் வட மொழிச் சொற்களே.

மகேந்திரவர்மனுக்குப் பிறகு பட்டமெய்திய அவன் மகன் நரசிம்மவர்ம மகாமல்லன் எனப்படுபவனே, இம்மரபின் புகழ் பெற்ற மன்னனாவான் (கி.பி. 630-668) தன் தந்தையை வென்ற சாளுக்கிய புலிகேசியைத் தோற்கடித்து, வாதாபியைத் தீக்கிரையாக்கினான். வாதாபியினின்றும் திரும்பிவந்த போது, குவித்திருந்த கொள்ளைப் பொருட்களோடு கணபதி என்ற கடவுளையும் தமிழகத்துக்குக் கொண்டு வந்தான். கி.பி. 642க்கு முன்பு, தமிழகத்தில் கணபதி வணக்கம் இருந்ததில்லை. கணபதி வாதாபியிலிருந்து கொண்டு வரப்பட்டதால், வாதாபி கணபதி எனப் பட்டார். கணபதி வணக்கம் மகராட்டிரர்களிடத்தில் பரவியிருந்தது அது தமிழ் நாட்டில் புகுத்தப்பட்ட பிறகே, சிவனின் மூத்தபிள்ளை என்னும் பொருளில் பிள்ளையார் என்று சொல்லப் பட்டது. ஆறுமுகனின் அண்ணனாகவும், வேதங்களின் முதல்வனாகவும் ஆரியர்களால் சொல்லப்பட்டது வேதங்களின்

---

234. Watters, p. 160.

முதல்வன் என்ற கூற்று, இடையில் சொல்லப்பட்டதேயன்றி வேதங்களில் கணபதியின் பெயர் குறிப்பிடப்படவில்லை புராணங்களும் கணபதியைக் குறிப்பிடவில்லை. தமிழ்நாட்டில், கி.பி. 600க்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களும் குறிப்பிட வில்லை. சிவனுக்கு மகனாகவும், முருகனுக்கு அண்ணனாகவும் சொல்லப்பட்டது, தமிழர்களிடத்தில், கணபதி வணக்கத்தைப் பரப்புவதற்கான ஆரியரின் உத்தியேயாகும். பிரம்மனுக்கு இவ்வாறான உறவு முறைகள் ஏதேனும் சொல்லி வைத்திருந்தால், ஒருக்கால் பிரம்மனையும் தமிழர் ஏற்றுக் கொண்டிருப்பர்.

மகேந்திர வர்மன் காலத்திலேயே சீனப் பயணி யுவான் சுவாங் என்பார் காஞ்சிக்கு வருகை தந்தார். அவர் வருகையின் போது (கி.பி. 640) தமிழகம் ஏறக்குறைய பிராமணர்களின் பிடியில் சிக்குண்டு இருந்ததாலும், பிராமணர்களின் அறிவுரைப் படியே மன்னர்களும் நடந்தாலும், களப்பிரர் ஆட்சியில் வலிவு பெற தொடங்கிய புத்த சமயவளர்ச்சி, பல்லவர் காலத்தில் தடைப்பட்டிருந்தது. இச்செய்தியை அந்தச் சீனப் பயணியே குறிப்பிடுகின்றார். தமிழகத்தில் 100க்கும் குறையாத புத்த மடங்கள் இருந்ததாகவும் 10000க்கு மேற்பட்ட பிக்குகள் இருந்த தாகவும் குறிப்பிடுகின்றார் ஆறு கல் சுற்றளவில் காஞ்சிநகரம் பெருநகராய் இருந்தது. பற்றியும், நாளாந்தா பல்கலைக் கழகத்துக்கு முன்பே, காஞ்சியில் ஒரு பல்கலைக் கழகம் இருந்த தாகவும் குறிப்பிடுகின்றார்.[235]

நரசிம்மப்பல்லவன், மிகப்பெரிய ஈர்ப்பாளனாக (ரசிகர்) இருந்தான். இசையும், கட்டிடவியலும் அவன் விரும்பியவைகள். மாமல்லபுரத்தில் வடிக்கப்பட்டுள்ள சிற்பங்கள் (சில்-பம், தமிழ்ச்சொல்லே) ஆரியச் சார்புடையவைகளாகவே உள்ளன. அர்ச்சுனனின் ஒக நிலை (தவம்) அதற்கு எடுத்துக்காட்டாகும். திருநாவுக்கரசரால் சிவநெறிக்குத் திருப்பப்பட்ட பல்லவர்கள் பல கோயில்களைக் கட்டுவித்தனர் நரசிம்மனின் மகன் இராசசிம்மன் (கி.பி. 695-722), காஞ்சியில் கைலாயநாதர் கோயிலைக் கட்டினான் இவன் வடமொழி வேதங்களை விரும்பிப் படித்தான் பிராமணர்களின் உற்ற நண்பனாய்த் திகழ்ந்தான். இதனால் பிராமணர்கள் இவனை, ஆகமப்பிரியன் என்றே அழைத்தனர். தந்தினி என்ற வடமொழி ஆரியர் தசகுமார

235. Bhishma's Tamilakam, p. 315.

ஆசாரிதம் என்ற நூலை இங்கு இயற்றினார் இவருக்கு இராச சிம்மன் பெரும் பொருளுதவி செய்து, சமற்கிருதம் தமிழ் நாட்டில் பரவ உதவிகளும் செய்தான்.

பல்லவர் ஆட்சியின் பல்வேறு குழப்பங்களுக்குப் பிறகு, நந்திவர்மன் என்பான் ஆட்சியில் அமர்ந்தான் இவன் பல்லவ மரபினன் அல்லன் என்றும் கூறப்பட்டது. தஞ்சையில் (வல்லம்) ஆண்டு கொண்டிருந்த முத்தரையர்கள் நந்திவர்மனுக்குத் தோள் கொடுத்தனர் இவர்களின் உதவியால் இராச சிம்மனை வென்று, பாண்டியர் அச்சத்தினின்றும் விடுபட்டான் இவன் சிவநெறியினின்றும் மாலிய நெறிக்கு மாறியவன். முக்தேஸ்வரர் கோயில், வைகுந்தப் பெருமாள் கோயில் ஆகியவை இவனால் காஞ்சியில் கட்டப்பட்டவைகள் ஆகும். திருமங்கை ஆழ்வார் இவன் காலத்தவராவார் திருவரங்கத்தில் பெருமாள் கோயிலைக் கட்டவும், விழா எடுக்கவும், நாகப்பட்டிணத்தில் இருந்த புத்த விகாரத்தைச் சூறையாடிக் கொள்ளையடித்தவர் இவரே. சமய நோக்கில் இச்செயல், நேர்மைப்படுத்தப்பட்டது. நந்திவர்மன் பிராமணர்களின் கைப்பாவையாகவேயிருந்தான். வைணப் பெரியார்கள் இவன் காலத்தில் வளர்ச்சி பெற்றால் ஆரியர்களின் ஒரு நிகழ்வான அசுவமேதயாகத்தை (புரவி வேள்வி) நிகழ்த்தியவன் இவனே. யாகங்களில் அதிக செலவுகள் கொண்டதும், பிராமணர் களுக்கு வழங்கப்படும் கொடைகள் கணக்கிடவியலாமல் இருந்ததும் பற்றியே பல மன்னர்கள் அசுவமேத யாகத்தை நடத்தவில்லையெனலாம். ஒரு முறை நிகழ்த்தப்பெறும் இந்த யாகத்தால், ஆயிரக்கணக்கான பிராமணர்கள் பயன்பெறுவர் என்பது செய்தியாகும்.

நந்தி வர்மனின் மகன் தந்தி வர்மன் எனப்பட்டான் (கி.பி. 795-846) இவனும் பிராமணர்களுக்குச் சார்பாக இருந்தவனே தந்தையையொற்றி, இவனும் மாலியநெறியைப் பின்பற்றினான். சென்னை, திருவல்லிக்கேணியிலுள்ள பார்த்தசாரதி கோயில் இவனைப்பற்றிய கல்வெட்டொன்று உள்ளது. பல்லவ மரபின் அணிகலனாகத் திகழ்பவன் (பல்லவாபரணன்) என்றும், இரிக்கு வேதத்தை எழுதிய ஆசிரியர்களுள் ஒருவனான பரத்வாசன் என்பான் மரபைச் (பரத்வாஜகோத்திரம்) சார்ந்தவன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் மூலம் தான் தமிழ் மரபினன் அல்லன் என்பதைத் தெளிவாக்குகிறான் எனலாம். இந்தக் கோயிலும் பல்லவர்களால் கட்டப்பெற்றதே.

தந்தி வர்மன் மகனாக நந்திவர்மன் iii என்பான், கி.பி. 850இல் பட்டமெய்தினான். வடக்கே, இராட்டிர கூட அமோவர்ஷனனின் மகளை மணந்து, வடபகுதியின் படை எடுப்பு அச்சுறுத்தலின்றும் விடுபட்டான். பாண்டியனையும் இவன் வென்றதாகச் சொல்லப்படுகிறது. இவன் இயற்றியதாகக் கூறப்படும் நந்திக் கலம்பகம் என்னும் தமிழ் நூல், இவனது வெற்றிகளைப் பற்றியும் குறிப்பிடுகின்றது. இவன் மட்டுமே தமிழ் மொழியில் பற்று கொண்டவனாக அறியப்படுகிறான். கலம்பகம் என்ற பாடல் வகை. தமிழின் அனைத்து வகையான, பாடல்வகைகளையும் கலந்து எழுதப்படும் நூலாகும் கலம்பகம் இயற்றுவது, தமிழை முறைப்படி கற்றறிந்தால் மட்டுமே கை கூடும் செயலாகும் நந்திக் கலம்பகம் இலக்கியச் செறிவு கொண்டதாகவே கூறப்படுகின்றது.

பல்லவர்கள் காலத்தில் காஞ்சி நகரம் சமற்கிருத மொழியின் தலைமையிடமாகக் கருதப்பட்டது.[236] புத்தரும் சமணரும் வாழ்ந்திருந்த அந்நகரம், பல்லவர் காலத்தில் பிராமணர்களின் ஆளுமையின் கீழ்வந்தது. தற்போது அங்குள்ள காஞ்சி சங்கட மடம், காலாடி ஆதிசங்கரர் காலத்துக்குப் பிறகு வளர்ந்தது. சங்கரமடம் வேதங்களையும், வடமொழியையும், பிராமணர்களையும் பாதுகாக்கும் அரணாகவே இன்று செயல்பட்டு வருகின்றது. தமிழில் குடமுழுக்கு செய்வதை, இன்றுள்ள சங்கர மடம் ஏற்றுக் கொள்ளவில்லை. மேளான் மடத்தலைவரான சரசுவதி என்பார் 1938ஆம் ஆண்டில் சமஸ்கிருதமே தேவ பாஷையென்றும், தமிழ் நீச பாஷையென்றும் எழுதினார் என்ற செய்தி, ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளது.

ooo

---

236. Bhishma's Darkness at Horizon, p. 319.

During their (Pallavas) reigns they fostered the Sanskrit language as it was the luigua-franca of all the learned men of the entire India.

15

# தமிழ்நாட்டின் சாதிப்பிரிவுகள் பற்றிய வரலாறு

யாதும் ஊரே யாவரும் கேளிர் என்றும், பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் என்ற விரிந்த கொள்கையே தமிழருடையது. தொல்காப்பியர் காலத்துக்கு முன்பிருந்த தமிழகத்தில் சாதிப் பாகுபாடு என்பதே இல்லாமலிருந்தது. மக்களில் உயர்வு தாழ் வைக் கற்பிக்க தமிழரின் மாந்த நேயம் அவர்களுக்கு இடமளித்த தில்லை. தொழில்கள் வழியில் மக்கள் பிரிந்திருந்தனர் என்ற கூற்றும் தவறானதே. தந்தை பொருளீட்டவும், தாய் உணவு சமைக்கவும், தங்கை வீட்டுப் பணிகளைப் பார்க்கவும், அண்ணன் ஆடுமாடுகளை மேய்க்கவும் என்று ஒரு இல்லத்தின் பணிகள் வேறுபட்டாலும், அனைவரும் ஒன்றாக இருந்தது போன்றே, தமிழ்க் குமுகாயத்தின் பணியாளர்களும் ஒரு தாய் மக்கள் போன்றே உறவுடன் இருந்தனர். ஐந்தொழிலைச் செய்த கம்மாளனும், வேளாண்மை செய்த உழவனும், வாணிகம் செய்த சாத்தனும், காவற்பணி செய்த மறவனும், இவர்களின் பணி களுக்கெல்லாம் பாதுகாப்பளித்த மன்னனும், தங்களுடைய தொழிலின் அடிப்படையில் வேறுபாடு கொண்டிருக்கவில்லை. குறிஞ்சி நிலத்துத் தேனும் தினை மாவும், முல்லை நிலத்து ஆனைந்தும், மருத நிலத்து அரிசியும், நெய்தல் நிலத்து உப்பும் மீனும், ஒருவருக்கொருவரால் வேண்டி வாங்கியுண்ணப்பட்டன.

மற்ற மூன்று நிலத்தினும் மருத நிலத்து மக்களிடையே தொழில் செய்வோர் பெருகியிருந்தனர். மருத நிலத்தார் தேவையும் அதிகமாவிருந்தது பற்றியே தொழில் செய்வோரும் கூடுதலாயிருந்தனர். மக்களின் தெய்வ நம்பிக்கையையும், கல்வித் தேவையையும் கணக்கில் கொண்டு, பட்டறிவாளரும் பண்புடையோரும் ஆசிரியத் தொழிலில் அல்லது பணியில்

இருந்தனர். ஆசிரியர்களே நாட்டோருக்கும், மன்னர்க்கும் அறிவுரை கூறுவோராகவுமிருந்தனர். ஆசிரியரே பிறகு அந்தணர் எனப்பட்டனர். அவர் அறப்பணிகளில் ஈடுபடலாயினர். அறவோர் எல்லாம் அந்தணர் என்றே அழைக்கப்பட்டனர். கல்விக்கும் அறிவுரைக்கும் அந்தணரான ஆசிரியரும், காக்கும் பணிக்குக் காவலனாய் மன்னனும், நாட்டின் வருவாய்க்கு அடிப்படையாய் விளங்கிய வணிகரும் வேளாளரும், நாட்டிற்குச் சிறப்பான பணிகள் செய்தோராவர். அன்றைக்கு நாட்டின் பொருளியலே, வணிகத்தையும் வேளாண்மையையுமே நம்பி இருந்தது. இப் பணிகளைச் செய்தோர்க்கு மற்ற பிறரும் உதவும் பணிகளைச் செய்தனர். இவ்வாறான குமுகாய அமைப்பே தொல்காப்பியர் காலத்திலும் அதற்கு முன்பாகவும் தமிழகத்தில் இருந்தது.

தொல்தமிழரின் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற வகுப்பாரைப் பற்றி தொல்காப்பியம் கூறினாலும்,[237] இந்நான்கு குடியில் பிறந்தோரும், அரசராகவும், அந்தணராக வும் வணிகராகவும், வேளாளராகவும் தகுதி அளிக்கப்பட் டிருந்தது. அரசகுடியினர் வேளாளர், வணிகரிடத்தும் திருமண உறவு கொண்டனர். அந்தணரும் கற்றறிந்த நிலை குறித்து, எவ்வகுப்பிலிருந்தும் உயர்ந்திருந்தனர். எனவே தமிழர் குறித்த நான்கு வகைப் பணிவரன்முறைகள், ஆரியர் சொல்லும் நான்கு சாதிகளாக இருந்ததில்லை என்பது தெளிவு. இவர்களினூடே, மலைவாழ் மக்களான நாகர்கள், வேடர்கள், தோடர்கள் எல்லாம் தமிழகத்திலிருந்தோரே. இவர்கள் தங்களை குமுகாயத்தினின் றும் தனிமைப்படுத்திக் கொண்டு வாழ்ந்தனர். அவர்கள் அக்காலத்தில் பேசிய மொழியும் தமிழே.

கடம்பர் எனப்பட்டோர் நெய்தல் நிலப்பகுதியில் வாழ்ந் திருந்தனர். கடவர் வேடர் மலைப் பகுதிகளில் வாழ்ந்திருந்தனர். இவர்கள் வேட்டையாடலையும் வழிப்பறியையுமே தொழிலாகச் செய்து வந்தவர்கள். இடையர் என்பார் முல்லை நிலத்து மக்க ளாவர். மீனவர் எனப்படும் பரதவர் நெய்தனிலத்து மக்களாவர். உழவர் என்பாரே வேளாண் பிரிவு மக்களாயிருந்தனர். புறநா னூற்றுச் செய்தியின்படி, துடியன், பாணன், பறையன் கடம்பன்

---

237. தொல்காப்பியம், மரபியல், 71-85.

துடியன் பாணன் பறையன் கடம்பன் என்று
இந்நான் கல்லது குடியுமில்லை. - புறநானூறு

என்பாரும் தமிழகத்திலிருந்ததாக அறிகிறோம்.[238] துடியன் பறையன் என்பார் பெயர்களில் வேறுபட்டாலும், மன்னனின் ஆணையை மக்களுக்குத் தெரிவிக்கும் பணியில் ஈடுபட்டிருந் தோரே. இவர்கள் ஊர்களில் பிற வகுப்பாரைப் போல் ஒன்றித்து வாழ்ந்தவரே. பாணர் என்பார் இசைக்கும் குழுவைச் சார்ந்து, நாடுகள் தோறும் சென்று வந்தவர்களாவர். திருவிழாக்களிலும் பெருவிழாக்களிலும் இசைநிகழ்வுகளை இவர்களே நடத்தினர். தச்சர் கொல்லரை ஊதியத்துக்கு அழைப்பது போன்று, பாணரை யும் ஊதியம் கொடுத்துப் பாடச் செய்தனர். மறவர் எனப்பட் டோர், போர்த்தொழில் செய்யப் பயன்பட்டவராவர். இவர்கள் அனைவரும் மக்களுக்குத் தேவைப்பட்ட தொழில்களைச் செய்தவர்களே.

ஆரியர்களின் வருகை தமிழகத்தில் மேற்கண்ட பிரிவினரை மேலும் பிரித்துவைத்து, அவர்களை வேளாளர் மரபிலேயே சேர்த்தது. அரசு-வணிகத் தொழில் செய்யும் பிரிவைத் தவிர மற்ற அனைவரும் வேளாளர் பிரிவில் இணைந்தனர். ஆரியர் களுக்கும் தமிழருக்கும் இருந்த பல்வேறு வேறுபாடுகள் பற்றி, ஆரியர்-ஆரியரல்லாதார் என்ற பிரிவே இறுதியில் நிலைத்தது. ஆரியர்களின் வர்ணதர்மம் இரண்டு கரணியங்களுக்காகத் தமிழர் மேல் திணிக்கப்பட்டது. 1. தமிழரினும் உயர்ந்தோர் ஆரியரே என்ற கொள்கையை நிறுவுவது, 2. தொழில் செய் தோரை வேறு தொழிலுக்கு அனுமதிக்காமல் வழிவழியான தொழிலைச் செய்யவைத்து, தொழில் அடிப்படையில் சாதி களாக்கியது எனலாம்.

பிராமணர்கள், கி.பி. 5-6 நூற்றாண்டுகளில், தமிழர்களின் வாழ்க்கைமுறையினின்றும் பிரித்தெடுக்க இயலாத பிடிப்பை ஏற்படுத்திக் கொண்டனர். கடைக்கழக இலக்கியங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சொல்லப்பட்ட ஆரியக் கொள்கைகள், பிற்கால இலக்கியங்களில் நூல் முழுதும் இடம் பெற்றன.

மன்னன், வேந்தன், அரசன், கோ, கொற்றவன் என்று பல்வேறு பெயர்களால் மன்னன் அழைக்கப்பட்டது போன்று, ஆசிரியர்களும், அந்தணர், அறவோர், மேலோர், மறையோர், பார்ப்பார், ஐயர் என்றவாறெல்லாம் அழைக்கப்பட்டனர்.

---

238. புறநானூறு, 355.

மேற்கண்ட பெயர்கள் அனைத்தும் தமிழ்ப் பெயர்களே, ஆசிரியர்களில் கல்வித்தகுதி, பட்டறிவு, பகுத்துணர்ந்து கூறும் ஆற்றல் இவைகளே, அவர்களே அறிவுரை கூறும் தகுதியில் அமர்த்தியது. ஆரிய சமயம் தமிழகத்தில் புகுத்தப்படுவதற்கு பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழ் நாட்டில், சிவனியம் மாலியமும் செழித்து வளர்ந்திருந்தன. இச்சமயங்கள் பற்றிய மெய்யியலும், கொள்கைகளும், நூல்களாகவும் எழுதப்பெற் றிருந்தன. மாந்தன் இறந்த பின்பு அவன் எங்கே செல்கிறான், இறைவனுக்கும் மாந்தனுக்கும் உள்ள தொடர்பு, போன்ற கொள்கைகள் பற்றிய விளக்கங்களும் நூல்களாக எழுதப் பெற்றிருந்தன. உயிர்கள் எங்கிருந்து தோன்றுகின்றன, உயிர்கள் இறந்தபின்பு மறுபடியும் பிறக்கின்றனவா என்பது பற்றியெல் லாம் வாதங்களும் நடைபெற்றிருக்கின்றன. இச்செய்திகளை யெல்லாம் மணிமேகலையில் காணலாம். இவை தொடர்பான நூல்களே தமிழரின் மறைநூல்கள் எனப்பட்டன. மறைநூல்கள் என்பது, ஆரியர்கள் எழுதிய நான்மறைகளே என்று பிற்காலத்து உரையாசிரியர்கள் கொடுத்த விளக்கம் தவறானதாகும். உலகில் தோன்றிய முதல் இனமான தமிழினத்துக்கு மறைநூல்கள் இருந்திருக்கவில்லை என்பது, தமிழரை இழிவுபடுத்தும் கொள்கையாகும். மாமுதுபார்ப்பான் மறைவழி காட்டிட என்று சிலப்பதிகாரம் கூறும் வரிகளுக்கு, இவ்வாறே ஆரியர்கள் வழியைக் கூறும் மறைநூல்கள் என்று உரைகள் எழுதப்பட்டன. மறைநூற்கள் தமிழரிடையே இருந்ததும், அதனை விளக்கிக் கூறியோர் மறையோர் என்பதும், தமிழ் மறைகளான சிவனிய மாலியத்தைக் குறித்தனவே.

சிவனைப் பற்றியும் திருமாலைப் பற்றியும் தொன்மக் கதைகள் தமிழ்நாட்டில் கூறப்பட்டன. அவை உருவகங்களாக வும், கற்பனைகளாகவுமிருந்தன. சிவனைப் பற்றிய புராணம், சிவபுராணம் எனப்படுவதாகும். இது 18 புராணங்களில் ஒன்றாகும். சிவபுராணத்தை வடமொழியில் கண்ட பலரும், சிவனைப் பற்றிய புராணக்கதைகளை ஆரியரே தம் மொழியில் இயற்றினர் என்ற கருத்தை ஏற்றுக் கொண்டனர். சிவபுராணத்தின் உள்ளே நுழைந்து பார்த்தால், அது குறிப்பிடும் செய்திகளும், இடங் களும், நகரங்களும் தமிழ் நாட்டையே சுற்றிச் சுற்றி வருகின்றன. அவை காணும் மக்களும் தமிழர்களாகவே உள்ளனர். இந்த சிவபுராணம் தமிழில் எழுதப்பட்ட நூலே என்பதற்கு மேற்

கண்டவைகளே சான்றுகளாக உள்ளன. இந்நூலை, தமக்கு ஏற்ற வகையில் திரித்துக் கூறி, மூலத்தை அழித்துவிட்டு, அந் நூலை வடமொழியில் எழுதிக் கொண்டு, அதுவே முதல் நூல் என்று சொல்லி, தமிழர்களையும் நம்ப வைத்தனர்.

வடமொழியில் எழுதப்பட்டுள்ள புராணங்கள் அனைத்தும், தமிழ் மூலத்தினின்றும் தங்கள் சார்பாக திரித்து எழுதிக் கொள்ளப்பட்டவைகளே. தமிழ் இலக்கியங்களை எழுதிய ஆரியரைவிட, அதற்கு உரை எழுதிய ஆரியர்களே பெருமளவில் உள்ளனர். இலக்கியங்களில் தங்களது கருத்துக்களைத் துணிந்து கூற அச்சப்பட்ட ஆரியர், தமிழர் எழுதிய நூல்களுக்கு விளக்க வுரை கொடுத்து, தங்கள் கொள்கைகளையும் திணித்து, தமிழர் களே ஆரியக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டிருந்தனர் என்று, தமிழர்களையே நம்ப வைத்தனர். இதற்கு எடுத்துக்காட்டு, திருக்குறளுக்குப் பரிமேலழகர் எழுதிய உரையாகும். ஆரியக் கருத்துகளை விளக்கிச் சொல்ல வாய்ப்புள்ள தமிழ் நூல்கள் எல்லாம் விடுபட்டு, விளக்க இடமில்லாதவைகளும், தமிழ் மெய்யியலைத் தாங்கிய நூல்களும், ஆரியர்களால் அழிக்கப் பட்டன.

தொடக்கத்தில், மன்னர்களுக்கும், செல்வர்களுக்கும் அவர்களது பாலியல் கருத்துணர்ந்து, அவர்களது பாலியல் தேவைகளுக்கு உதவிசெய்யும் பாங்கத் தொழிலையே ஆரியர் செய்து வந்ததாக தொல்காப்பியம் கூறுகிறது.[239] பாங்கத் தொழிலே, மன்னனின் உள்ளக் கிடக்கையை அறியவும், மன்ன னோடு நெருங்கி உறவாடவும், வாய்ப்புடைய தொழிலாக அமைந்திருந்தது. மன்னர்களின் அடிப்படையான பாலியல் நுகர்வுகளுக்குத் தீனிபோட்ட ஆரியர்கள், மன்னர்களின் நம்பிக்கைக்குரியவராயினர். இவ்வாறு தொடர்ந்த அவர்கள் பணி, பாலியலையும் தாண்டி, பாராள்வோனுக்கு அனைத்து நடைமுறைகளிலும் அறிவுரை கூறும் நிலைக்கு உயர்ந்தது. மக்களிடையே எந்தப் பணிகளெல்லாம் வரவேற்பையும் நற் பெயரையும் பெற்றிருந்தனவோ, அப்பணிகளையெல்லாம், ஆரியரே மேற்கொண்டு, அப்பணிகளைச் செய்துவந்த தமிழரைப் புறந்தள்ளினர். இவ்வாறே அந்தணராகவும், சமயத்தலைமை யாகவும், கோவில் பூசாரிகளாகவும், நாள்கோள் பார்த்து நல்ல

239. தொல்காப்பியம், பொருள், 1050.

தைச் சொல்பவர்களாகவும், அமைச்சர்களாகவும், இடைக்கால சோழர்கள் காலத்தில் படைத்தலைவர்களாகவும் பிராமணர்கள் உருவெடுத்தனர்.[240]

ஆரியர்களுக்கு இரண்டு கொள்கைகளே அடிப்படை களாயிருந்தன. 1. மன்னனும் மக்களும் தங்களை மற்றவரினும் உயர்ந்தோர் என ஏற்றுக்கொள்ள வேண்டும். 2. உடல் உழைப் பில்லாமல், அனைத்து வாழ்க்கைத் தேவைகளும் அவர்களுக்குக் குறைவில்லாமல் கிடைத்துக் கொண்டிருக்கவேண்டும். இந்த அடிப்படைகளின் விளக்கங்களாகவே, ஆரியர்களின் வேதங் களும், புராணங்களும், இதிகாசங்களும், ஸ்மிருதிகளும் இன்ன பிற நூல்களும் உள்ளன. இதன் அடிப்படையிலேயே தொல்தமிழ் நூல்களும் அழிக்கப்பட்டன. மேற்கண்ட இரு கொள்கை களுக்கும் எதிர்ப்பு தெரிவித்தோர் அனைவரையும் அவர்கள் பகைவர்களாகவே எண்ணினர். ஆரியர் தங்கள் வகுப்புக்குள் ளேயே நான்கு சாதிகளை ஏற்படுத்திக் கொண்டு, அதனை நடைமுறைப்படுத்தியிருப்பார் எனில், அவர்களைக் கடிந்து கொள்ள வாய்ப்பில்லாமற் போயிருக்கும். ஆரியருடைய கண்டு பிடிப்பான சாதி முறைகளை, தங்களை விடுத்து, மற்றவர் மேல் திணித்ததே, அவர்களின் தன்னல நோக்கை விளக்கும்.

வேள்விகளால் மட்டுமே, நாட்டில் வளமையை ஏற்படுத்த முடியும் என்றும், மழை பெய்யவும், மன்னன் போரில் வெல்ல வும், மன்னன் நல்லவனாக (பிராமணர்களுக்கு) இருக்கவும், தொழில்கள் வளர்ச்சியடையவும், வேள்விகளே துணை செய் கின்றன என மன்னர்கள் நம்பியதால், மக்களும் நம்பினர். ஒரு ஊரில் பிராமணர்கள் இல்லையென்றால், அவ்வூருக்கு வளமை யிருக்காது என்ற கருத்தை நம்பி, ஒவ்வொரு ஊருக்கும் வரும் படியும், அவ்வூரில் தங்கியிருக்கும்படியும், மக்களே அவர்களை அழைத்தனர். அவர்களின் வாழ்க்கைத் தேவைகளான உணவு, உடை, குடியிருப்பு ஆகியவைகளையும் மக்களே அளிக்க முன் வந்தனர். ஒவ்வொரு ஊரின் கோயில்களையும் பிராமணர்களே கவனித்துக் கொள்ள வேண்டும் என்று அன்புக் கட்டளையு மிட்டனர். இதனால் ஏற்பட்ட குழப்பங்களால் மன்னனே இதில் தலையிட்டு, பிராமணர்களையெல்லாம் கணக்கெடுத்து, ஒவ்வொரு ஊருக்கும் அனுப்பிவைத்து, அவர்களுக்கு வரி

240. தமிழக வரலாறு, இடைக்காலச் சோழர்கள், ப.

யில்லாத நிலங்களையும் கொடுத்து, மக்களின் தேவைகளை நிறைவு செய்தனர். இவ்வாறான பிராமணர்களின் குடியிருப்பு களே பிற்றை நாளில் அக்கிரகாரங்கள் எனப்பட்ட பார்ப்பனச் சேரிகள் ஆயின. பிராமணர்கள் வாழ்ந்திருந்த ஊர்கள் பிரம்ம தேயங்கள் என்றும், சதுர்வேதி மங்கலங்கள் என்றும் அழைக்கப் பட்டன.[241] இவைகள் பெரும்பாலும் நீர்வளம் மிக்க சோழ நாட்டிலேயே இருந்தன. நீர்வளமற்ற பகுதிகளுக்குப் பிராமணர் கள் செல்லவும் மறுத்துவிட்டனர். தஞ்சை, திருச்சி மாவட்டங் களில், காவிரியாற்று வேளாண்மை நிலங்கள், பெரும்பாலும் அக்காலத்தில் பிராமணர்களுக்கு நிலக்கொடைகளாக அளிக்கப் பட்டவைகளே.

பிராமணர்கள் குடியிருந்த வீட்டைப் பற்றியும், அவர்களின் உணவு முறைகள் பற்றியும் தமிழ் இலக்கியங்கள் விரிவாகக் கூறுகின்றன. நாலடியார், பிராமணர்களின் மகிழ்வான வாழ்க்கை (Luxary Life) பற்றி விளக்கிக் கூறுகிறது.[242] பெரும்பாணாற்றுப் படை, பிராமணனின் இல்லமும் சுற்றுப்புறமும் தூய்மையாகப் பேணப்பட்டதை விளக்குகிறது. பெரும்பாணாற்றுப் படையும்[243] குறுந்தொகையும்[244] பிராமணப் பெண், சமையற்கலையில் சிறப்புற்று, சுவைமிகுந்த உணவு வகைகளைச் சமைக்கும் ஆற்றல் பெற்றிருந்ததாகக் கூறுகிறது. கபிலரின் பதிற்றுப்பத்து,[245] நெய்யும் சோறும், மரக்கறியுணவும் பிராமணர்களுக்கு மிகவும் பிடித்தமானவைகள் என்று கூறுகிறது.

பிராமணர்கள், மழித்த தலையில், குதிரைவால் போன்ற குடுமியை வைத்திருந்தனர். இடையில் மட்டும் ஆடையுடுத்தி யிருந்தனர். திறந்த மார்பில் தெரியும் முப்புரி நூல், பார்ப்பவர் களுக்குப் பளிச்செனப்படும் வகையில் இருந்தது. ஒரு முறை யுடுத்திய ஆடையை அவர்கள் மறுமுறையும் துவைக்காமல் உடுத்துவதில்லை. பிராமணர்கள் குளிப்பதை பிறர் பார்க்க அனுமதியில்லை. கையில் ஒரு கோல் இருந்தது. அக்கோலும் அவர்களின் தலையுயரத்துக்கு இருந்தது. மற்றவர்கள் கொண் டிருக்கும் (அரசர், வணிகர்) கோல்கள், பிராமணின் கோல் களைவிட உயரம் குறைந்து, கழுத்துமட்டம், மார்பு மட்டம் அளவில் இருந்தன. இறந்தோர் வீட்டுக்குப் பிராமணர் சென்று,

241. History of Tamilnad, p. 332.

242-245. History of Tamilnad, p. 333.

இரங்கல் கூறுவது வழக்கில் இல்லை. நீத்தார் இல்லத்தாரே, நீத்தார் கடன்களை முடித்து, நீத்தார் விண்ணுலகம் அடைய, பொன்னும் பொருளும் பசுவும், பிராமணர்களின் வீடு தேடிச் சென்று அளிக்கும் வழக்கு இருந்தது. பிற்காலத்தில் வருமானம் குறைந்து போகவே, பதினாறாம் நாளில், அவர்களே இறுதிக் கடன் செய்ய வர முற்பட்டார்கள். திருமணங்கள், பிராமணர் களின் வழிகாட்டுதலில் நடைபெற்றன. தொடக்கத்தில் மன்னர், வணிகர் இல்லக் குழந்தைகளுக்குப் பிராமணர்களே ஆசிரியர் களாயிருந்தனர். பிஞ்சு உள்ளங்களிலேயே, ஆரியக் கொள்கை கள் அவர்கள்பால் திணிக்கப்பட்டன. சரிவர ஊதியம் கொடுக் காத பெற்றோர்களின் குழந்தைகளை, அவர்களுடைய சாதகப்படி படிப்பு வராது என்று சொல்லி, நிறுத்தியும் விட்டனர். கல்வியை அறிவோம் என்று சொல்லியே தமிழர்கள், தங்கள் குழந்தை களுக்கு அறிவூட்டினர். அறிவோம் என்ற சொல்லை அரிஓம் என்று ஆரியச் சாயம் பூசி, பிராமணர்கள் திரித்துக் கூறினர்.

தமிழர்கள் பேசும் தமிழினின்றும் மாறுபட்ட, வடமொழி கலந்த தமிழை பிராமணர்கள் பேசியும் எழுதியும் வந்தனர். இவ்வாறு பிராமணர்கள் பேசிய மணிப்பிரவாளத் தமிழே, உயர்வான தமிழாகவும் சொல்லிக்•கொண்டனர். இவ்வாறான பிராமணத் தமிழில், ஏழு அகவை கொண்ட பிராமணச் சிறுவன், எழுபது அகவை கொண்ட தமிழனை, வாடா போடா என்று அழைத்ததையும், தமிழர்கள் ஏற்றுக் கொண்டனர். புத்தமும் சமணமும் தமிழ்ச் சமயமான சிவநெறியை அழித்தன வேயன்றி, தமிழை அழிக்கவில்லை. மாறாக மணிமேகலை சிலப்பதிகாரம் நாலடியார் போன்ற நன்னூல்களையே அளித் தனர். **ஆரியம் மட்டுமே, தமிழ்ச் சமயத்தையும் அழித்து, தமிழ் மொழியையும் அழித்துச் சிதைத்தது. இன்றும் ,கூட பிராமணத் தமிழ் அழிந்துவிடவில்லை.**

ஊர்கள் தோறும் பிராமணர்கள் தேவைப்பட்டதால், ஊருக்கொரு பிராமணக் குடியை நிலைக்கச் செய்ய, பிராமணர் கள் இல்லாது போயினர். இந்நிலையில், வேளாளர் வணிகர் மரபுகளில் இருந்த பலரைப் பூணூல் அணிவித்து, பிராமணர் களாக்கிக் கொண்டனர். இப்புதிய பிராமணர்கள், ஆரியக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டவர்களாகவேயிருந்தனர். இப்புதிய பிராமணர்களின் எண்ணிக்கையும் பெருகவே, மரபு வழியாக வந்த பிராமணர்கள் தங்களை வடமா (வடபுலத்து

பிராமணர்கள்) எனச் சொல்லிக் கொண்டனர். இந்த வகையில், இரு பிராமண வகுப்பார் தமிழகத்தில் தோன்றினர். தமிழ்ப் பிராமணர்களும் வடமொழியைக் கற்றுக் கொண்டு, தொடக் கத்தில் வடமா பிராமணர்களுக்கு அடங்கியே வாழ்ந்திருந்தனர். நாளடைவில் இருவகுப்பாரும் கலந்து போயினர் என்றாலும், வடமா பிராமணரே உயர்ந்தோர் என இன்றும் சொல்லிக் கொள்கின்றனர்.

இடைக்காலத்தில் மாலிய சமயத்தில் மறுமலர்ச்சியைத் தோற்றுவித்த இராமானுசர், தனது கொள்கைகளையும் கோட் பாடுகளையும் விளக்கிச் சொல்ல பிராமணர்கள் கிடைக்காததால், தமிழர்களையெல்லாம் பிராமணர்களாக்கினார். பிராமணர்கள் என்ற உயரிய நிலை கிடைத்ததால் மகிழ்ந்து போன தமிழர்கள் பலர், தங்களுடைய மரபுவழி நெறியான சிவநெறியை விட்டு, மாலிய நெறிக்குத் தாவினர். தமிழகத்தின் வட மாவட்டங்களில் உள்ள வன்னியர் இனத்தார் சிவ நெறியினின்றும், மாலிய நெறிக்கு இராமானுசரால் மாற்றப்பட்டவர்களே. இன்றும்கூட அவ் வினத்தார் திருமண்ணைத் தங்கள் நெற்றியிலே இட்டுக் கொள் வதையும் வழக்கமாகக் கொண்டுள்ளதைக் காணலாம்.

மாலியத்தின் புதிய தமிழ்ப் பிராமணர்கள் தென்கலை என்றும், ஆரிய பிராமணர்கள் வடகலை என்றும் தங்களைப் பிரித்துக் கொண்டனர். வடகலையார் தென்கலையினரைத் தாழ்ந்தவர்கள் என்றே இன்றும் கருதுகின்றனர். மாலியம் தமிழர் சமயமே என்பதும், ஆரியரே தமிழ்ச் சமயத்தை ஏற்றுக் கொண்டு தம்மை உயர்நிலைப்படுத்திக் கொண்டு, தமிழரான தென்கலை பிராமணரை வெறுத்தனர் என்பது வரலாற்றுச் செய்தியாகும். தொடக்கத்தில் பூசாரிகளாகவே ஆலயங்களில் அனுமதிக்கப்பட்ட பிராமணர்கள், பின்னர் ஆலயத்தின் அனைத்துச் செல்வங்களுக்கும் உரிமையாளர்களாயினர். பூசாரி கள் என்ற சொல், தமிழ்த்தேவதைகளுக்கான கோயில்களில் படைக்கும் தமிழர்களுக்கு ஒதுக்கப்பட்டு, குருக்கள் என்றும் பட்டாச்சாரியர் என்றும் புதுப்பெயர்களைச் சூட்டிக் கொண் டனர். ஒவ்வொரு ஊரின் ஆலயங்களோடும், அவ்வூர் மக்கள் சமய நோக்கில் பிணைக்கப்பட்டதால், பிராமணர்கள் ஊர்வழிச் சிக்கல்களுக்கும் அறிவுரைகள் கூறவும், முடிவுகள் அறிவிக்கவும் அனுமதிக்கப்பட்டனர்.

இவ்வாறு ஊர்ப்பகுதிகளில் நிலைபெற்ற பிராமணர்கள், பள்ளிகளையும் நடத்தத் தொடங்கினர். இவைகள் சாலைகள் எனப்பட்டன. இப்பள்ளிகளை நடத்துவதற்கு இடங்களும், உதவித் தொகைகளும், மன்னர்களாலும், மக்களாலும் பிராமணர் களுக்கு வழங்கப்பட்டன. இப்பள்ளிகள் ஆரியக் கொள்கை களை விதைக்கும் இடங்களாகவே செயல்பட்டன. தமிழும் அப்பள்ளிகளில் கற்பிக்கப்பட்டது என்றே சொல்லலாம். தமிழர் களைக் கொன்ற ஆரியக்கடவுளர்களின் கதைகள் அனைத்தும் பாடத்திட்டத்தில் இடம்பெற்றிருந்தன.

இடைக்காலத்தில் பிராமணர்கள் அனைவருக்கும் நிலங் கள் ஒதுக்கப்பட்டு, ஆலயப்பணிகள் அளிக்கப்பட்டதாகவும் கூற இயலவில்லை. ஊருக்கு ஒரு பிராணமக்குடி என்ற நிலையில், நீர்வளம் மிகுந்த ஊர்கள் நிறைக்கப்பட்டன. வறண்ட பகுதி களுக்குச் செல்ல மறுத்த பிராமணர்களுக்கு, வாழ்க்கை வழிகள் யாவும் வறண்டு போயின. தங்கள் குலத் தொழிலையும் விடுத்து, கொலை கொள்ளைகளிலும் ஈடுபட்டனர். செங்கல்பட்டு மாவட்டத்தில் கிடைத்த குறிப்பொன்றின்படி, பிராமணர்கள் ஐவர், சில வேளாளர் மரபினரையும் சேர்த்துக்கொண்டு, வன்முறைக் கருவிகளைக் கொண்டு, சில பிராமணர்களையே கொலை செய்தனர் என அறியலாம்.[246] பிராமணர்களின் காது களை அறுத்தும், பிராமணப் பெண்களை இழிவுபடுத்தியும் வந்தனர். இரவு வேளைகளில் கால்நடைகளையும் திருடிக் கொண்டு போயினர்.[247] இந்நிகழ்வுகள், ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் நடைபெற்றதாகவும் கூறப்படுகின்றது.

பிராமணர்கள் தங்கள் குலத்தொழிலைவிட்டு, பிற தொழில்களில் ஈடுபட்ட செய்திகளும் உள்ளன. நக்கீரர் என்னும் பிராமணர், கடலில் பிடிபட்ட சங்குகளை அறுக்கும் பணிகள் செய்ததாக அவரே கூறுகிறார். பிற்காலத்தில் சிவனுடன் வாது செய்த நக்கீரர், சங்கறுப்பது எங்குள் சாதி, சங்கரனார்க்கு ஏது சாதி எனக் கேட்டார். சிவனுக்கு சாதியில்லை என்பதும், அவன்

---

246. An inscription from the Chinglepet district mentions an organised attempt at highway and terrorism in which five Brahmins and a few Vellalas were involved.

247. Ibid, p. 335.

படைத்தாகக் கருதப்படும் தமிழ் மக்களுக்கும் சாதியில்லை எனப்படுவதும், நக்கீரர் கூற்றிலிருந்தே தெளிவுபெறும். ஊர்ப் பொது அவைகள் (சபாக்கள்) பிராமணர்களையும் உறுப்பினர் களாகக் கொண்டிருந்தன. ஊராளும் பணியையும் பிராமணர் கள் செய்தனர். இராசராசன் காலத்தில் பிரம்மராயன், பிரமாதி ராயன் என்ற பெயரில் படைத்தலைவர்களாகவும் பணியாற்றினர். இவர்களைப் பிராமணசத்திரியர்கள் என அழைத்தனர். சிலர் வணிகத் தொழிலிலும் ஈடுபட்டனர். அவர்கள் பிராமண வைசியர் எனப்பட்டனர்.

கி.மு. 1000 ஆண்டுகளில் இருந்த தொழில்கள், கி.பி. 1000 ஆண்டுகளில் பலவாகப் பெருகின. மக்களின் தேவைகளைப் பொருத்துத் தொழில்களும் பெருகின. ஒவ்வொரு தொழில் செய்தோரும் ஒவ்வொரு சாதியாரெனக் கருதப்பட்டு, இடைக் காலத் தமிழகத்தில் கணக்கற்ற சாதிப்பிரிவுகள் தோன்றின. கடைக்கழக் காலங்களுக்கு முன்பு, வேளாளர்-வணிகர் என்ற இருபிரிவினரோடு, கம்மாளர், பறையர், புலையர், துடியர், பாணர் என்றவாறு தொழில் செய்தோர் இருந்தனர். இப்பிரிவு கள் பல்வேறு வகைகளில் பெருகி வளர்ந்து, உப்பு விளைப்பவன் ஒரு சாதியாகவும், சங்கறுப்பவன் ஒரு சாதியாகவும், கடலில் மீன்பிடிப்பவன் ஒரு சாதியாகவும், ஆற்றில் மீன்பிடிப்பவன் ஒரு சாதியாகவும், மீனவர் குலமே பிளவுபட்டது. இப்பிரிவுகள் எல்லாம் ஒன்றோடொன்றும் முரண்பட்டன.

உழவரே உயர்ந்தோர் எனப்பட்டனர். உழவுத் தொழில் வயிற்றுப் பசியைப் போக்கும் மற்ற தொழில்கள் நாகரிக வாழ்க்கைக்கு உதவும் என்பதால், உழவுத் தொழிலை வள்ளுவரும் உயர்த்தினார்.

> **உழுவார் உலகத்தார்க் காணிய...**[248]
>
> **உழுதுண்டு வாழ்வரே வாழ்வார்..**[249]

இவ்வாறு, உழுதும் உழுவித்தும் வேளாண்மையைப் பெருக்கியவர்கள், கார்காத்தான் என்றும், கொடிக்கால்காரன் என்றும், தொண்டை நாட்டான் என்றும் பலவாறு பிரிந்தனர்.

---

248. திருக்குறள், 1032.

249. மேலதே, 1033.

## இன்று மரபுவழியில் சொல்லப்படும் சில பிரிவுகள்

அகம்படியன், அம்பலக்காரன், அனவன், இடையன், இருளன், உடையான், உப்பரவன், உவச்சன், ஊராளி, ஓதுவான், கடசன், கணக்கன், கணிகை, கள்ளன், காராளன், குசவன், குடிமகன், குலப்பிள்ளை (சாதிப்பிள்ளை), குறவன், குறும்பன், கைக்கோளன், கொல்லன் (தச்சன், கம்மியன், தட்டான், கன்னான், கருமான்), கோலியன், சவளக்காரன், சாயக்காரன், சாலியன், சான்றான் (சாணான்), சிங்கன், செட்டி (வெள்ளாஞ்செட்டி, வாணியச் செட்டி, நாட்டுக் கோட்டைச் செட்டி, நகரத்துச் செட்டி, காசுக்காரச் செட்டி, பேரிச் செட்டி, கரையான் செட்டி, மளிகைச் செட்டி, மஞ்சகுப்பத்துச்செட்டி, பன்னிரெண்டாஞ் செட்டி), செம்படவன், தேவடியாள், தொண்டைமான், நளவன், பட்டணவன், பண்டாரம், பணிக்கன், பணிசவன், பரத்தை, பரவன், பரிவாரம், பள்ளன் (அம்மாப் பள்ளன், அஞ்ஞாப் பள்ளன், ஆத்தாப் பள்ளன், பணிக்கன், கடையன்), பள்ளி (கவுண்டன், கண்டன், சம்புவராயன், நாயகன், நயினர், படையாட்சி) பறம்பன், பறையன், பாணன், மறவன், முத்தரையன், முதலியார், வண்ணான், வல்லம்பன், வலையன், வாணிகன், வாணியன், வெள்ளாளன் (கார்காத்தான், சிவனிய, கோட்டை, நங்குடி, அரும்பூர், நீறுபூசி சோழிய வெள்ளாளன், துளுவ, தொண்டை மண்டல, கொங்கு என்றவாறும், அகம்படிய, காரைக்காட்டு, அரும்புகட்டி, கும்பிடு சட்டி, மொட்டை அல்லது ஆறு நாட்டு, மலைகாணி, சங்குத்தாலி எனவும்), வேடன் வேட்டுவன் எனவும் விரியும்.[250]

### மலைவாழ் மக்கள்

காடர் (ஆனைமலை), குன்றுவர் (பழனிமலை), பழியர் (குடமலை), மலையாளி (சேர்வராயன், பச்சை, கொல்லி மலைகள்), மலசர் (ஆனை மலை), மன்னான் (குடமலை), மூதுவர் (நீலமலை, ஏலமலை)

மேற்கண்ட குலத்தாரும், அவர்தம் பிரிவுகள் விரிந்த குலத்தாருமே தமிழர் குலமாவர். இவ் வேர்க்குலங்கள் தவிர்த்துத் தமிழ்நாட்டில் உள்ள வகுப்பார், பிராமணர், தெலுங்கர், கன்னடர், மற்றும் வட நாட்டவராவர். நாயுடு, ரெட்டி, தெலுங்குச் செட்டி, ஒட்டர் போன்றோர், நாயக்கர்கள் காலத்

---

250. தமிழர் வரலாறு, பாவாணர், ப. 281.

தில் தமிழகத்தில் வந்து குடியேறிய வடுகர்களே. தமிழரும் ஆங்கிலேயரும் கலந்த இனம், சட்டைக்காரர் என்று அழைக்கப் படுகின்றது.

வேளாளர் என்ற உழவர் மரபு தமிழ் நாட்டின் சிறப்பான பிரிவாகும். உழுதவர் உழுவித்தவர் என்று இரு பிரிவுகளானதில், உழுதவர் பணியாளர்களாகவும், உழுவித்தவர்கள் நில உரிமை யாளர்களாகவும் மாறினர். வேளாளர் அனைவரும் நகரப் பகுதிகளை விடுத்து, ஊர்ப்பகுதிகளில் வாழ்ந்தவர்களே. இவர் களில் உழுவித்தவர் உயர் வகுப்பாராகக் கருதப்பட்டு மன்னர் களுடனும் மணஉறவு கொண்டிருந்தனர் என்று அறியப்படு கின்றது. வேளிர்கள் எனப்படும் படைத் தலைவர்களும் குறுநில மன்னர்களும் வேளாளர்களே. பாரி, அஞ்சி, காரி, ஓரி, பேகன் போன்றோர் இவ்வேளிர் மரபைச் சேர்ந்தவர்களே. செட்டி என்பது மிக உயர்ந்த வணிகனுக்கு அளித்த பட்டமாகும். இவர்கள் நகரங்களிலேயே வாழ்ந்திருந்தனர். உள்நாட்டிலும் கடல் கடந்தும் இவர்கள் வாணிகம் செய்தனர். நாட்டார், நகரத்தார் என்பன இவர்களின் பிரிவுகளாகும். கோவலன் போன்றோர் இவ்வணிக மரபில் தோன்றியவரே. மன்னனுக்கும் கடன் கொடுக்கும் செல்வம், செட்டிகளிடம் இருந்தது. செட்டி களின் ஒருபிரிவினரே குசராத்து போன்ற பகுதிகளில் தங்கி விட்டனர் என்றும், அவர்கள் செட்டி என்ற சொல் திரிபாக, சேட்டு என்று அழைக்கப்படுவதாகவும் கூறுவர்.

மன்னர்களின் போர்ப்படையில் காலாட்படையினராகப் போரிட்டவர் மறவர் என்ற பிரிவினரே. நெஞ்சுரமும் போர்க் குணமும் கொண்ட இவர்கள், மன்னர்களால் பெரிதும் போற்றப் பெற்றனர். வில் எனும் போர்க்கருவியை இயக்கும் ஆற்றல் பெற்றிருந்தோர், பள்ளி என்ற பிரிவைச் சார்ந்தவர்களே. இடைக்காலச் சோழர்கள் படையில் பள்ளிப்படை என்ற தனிப்பிரிவே இருந்தது. பள்ளி மரபிர், துணிச்சலும் ஆற்றலும் கொண்டிருந்ததால், மன்னர்கள் இவர்களைப் பெரிதும் போற் றினர். இம்மரபார் தற்போது வன்னியர்கள் எனப்படுகின்றனர். இவர்களுக்கு வழங்கப்பட்டு வழக்கில் உள்ள பல பெயர்கள், இவர்களைப் போர் முனைகளோடு தொடர்புபடுத்தும். காங் கேயன், கலிங்கத்தான், வன்னியன், கண்டியன், கங்கை கொண் டான், களத்துப்பிரியன் போன்ற பெயர்கள் அனைத்தும் போர் முனைப் பெயர்களே.

கம்மாளன் என்ற கைத்தொழில் வல்லார் பிரிவே, தொன்மைக் காலத்துப் பொறியலார் எனப்படுபவராவர். வீடுகட்டவும், கோயில்களை எழுப்பவும், கல்லணை போன்ற அணைகளைக் கட்டவும், வேளாண்மை, வீட்டிற்கான பொருட்கள், அணி மணிகள், பொன், வெள்ளி செப்பு வேலை என, பல்வேறு தொழில்களோடு தொடர்புடைய பிரிவு, கம்மாளர் பிரிவாகும். உலகமே வியக்கும் வகையில் தஞ்சையில் கட்டப்பட்டுள்ள பெருவுடையார் கோயில், தமிழ்க் கம்மாளனின் தொழில் நுணுக்க அறிவுத் திறமையில் உயர்ந்ததே.

தமிழகத்தின் இடையர் பிரிவு எனப்படும் ஆயர் இனம், தொல்தமிழ்க் குடியாகும். மாலியம் என்ற சமயக் கொள்கையை வகுத்தவர்கள் இவர்களே. பால், நெய், வெண்ணெய், தயிர், மோர் என்ற ஆனைந்து படைத்த ஆயர்குலமே, முல்லை நில நாகரிகத்தின் முதுமை மக்களாவர். தொன்மை காலத்தில் ஆயர் இனம் அரசர்களாகவும் இருந்தது. கண்ணன் எனப்படுபவன், தமிழர் ஆயர்குலத்தில் பிறந்த வடநாட்டு மன்னனே.

இந்தியாவில் அடிமைத்தனம் இல்லை என்று, கிரேக்க வரலாற்று ஆசிரியர் கூறியிருப்பது அரை உண்மையான செய்தியேயாகும். மெகஸ்தனிசின் கூற்று, ஆரியர்களுக்கு முன்பிருந்த இந்தியாவில் இருந்ததை ஏற்றுக் கொள்ளலாம். ஆரியர்கள் தொடங்கிவைத்த நால்வருணப் பிரிவே, அடிமைகள் என்ற நிலைக்குச் சூத்திரர்களைத் தள்ளியது. அடிமைத் தனமும், தாழ்த்தப்பட்ட இனப் பிரிவும் தமிழகத்தில் தொன்மைக் காலத்தில் இல்லவேயில்லையென, வி. கனகசபை என்ற வரலாற்று ஆசிரியர் கூறுகிறார்.[251]

ஆனால் சிலப்பதிகாரம், அடிமைகள் என்ற மரபு இருந்ததாகக் கூறுகிறது. இதன் வழியில், கடைக்கழகக் காலத்தில், ஆரிய நால்வருணத்தாக்கத்தால், இவ்வாறான இனம் உண்டாயிற்று என அறியலாம்.

உரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க – சிலப்பதிகாரம்[252] **2:88.**

உரிமைச் சுற்றம் என்ற சொல்லுக்கு அடிமைத் திரள் என்றே அடியார்க்கு நல்லார் பொருள் கூறுகிறார். கலித்தொகையும்

---

251. The Tamils 1800 years ago, V. Kanakasabai, p. 114.

252. சிலப்பதிகாரம், 2:88.

கூட, அடிமை இனத்தாரை அறிய, அவர் நெஞ்சில் அடையாள மிடப்பட்டிருந்ததாகக் கூறுகிறது.[253] சுந்தரர் தனக்கு அடிமை யானவர் என்று, முதிய பிராமணர் ஒருவர், அதற்கான ஓலைச் சான்றை அளித்ததாகப் பெரியபுராணம் கூறுகிறது.[254] கரிகாலன் கல்லணையைக் கட்ட இலங்கையிலிருந்து பல ஆயிரம் அடிமை கள் கொண்டுவரப்பட்டனர் என்று மகாவம்சம் கூறுகிறது. தங்கள் கடனை அடைக்க வாழ்நாள் முழுதும் பணிசெய்யும் வகையில் ஒப்பந்தம் செய்து கொண்டதற்கான செய்திகளும் உள்ளன. ஆனால் மேலை நாடுகளில், அடிமைகளைச் சந்தை யில் விற்றது போன்ற கொடுமை தமிழகத்தில் நடைமுறையில் இல்லை.

கடைக்கழகக் காலத்துக்கு முன்பு, பறையர் எனப் பட்டோர், அரசின் பணியாளர்களாகவேயிருந்தனர். அரசின் ஆணைகளை மக்களுக்கு அறிவிக்கும் செய்தியாளர் பணியைச் செய்து வந்தனர். வெளிநாட்டு மன்னர்களுக்கு அனுப்பப்படும் செய்திகளையும் இவர்களே கொண்டு சென்றனர். தூதுவர்கள் என்ற அளவில் உயர்ந்திருந்த இப்பணியாளர்களை, ஆரியத் தாக்கமே, தாழ்த்தப் பட்டவர்களாக மாற்றியது. மக்களிடம் செல்வாக்குப் பெற்ற பணிகளைச் செய்த தமிழர்களை, தாழ்த்தப்பட்டவர்களாக ஆரியம் அறிவித்தது, அப்பிரிவினர் பால் கொண்டிருந்த காழ்ப் புணர்ச்சியையே காட்டுகிறது. அந்தணர்களான வள்ளுவர்களும், சமயத்தலைவரான பார்ப்பாரும், வானியல் அறிவர்களான கணியரும், அரசின் செய்தியாளர்களான பறையர்களும், மக்களின் நன்மதிப்பைப் பெற்ற பணியில் இருந்தோராவர். இவர்கள் இப்பணிகளில் நீடித்தால், தங்களது ஆளுமை குறைவு படும் என்பதாலும், மேற்கண்ட அறிவுக் கூட்டத்தை அருகில் வைத்துக் கொள்வது ஆரியர்க்கே இடர்ப்பாடாய் அமையும் என்பதாலும், இவர்களை ஒருசேர ஆரியர்கள் வீழ்த்தினர். வள்ளுவப் பறையன் எழுதிய திருக்குறளும், ஆரியக் கருத்துக் களைக் கொண்டிருந்ததாகக் கருதியே அந்நூலையும் அழிக்காமல் விட்டனர். தொல்தமிழகத்தின் அறிவர் கூட்டம், கடைக்கழகக் காலத்திற்குப் பிறகு தாழ்த்தப்பட்டவர்களாக அறிவிக்கப் பட்டதும், தங்களையும் தாழ்த்தப்பட்டவர்களாக அறிவித்து

253. கலித்தொகை, 247.

254. History of Tamilnad, p. 342.

விடுவார்களோ என்ற அச்சத்தில் மற்றவர்கள் அதனை உறுதி செய்ததும், வரலாற்றில் காணப்படும் மாந்த நேயமற்ற அறிவற்றோர் செயலாகும்.

திருவள்ளுவரால் முதன்மைக் குடிமக்கள் எனப் போற்றப்பட்ட வேளாளர் இனம், ஆரியர்களை முதற்குடிகள் என ஏற்றுக் கொண்டதோடல்லாமல், ஆரியருக்கு அடுத்த உயர்ந்த சாதிக் காரர் தாங்களே என்று சொல்லிக் கொள்வதில் பெருமை கொண்டனர். கிறித்துவம் தமிழ்நாட்டில் பரவத் தொடங்கிய கி.பி. 15ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு, தாழ்த்தப்பட்ட மக்களே அம்மறையில் பெரிதும் இணைந்தனர். சாதிக் கொடுமையால் ஊரிலும் நாட்டிலும் மாக்களாக நடத்தப்பட்ட அம்மக்கள், தங்கள் மாந்த உரிமையை நிலை நிறுத்திக் கொள்ளவே கிறித்துவ சமயத்தில் இணைந்தனர். தொடக்கத்தில் அச்சமயத்தில் இணையத் தயங்கிய மற்ற வகுப்பார், பிறகு சேர முன் வந்தனர். இவர்களில் வேளாண்மரபினர் சிறு அளவினராய் முதலில் சேர்ந்தனர். தங்களைச் சுற்றிலுமிருந்த கிறித்துவர்கள், தாழ்த்தப் பட்டவர்களாக இருந்தோர் என்ற பழையநினைவில், தங்களைக் கிறித்துவப் பிராமணர்கள் என்று சொல்லிக் கொண்டதாகச் செய்திகள் கூறுகின்றன. இழிசொற்களால் புண்படுத்தப்பட்ட மக்கள், சமயமாற்றங்கள் கண்டபோதும், அங்கும் அவர்கள் தாழ்த்தப்பட்டவர்களாகவே கருதப்படுகின்றனர் என்பதே உண்மையான நிலையாகும்.[255]

○○○

---

255. குடந்தை மறைமாவட்ட பொன்விழா மலர், 1949.

16

# இடைக்காலத்துத் தமிழ்நாட்டுச் சமயங்கள்

தீயையும், ஞாயிற்றையும், திங்களையும், நீரையும், முகிலையும் தொடக்ககாலத் தமிழர்கள் வழிபட்டது. தங்களுக்கு நலன்களைத் தரும் இவைகளுக்கு நன்றி சொல்வதற்காகவே. தமிழர் சமயம் நன்றியுணர்வை அடிப்படையாகக் கொண்டது. காலங்கள் மாற, தாங்கள் அச்சப்பட்ட சிலவற்றையும் வணங்கத் தலைப்பட்டனர். இடியும் மின்னலும், இரவும் கருமையும், உயிரைப் பறிக்கும் விலங்குகளும் பாம்பும் என அவர்களின் பட்டியல் நீண்டது. தங்களுக்குத் தீங்கு செய்ய வேண்டாம் என்று கேட்டுக் கொண்டது, சமயத்தின் அடுத்த நிலையாகும். தங்கள் நல்வாழ்விற்கு இன்னின்னவெல்லாம் வேண்டும் என்ற அவாவின் அடிப்படையில் கேட்டுக் கொண்டது மூன்றாவது நிலையாகும். தங்கள் வேண்டுதலுக்கு வெளி அடையாளமாகத் தாங்கள் எதையெல்லாம் பெரிதும் விரும்பியிருந்தார்களோ, அவைகளை இறைவனுக்கும் படைக்க முற்பட்டது நான்காவது நிலையாகும். இந்தப் படையல் என்ற நிகழ்வுக்கு ஆண் ஒருவன் தேவைப்பட்டதும், அந்த ஒருவனே பிற்காலத்தில் பூசாரி என்று சொல்லப்பட்டதும் இறுதி நிலையாகும். இந்தத் தமிழர்களின் வணக்க முறையில் குழப்பங்கள் இருந்திருக்கவில்லை.

ஆரியர்களின் வணக்கமுறை தமிழரினும் மாறுபட்டது. அன்பின் அடிப்படையிலும், நன்றியுணர்வின் அடிப்படையிலும் இறைவனை வணங்கும் முறை ஆரியர்களிடம் காணப்படாத ஒன்று. இறைவனிடம் வேண்டுகோளை மட்டுமே ஆரியர் வைத்தனர். இந்த வேண்டுகோள்களுக்குக் கையூட்டுக் கொடுப்பது போல், வேள்விகளைச் செய்தனர். ஆரியர்கள் வேள்வியின் போது அளிக்கும் அவியுணவை உண்டு, ஆரியர்கள்

கேட்டதையெல்லாம், கடவுளர் கொடுத்ததாகக் கூறி, கடவுள் என்ற கொள்கையையே கொச்சைப்படுத்தி வைத்தனர். தமிழர் வணக்க முறைக்கும், ஆரிய வணக்க முறைக்கும் மிகப்பெரிய வேறுபாடு ஒன்றுண்டு. தமிழர்கள் தங்களுக்கு வேண்டியவை களைக் கடவுளரிடம் கேட்டார்கள், ஆரியர்களோ அதற்கு மாற்றாக, தங்கள் பகைவர்களை அழிக்கும்படி கடவுளர்களைக் கேட்டார்கள். ஆரியர்களின் வேதங்கள், புராணங்கள், கதைகள் என எவற்றை எடுத்துக் கொண்டாலும், ஆரியர்களின் பகைவர் களைப் பற்றிய பட்டியலொன்றைக் கொடுத்து, அவர்களை யெல்லாம் அழித்தொழிக்கவும், தாங்கள் மட்டும் நல்வாழ்வு காணவும் கடவுளரை வேண்டின விளக்கங்கள் தெரியும். இந்த ஆவல், எல்லையற்றுப் போனதால், கடவுளரிடம் எதைக் கேட்பது என்ற வரன்முறையும் இல்லாது போயிற்று. கடவுள ரைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் ஆரியர்களுக்கு இருந்ததாகப் பிறரை நம்பவைத்ததே, ஆரியச் சமயத்தின் அடிப்படையாகும்.

உயிர், ஆன்மா, மறுஉலகம் போன்ற கொள்கைகள் தொடக்க காலத்துத் தமிழ்ச் சமயங்களில் இருந்திருக்கவில்லை. அவை இவ்வுலக வாழ்வை அடிப்படையாகக் கொண்டிருந் தவைகளே. ஆனாலும் உலகின் முதல் சமயம் என்ற அளவில், உயிரினங்களின் படைப்பு, இறப்புக்குப் பிறகு இந்த உயிர் எங்கே போகிறது என்ற சிந்தனைகள் தமிழர்களிடமும் இருந்தன. உலகம் இறைவனால் படைக்கப்பட்டது என்ற கொள்கையும், தன்னிலே உருவானது என்ற கொள்கையும் தமிழரிடையே இருந்தன. ஊழ் எனப்படும் செயல்பாடு பற்றியும் தமிழர்கள் விரிவான விவாதங்கள் நடத்தினர். திருவள்ளுவரும் கூட ஊழைப் பற்றி சிந்தித்துள்ளார். இக்கருத்துகளும் கொள்கை மோதல் களும் எந்தக் கட்டுப்பாடுகளும் இன்றி நடைபெற்றன. தமிழ்ச் சமயம் தோன்றிய காலத்திலிருந்தே கடவுள் ஏற்புக் கொள்கை யும், கடவுள் மறுப்புக் கொள்கையும் தமிழரிடையே இருந்தன. இக்கொள்கை வாதங்களால் தமிழர்தம் வாழ்வு இடர்ப்பாட்டுக் குள்ளாக்கப்படவில்லை. மறுஉலகம் என்ற கொள்கையை, கணியர்களில் ஒரு பிரிவினர் ஏற்றுக் கொள்ளவில்லை.

மறுஉலகம் என்ற கொள்கை, மக்களை அச்சுறுத்துவதற் காகவே சொல்லப்பட்டது என சமயங்களை ஆய்வு செய்த அறிஞர்கள் கருத்துரைக்கின்றனர். மோயீசனின் யூத சமயத்தில் கூட, மறு உலக வாழ்வைப் பற்றி, மோயீசன் விளக்கவில்லை

என, யூத சமயத்தை ஆய்வு செய்தோர் கூறுவர்.[256] ஆண்டான் அடிமை முறை எந்தெந்த நாடுகளில் இருந்ததோ, அந்நாடுகளின் சமயங்களே மறுஉலகம் பற்றிய கொள்கையைக் கொண்டிருந்தன என்பது ஆய்வாளர்களின் முடிபுகளாகும். தங்களுக்குக் கீழ் பணியாற்றும் ஒரு வகுப்பாரைத் தொடர்ந்து பணியாளர் களாகவே வைத்துக் கொள்ளவே, மறுஉலகம் என்ற பரிசை அறிவித்ததாகவும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர். தமிழர் சமயம் மறுஉலகைக் காட்டி மக்களை அச்சுறுத்தவில்லை. ஏனெனில் தமிழரிடையே ஆண்டான்-அடிமை முறை இருந்திருக்கவில்லை.

மறுஉலகம் என்ற கொள்கையினும் மேலானவொன்றாக, மறுபிறவி என்ற கொள்கை, ஆரியர்களால் சொல்லப்பட்டது. நான்கு வகை வருண முறைக்கு, மறுபிறவி கொள்கையே அடிப் படையானது என்பதால், இக்கொள்கை வலிந்து வலியுறுத்தப் பட்டது. இந்தியாவில் தோன்றிய ஆரிய, புத்த, சமண சமயங்கள் மட்டுமே மறுபிறவி கொள்கையை ஏற்றுக் கொண்டுள்ளன. இச்சமயத்தாக்கங்களால் ஏற்பட்ட நிலைமைகள், தமிழ்ச் சமயத்திலும் அக்கொள்கையை ஏற்கும் நிலை உருவாக்கப் பட்டது. இடைக்காலத்துத் தமிழ்ச் சிவநெறியும்,[257] மாலிய நெறியும்[258] மறுபிறவிக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டன என்பது தெளிவு. திருவள்ளுவர் மறுபிறவிக் கொள்கையை ஏற்றுக்கொண்டதாகக் கூறப்படுவது, உரையாசிரியர்கள் கொடுத்த விளக்கங்களால் என்பது தெளிவு. ஒரு பிறவியில் ஒருவன் கற்ற கல்வி, அவனுடைய ஏழு பிறப்புகளிலும் பயன் அளிக்கும் என்று வள்ளுவர் கூறியதாக விளக்கம் அளிக்கப் பட்டது தவறான சிந்தனையாகும். இப்பிறவியில் கற்றறிந்த மாந்தன். அடுத்த பிறவியில் மரமாகப் பிறந்தால், அவன் முற் பிறவியில் கற்ற அறிவு, அம்மரத்தின் வாயிலாக எவ்வாறு வெளிப்படுகிறது என்பதற்குச் சான்றுகள் இல்லை. மரங்களில், இவை கற்ற மரம் கல்லா மரமெனக் கூறுவது பொறுத்தமற்றது. ஒருவன் கற்ற கல்வி, அவனுடைய மகனுக்கும், மகன் வயிற்றுப் பெயரனுக்கும், அவன் வழி மரபுகளுக்கும் பயன்தரும் என்பது ஏற்கக்கூடிய ஒன்றே. ஒருதலைமுறை படித்துவிட்டால் அடுத் தடுத்த தலைமுறைகள் கல்வியாளர்களாக மாறிவிடுவதை இன்றும் காண்கிறோம். அறிவியல் பார்வையோடு வள்ளுவர்

---

256. History of Religion, p. 238.

257. திருமந்திரம், 1498.

சொன்ன குறள், மறுபிறவிக் கொள்கையோடு தொடர்புபடுத்தப் புட்டு, இன்றும் நம்பப்பட்டு வருவது தவறான சிந்தனையாகும்.

> ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவருக்கு
> எழுமையும் ஏமாப்பு உடைத்து[259] – 398

**சமயக் குரவர்கள்**

நாயன்மார்கள் சிவநெறியையும், ஆழ்வார்கள் மாலிய நெறியையும் வளர்த்தவராவர். இவர்கள் கி.பி. 5ஆம் நூற்றாண்டு முதல் 12ஆம் நூற்றாண்டுவரை வாழ்ந்தவராவர். கி.பி. 250-600 ஆண்டுகளில், தமிழ்ச் சமயங்களான சிவனியம் மாலியமும் அழிக்கப்பட்ட நிலைமைகள் வந்துற்றதால், பொங்கியெழுந்த இக்குரவர்கள், மீண்டும் இச்சமயங்களின் வளர்ச்சியை நிலை நிறுத்த முயன்ற காலமே, இந்த இடைப்பட்ட ஏழு நூற்றாண்டு கள் ஆகும். கடைக்கழகம் மறைந்த காலத்தில் இருந்த சிவ மாலிய சமயக் கொள்கைகளுக்கும், கி.பி. 10ஆம் நூற்றாண்டில் அவை கொண்டிருந்த சமயக் கொள்கைகளுக்கும் பெருத்த வேறுபாடுகள் உண்டாயின. 400 ஆண்டுகாலக் களப்பிரர் ஆட்சி, இவ்விரு தமிழ்ச் சமயங்களையும் தாக்கி, நசுக்கி, அவை மீண்டெழுமோ என்ற நிலையை உருவாக்கிவிட்டது. புத்தம், சமணம், ஆரியம் ஆகிய மூன்றும் இக்காலங்களிலேயே எழுச்சி பெற்றன. மக்களின் தமிழ் நெறி மீதான நம்பிக்கைகள் தளர்வுற்றன. மிகப்பெரும் பண்பாட்டுச் செல்வக் கொழிப்பில் வாழ்ந்திருந்த தமிழகம், கடைக்கழக இறுதியில் (கி.மு. 300) நலிவுறுவதற்கான முதற்படியில் அடியெடுத்து வைத்தது. தமிழகம் தோன்றிய காலத்திலிருந்து, தமிழர்களே ஆண்டு கொண்டிருந்த தமிழகத்தை, தமிழரல்லாதார் ஆண்ட காலமே களப்பிரர் காலமாகும். களப்பிரர் காலத்தில் தொடங்கிய தமிழர்களின் நலிவு இன்றுவரை மீட்கப்படவே வழியில்லாமற் போய்விட்டது. களப்பிரர் ஆட்சியில் நடைபெற்ற கொள்கைகளும், மாந்த உரிமை மீறல்களும், கொலைகளும், தமிழகம் அதுவரை கண்டிராத புதிய நிகழ்வுகளாகும். இன்ப வாழ்வில் இறுமாந் திருந்த தமிழர், களப்பிரர் ஆளுகையில், செய்வதறியாது திகைத்தனர். இவர்கள் ஆளுகையின் கொடுமைகள் அடுத்த தலைமுறையினர் அறியாவண்ணம், திட்டமிட்டே மறைக்கப்

---

258. திருப்பாவை, திவ்ய பிரபந்தம், 7.
259. திருக்குறள், 398.

பட்டன. எதிர் எதிர் சமயங்களாகக் கருதப்பட்ட புத்தமும் ஆரியமும், சில கொள்கைகளை விட்டுக் கொடுத்துக் கொண்டு தமிழகத்தில் இணைந்தனர் என்று வரலாற்று ஆசிரியர் கே.ஆர். சீனிவாசன் கூறுகிறார். வைணவமாக மாற்றப்பட்ட தமிழ் மாலியத்தில், புத்தரையும் விஷ்ணுவின் ஒரு பிறப்பாளராக (அவதாரமாக) ஏற்றுக்கொண்டனர்.[260] இதற்கு ஈடாக, ஆரியரின் மறுபிறப்புக் கொள்கையையும், சாதிப் பாகுபாடுகளையும் புத்த சமயத்தினர் ஏற்றுக் கொண்டனர். கிருஷ்ண, பலராமக் கதைகளும் வணக்க முறைகளும் தமிழகத்தில் விதைக்கப்பட்டன.

ஏற்கனவே சிலப்பதிகாரம் கண்ணனைப் பற்றிய செய்தி களை அறிவித்திருந்தது.[261] விஷ்ணு உலகளந்தது பற்றிய செய்தி களை கலித்தொகையும்[262] திரிகடுகமும் விளக்குகின்றன. நீர் என்பதே மகாவிஷ்ணுவின் வியர்வைத் துளிகளே என்றும்,[263] அதுபற்றியே நீர் அயனன்-நாராயணன் என்று விஷ்ணு அழைக்கப் பட்டதாகவும் கதைகள் கூறுகின்றன. தமிழ்நாட்டில் கட்ட பொம்மன் தேசிங்குராசன் கதை போன்றே, அக்காலத்தில் வடபுலத்தில் கண்ணன் என்ற மன்னனைப் பற்றிய கதைகள் வழங்கி வந்தன. இக்கதைகளின் வாயிலாக கண்ணன் வட இந்தியாவில் புகழ் பெற்றிருந்தான். இக்கதைகள் யாவும் ஆரியர் அல்லாதாரால் கூறப்பட்டவைகளேயாகும். கண்ணனுக்குள்ள புகழை அறிந்த ஆரியர்கள், தம் சமயத்துக்குள் கண்ணனை இழுத்துக் கொண்டு, விஷ்ணுவாக அறிவித்தனர்.[264] விஷ்ணு, ஆரியர்களால் பின்னால் அறியப்பட்ட தெய்வமே. இரிக்கு வேதம் விஷ்ணுவைப் பற்றியும், அவனே முழுமுதற் கடவுள் என்றெல்லாம் எதுவும் கூறவேயில்லை. இதுபோல், ஆரியர் கடவுளாகச் சொல்லப்பட்ட இந்திரனையும், புத்த சமயத்தார் ஏற்றுக் கொண்டு, சாக்கியர் (Sakka) என்ற வடிவில் இந்திரனின்

---

260. Bhishma's History of Tamilakam, p. 87-88.

K.R. Srinivasan expresses the view, "The inclusion of the Budda in the Hindu (Brahmanical) pantheon as a form of Vishnu is more a southern concept."

261. சிலப்பதிகாரம், 27 (ஆய்ச்சியர் குரவை)

262. கலித்தொகை, 124:2.

263. Mahabaratha, II: 189. K.K. Handiqui: Yasathilaka and Indian Culture.

264. Evolution of Hindu Sect, Sudhakar Chattopadhyaya, p. 46.

கதைகளை, சாதகக் கதைகளில் பரப்பினர்.[265] இவ்வகையான புத்த-சமண-ஆரிய முக்கூட்டு, தமிழகத்தின் இரு சமயங்களையும் தகர்த்தெறிந்தது.

தமிழரின் சிவநெறிக்கு, களப்பிரர் ஆண்ட மதுரையில், இடர்ப்பாடுகள் இருந்தன என்பதை காரைக்கால் அம்மையாரின் கூற்றுகள் தெளிவாக்குகின்றன. அம்மையாரே மதுரையில் தனது சிவநெறிக் கடன்களைச் செய்ய இயலா நிலையில், காரைக்காலுக்குத் திரும்பியதாகவும் அறியக் கிடக்கின்றது. தமிழகத்தின் வரலாற்றில், இறைவனின் ஆற்றலைப் பெற்றவர் (Supernatural power) என்று முதன்முதலில் காரைக்கால் அம்மையார் அறியப்படுவதாக, எம். அருணாசலம் கூறுகிறார்.[266] அழகற்ற உடலுருவை (பேய் போன்று) அம்மையார் சிவனிடம் கேட்டுப் பெற்றதாகக் கூறப்படுகின்றது. இவரது காலம் கி.பி. 475-550 ஆண்டுகளாக இருந்திருக்கலாம் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சிவநெறியை மீண்டும் உயிர்ப்பிக்க முதன்முயற்சி எடுத்தவர் என்று கூறப்படுவது உண்மையே. இவரது இலக்கியங்கள் மூத்த தேவாரம் என்றும், பதினோராம் திருமுறையாகவும் சொல்லப்படுகின்றன. சிவநெறியில் முதன் முதலாக, பேய்கள் பற்றியும் மந்திர தந்திரங்கள் பற்றியும் சொல்ல; தொடங்கப் பெற்ற காலம் இதுவேயாகும்.[267] இவ்வாறான நம்பிக்கைகள், புத்த-சமண-ஆரியர்களின் கதைகள் தமிழகத்தில் பரப்பப்பட்டதால், அவைகளை மடக்கும் வகையில், சிவனியத்திலும், மாந்த ஆற்றலை மீறிய செயல்கள், கதைகளாக உருவெடுத்தன.

இதே காலத்தில் வாழ்ந்திருந்த திருமூலர், சிவநெறிக்குப் புதிய கொள்கையையே படைத்துவிட்டார். பிற்காலச் சிவநெறியின் தந்தை என்றே திருமூலரைச் சொல்லலாம். திருமூலரைப் பற்றிய கதைகள், அவர் கி.மு. 3000 ஆண்டுகளில் வாழ்ந்திருந்தவர் என்றும், கி.பி. 500 ஆண்டு வரையிலும் அவருடைய வாழ்க்கை நீடித்தது என்றும், ஆண்டுக்கொரு பாடலாக 3000 பாடல்களைப் பாடினார் என்றும் சொல்லப்படுவது, கதை போன்ற செய்தியேயாகும். களப்பிரர் ஆளுகையில் இரண்டாம் நிலைக்குத் தமிழ் தள்ளப்பட்டு, ஆரியம் முதன் மொழியாயிற்று.

---

265. "Sakko ti Indo" - Jataka Stories V-115.

266. The Kalabhras in the Pandya Country, p. 102.

267. Ibid.

அவர்களும் தமிழை ஒதுக்கி ஆரியத்தை ஏற்றுக்கொண்டன. தமிழ்நாட்டில், தமிழ்க் கடவுளுக்கு, தமிழில் பாடவியலா நிலையைத் தோற்றுவித்த ஆரியத்தின் பால் திருமூலர் வெகுண் டெழுந்தார். தமிழ்மறையை அழிக்க முயலும் வேதங்களைப் புறந்தள்ளினார். தமிழ்க் கடவுளான சிவனை வழிபட, புதிய வேதத்தையே உருவாக்கினார். தமிழ்ப்பற்றும் சிவப்பற்றும் ஒருங்கே அமையப் பெற்றிருந்த திருமூலர், தமிழ்ச் சிவநெறிக்கு ஒரு புதிய வடிவத்தைக் கொடுத்தார். இதுவரையில் யாருமே தொடாத பல தலைப்புகளை உள்ளடக்கி திருமந்திரம் என்ற நூலை எழுதினார். இந்நூலின் சிறப்பையுணர்ந்த பிற்கால பிராமணர்கள், இது வழிநூலே என்றும், ஸ்ரீ மந்திர மாலிகா என்ற ஆரிய முதன் நூலைத் தழுவியே திருமந்திரம் என்ற வழிநூலை திருமூலர் எழுதினார் என்றும் கதைகட்டினர். சொற்சுவையும் பொருட்சுவையும் நிறைந்திருந்த திருமந்திரம், ஆரிய நூல்களினும் சிறப்பாக அமைவுற்றிருந்ததே இதற்குக் கரணியம் ஆகும். குண்டலினி ஓகம், மந்திரம்-யந்திரம், இரும் பைப் பொன்னாக்கும் சித்து, கூடுவிட்டு கூடுபாயும் கலை ஆகியவற்றை திருமந்திரம் வாயிலாகக் காணலாம்.[268] இயற்கை மருத்துவம் அறிந்த சித்தராக திருமூலர் அறியப்படுகிறார். திருமூலரின் சிவநெறித் தொகுப்பு, கி.பி. 13ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த மெய்கண்டார் கண்ட சிவஞானபோதம் என்ற கொள்கைக்கு முன்னோடியானது. சைவசித்தாந்தம் என்ற சிவனிய நெறிக்கான மெய்யியல் கொள்கையை உருவாக்குவதில் முதலில் இடம்பெறுபவர் திருமூலரே. இவருடைய படைப்பான திருமந்திரத்தில் சொல்லப்படாத செய்திகளே இல்லை எனும் அளவுக்கு அனைத்து மெய்யியல் கொள்கைகளையும் விளக்கு கிறார். இவருடைய காலத்துக்குப் பிறகு உருவாக்கப்பட்ட அத்வைத வேதக் கருத்துக்களும் திருமந்திரத்தில் காணப்படு கின்றன. சித்தர்கள் என்ற ஓகம் கற்றுத் தந்த ஆசிரியர்களுக் கெல்லாம் முதல் ஆசிரியராகத் திருமூலர் திகழ்கிறார்.

சித்தி (Liberation) என்பது, ஆன்மா என்ற உயிர் விடுதலை பெற்று, சிவனோடு கலப்பதே என்ற புதிய கொள்கையினை அறிவித்தார். சிவனின் அருள் (grace) ஆற்றலாக (சக்தியாக) வெளிப்படுவதாகவும் கூறினார். இதனை வேதாந்த சித்தாந்தம் என்பர். இது பிற்றை நாளில் ஆதிசங்கரர் அறிவித்த அத்வைத

268. திருமந்திரம், 354.

(இரண்டுமில்லாத)க் கொள்கையே என்றும் கூறுவர். ஆன்ம விடுதலை பிறவித் துயர்களினின்றும் காக்க வல்லது என்றும், ஆன்மா சிவனோடு இணைதலே சித்தாந்த சித்தி என்றும் விளக்கினார்.

புரிந்து கொள்வதற்கே கடினமான பல மெய்யியல் கொள்கை களை திருமூலர் வெளியிட்டார். தமிழகத்தின் சிவநெறிக்கு ஒரு திருப்புமுனையைக் கொடுத்தவர் திருமூலரே. சுந்தரானந்தன் என்ற இயற்பெயரைக் கொண்ட திருமூலர், மூலன் என்ற இடையனின் இறந்துபட்ட உடலில் நுழைந்து, மூலன் உருவி லேயே வாழ்ந்தார் என்றும் சொல்லப்படுகின்றது. திருமூலர், புத்தசமயத்தினை விண்நாட்டோர் என அழைத்தார். புத்த சமயத்தின் தாக்கங்கள் திருமூலரின் கொள்கைகளிலும் காணப் பட்டன. தந்திரங்கள், உடல்விட்டு உடலில் உயிர் நுழைவது போன்ற செயல்கள், அதர்வண வேதத்தின் செயல்களாக ஆரியர் கருதினர். அதர்வணவேதத்திலும் சிறந்த சித்த ஓகத்தைத் திருமூலர் கொண்டிருந்ததையும், ஆரியத்தினும் சிறந்தது தமிழ்வேதம் என்பதை உணர்த்தும் வகையிலும் திருமூலர் பற்றிய மாந்தவிஞ்சு ஆற்றல் (Supernatural power) சொல்லப்பட்டிருக்க வேண்டும். காரைக்கால் அம்மையார் பற்றிய செய்தியும் இவ்வாறே கூறப்பட்டுள்ளதால், சிவனின் ஆற்றல், ஆரிய வேதங்களையும் விஞ்சியது என்பது நிலை நிறுத்தப்பட்டது. பத்தாவது திருமுறையாகத் திருமந்திரமும், பதினொராவது திருமுறையாக காரைக்கால் அம்மையாரின் மூத்த தேவாரமும் சொல்லப்பட்டுள்ளன. அம்மையாரின் நூல்களாக, திருவாலங் காடு மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை, அற்புத அந்தாதி ஆகியவை கூறப்படுகின்றன. திருமூலரும் அம்மை யாரும் தொடங்கிவைத்த சிவநெறியின் மறுமலர்ச்சி அடுத்து வந்த நாயன்மார்களால் நிலைப்படுத்தப்பட்டது.

களப்பிரர் ஆட்சிகாலத்தில் ஆரியம் முதல் நிலை மொழி யாக ஏற்றுக்கொள்ளப்பட்டதை திருமூலர் எதிர்த்தார். தமிழுக்கு உரிய இடம் அளிக்கப்படாதது கண்டும் வெகுண்டெழுந்தார். தமிழிலேயே இறைவனைப் பாடுவேன் என்றும் சூளுரைத்தார். சூளுரைத்தவாறே திருமந்திரத்தை யாத்தார். வெண்பாவிற்குரிய தளைகளுடன் கூடி, ஒவ்வொரு அடியிலும் உள்ள ஒற்றெழுத்துக் களை நீக்கி, மற்றவற்றைக்கூட்ட 12 அல்லது 13 வருமாறு எழுத்துக்களை அமைத்து இயற்றப்பட்டுள்ள திருமந்திரம்,

கட்டளைக் கலிப்பா வகையைச் சார்ந்ததாகும். திருமந்திரத்தை மற்றவர் படித்தால், தமிழின் பெருமை வெளிப்படும் என்று அஞ்சிய தமிழ்ப் பகைவர்கள், திருவாவடுதுறை முற்றத்தின் கண் புதைத்துவைத்தனர் என்றும், ஞானசம்பந்தரே அதனை வெளிக்கொணர்ந்து அதனை உலகுக்கு அறிவித்தார் என்றும் கூறப்படுகின்றது.[269]

தமிழில் நான்கு மறைகள் இருந்ததாகவும், அதனை யொட்டியே, ஒன்றாக இருந்த இரிக்கு வேதத்தை மூன்றாகப் பிரித்துக் கொண்டதாகவும், அதர்வண வேதத்தையும் இணைத்து தமிழரைப் போலவே நான்கு மறைகளை ஆரியர்கள் உருவாக்கிக் கொண்டதாகவும் கூறுவர். தமிழில் இருந்த நான்கு மறைகளும் என்னவாயின என்று தெரியவில்லை. இதற்கு ஆரியர் ஒரு கதைப் பின்னிவிட்டனர். தமிழில் எழுதப்பட்டிருந்த நான்கு மறைகளும் சிவனை வணங்கவேண்டி திருமறைக் காட்டிற்குச் சென்றதாகவும், சிவாலயத்தின் நேர்முகக் கதவினை பூட்டிவிட்டுச் சென்றுவிட்டதாகவும், அக்கதவு திறக்கப்படும்போது, அம் மறைகளும் கிடைக்கப்பெறும் என்றவாறு சொல்லி வைத்தனர். ஆடிப்பெருக்கில் வீசப்படும் ஓலைச்சுவடிகள், நல்லன நிலைத்து, அல்லன அழியும் என்றவொரு வழக்கைச் சொல்லி வைத்து, ஆண்டுதோறும் தமிழர், தங்களிடம் இருந்த ஓலைச்சுவடிகளை காவிரியில் எரிந்து விட்டதையும் ஒப்புநோக்குக. திருமறைக் காட்டில் பூட்டிய கதவை, ஆரியத் தெய்வங்களும், ஆரிய வேதங் களின் ஆற்றல்களும் திறக்க இயலாது போக, திருநாவுக்கரசர் வந்தே திறந்தார் என்றும் மறைக்காட்டுத் தொன்மம் கூறுகிறது.[270]

திருமூலரின் தமிழுணர்வுக்குச் சான்றாக, அவரே கூறும் வரிகள் சான்று பகர்கின்றன.

> என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
> தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே – என்றும்,[271]
>
> மூலன் உரைசெய்த மூவா யிரந்தமிழ்,[272]

என்ற வரிகளாலும் அறியலாம்.

---

269. திருமந்திர விளக்கவுரை, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ப. 14.

270. மேலதே, ப. 16.

271. மேலதே, நூன்முகம்.

272. மேலதே, நூன்முகம்.

தொடர்ந்து வந்த நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர் ஆகியோர் சிவநெறிக்குத் தெம்பூட்டினர். கடைக் கழக காலத்துக்குப் பிறகு மறைக்கப்பட்ட தமிழை மீண்டும் புத்துயிர் கொடுத்தது. மேற்கண்ட நால்வரோடு, திருமூலரும் காரைக்கால் அம்மையாருமேயாவர். இச்சிவநெறிக் குரவர்களின் கொள்கையிலும், கருத்திலும் மாறுபாடு கொண்டவர்கள் கூட, இவர்களின் நெஞ்சையள்ளும் கொஞ்சு தமிழைப் படியாமலும் பாராட்டாமலும் இருக்கவியலாது. சிவன் மீது கொண்ட பற்றில் எள்ளளவும் குறையாத தமிழ்ப்பற்றை இவர்கள் தங்கள் பாடல்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளனர்.

அசைவில்செழுந் தமிழ்வழக்கே அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுது மெய்யறிவும் இடங்கொள்ளு நிலை பெறுக
– சம்பந்தர் 12:24

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்
ஞான சம்பந்தனுக்கு – நம்பியாரூரர்,[273] 17:12

நல்லிசை ஞானசம் பந்தனு நாவினுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை – ஆரூரர்[274] 7:67

செந்தமிழின் வைப்பாம் திருமூலர் மந்திரநூல்
முந்துமறை ஐந்தெழுத்தின் முற்றுமுறை–தந்ததமிழ்
ஆகமாம் பேறுவழி அவ்வழியி டாமுறுதி
போகம் சிவயசிவ போற்று – தனிப்பாடல்.[276]

திருமூலர் உள்ளிட்ட ஐந்து தமிழ்க் குரவர்களின் திருமுறைகள், அவைகளின் செந்தமிழ் இலக்கிய முறைகள், அருளுணர்வு கொண்ட கருத்துக்கள், இறைவனின் மேல் புகழ் பாடும் உயர்வு, எந்தப் பகைவரையும் அழிக்கச் சொல்லா மாண்பு, மக்களும் தமிழும் வாழ வேண்டும் என்ற வெளிப்பாடுகள், உலகில் எச்சமயத்திலும் இல்லாத உயர்வான உணர்வுகளைக் கொண்டவைகளாக உள்ளன. இத்திருமுறைகளோடு, ஆரிய வேதங்களை ஒப்பிட்டுக் கூறவே இயலாதவாறு உள்ளன. திருவாச

273. மேலதே.

274. மேலதே.

275. மேலதே.

276. மேலதே.

கத்தின் தமிழில் உருகிப்போன வெளிநாட்டு போப் ஐயரும், வீரமாமுனிவரும் இன்னபிறரும், இரக்கவுணர்வு மேலிட்ட இத்தகையதோர் இலக்கியத்தைக் கண்டதில்லை எனப் புகழ் கின்றனர். ஆரிய வேதங்கள் இவ்வாறான சமய, இலக்கியத் தன்மைகள் கொண்டவைகள் அல்ல என்பதை ஆரியர்களே அறிந்திருந்தனர். இந்நூல்கள் எல்லாம், தமிழ்ப் பகைவரிட மிருந்து தப்பிப் பிழைத்தது இறைவனின் திருவருளே என்று பாவாணர் உருகுகிறார்.

தமிழ் மொழியில் உள்ள புணர்ச்சி விதிகளின் ஒழுங்கும் தன்மைகளும், குறியீடுகளும் வினைத்தொகை வினைக்குறிப்பு முதலிய சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அறம்புறம் என்ற பொருட்பாகு பாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும், வெண்பா முதலிய செய்யுளிலக்கணங்களும், இன்னோரென்ன பிறவும் வடமொழிக்கண் பெறப்படாமையால்தான், ஆரியர் தமிழை வெறுத்தனர் என்று, திருமந்திரத்துக்கு நூன்முகம் தந்த ப. இராமநாதன் கூறுகிறார்.

ooo

17

## காலாடி ஆதிசங்கரர்

தமிழ் நெறியின் சிவனியத்தை முறைப்படுத்திக் கொடுத்த நாயன்மார்களைப் போன்று, ஆரியம் கலந்த சிவனியத்தை ஆதிசங்கரர் என்பார் வகுத்துக் கொடுத்தார். சிவ பிராமணர்கள் என அறியப்பட்ட இவர்கள், வேதிய ஆரிய பிராமணத்தின் சனாதன மரபுகளினின்றும் மாறுபட்டவராவர். இவர்கள் ஆரியப் பிராமணர்கள் போன்று உயிர்களைக் காவு (பலி) கொடுத்தவர்களல்லர். இந்து சமயம் (Hindu Pantheon) என்ற ஒன்று, சங்கரரால் தோற்றுவிக்கப்பட்டதே என்றும் சிலர் கூறுவர். சங்கரருடைய காலத்தைக் குறிப்பதில் ஆய்வாளர்கள் வேறுபடுகின்றனர். மேற்கத்திய ஆய்வாளர் மெக்டோனல் (Medonell), கெய்த் (Keith) ஆகிய இருவரும், கி.பி. 750 என்று கருதுகின்றனர்.[277] தமிழகத்தின் மடங்கள் சொல்லும் காலமும் இதற்குப் பொருத்தமாகவேயுள்ளன. கம்போடிய (Kambuja) நாட்டுக் குறிப்பொன்று, தன்னை, பகவான் சங்கராச்சாரிய பத்மகுப்தர் என்று கூறிக்கொண்ட ஒரு துறவி, கி.பி. 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்ததாகக் குறிப்பிடுகின்றது. கே.பி. பதக் என்பார் சங்கரரின் பிறப்பாண்டு கி.பி. 788 என்று குறிப்பிடுகிறார்.[278] திருச்சூரில் வாழ்ந்திருந்த இராமகிருஷ்ண மடத் துறவி, சுவாமி சாக்கியானந்தர் என்பார், சங்கரர் பிறந்தது, கி.மு. 508 (கலி. 2593) என்பார்.[279]

சங்கரர், சன்மதஸ்தாபனர் என்று அழைக்கப்படுகிறார். அறுவழி வணக்கமுறை (Six ways of worship)யைச் சன்மதர்கள்

277. History of Tamilakam, Bhishma, p. 122.

278. Indian Antiquary, K.B. Pathak, 1582, p. 174.

279. கலிக்காலவலோகணம் (மலையாளம்), சுவாமி சாக்கியானந்தா, ப. 63. Abhinava Sankaracharyas.

பின்பற்றி வந்தனர். முக்தாவளிச் சுருமிதி (Smurthi Mukthavali) யின் குறிப்பின்படி, இல்லத்துறைவோர் ஐந்துவழி வணக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் எனக் கூறுகிறது. ஞாயிறு (ஆதித்யன்), அம்மா (அம்பிகா), மால் (விஷ்ணு), பிள்ளையார் (கணபதி), சிவன் (மகேஸ்வரன்) ஆகியோர் அவ்வைந்து வழி வணக்கத்துக் குரியோராவர்.[280] இதற்கு விருப்பக் கடவுள் (இஷ்ட தேவதை) வழிபாட்டு முறை எனப் பெயர். இதனைப் பஞ்சயத்னபூசை (Panchayathra Puja) என்று சங்கரர் குறிப்பிட்டு, இதனை வலியுறுத்தினார். எல்லா கோயில்களிலும் இந்த ஐந்து கடவுளர் களையும் வணங்கும் வகையில், உருவங்கள் வைக்கப்பட்டன.

ஆதிசங்கரரின் கொள்கை, அத்வைதம் (Advaitha) எனப் படுகிறது. துவைதம் (Dwaitha) என்ற கொள்கை மத்துவாச் சாரி யாரால் சொல்லப்பட்டது. இவ்விரு கொள்கைகளும், புரிந்து கொள்ளுவதற்கே குழப்பமானவைகளாகும். ஜீவாத்மாவும் (உயிரும்) பரமாத்மாவும் (இறைவனும்) தனித்தனியானவை என்றும், இறைவனின் நிலைக்கு மாந்த உயிர் உயர முடியாது என்று சொல்லப்படும் கொள்கையே துவைதம் (துவ=இரண்டு) எனப்படும். துவ என்ற இரண்டுக்கு எதிர்ச்சொல், அதுவ அல்லது அத்துவ என்பதாகும். அத்துவம் என்பது இரண்டல்ல, ஒன்றே என்று சொல்லும் கொள்கையாகும். ஜீவாத்மாவும் பரமாத்மா வும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்க இயலாது என்றும், இரண்டும் ஒன்றே என்பதும், அத்வைதக் கொள்கையாகும். இராமானுசர், விசிஷ்டாத்வைதம் என்ற கொள்கையை அறிவித்தார். விசிஷ்டம் = மேன்மையான அறிவு, இறைவனைப் பற்றிய அறிவு (ஞானம்) இவையாவும் வடமொழிச் சொற்களால் சொல்லப்பட்டவைகள் என்றாலும், திருமூலர் இவர்களுக்கு முன்பே, இந்தக் கொள்கைக் கான விளக்கங்களைத் தந்துள்ளார். ஆனால் அவர் தமிழரா யிருந்ததாலும், அவர் கொள்கை தமிழில் சொல்லப்பட்ட தாலும், ஆரியர்கள் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை.

சங்கரர் இந்தியாவெங்கும் சுற்றிச் சென்று, தமது கொள்கை யினை அறிவித்தார். தமிழகத்தின் கோயில்களில், விலங்குகளை வெட்டும் வழக்கினை கைவிடுமாறு கேட்டுக் கொண்டார். முற்றிலுமாக ஆரியச் சார்புடையனவாக ஆலயங்களை மாற்றி

---

280. Ibid.

"ஆதித்யம், அம்பியம், விஷ்ணும், கணநாதம், மஹேஸ்வரம் பஞ்யக்ஞ பரோ நித்யம் க்ருஹஹ" - பஞ்ச பூதயதே கணபதி.

னார். இவர் சென்று வழிபட்ட கோயில்களில், மந்திர சாஸ்திர முறைப்படி, சக்கரங்கள் வரையப்பட்டு, ஆலயத்தின் கருவறைகளில் வைக்கப்பட்டன. இந்த சக்கரங்கள் இருப்பதாலேயே ஆலயங்களுக்கு ஆயிரக்கணக்கான மக்கள் வந்துபோவதாகவும், இவையில்லாத கோயில்களில் கூட்டமிருப்பதில்லை என்றும் கூறப்படுகிறது. இந்த சக்கரங்கள் பற்றிய விளக்கங்களையும் திருமூலர் ஏற்கனவே விளக்கியிருந்தார். அக்காலத்தில் இருந்த அறுவகை சமயங்கள் பற்றியும் திருமூலர் குறிப்பிடுகிறார்.[281] சைவம், வைணவம், சாக்தம், புத்தம் சமணம் ஆகியவை பெருமளவில் விரிவடைந்திருந்தன. தமிழரின் பாலை நிலத்துக் கொற்றவை வணக்கம் சங்கரர் காலத்தில், சக்தி வணக்கமாக்கப்பட்டது. உமா என்றும் பார்வதி என்றும் சொல்லப்பட்டு, சிவனுக்கு மனைவியாகச் சொல்லப்பட்டாள். அம்மா என்ற சொல்லே, உமா என்று திரிந்தது. உலகின் நாயகி என்ற பொருளில் பார்-வதி எனப்பட்டாள். வதி என்பது பெண்ணைக் குறித்த வடசொல். பார்=உலகம். தமிழும் வடமொழியும் கலந்த பெயரே பார்வதியாகும். பர்வதம் என்பது மலையே என்ற கருத்தும் உண்டு.

சிவனியத்தில் பல்வேறு கொள்கைகள் அக்காலங்களில் புகுத்தப்பட்டன. இதன் அடிப்படைகளில் பல்வேறு சிவனியச் சமயங்களும் தோன்றின. காளமுகம், பாசுபதம், மாவரதம், வாமம், பைரவம் என்பன அவற்றில் சிலவாகும். திருமூலர் ஏற்கனவே குறித்த அறுவகைச் சமயங்கள் பற்றித் தெளிவாகக் குறிப்பிடவில்லை என்றும் கூறப்படுகின்றது. கி.பி. 8-9 நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும் திவாகரம் என்ற நிகண்டு நூல், வைசேடிகை, நியாயகம், மீமாம்சம், ஆருக்கதம், புத்தம், உலோகாய்தம் என ஆறுவகைகளாகச் சொல்கிறது.[282] பின்னால் 10ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பிங்கல நிகண்டும் இதனை உறுதி செய்கிறது. தமிழகத்தில் கூறப்பட்ட அகச்சமயம் புறச்சமயம் என்ற சொற்களுக்கான விளக்கத்தினை திருமந்திரம் உள்ளிட்ட எந்த நூலும் தெளிவுபடுத்தவில்லை.

சங்கரரின் சிவநெறி விளக்கம், பக்தி இயக்கம் என்று வரலாற்றில் குறிப்பிடப்படுகிறது. சிவநெறியை முற்றிலுமாக ஆரியத்தோடு இணைத்தது ஆதிசங்கரரே. சங்கரருக்கு முன்பே, தமிழ்ச் சிவனியம், ஆகமங்களைத் தொகுத்தளித்ததாகக் கூறப்

281. திருமந்திரம், 242, 332, 1530, 1523, 1534, 1535, 1537.

282. திவாகரம், 1924; V. 155.

படுகின்றது. ஆகமங்கள், திருமூலரால் தோற்றுவிக்கப்பட்டவை களே என்பர். இருபத்தெட்டு ஆகமங்கள் தமிழ் நாட்டில் வழக்கில் இருந்ததாகவும், அவற்றில் எட்டு அழிந்துவிட்டதாக வும் இருபது ஆகமங்கள், சமயவழிபாடு, ஆலயப்பணிகள், கருவறைக்கான விளக்கங்கள், ஆலயக் குடமுழுக்கு போன்ற அனைத்து செய்திகளையும் அளித்தன என்றும் கூறுவர்.[283] திருவல்லிக்கேணியில் கண்டெடுக்கப்பட்ட ஆகமவிதிகள் பற்றிய ஓலைச் சுவடிகள்,[284] தமிழில் எழுதப்பட்டிருந்ததாகவும், அதற்கான வடமொழி மாற்றம் (Translation) இலக்கணமில்லா வடமொழியில் கொச்சையாக மாற்றம் செய்யப்பட்டு, அவை முற்றுப் பெறாமல் இருந்ததாகவும் கூறப்படுகின்றது. தமிழி லிருந்து வடமொழியில் பெயர்த்த ஒருவர், இடையில் இப் பணியை நிறுத்திவிட்டார் அல்லது இறந்துவிட்டார் என்றே அறியமுடிகிறது. தமிழர்கள் தந்த ஆகமங்கள் வடமொழியில் மாற்றம் செய்யப்பட்டு, தமிழ் மூலங்கள் அழிக்கப்பட்டன. தமிழர்களான விசுவாமித்திரன், வசிட்டன், வான்மீகி போன்றோர், ஆரியர்கள் இல்லை என்பதும், அவர்கள் சத்திரிய வகுப்பார் என்றும், பின்னர் பிராமணர்கள் ஆக்கப்பட்டார்கள் என்றும் ஆரியச் செய்திகளே கூறுகின்றன.[285] வான்மீகி வழிப்பறி செய்து வந்த கொள்ளையன் என்றும் சொல்லப்படுகின்றது. உடல் உழைப்பின்றி உண்டது போலவே, அறிவு உழைப்பின்றி, தமிழ் அறிவுச் செல்வங்கள் அனைத்தையும் தமதாக்கிக் கொண்டு, ஆரிய வேதங்கள் என்று அறிவித்த இந்நிகழ்வுகளை அறிவுத் திருட்டு (Plagiarism) என்பதை விட வேறென்ன சொல்வது?

ஆரிய வேதங்கள், கோயில்கள் பற்றிய செய்திகள் எவற்றை யும் கூறவில்லை. ஆரியர்கள் கட்டியதாக எந்தக் கோயிலும் தற்போது இல்லை. கோயில் கட்டுவதென்பது, அறிவு சார்ந்த

283. History of Tamilakam, p. 89.

284. Ibid.

284. Tamil Poets Thirumoolar, Sundarar, and Manickavasakar all refer to the Agamas. The fact that manuscripts of Sanskrit Agamas have been discovered in the libraries of Triplicane Adayar and Mysore while there are a large number of manuscripts written in Dravidian (Tamil), possibly points out to the fact that South India was the principal seat of Agamic Saivaism in the period, just before 800 A.D.

285. History of Tamilakam, p. 122.

தொழில் நுட்பம் கொண்ட செயலாகும். ஆரியர்களுக்கு கோயில் கட்டும் பண்பாடும் இருந்ததில்லை. திறந்த வெளியிலும், செல்வர்களின் வீடுகளிலுமே வேள்விகளைச் செய்தனர். தமிழர் மட்டுமே, வானளாவக் கோயில் கட்டும் ஆர்வம் கொண்டிருந் தவர்கள். தமிழ் இலக்கியங்கள் கூறும் ஏழ்நிலை மாடங்கள், கார்முகிலைத் தொடும் கட்டிடங்கள் எல்லாம் தமிழர் கட்டியவை களாகும். தமிழர் கோயில்களைக் கட்டுவதிலும் பண்பாட்டுக் கலையைப் புகுத்தியவர்கள். செய்திகள் இவ்வாறு கூற, கோயில் கட்டவும், குடமுழுக்கு செய்யவும், அதற்கான விதிகளை ஆரியர்களே, ஆகமங்கள் என்ற விதிகளால் வகுத்தனர் என்பது, நம்ப இயலாத கூற்றாகும்.[286]

கற்தச்சர்கள் தமிழ் நாட்டில்தான் இருந்தனர் என்பதும், அவர்களின் அறிவியல் தொழில் நுணுக்கமே, வானுயர்ந்த கோயில்களாக உருப்பெற்றன என்பதும், இவ்வாறான தச்சர் களை ஆரிய வேதங்கள் எவையும் குறிப்பிடவில்லை என்பதும், கட்டிடக்கலை தமிழர்கள் வளர்த்ததே என்பதைத் தெளிவு படுத்தும். வேதங்கள் குறிப்பிடும் விசுவகர்மா என்பவனும் தமிழ்க் கம்மாளனே. அவனைத் துவட்டன் என்று இரிக்குவேதம் சொல்கிறது. துவட்டன்* என்பது தச்சன் என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே. தச்சன் என்ற தமிழ்ச் சொல், Tecton (தெச்டன்) என்று கிரேக்க மொழியில் திரிபுபட்டுள்ளது. அது Techne, Technikos என்றவாறு, நுட்பம் பற்றிய சொல்லாகவும் கூறப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் சொல்லப்படும் Technic, Technology போன்ற அனைத்துச் சொற்களும் தச்சன் என்ற தமிழ் மூலத்தின் திரிபுச் சொற்களே. தக்சனா என்ற வடசொல்லும் தச்சனைக் குறித்துச் சொல்லப்பட்டுள்ளது. இது தச்சனையும் குறிக்கும், தக்சன் என்ற தெற்கித்தியானையும் (Southerner) குறிக்கும். சொற்களைப் பற்றிய ஆய்வுகள் தொடங்கப்படாத காலத்தில், ஆரியர்கள் சொன்னவை அனைத்தும் தமிழர்களால் ஏற்றுக் கொள்ளப் பட்டன. தமிழினின்றும் திருடத் தெரிந்த ஆரியர்கள், அத்திருட் டைத் தெரியாமல் திருடத் தெரிந்திருக்கவில்லை.

---

286. Ibid, p. 130.

The Saivite Codes state sixty six eternal savants received clear expositions of two hundred and seven Agmas.

* மரம் அல்லது கனிமத்தைத் துவட்டி எடுப்பவன். துவள் என்ற மூலவினைச்சொல், துவட்டு என நீண்டது. துவட்டு - துவட்டன் - துவட்டா என வடமொழியில் திரிந்தது.

தமிழ்க் கோயில்கள் மாந்தனின் உடலைப் போன்ற அமைப்பில் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது.[287] கிறித்துவக் கோயில்கள் குறுக்க வடிவில் (சிலுவை) கட்டப்படுவதை நோக்குக. கருவறையே மாந்தனின் இதயமாகவும் மார்பாகவும் உருவகம் செய்யப்பட்டது. ஆகம் என்ற தமிழ்ச் சொல்லுக்கு மார்பு மார்பகம் என்ற பொருளுண்டு. எனவே ஆகமம் என்பது வட சொல்லென மயங்க வேண்டியதில்லை. ஆகமங்களைத் தமிழ்ச் சிவநெறியே முதலில் அளித்தது என்பதை இனியும் வரலாற்றில் மறைக்க முயல்வது, ஆய்வுகள் மேற்கொள்ளப் படும் இக்காலத்தில் ஏற்கப்படாது என்பதை அறிதல் வேண்டும்.

## ஆழ்வார்கள்

சிவனியம் ஆரியத்தால் எடுத்துக்கொள்ளப்பட்டது போன்றே, தமிழர்களின் மாலியமும் ஆரியத்தோடு கலந்தது. கடைக்கழகக் காலத்திலேயே ஆரியத்தின் மாலியக் கொள்கை கள் தமிழகத்தில் இடம்பெற்றிருந்தன. முகிலையே மாலாகக் கொண்டு வழிபட்ட தமிழர், முகில் தோன்றுவதற்கான முழு முதற் கரணியமான ஞாயிற்றையும் மாலியக்கடவுளாக ஏற்றுக் கொண்டனர். தொடக்கத்தில் சிவனையே ஞாயிறாகக் கொண் டிருந்த வழக்கு, மாலியத்தில் திருமாலாகக் கொள்ளப்பட்டது. விண் என்ற தமிழ்ச்சொல் வானத்தைக் குறித்தது. வானத்திலுள்ள ஞாயிற்றையும் குறித்தது. விண்து-விண்டு என்ற பெயரே, விஷ்ணு என்று வடமொழியில் திரிந்தது. விஷ்ணு ஞாயிற்றின் கடவுளா கவும் ஆரிய புராணங்களில் சொல்லப்படுகின்றான். வைணவத் தின் கரு தமிழில் தோற்றம் பெற்றதே, தமிழ்க் கணியர்கள், ஞாயிற்றின் சுழற்சியில் (ஞாலத்தின் சுழற்சியே) இரண்டு நிலைகளைக் குறித்தனர். மார்ச் 21ஆம் நாளிலும், செப்டம்பர் 21ஆம் நாளிலும், இரவும் பகலும் சரியாக இருப்பதைக் கண்டனர். சூன். 21இல் பகற் பொழுது ஆண்டிலேயே நீண்டும், திசம்பர் 21இல் இரவுப் பொழுது நீண்டும் இருப்பதை அறிந்தனர். இவ்வாறான நான்கு நாட்களில் நிலை பெற்ற ஞாயிற்றின் இடத்தை விழி (eye) என்ற சொல்லில் விளக்கினர். விழி என்ற தமிழ்ச் சொல்லே விழிணு-விஷ்ணு என்று வடமொழியில் திரிந்தது. ஞாயிற்றின் வலத்தை நான்குப் பகுதியாக விண்ணுதல் (பிரித்தல்) என்ற பொருளும் விண்டு என்ற சொல்லுக்கு உரிய தாகும். விஷ்ணுவைப் பற்றி இரிக்கு வேதம் தகவல் தரவில்லை.

---

287. மறைமலையடிகளின் கூற்று.

ஞாலமே ஞாயிற்றைச் சுற்றினாலும், ஞாயிறு ஞாலத்தைச் சுற்றுவதாகக் கொள்ளப்பட்டது, வானியல் செய்திகளை எளிமைப்படுத்துவதற்கேயாகும். மேற்சொல்லப்பட்ட விழிகள், மேழ விழு (மேஷாயனம்) என்றும் துலைவிழு (துலாயனம்) என்றும் வடமொழியில் சொல்லப்பட்டன. கதிரவன் கடந்து வரும் பாதையின் மூன்று புள்ளிகளை மையமாகக் கொண்டு சொல்லப்பட்டதே, விஷ்ணு உலகளந்த கதையாகும். இக்கதை ஞாயிறு கடக்கும் வழிகளைப் பற்றிய உருவகமேயாகும். இக் கருத்துக்கள் யாவும் தமிழ்க் கணியர்களால் கூறப்பட்டவைகளே. வடமொழியில் சொல்லப்படும் பலகதைகள், தமிழர்களால் சொல்லப்பட்டவைகளே. அவைகளை விரித்தும் திரித்தும் தங்கள் நிலைப்பாட்டுக்கு ஏற்ப ஆரியர்கள் எழுதிவைத்தனர்.

பாகவத புராணம், ஆழ்வார்கள் என்போர், தாமரபரணி, வைகை (குருதமாலா) பாலாறு (பயஸ்வினி), காவிரி, பெரியாறு (மகாநந்த) போன்ற ஆற்றங்கரைகளில் வாழ்ந்திருந்தோர் என்று குறிப்பிடுகின்றது. எஸ்.என். குப்தா என்ற வரலாற்று ஆய்வாளர், ஆழ்வாளர்களின் பட்டியலொன்றைத் தருகிறார்.[288] நம்மாழ் வாரும் மதுரகவி ஆழ்வாரும் தாமரபரணி ஆற்றின் நாட்டிலும், பெரியாழ்வாரும் அவர் மகள் ஆண்டாளும் வைகைக் கரை யிலும், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் போன்றோர் பாலாற்றங்கரையிலும், தொண்டரடிப் பொடி ஆழ்வார், திருப்பாணாழ்வார், குலசேகர ஆழ்வார் போன்றோர் பெரியாற்றங்கரையிலும் வாழ்ந்திருந்த தாகக் கூறுகிறார். பாகவத மகாத்மியம் என்ற நூல், திராவிடப் பெண்ணொருத்தி தன் இரு மகன்களோடு, கர்நாடகம், மகராட்டிரம், குசராத், வட இந்தியப் பகுதிகளில் சென்று வைணவ நெறியைப் பரப்பியதாகக் கூறுகின்றது. பாகவத புராணம், வைணவத்தின் தாயகம் தமிழகமே என்று கூறுகிறது.[289] மாலிய வரலாற்றைக் கூறும் தமிழகத்தின் ஆசிரியர்களான, திருவரங்கத்து அமுதனார், பராசர பட்டர், பெருமாள் ஜீயர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனி ஆகியோர், ஆழ்வார் களைப் பற்றிய செய்திகளை அளித்துள்ளனர்.

நாலாயிரத் திவ்விய பிரபந்தம் எனும் தமிழ் இலக்கியம், வைணவத்தைப் போற்றும், தமிழின் தலைசிறந்த இலக்கியங்

---

288. History of Indian Philosophy, Vol. V, 1955.

289. Ibid, p. 112.

களில் ஒன்றாகும். ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்விய பிரபந்தம், வைணவர்களின் தமிழ் வேதமாகும். இவைகளில் திருமாலைப் பற்றி அனைத்துக் கொள்கை விளக்கங்களும் பொதிந்து கிடக்கின்றன. நம்மாழ்வாரின் திருவிருத்தம் இரிக்கு வேதமாகவும், திருவாசிரியம் எசூர் வேதமாகவும், பெரிய திருவந்தாதி அதர்வண வேதமாகவும், திருவாய்மொழி சாம வேதமாகவும், பிற்காலத்து ஆரியச் சார்புடையோரால் கூறப் பட்டன.[290]

1. பொய்கையாழ்வார்: இவர் காஞ்சியிலுள்ள பொற்றாமரைப் பொய்கையில் தோன்றியதாகக் கூறுவர். நூறு பாடல்கள் கொண்ட முதல் திருவந்தாதி இவர் இயற்றியதாகும்.
2. பூதத்தாழ்வார்: மாமல்லபுரத்தில் பிறந்தவர். இரண்டாம் திருவந்தாதியின் நூறு பாடல்கள்.
3. பேயாழ்வார்: மயிலையில் உள்ள ஆதிகேசவப் பெருமாள் கோயிலில் உள்ள கிணற்றில் மலர்ந்த அல்லிப் பூவில் பிறந்ததாகக் கூறுவர். திருமாலின் மேலுள்ள அன்பினால், பேய்பிடித்தவர்போல் அங்குமிங்கும் அலைந்து கொண் டிருந்ததால் பேயாழ்வார் எனப்பட்டார். மூன்றாம் திருவந்தாதியின் நூறு பாடல்கள்.
4. திருமழிசையாழ்வார்: திருமழிசையில் பிறந்தவர். திருச் சந்தவிருத்தம் 120 பாடல்கள். நான்முகன் சிவந்தாதி 96 பாடல்கள்.
5. நம்மாழ்வார்: திருக்குருகூரில் பிறந்தவர். திவ்வியப் பிரபந்தங்களை மதுரகவி ஆழ்வாருக்கு விளக்கிச் சொல் லியவர். திருவாய்மொழி 1101 பாடல்கள் மற்றும் திருவிருத்தம் 100, திருவாசிரியம் 7, பெரிய திருவந்தாதி 87.
6. குலசேகராழ்வார்: கேரளத்திலுள்ள திருவஞ்சைக் களத்தில் பிறந்தவர். பெருமாள் திருமொழி 105 பாடல்கள். வட மொழியில் புலமை மிக்கவர்.
7. பெரியாழ்வார்: திருவல்லிப் புத்தூரில் பிறந்தவர். திருப் பல்லாண்டு 12 பாடல்கள் மற்றும் பெரியாழ்வார் திருமொழி 461 பாடல்கள்.

---

290. நாலாயிரத் திவ்விய பிரபந்தம், அருஞ்சொல் அகராதி, முன்னுரை.

8. தொண்டரடிப் பொடியாழ்வார்: திரு மண்டலங்குடியில் பிறந்தவர். திருப்பள்ளியெழுச்சி 10 பாடல்கள், திருமாலை 45 பாடல்கள். இவர் ஒரு பிராமணர்.

9. திருப்பாணாழ்வார்: உறையூரில் பிறந்தவர். அமலனாதி பிரான் 10 பாடல்கள்.

10. திருமங்கையாழ்வார்: திருக்குறையலூரில் பிறந்தவர். பெரிய திருமொழி 1048 பாடல்கள். திருக்குறுந்தாண்டகம் 20, நெடுந்தாண்டகம் 30, மற்றும் திருவெழுகூற்றிருக்கை பெரியமடல் சிறிய மடல் என 227.

11. மதுரகவி ஆழ்வார்: திருக்கோயிலூரில் பிறந்தவர். இவர் ஒரு பிராமணர். நம்மாழ்வாரைத் தலைமை ஆசிரியராகக் கொண்டவர். கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற பிரபந்தத்தைப் பாடியவர்.

12. ஆண்டாள்: பெண் தொண்டர். திருவல்லிப் புத்தூரில் பிறந்தார். பெயர் சூடிக் கொடுத்த நாச்சியார் என்பது. பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள். திருவரங்கத்திலுள்ள அரங்கனுக்கு ஆண்டாளைத் திருமணம் செய்து கொடுத்தார். இவர் கவிபாடுதலிலும் வல்லவராயிருந்தார். திருப்பாவை 30 பாடல்கள். நாச்சியார் திருமொழி 143.

மேற்கண்ட ஆழ்வார்கள், தமிழிலே கவிபாடும் வல்லவர்களாக இருந்தது, இவர்களின் நூல்கள் வாயிலாகத் தெரிய வருகின்றன.[291] நாலாயிரத் திவ்விய பிரபந்தம் என்ற வடமொழித் தலைப்பு, பிற்காலத்தில் கொடுக்கப்பட்டது. நூலாசிரியர்கள் தமிழ்த் தலைப்புகளிலேயே நூற்களை எழுதியுள்ளனர்.

ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்ற அத்வைதக் கொள்கையை வகுத்த ஆதிசங்கரர், அக்கொள்கையை நடைமுறைப்படுத்தியதாகத் தெரியவில்லை. ஒவ்வொரு ஜீவாத்மாவும் பரமாத்மாவாகத் தகுதியுடையது என்ற கோட்பாடு, தாழ்த்தப்பட்ட மக்களைப் பொறுத்தவரையில் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. தாழ்த்தப்பட்டவனிலும் பரமாத்மா உள்ளதாகச் சொன்னவர்கள். அவர்களுக்கு வேதம் சொல்லவும், வேத நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ளவும், ஆலயங்களில் அனுமதிக்கவும் மறுத்துவிட்டனர். இறைவன் முன்னால் அனைவரும் சரிநிலையுடையோரே என்று சொல்லப்பட்டதும்,

291. மேலதே.

வர்ணாசிரம நடைமுறைகளும் அவற்றின்படியே நடக்க வேண்டும் என்ற கொள்கையும், ஆதிசங்கரரின் கொள்கையை கேள்விக் குறியாக்குகின்றன. ஆதிசங்கரர் ஏற்படுத்திய மடங்களில், தலைமைப் பொறுப்பு பிராமணர்களுக்கே கொடுக்கப்பட்டதும், சூத்திரர்கள் அப்பொறுப்புகளுக்குத் தகுதியற்றவர்கள் என அறிவித்தது, பிராமணர்களுக்கு வேண்டிய அனைத்தையும் கொடுப்பதற்காகச் சூத்திரரையும், அதைப் பெற்றுக் கொள் வதற்காக பிராமணர்களையும் நிலைப்படுத்தவே என எண்ண இடமளிக்கிறது. ஜீவாத்மா என்பது ஆரியருடைய ஆத்மாவே என்று விளக்கம் கொடுக்கப்பட்டிருக்க வேண்டியதை, அனை வருக்குமாகச் சேர்த்து சங்கரர் சொல்லிவிட்டார் என்பதையே அறியமுடிகிறது.

தமிழகத்தின் இடைக்காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட, சமய இலக்கியங்கள் திருமுறைகளும், திவ்விய பிரபந்தங்களும், ஆரியருடைய வர்ணாசிரம முறைக்கு எதிர்ப்பு தெரிவிக்கவே யில்லை என்பது பெருங்குறையாகும். தமிழை உயர்த்திப் பிடித்ததில் இருந்த துடிப்பு, வர்ண தர்மத்தை எதிர்ப்பதில் இல்லாமற் போய்விட்டது. நாயன்மார்களும் திருமூலரைத் தவிர்த்து[292] ஆழ்வார்களும், பிராமண ஆளுமையை எதிர்க்கத் தவறிவிட்டனர் என்பதை அவர்களது இலக்கியங்களே அறிவிக் கின்றன. கி.பி. 6ஆம் நூற்றாண்டுகள் தொடக்கம், பிராமணர் களின் ஆளுமை, பல்லவர்கள் காலத்திலும் அதற்குப் பிறகு வந்த இடைக்காலச் சோழர்கள் காலத்திலும் வெளிப்பட்டன. இவ்வாறான ஆரியத்தின் எழுச்சியை நாயன்மார்களின் தமிழும், ஆழ்வார்களின் தமிழுணர்வும் தடைப்படுத்தவில்லை. மாறாக, ஆலயங்களிலும், சமய வாழ்க்கையிலும், ஆரியரல்லாத நிகழ்வு கள் நடைபெறாவண்ணம், சட்டங்கள் வகுக்கப்பட்டன.

ஆழ்வார்களிலும் நாயன்மார்களிலும் ஒரு சிலர் பிராமண வகுப்பாராய் இருந்தனர் மற்றவர்கள் சூத்திர இனத்தைச் சார்ந்

292. திருமந்திரம், 1640, 1641, 1642, 1643 என விரியும்.

திருமூலர் மட்டுமே வர்ணாசிரமக் கொள்கைக்கு எதிரான கருத்தைத் தெரிவித்தார்.

ஞான வேடம் என்ற தலைப்பில் வரும் பாடல்கள், பிராமணர் களின் மேல் தொடுக்கப்பட்ட சொற்களேயாகும்.

ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பதே திருமூலரின் கொள்கையாகும்.

தவரே என்பதால், இவர்களுடைய கொள்கைகள் ஏற்கப்படாமல் போனது. திருநாவுக்கரசர் வேளாளர் குடியில் பிறந்தவர். சிவத் தொண்டராக ஒரு புலையன் இருந்தாலும், அவனையும் நான் வணங்குவேன் என்று கூறினார்.[293] ஒரு சிவனடியானுக்கு பூணூல் தேவையில்லை என்றும் கூறினார். குலம், கோத்திரம் சாத்திரம் ஆகியவைகளுக்குப் பகைவன் நான் என்றும் அறிவித்தார்.[294] திருநாவுக்கரசர் சொன்னது போன்று, எந்தப் பிராமண நாயன் மாரும் ஆழ்வாரும் கூறவில்லை. சுந்தரர் நாட்டியப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார் என்றாலும், பிராமணர் என்ற முறையில், மற்ற குலத்துப் பெண்களை மணக்கத் தடையில்லை யென மனுச்சட்டம் கூறியதால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருநீலகண்டர் பாணர் வகுப்பையும், மாணிக்கவாசகர் புலையர் வகுப்பையும் சேர்ந்தவர்கள். சம்பந்தரை மணக்க வைசியப் பெண் விரும்பியதை ஏற்க, சம்பந்தர் மறுத்துவிட்டார் என்பர். ஏனாதி நாயனார் சாணார் மரபையும், கண்ணப்ப நாயனார் பள்ளி அல்லது வேடர் குலத்தையும், திருமூலர் ஆயர் குடியை யும் சேர்ந்தவராவர். திருகுறிப்புத் தொண்டர் வண்ணார் எனவும், நந்தனார் புலையர் எனவும் கூறப்படுகின்றது. ஆழ்வார்களில் நம்மாழ்வார் வேளாளர் எனவும், திருப்பாணாழ்வார் பாணர் எனவும், மதுரகவி பிராமணர் எனவும், திருமங்கை ஆழ்வார் குறுநிலத்தலைவன் எனவும் கூறப்பட்டுள்ளனர்.[295]

மகாவிஷ்ணுவே சூத்திர வகுப்பில் பிறந்த ஆழ்வார் என்றும், அவர் உயர்குல மக்களை குறிப்பாக பிராமணர்களை வணங்கி ஏற்றுக் கொண்டார் என்றும், இறைவனை அடைவதற்குச் சாதி ஒரு தடையில்லையென்றும் கூறியதாக, பிராமணர்கள் அறிவித்தனர். கீழ்ச் சாதியில் பிறந்த கடவுளே எங்களை உயர் வானவர் என்று ஏற்றுக்கொண்டதால், சூத்திரர்கள் அனைவரும் பிராமணர்களைப் போற்ற வேண்டும் என்ற எண்ணத்தைத் திணிப்பதற்கான உத்தியாகவே இக்கதை சொல்லப்பட்டது. சிவநெறியில், சைவபிராமணர்களும், வேததைசவ பிராமணர் களும் இருந்தது போலவே, வைணவர்களில் வடகலை தென் கலை என்ற பிராமண வகுப்பார் இருந்தனர்.

○○○

293. தேவாரம், 938.

294. Untouchability, K.R. Hanumanthan, p. 147.

295. History of Tamilakam, p. 136.

18

# இராமானுசர்

பிராமணச் சிவநெறியை வளர்த்த ஆதிசங்கரரைப் போன்று, ஆரியத்தின் மாலிய நெறியைத் தமிழகத்தில் வளர்த்தவர் இராமானுசர் ஆவார். இவருடைய கொள்கை விசிட்டாத் வைதம் என்பதே. ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றுபடும் மேலான நிலையை இக்கொள்கை விளக்குகிறது. இதற்கு ஏற்புடையதாகப் பிரம்ம சூத்திரங்களை மேற்கோள்காட்டி விளக்கினார். பகவத் கீதைக்கு விரிவான விளக்கவுரையும் கொடுத் தார். இவருடைய குறைக்கொள்கை, பரந்தாமனைச் சுற்றியே வந்தது. தொடக்கமும், நடப்பும், வாழ்வும், முடிவும் (முத்தியும்) பரந்தாமனே என்றார். சேதனம் (Chethana) அசேதனம் (Achethana) என்ற இருநிலையினின்றும் பிரிக்கவியலாதவன் பரந்தாமன் என்பதையே விளக்குகிறது. பரந்தாமனை, ஸ்ரீமன் நாராயண னாகக் கண்டார். பிரபத்தி என்ற தன்னையே முழுதும் பரந்தாமன் முன் பணியவைக்கும் செயலே, முக்தியை தரும் என்பது இவரது கூற்று. எனவே இவரது கொள்கையின் நாயகனாக கண்ணனை முன்னிறுத்தினார். கண்ணனைக் கோவிந்தா எனவும் அழைத்தார். கோ என்பதற்கு விந்து எனவும், வித் என்பதற்குத் தேடுதல் என்றும் வடமொழியில் பொருளுரைத்தார்.

ஆழ்வார்களின் நூல்களும், பகவத்கீதையும் உயர்வான வேத இலக்கியங்களாக வைணவர்களால் கருதப்பட்டன. இராமானுசரின் காலத்திலும் அவருக்குப் பின்னரும், சிவனிய மாலிய சமயச் சண்டைகள் தமிழகத்தில் பரவலாக நிகழ்வுற்றன. கதைகளிலும் புராணங்களிலும், பிராமணர்களே சிவனைப் பற்றியும் விஷ்ணுவைப்பற்றியும் சொல்லியிருந்தனர். அக்கதை களும் பல்வேறு காலங்களில் சொல்லப்பட்டவைகளாகும். அக்கதைகளுக்கான வரலாற்றுச் சான்றுகளும் ஏதுமில்லை

இருப்பினும் தங்களால் பின்னப்பட்ட கதையில் சொல்லப்பட்ட சிவனும் விஷ்ணுவும், சமயச் சண்டைகளுக்கும் மூலவர்களா யினர். பலகதைகள் சிவனை உயர்ந்தவனாகவும், மற்றும்பல விஷ்ணுவை உயர்ந்தவனாகவும் காட்டின. இதனை அடிப்படை யாகக் கொண்டே, பெரிய கடவுள் சிவனா விஷ்ணுவா என்ற கருத்துப்போர் ஏறக்குறைய ஆயிரம் அண்டுகள் அளவிலும் நடைபெற்றன. இசுலாமும், கிறித்துவமும் இச்சமயத்து மக்களை மறை மாற்றம் செய்ய முற்பட்டபோது, இருவரும் விழித்துக் கொண்டு, அரியும் சிவனும் ஒன்று, அறியாதவன் வாயில் மண்ணு என்ற விளக்கத்தையும் கொடுத்து, சிவ-விஷ்ணு இணைப்புக்கான புதிய கதைகளையும் உண்டாக்கினர் - அரியும் சிவனும் ஒன்று என்ற கொள்கையை இன்றும் கூட வைணவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

இரண்டாம் இராசஇராசன் காலத்தில், சிவ - விஷ்ணு சமயச் சண்டைகள் உச்சத்தில் இருந்தன என்பதை வரலாறு கூறுகிறது. தில்லையில் (சிதம்பரம்) உள்ள நடராசர் கோயிலில், திருமாலுக்கும் ஒரு இடத்தைக் கொடுத்திருந்தனர். இது, தில்லையில் நடைபெற்ற நடனத்தின் போது, தேவகணங்க ளோடு, திருமாலும் வருகை தந்து நடனத்தைக் கண்டுகளித்தார் என்ற நிகழ்வின் அடிப்படையில், திருமாலுக்கும் ஒரு இருக்கை, தில்லையில் தரப்பட்டது. குலோத்துங்கச் சோழனின் மகன் விக்கிரம சோழன், தன் முன்னோர் மரபுப்படியே சிவநெறியில் ஆழ்ந்த பற்றுதல் உள்ளவன். சிவனடியார்கள், நடராசர் கோவிலில் கோவிந்தராசர் இருப்பது சிவநெறிக்கு இழுக்கு என மன்னரிடம் தொடர்ந்து முறையிட்டு, மன்னனையும் தங்கள் வழிக்குக் கொண்டு விந்துவிட்டனர். விக்கிரமசோழன், கோவிந்தராசர் சிலைஉருவைத் தூக்கிக் கடலில் போடுமாறு ஆணையிட்டான். இந்நிகழ்வு சிவனிய - மாலியப் போரின் உச்சகட்டமான நிகழ்வாகும்.

இராமானுசர் தனது கொள்கைகளை விளக்கிக் கூறிய போது, உயர்சாதியினர் அதனைக் காது கொடுத்துங் கேட்க வில்லை என்பதால், திருக்கோட்டியூர் ஆலய மதிற் சுவர்மேல் ஏறிநின்று, தாழ்த்தப்பட்ட மக்கள் என்று கருதப்பட்டோரை அழைத்து விளக்கமளித்ததாகக் கூறுவர். பிராமணர் அல்லாத பலரையும், பிராமணர்களாக மாற்றினார் என்றும், அதன் வழியில் சிவநெறியில் இருந்த பலரை வைணவத்துக்கு மாற்றினார்

என்றும் கூறுவர். பிராமணத் தகுதி கிடைத்த மகிழ்ச்சியில் பலரும் சிவ நெறியை விட்டு விட்டு மாலிய நெறிக்குச் சென்று விட்டதாகவும் கூறுவர். அவ்வாறெல்லாம் நடை பெறவில்லை என்றும், இராமானுசர் வர்ணாசிரம தர்மத்தில் பிடிப்புடையவர் என்றும், சிவ நெறியாளர்களையும் மற்றவர்களையுமே வைணவ நெறிக்கு மாற்றியதாக, செகதீசன் என்பர் கூறுகிறார்.

அகோபிலம் என்ற இடமே, மகாவிஷ்ணு நரசிம்ம அவதாரம் எடுத்த விடமாகச் சொல்லப்படுகின்றது. அங்குள்ள ஒன்பது வழிபாட்டு இடங்களும், நவநரசிம்மக்ஷேத்திரம் எனப்படு கின்றன. இவைகள், வேதாச்சலத்துக்கும கருடாச்சலத்துக்கும் இடையில் இருந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. இவை திருப்பதிக்கும் ஸ்ரீசைலத்துக்கும் இடைப்பட்ட பகுதிகளில் உள்ளனவாகக் கருதப்படுகின்றன. இங்குள்ள மடத்தைத் தோற்றுவித்தவர் சீனிவாசாச் சாரியார் (கி.பி. 1398) என்று சொல்லப்படுகின்றது. இவருக்குப் பிற்றை நாளில், ஆண்டவன் சடகோப மகாதேசிகன் என்று பெயர் வழங்கப்பட்டதாகவும் அறியப்படுகின்றது. இதுவே தென்னாட்டின் முதல் வைணவ மடமாகவும் கருதப்படுகின்றது.

ஸ்ரீ மணவாள மாமுனிகள் (கி.பி. 1370) என்ற துறவி, இராமானுசரின் அடுத்த பிறவியாகக் கருதப்படுகிறார். இவர் நெல்லை மாவட்டம், நாங்குநேரியில், வானமாமலை மடத்தை நிறுவினார். இவருடைய வழித்தொண்டர்களே தென்கலை என்ற வகுப்பு வைணவர்கள் ஆவர். ஸ்ரீ இராமானுச ஜீயர் சுவாமிகள் என்பாரை, மணவாள மாமுனிகள் தனக்கடுத்த தலைவராக இருக்கச் செய்து வடஇந்தியப் பகுதிகளில் வைண வத்தைப் பரப்ப அனுப்பியதாகக் கூறப்படுகின்றது. இவருக்குச் சொர்ணபாதர் என்ற பெயரும் இருந்தது. இவர் 100 ஆண்டுகள் உயிர்வாழ்ந்தார் என்பர். இவர்கள் தென்கலையர்.

வடகலைப்பிரிவின் தலைவராக வேதாந்த தேசிகர் கருதப் படுகின்றார். இவருக்கு முன்னர், இராமானுசருக்கு உணவளித்து வந்த ஆசான் என்பாரே இதன் நிறுவனர் ஆவார். இராமானு சரின் உறவினர், தென்கலையின் நிறுவனராகக் கருப்படுகிறார் வடகலைக்கும் தென்கலைக்கும் 18 வேறுபாடுகள் உள்ளன என்று கருதப்படுகின்றன. இவைகளில் பெரும்பாலானவை மெய்யியல் கொள்கைகள் (Philosophical) தொடர்பானவையே

என்பர். உணவு சமைத்தல், அதை உண்ணுதல், நெற்றியில் திருமண்ணிடுதல் என புற அடையாளங்கள் சில வற்றிலும் சில சிறிய வேறுபாடுகள் உள்ளன. நாமக்குறியில் அடிக்கோடிட்டு வடகலையாகும், அடிக்கோடிடாமல் தென் கலையாரும் இட்டுக் கொள்வர். தென்கலையாரின் இலக்கியங்கள் தமிழையும் வடகலையார் தெலுங்கு உட்பட வடமொழியையும் பயன் படுத்துகின்றனர்.

இராமானுசர் காலத்துக்குப் பிறகு வைணவ மடங்கள் தோன்றி வளர்ந்தன விசய நகரப் பேரரசின் கீழ் தமிழகம் இருந்த போது, இதன் எண்ணிக்கையும் வளர்ச்சியும் பலவாயின. குலோத்துங்கன் I காலத்தில், அரிகேசவ மடம், ஆரிய வேதங் களையும் வடமொழியையும் ஆய்வு செய்தது. வடமொழியை கற்றுத்தரப் பள்ளிகளையும் நடத்தியது. மன்னரும் மக்களும் அளித்த நன்கொடையால், வடமொழி பயிலும் மாணவர்களுக்கு உணவும் உடையும் இருக்கைகளும் வழங்கப்பட்டன. கி.பி. 1359 ஆண்டின் குறிப்பொன்று, காஞ்சியில், வைஷ்ணவதாசர் என்பார் தலைமையில், இராமானுசரின் கொள்கைளைப் பரப்ப மடம் ஒன்று நிறுவப்பட்டிருந்ததாகக் கூறகிறது. உத்திரமேரூரில் இருந்த வைணவ மடம், பிராமணர்கள் வேதங்கற்க பள்ளி யொன்றையும் நடத்தியது என்பர்.

மாலியத்தையும் ஆரியத்தோடு இணைத்து, வடமொழி யைப் பரப்பிய இடங்களாகவே, வைணவ மடங்கள் இருந்தன. நாலாயிரத்திவ்விய பிரபந்தம் என்ற தமிழ் இலக்கியத் தொகுப்பை ஆழ்வாளர்கள் தமிழுக்களித்ததைத் தவிர, ஆரிய வைணவம் தமிழுக்கு எதையும் செய்துவிடவில்லை. மன்னரின் கொடை யால், தமிழ் கற்றுத்தரும் பள்ளிகள், கல்லூரி போன்ற அளவில், தமிழ்நாட்டில் இருந்ததாகத் தெரியவில்லை. களப்பிரர் ஆட்சிக்குப் பிறகு மொழியின் மீது பற்று குறைந்து, சமயங்கள் மீது பற்றுதல் விரிந்தன. ஆரியச் சிவனியமும் மாலியமும் போட்டி போட்டுக் கொண்டு, ஆரியத்தைத் தமிழகத்தில் வளர்த்தன.

ooo

19

# பொருளியல் பார்வையில் கோயில்களும் மடங்களும்

வரலாற்றாசிரியர் நீலகண்ட சாத்திரியார்[296] கோயில்கள் பற்றிய கருத்துரையில், அவை நிலமானிய முறையில் முதலாளி களைப் போன்றும், வேலைதரும் நிறுவனங்கள் போன்றும். உணவுப் பொருட்களை வைத்திருந்த களஞ்சியங்கள் போன்றும், வங்கிகளைப் போன்றும், பள்ளிகள் - மருத்துவமனைகள் - கலைக் கூடங்கள் என்ற அளவிலும், செயல்பட்டன, என்று கூறுகிறார். இதன் பணிகளை, 1. சமயத் தொடர்பானதாகவும், 2. சமயத்துடன் இணைந்த கல்விக் கூடங்களாகவும், 3. பொரு ளியல் அடிப்படையில் வருவாயைப் பெருக்கும் நிலையங் களாகவும் பிரித்துக் காட்டுகிறார். தற்கால மார்க்சிய கருத்தில், கோயில்கள், நிலைமானிய முதலாளித்துவ அமைப்புகளாகவே செயல்பட்டன எனலாம். பர்ட்டன் ஸ்டெயின் (Burton Stein) என்பார்,[297] மன்னனும் மக்களும் மேலும் மேலும் கொடை களைக் கோயில் நிறுவனங்களில் குவித்தது, தவறான பொருளியல் கண்ணோட்டத்தைத் தருகிறது என்கிறார். நாட்டினுடைய வருவாய், அக்காலத்தில் வைப்பில் இருக்கும் அளவில் (Surplus) இருந்தது. அவைகளைக் கொண்டு வேளாண்மையைப் பெருக்க வும், கல்வியை வளர்க்கவும், தொழில்களை ஊக்கப்படுத்தவும் அரசுகள் தவறிவிட்டன என்கிறார். முன்னேற்றத் திட்டங்கள் எவையேனும் செய்யப்பட்டிருந்தாலும், அவைகள் கோயிலுக் குக் கொடுக்கப்பட்ட, செலவு செய்யப்பட்ட தொகைகளில் மிகக் குறைந்த அளவே என்றும் சுட்டிக் காட்டுகிறார். பக்தி

296. History of Tamilakam, p. 167.

297. Ibid.

இயக்கம் என்ற சமய விழிப்புணர்வு பெற்ற கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு, அரசின் வருவாய் பெருமளவில் வீணடிக்கப் பட்டது என்பது அவரது கருத்தாகும்.

இதன் அடிப்படையில் பார்க்கும்போது, தமிழகத்தின் வருவாய், சமயங்கள், சமயப் பணிகள் என்ற பெயரில் பிராமணர் களின் வளர்ச்சிக்கும், வடமொழியைப் பரப்புவதற்கும், திருப்பி விடப்பட்டுள்ளன. ஆலயங்கள், சமய நிறுவனங்கள் தவிர்த்து அரசின் நேரிடையான பார்வையில், மக்கள் நலப்பணிகள் பெருமளவில் மேல்கொள்ளப்படவில்லை இடைக்காலச் சோழப் பேரரசில், ஏராளமான வேளாண்மைத் திட்டங்கள் செயல்படுத்தப்பட்டதாகக் கூறப்பட்டன. இவையாவும், வேளாண்மை மூலம் கிடைத்த வருவாயில் 10இல் ஒரு பங்கு கூட, வேளாண்மைக்கான செலவினத்தில் சேர்க்கப்படவில்லை. முறையாக அவை திட்டமிட்டு செலவு செய்யப்பட்டிருந்தால், கி.பி. ஏழாம் நூற்றாண்டுக்குப் பிறகு, மிகப்பெரிய வேளாண் புரட்சியைத் தமிழகம் கண்டிக்கும் என்பர்.

வேலைக்கு உணவுத் திட்டம் என்பது சோழர்கள் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டதே. வேளாண்மைத் தொழில் செய்யப் படாத ஆண்டின் ஆறுமாதங்களில், அரசாங்கத்தின் பணிகள் ஆலயங்களைக் கட்டுவதில் மட்டுமே கவனத்தில் கொள்ளப் பட்டன. ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள், ஆலயம் கட்டு வதிலேயே தங்கள் உழைப்பை நல்கினர். இத்தொழிலாளர்களுக் கான ஊதியங்களையும், ஆலயமே அளித்தது. (ஆலயம் தமிழ்ச் சொல்லே. ஆல் என்ற ஆலமரமே சிவனியத்தின் முதற் கோயி லாகும். ஆல் - ஆலயம் என நீண்டது). உழைப்பதற்குக் காத்திருந்த எண்ணற்ற வேலையாட்களை, அரசு ஆக்கப்பணிகளுக்குப் பயன்படுத்தத் தவறிவிட்டது. வேளாண்மை நடைபெறாத காலங்களில், தனிப்பட்ட காழ்ப்புணர்ச்சிகள், போட்டிகள், தற்பெருமைகளின் அடிப்படைகளில் போர்கள் நிகழ்த்தப் பெற்று, ஏராளமான தொழிலாளர்களின் வேலைத்திறன் வீணடிக்கப்பட்டது. தமிழ் மக்களின் மொழியும், பண்பாடும், கோயில்களின் வளர்ச்சிகள் என்ற பெயரில் வடமொழிக்கும் ஆரியருக்கும் அடிமைகளாக்கப்பட்டன.

அரசாங்கத்தின் ஆயிரக்கணக்கான வேலி நிலங்கள் கோயில்களுக்கும். கோயில்களின் பொறுப்புக்களை வகுத்த

பிராமணர்களுக்கும் வழங்கப்பட்டன. நிலமற்ற வேளாண் தொழிலாளிக்கு இச்சலுகைகள் அளிக்கப்படவில்லை. உழுதுண்ணும் வேளாளன், உழுவித்துண்ணும் வேளாளன் என்ற இருபிரிவினர் தோன்றி, உழுவித்துண்ணும் வேளாளன் நிலமானிய முதலாளிகளாகவும், உழுதுண்ணும் வேளாளன் நிலமுற்ற தொழிலாளிகளாகவும் மாறினர். ஆரியர்களால் புகுத்தப்பட்ட வர்ணாசிரம முறைகள், ஊர்களில் பிரிவுகளை ஏற்படுத்தி ஒற்றுமையைக் குலைத்தன. நெய்யைப் பிசைந்து பச்சரிசிச் சோறுண்ட பிராமணனைப் பற்றியும், வீட்டில் அடுப்பு எரிய வில்லை என்பதால் பட்டினி கிடந்த தமிழ்ப் புலவனைப்பற்றியும், இலக்கியங்கள் விரிவாக எடுத்துரைக்கின்றன. இவ்வளவு இடர்ப் பாடுகளையும் மீறி, தமிழ்நாடு பெருமைக்குரியதாகவும் வளமைக் குரியதாகவும் போற்றப்பட்டது, தமிழர்களின் கடும் உழைப்பும், தமிழ் மண்ணின் வளமையுமேயன்றி, வேறொன்றுமில்லை. கி.பி. 300 ஆண்டுகளுக்குப் பிறகு தமிழ் நாட்டில், தமிழர்கள் அடிமைகளாக வாழ்ந்த வரலாறே, கடந்த காலத் தமிழ் நாட்டின் வரலாறாகும்.

OOO

20

## வடமொழியின் தாய்மொழி தமிழே

தமிழரின் பரவல், குமரிக்கண்டத்தை விட்டகன்றது, அதன் வாயிலாகத் தமிழ் பல நாடுகளிலும் பரவியது பற்றிய கொள்கை இன்று தமிழறிஞர்களால் முனைப்புடன் ஆய்வு செய்யப்பட்டு வருகின்றன. பாபிலோன், பாலத்தீனம், எகிப்து, அரேபியா போன்ற நாடுகளில், தமிழரின் குடியேற்றம், கி.மு. 15000-10000 ஆண்டுகளில் நிகழ்வுற்றன. இக்குடியேற்றம், குமரிக்கண்டம் முற்றிலுமாகக் கடற்கோள்களால் அழிந்துபட்டதால் ஏற்பட்ட தின் விளைவுகளே. கி.மு. 10000 ஆண்டுகளில், பாபிலோன் நாட்டில் தமிழே பேசப்பட்டது என்பதற்கான உட்சான்றுகளை, பாபிலோனிய வரலாறும், சமயமும் கூறுகின்றன. பாபிலோனியத் தமிழினின்றே, மடுத்தரையை (Meditterranean) அடுத்துக் கீழை நாட்டு மொழிகள் கிளைத்தன என்பதற்கான உட்சான்றுகள். எபிரேயம், ஃபோனீசியம், கனானியம், அறமாயிக், அரபு போன்ற மொழிகளில் உள்ளன. பாபிலோனியத் தமிழினின்றே கிரேக்கம், செர்மானியம், உரோமானியம் போன்ற ஐரோப்பிய மொழிகளும் கிளைத்தன என்பதற்கான கூறுகள். விவிலியத்தில் காணப்படுகின்றன. ஐரோப்பிய மொழிகள் யாவும் தமிழினின்று கிளைத்தவைகளே என்பதை, அம்மொழிகளில் உள்ள ஆயிரக் கணக்கான தமிழ்ச் சொற்கள் விளக்குகின்றன.

பாபிலோனின்றும் வடக்கு நோக்கிச் சென்ற தமிழர் குழுவினர், கிரேக்கம் நடு ஐரோப்பா மற்றும் செர்மனியில் குடியேறினர். அவர்கள் பேசிய தமிழ்மொழி பலவாயிரம் ஆண்டு களில் திரிந்து சிதைந்து ஐரோப்பிய மொழிகளாகச் சொல்லப் படுகின்றன. இவற்றை இந்தோ-ஆரிய மொழிகள் என்று பிற் காலத்தில் அறிவித்தனர். இந்தோ-ஆரியம் என்ற சொல்லுக்கே, (ஆரிய மொழியில் இந்தியச் சொற்கள் உள்ளதை) அம்மொழி

யானது இந்தியாவுடன் தொடர்பு கொண்டது எனப் பொருள் கொள்ளலாம். இந்தோ ஆரியம், மேலை ஆரியம் என்று ஐரோப்பிய மொழிகளையும், கீழை ஆரியம் என்று சமற்கிருதத் தையும் சுட்டியது. மேலை கீழை ஆரிய மொழிகள், ஏராளமான தமிழ்ச் சொற்களைக் கொண்டிருந்ததைக் கண்ட மேலை நாட்டு மொழியியல் ஆய்வாளர்கள், இத்தமிழ்ச் சொற்கள் எவ்வாறு மேலை ஆரியத்தில் கலந்தன என்பதை அறிய பல்வேறு வழிகளி லும் முயன்றனர். தமிழ்ச் சொற்கள் மேலை ஆரியத்தில் உள்ளன; அவை எவ்வாறு தொடர்புற்றன என்பதை, வணிகத் தொடர்பு என்று சிலர் உரைத்தனர்; மேலை நாட்டார் கீழை (இந்தியா) நாட்டுக்குப் பரவியதால் விளைந்தது எனச் சிலர் கூறினர்.

இதுவரையில், தெளிவான கொள்கையை, பலராலும் ஏற்கப்படும் கொள்கையை, எவரும் அளிக்கவில்லை. மேலை நாட்டார், பாபிலோனிய மக்கள் இந்தியாவுக்குள் நுழைந்து குடியமர்ந்தனர் என்று கூறினரேயன்றி, எதன் கரணியம் பொருட்டு இக்குடியேற்றங்கள் நிகழ்ந்தன என்பதை விளக்கவில்லை, விளக்கத் தெரியவில்லை. பாவாணரும், மேலை நாட்டில் தமிழர் குடியேற்றம் ஏற்பட்டதால்தான், இந்தோ-ஆரிய மொழியில் தமிழின் தாக்கங்கள் உள்ளனவெனக் குறிப்பிட்டார், ஆனால் எச்சூழல் அவர்களை (தமிழர்களை) மேற்கே செல்லத் தூண்டியது என்பதனை விரிவாக விளக்கவில்லை. அவரது வாழ்நாள் இன்னும் சில ஆண்டுகள் நீண்டிருப்பின், இதுபற்றிய கொள்கை களையும்கூட அவர் அறிவித்திருக்கலாம். மேற்கண்ட செய்தி யைப் பாவாணர், கி.பி. 1940களில் எடுத்துரைத்தார்.

ஆரியர்கள் இந்தியாவுக்கு வருகை தருமுன்னரே, அவர்கள் பேசிவந்த நாடோடி மொழியும், பாபிலோனியத் தமிழினின்றும் கிளைத்ததே. தற்காலப் புதிய சிந்தனையின்படி, ஆரியமும் சிந்துவெளித் தமிழும் கலந்த புதிய மொழியே சமற்கிருதம் எனப்பட்டதாகச் சொல்லப்படும் கருத்தில் கூட பகுதியளவே உண்மையுள்ளது. **ஆரியரின் தாய்மொழியிலேயே தமிழ் கலந் திருந்ததும், அவர்களின் இந்திய வருகைக்குப் பிறகு, மீண்டும் தமிழ் மொழியால் அவர்கள் மொழி செம்மையுற்றுச் சமற்கிருத மானது என்பதே புதிய சிந்தனையாகும்.** பாபிலோனியம் உட் பட்ட அப்பகுதி மொழிகள், தமிழினின்றும் கிளைத்தவைகளே என்பதும், இந்தோ ஆரியமும் தமிழின் கிளை மொழியே என்பதும் புதிய சிந்தனையின் கொள்கையாகும். இக்கொள்கையை நிறுவும் வகையிலும், பழைய கருத்துகளுக்குப் புதிய வடிவம்

கொடுக்கும் வகையிலும், நூலாசிரியரின் "எபிரேயத்தின் தாய் மொழி தமிழே" என்ற ஆய்வு நூல் விடை காண முயன்றுள்ளது.

தமிழினின்றும் எடுத்துக் கொள்ளப்பட்ட சொற்களால் உருவான சமற்கிருதம், மூலமொழியே என்றும், தமிழ்ச் சொற்கள் வடமொழியில் உள்ளதைக் கண்ட பலர், தமிழ், வடமொழியி னின்றும் கிளைத்ததே என்றும் விளக்கும் ஒரு தலைகீழ்க் கொள்கையை அறிவித்தனர். தமிழ் மொழியின் மூலத்தால் உருவான மேலை ஆரியமும், கீழை ஆரியமும், பிற்காலத்தில் தமிழால் செம்மைப்படுத்தப்பட்டு, கீழை ஆரியம் சமற்கிருத மானதையும், மொழியியல் நோக்கில் எவரும் ஆய்வு செய்யாமல், ஆரியர்களும் அவரது சார்புடையோரும் சொன்னவைகளே, திரும்பத் திரும்பச் சொல்லி, அக்கருத்தையும் நம்ப வைத்தனர். தேவநேயப் பாவாணர் ஒருவரே, வடமொழியையும் மேலை நாட்டுமொழிகளையும் மொழியியல் நோக்கோடு, அறிவியல் கண் கொண்டு ஆய்ந்து புதிய கொள்கையொன்றை வெளி யிட்டார். ஒரு சொல்லை, இது தமிழ்ச் சொல்லா, வடசொல்லா எனக் கண்டறிய, எந்த அளவு கோலும் இல்லாமையால், தமிழரும் வடசொற்களே தமிழில் உள்ளன என்றும் நம்பியிருந்தனர்.

தேவநேயப் பாவாணர் அவர்கள், ஒரு சொல், தமிழ்ச் சொல்தானா என்பதைக் கண்டறிய முற்படும் வேர்ச்சொல் சூத்திரத்தை வெளிப்படுத்தினார். இவ்வழியை அவரே ஆய்ந்து தெளிந்து வெளிப்படுத்தினார். இந்நோக்கில் ஆய்வு செய்யப் படும் சொற்களை, அவை உண்மையில் தமிழ்ச் சொற்களா யிருந்தால், அவை எம்மொழிகளில் இருந்தாலும் எளிதில் கண்டுபிடித்துவிட இயலும். இதன் வழியில், உலகின் பல்வேறு மொழிகளில் உள்ள சொற்களை ஆய்வு செய்து, அவைகள் தமிழ் மூலத்தையே கொண்டுள்ளன என அறிவித்தார். அவ்வாறே வடமொழியையும் ஆய்வு செய்து, அம்மொழியில் நாற்பது விழுக்காடு தமிழ்ச் சொற்கள் உள்ளன என்பதைக் கண்டறிந்தார். இதுவும் கூட 50 ஆண்டுகட்கு முன்னர் கூறப்பட்டதாகும். அவர் வழியில் ஆய்வினைத் தொடரும்போது இன்னும் கூடத் தமிழ்ச் சொற்களின் விழுக்காடு வடமொழியில் பெருகி இருப் பதைக் காணலாம். இதுநாள் வரை வடசொற்கள் என்று சொல்லப்பட்டு வந்த பல தமிழ்ச் சொற்களை, வடமொழியின் பிடிப்பினின்றும் விடுவித்து, அவை தமிழ்ச் சொற்களே என்று நிறுவியுள்ளார். தனது வாழ்நாள் முழுதும் தமிழையே நினைத்து, தமிழையே சிந்தித்த பாவாணரின் வாழ்நாள் கூடியிருப்பின்,

இன்னும் பல உண்மைகளையும் கண்டறிந்திருப்பார். பாவாணர் காட்டிய வழியில், இன்று பலரால் ஆய்வுகள் தொடரப்படு கின்றன. அவரால் தொடமுடியாமற் போன பல சொற்களை, பாவாணரின் சூத்திரத்தைக் கொண்டே, இனம் காண தற்போது முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

தமிழறிஞர் என்றும், தமிழ்த்தாத்தா என்றும் அழைக்கப் பட்ட டாக்டர் உ.வே.சாமிநாதய்யர், கடந்த நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்தவராவார். தமிழ் நாடெங்கும் சுற்றி யலைந்து, பல்வேறு இடங்களிலும் பாதுகாப்பற்ற நிலையில் இருந்த பல ஆயிரக்கணக்கான ஓலைச் சுவடிகளைக் கண்டறிந்து, அவற்றை மற்றச் சுவடிகளுடன் ஒப்பிட்டுச் சரிபார்த்து, கடைக்கழக நூல்கள் பலவற்றையும் தமிழுக்கு உரிமைகளாக்கிக் கொடுத்தார். எண்ணற்ற நூல்களைப் பதிப்பித்து, சரியான உரை விளக்கங்களையும் கொடுத்து, தமிழர்கள் பயன்பெறச் செய்தார். குறுந்தொகை, பரிபாடல் போன்ற நூல்கள் அவற்றில் குறிப்பிடத்தக்கவைகளாகும். சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் உரையில், எழுதப்பட்ட நூலுக்குத் தாமும் விளக்கங்கள் கொடுத்து வெளியிட்டார். அவ்வுரை நூலில் கண்டுள்ள செய்தி கள், விளக்கங்கள் யாவும் வியப்புக்குரியனவாகும். தனது தமிழறிவையும் பட்டறிவையும் ஒருங்கிணைத்துத் தமிழ் மொழிக்கு ஆற்றிய தொண்டு தன்னேர் இலாதது.

கி.பி. 1920களில், தமிழ் மொழியில் புதுப்புது நூல்கள் வெளிவரத் தொடங்கின. அந்நூல்களுக்கு ஏற்கனவே கொடுக்கப் பட்டிருந்த உரைகள் யாவும் தமிழரால் ஏற்றுக் கொள்ளப்பட்டன. உரையாசிரியர்கள் சொன்ன கருத்துக்கள் தவறானவை என்று கூறத் தமிழறிஞர்கள் துணியவில்லை. ஆனால் பாவாணர் மட்டுமே, தொல்காப்பியத்திலுள்ள இலக்கணப் பிரிவுகளையும், தொல்காப்பியர் செய்த தவறுகளையும் சுட்டிக் காட்டினார். டாக்டர் உ.வே.சா. அவர்கள் காலத்தில், சொல்லியத் துறையில் சரியான வழிகாட்டுதல் இன்றி, அத்துறை தொடங்கப்படாமலே இருந்தது. தமிழ்ச் சொல்லியல் துறையை முதன் முதலாகத் தொடங்கியவர் மறைமலை அடிகளே எனக் கூறலாம். தமிழ்ப் புலவர்களும் சொல்லியலைப் பற்றி அறியாதிருந்தினால், வட சொல் எது தமிழ்ச்சொல் எது எனக் கண்டுபிடிக்க இயலாத மயக்க நிலை இருந்தது. இம்மயக்க நிலைக்கு டாக்டர். உ.வே.சா. அவர்களும் விதிவிலக்கானவர் அல்லர். மொழியியல் துறையில் அவர் ஈடுபடவில்லை என்பதாலும், தொன்று

தொட்டுச் சொல்லப்பட்டு வந்த பல சொற்களை, அவைகளின் வேர்ச் சொற்களை அறியாமல், அவை வடசொற்களே என்றும் கூறினார். இதற்கு அக்கால நிலையும், சொல்லியல் துறையில் புதிய சிந்தனைகள் இல்லாததுமே கரணியங்கள் ஆகும். டாக்டர் உ.வே.சா. காலத்திற்குப் பிறகே, பாவாணரின் கொள்கை வெளியிடப்பட்டதால், டாக்டர் அவர்களின் கருத்தில் பழமை மட்டுமே இருந்தது.

அவ்வாறான தொன்மை வழக்கில் பல தமிழ்ச் சொற்களை, வடசொற்களாகவே, டாக்டர் உ.வே.சா. அவர்கள் குறிப்பிட்டுள்ளார். அவருடைய கூற்று வருமாறு:

"வடசொற் கிளவிகள் வடவெழுத்தொருவித் தமிழ் எழுத்தைப் பெற்றும், தமிழுக்கு ஏற்ற விகாரங்களையடைந்தும், வேறு பல வகையில் திரிந்தும் வழங்குகின்றன. அவை வருமாறு: அகில், அச்சிரம், அமையம், அமிழ்தம், அரசன், அவை, ஆரியர், இமயம், உலகம், ஏமம், கடிகை, கமண்டலம், கலாவம், காமம், காலம், குணன், குவளை, சகடம், சூலி, சேமம், தண்டு, தாது, தூது, தெய்வம், நகர், நீலம், நேமி, பக்கம், பணிலம், பருவம், பலி, பவழம், பிச்சை, மண்டிலம், மணி, மதம், மதி, மாலை, முகம், முத்து, முரசு, யாமம், வாசம் முதலியன. இவற்றில் சிலவற்றைத் தமிழ் எனவே கொள்வாரும் உளர்."[298]

மேற்கண்ட சொற்கள் யாவும், தமிழ் இலக்கியங்களிலும், தமிழர் பேச்சுவழக்கிலும் உள்ள சொற்களாகும். டாக்டர் உ.வே.சா. அவர்கள் கூற்றின்படி, இவற்றில் சில தமிழ்ச் சொற்களாகவுமிருக்கலாம் என்றார். மேற்கண்ட சொற்களில், பெரும் பாலான சொற்கள் தமிழ்ச் சொற்களே என்று பாவாணரும் நிறுவியுள்ளார். ஓரை என்ற சொல், கிரேக்கச் சொல் என்றும், அது வணிகத் தொடர்பால், தமிழில் கலந்துவிட்டது என்றும், வையாபுரிப் பிள்ளை கூறுகிறார். இவை போன்று பல்லாயிரக் கணக்கான தமிழ்ச் சொற்கள், வேற்றுமொழிகளில் இருப்பதாலும், அவை அம்மொழிகளில் எவ்வாறு கலந்தன என்ற வரலாறு அறியப்படாததாலும், அச்சொற்கள் எல்லாம் தமிழில் கலந்து விட்ட அயன் மொழிச் சொற்களே என முடிவு செய்தனர். அக்கண்ணோட்டம் தவறானவை என்பதை, ஒருசில சொற்களின் மூலத்தைக் கண்டு தெளியலாம்.

ooo

---

298. குறுந்தொகை மூலமும் உரையும், டாக்டர். உ.வே.சா. பக்கம். C.

21

## அகில்

தொன்மைக்காலம் தொட்டுத் தமிழகத்தில் பயன்படுத்தப் பட்டுவரும் நறுமணப் பொருளாகும். குறிஞ்சி நிலத்தில் உயர்ந்து வளரும் அகில் மரத்தினை, அம்மக்கள் மற்ற மரங்களோடு வெட்டி எரித்துப் பிறகு தினையை விதைப்பர். அகில் மரங்கள் எரியும்போது, அதன்புகை வெண்ணிறமாக நீர்த்துளியற்ற மேகத்தைப் போல மேலே எழும். மகளிர் நீராடிய பிறகு தம் கூந்தலுக்கு அகிற்புகையை ஊட்டிப் புலர்த்துவர். ஏலம், கற்பூரம், எரிகாசு, சந்தனம், தேன் ஆகிய ஐந்து மணப்பொருட்களும் சேர்ந்தது அகிற்கூட்டு என்று சொல்லப்பட்டது. வடநாட்டுச் சூழலிலும், ஐரோப்பிய நாட்டுச் சூழலிலும் அகில் மரங்கள் வளருவதில்லை. கடும் வெப்பமும் மழையும் கொண்ட நில நடுக்கோட்டுப் பகுதிகளிலேயே இம்மரங்கள் வளரும். எனவே அகில் என்ற சொல், ஆரியர்களின் மொழியில் இடம்பெற் றிருக்க வாய்ப்பில்லை. அரிசி என்ற சொல், எஸ்கிமோக்கள் என்ற வடமுனைப் பகுதி மக்களின் மொழியில் எவ்வாறு இடம்பெறாமல் உள்ளதோ, அதுபோன்றே, ஆரியத்திலும் அகில் என்ற சொல் இடம் பெற வாய்ப்பில்லை. இருப்பினும் அகில் ஆரியச் சொல்லே என்றும், தமிழ் அச்சொல்லைக் கடன் பெற்றுக் கொண்டது என்றதும் சொல்லி வைத்தனர்.

கல் - கலத்தல் = இரண்டுக்கு மேற்பட்டவைகள் இணைதல், பொருந்துதல்.

கல் - கலங்கல் = நுங்கும் நுரையுமாக வரும் ஆற்று நீர்.

கல் - கல - கலுழி = கலங்கலான நீரைக் கொண்டுவரும் ஆறு.

கல் - கல - கலுழன் = வெள்ளையும் மஞ்சளும் சிவப்பும் கலந்த பருந்து.

நின்னிலை கொடிதாற் றீய கலுழி — குறுந்தொகை

கல் - அகல் - அகில் = அகன்று சென்று, காற்றில் கலக்கும் புகை. அப்புகையைத் தரும் மரம். கல் = கலத்தல்; அகல் = அகன்று செல்லுதல்.

அகில் என்ற மரம், இலத்தீன் மொழியில் அக்குயிலா (Aquila) என்று சொல்லப்பட்டுள்ளது.[299] அக்குயிலா என்ற சொல் கலுழனையும் குறித்தது (Eagle). கல் என்ற வேர்ச்சொல்லால் நீண்ட கலுழி, அகில் ஆகிய இரண்டு தமிழ்ச் சொற்களுமே, அக்குயிலா என்று இலத்தீனில் சொல்லப்பட்டுள்ளதை நோக்கு கையில், இவை தமிழ்மூலத்தைக் கொண்டே திரிந்துள்ளன என்பது தெளிவு. திருவோணம்[300] என்ற கலுழனைக் குறித்த விண்மீனுக்கும் இலத்தீன் மொழியில் Aquila என்றே பெயர் சூட்டப்பட்டுள்ளதையும் நோக்குக. உரோமர்கள்[301] Aquila என்ற சொல்லை, ஆண்களுக்குப் பெயராகவும் வைத்தனர்.

**மாயோன் மேய ஓண நன்னாள் – மதுரைக் காஞ்சி.**

சாம்பிராணி எனும் தெலுங்குச் சொல்,[302] சாவா போன்ற கிழக்குத் தீவுகளில் உள்ள ஒருவகை மரத்தின் பீளையினின்றும் எடுக்கப்படும் நறுமணப் பொருளைக் குறிக்கும். தமிழுக்கு இது புதிய பொருளாதலால், இதற்குத் தமிழ் வழக்கில் சாம்பற் கட்டி என்றே பெயரிட்டனர். சாம்பல் என்பதற்கு பழுப்பு நிறம் என்ற பொருளும் உண்டு. சாம்பற்குதிரை = பழுப்பு நிறக் குதிரை (grey horse). இதனை கிரேக்கர் தமிழ்ச் சொல்லால் அழைத்தனர். முகர் என்ற சொல்லின் திரிபாக மிர்[303] (myrrh) என்ற சொல், சாம்பிராணியைக் குறித்து கிரேக்கத்தில் வழங்கப் பட்டது. முகர் என்று தமிழ்நாட்டில் அப்பொருள் அழைக்கப் பட்டதாகத் தெரியவில்லை. இவ்வாறு தமிழ்நாட்டில் வழக்கில் இல்லாத அல்லது வழக்கொழிந்துபோன பல தமிழ்ச் சொற்கள் மேலை மொழிகளில் உள்ளன.

தாழை என்ற மடல்களின் மணம் இன்றும் உணரப்படு கின்றது. தாழையினின்று எடுக்கப்படும் நறுமண நெய்யை

299. வின்ஸ்லோ, தமிழ் அகரமுதலி, ப. 4.

300. மதுரைக் காஞ்சி, 591.

301. Bible, N.R. Acts, Rome. 16:3.

302. வின்ஸ்லோ அகரமுதலி, ப. 43.

303. ஆக்ஸ்ஃபோர்டு ஆங்கில அகரமுதலி, ப. 589.

உடலில் பூசிக் கொள்ளப் பயன்படுத்தினர். தாழை மடல்கள் பெண்டிரால் தலையில் சூடிக் கொள்ளப்பட்டன. தாழை என்ற தமிழ்ச்சொல், தாலோ-ஆலோ[304] (Aloe) என்று கிரேக்கத்தில் திரிந்துள்ளது. ஆங்கில அகரமுதலிகள், ஆலோ என்ற தாழையை இந்தியச் செடி (Indian plant) என்றே குறிப்பிடுகின்றன. நறுமணப் பொருட்கள் தமிழகத்தினின்றே மேலைநாடுகளுக்கு அனுப்பப் பட்டன. நறுமணத்தை விளக்கும் Spica Nardi என்ற ஆங்கிலச் சொல்லில் உள்ள Nardi என்ற சொல், நாற்றம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. இயேசு பிறந்த போது, கீழ்த்திசையினின்றும் சென்ற அறிவர் மூவர் (wisemen) பொன்னையும், சாம்பற்கட்டி யையும், அகிலையும் காணிக்கைப் பொருட்களாக, அவருக்கு அளித்தனர் என்று விவிலியம் கூறுகிறது.[305] இம்மூன்றும் பாலத்தீனத்தில் கிடைக்காத, தமிழ் நாட்டுப் பொருட்களே யாகும். இயேசு கிறித்து இறந்தபோது, அவரது உடலில் தாழை யின் நறுமண நெய்யைப் பூசியதாகவும் விவிலியம் சொல்கிறது.[306]

கல் என்ற வேர்ச் சொல்லினின்றே அகில் என்ற சொல் பிறந்தது.. அகல் என்ற சொல்லும் கல் என்ற வேரினின்றும் பிறந்ததே.

கல் - அகல் = அகலுதல், விரிந்து படர்தல், தட்டையான வட்டத்தட்டு.

அகல் - அகலம் = பரப்பளவில் ஒரு பக்க அளவு. அகல் - அகலிடம் = ஞாலம்.

அகலிடம் என்ற தமிழ்ச் சொல்லே, அகிலம் (Akhila) என்று வடமொழியில் திரிந்தது.

கல் = கலத்தல். அகல் = அகன்று சென்று கலத்தல்.

அகல் - அகில் என நீண்டது.

அகரு வழைஞெமை யார மினைய — பரிபாடல்[307]

அகல் - அகர் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

---

304. வின்ஸ்லோ, ப. 575.

305. Bible, N.T. Matt, 2:11.

306. Ibid, John, 19:39.

307. பரிபாடல், 12:5.

நறையகில் வயங்கிய நளிபுன நறும்புகை – குறுந்தொகை[308]

அகில்சுடு காவை னுவல்சுடு கமழ் புகை – நற்றிணை[309]

கறையில் கார்மழை பொங்கியென்ன
நறையி னறும் புகை – பரிபாடல்[310]

கலம்சுடு புகையிற் றோன்று நாட – அகநானூறு[311]

அகிலெழு கொழும்புகை மஞ்சி னாடவும் – சூளாமணி[312]

அகில் என்ற சொல், நறுமணத்தைத் தரும் பொருள் என்று, தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. அகில் என்பதை வடமொழிச் சொல்லென ஆரியச் சார்பாளர் உரைத்தது, அச்சொல் பற்றி அவர் அறிந்திருக்கவில்லை என்பதையே காட்டுகிறது. தமிழி னின்றே, அகில் என்ற சொல் வடமொழிக்குச் சென்றது என்பது தெளிவு.

○○○

---

308. குறுந்தொகை, 339:1.

309. நற்றிணை, 282:7

310. பரிபாடல், 14:19-20.

311. அகநானூறு, 308:5-6.

312. சூளாமணி, நகர். 6.

22

## அற்சிரம்

நீண்ட இரவைக் குறித்த வடசொல். அச்சிரா என்ற வட சொல்லினின்றே அற்சிரம் என்ற தமிழ்ச் சொல் திரிந்ததாகக் கூறுவர். அச்சிரா என்ற சொல் தமிழ் வழக்கிற்கேற்ப அற்சிரம் எனத் திரிந்தது என்றும் கூறுவர். அற்சிரம் என்ற தமிழ்ச்சொல், முன்பனிக்காலத்தையும், பின் கார்காலத்தையும் குறித்த சொல் லாகும். கார்த்திகை மார்கழித் திங்களைக் கொண்ட இரவுக் காலமாகும். இக்காலத்தில் பகற்பொழுது குறைந்து இரவுப் பொழுது நீண்டிருக்கும்.

நீண்ட இரவு, தலைவனில்லா தலைவிக்குத் துன்பத்தை விளைத்தது. நீண்ட இரவு என்ற பொருளை அற்சிரம் என்ற தமிழ்ச்சொல் விளக்குகிறது.

அல் + சிரம் = அற்சிரம். அல் = இரவு. சிரம் = நீண்ட, நெடிய. அற்சிரம் = நீண்ட இரவு. தலைவிக்கு இப்பொழுது மேலும் மேலும் நீண்டது.

கரும்பனி அச்சிர நடுங்கஞ ருறவே – குறுந்தொகை[313]
கடும்பனி அற்சிரம் நடுங்கக் காண்தக – நற்றிணை[314]
தண்பனி வடந்தை யச்சிரம் – ஐங்குறுநூறு[315]
வடந்தை தூக்கும் வருபனி யற்சிரம் – அகநானூறு[316]

அல், இரவைக் குறித்தது.

313. குறுந்தொகை, 76:6.
314. நற்றிணை, 86:4.
315. ஐங்குறுநூறு, 223:4.
316. அகநானூறு, 378:13.

**கேட்டிசின் வாழி தோழி அல்கல்** — குறுந்தொகை[317]

**சென்றா லியரோ பெரும அல்கலும்** — பதிற்றுப்பத்து[318]

சிள் - சிர் - சிரத்தல் = நீளுதல். சிள் - சிர் - சிரல் = நீண்ட மூக்குடைய பறவை. சிள் - சுள் - சூர் - சூரி = நீண்டவாள். சுரிகை = குத்துவாள்.

**சிரல்வா யுற்ற தளவிற் பரலவல்** — நற்றிணை[319]

**பின்சென்றது அம்ம சிறுசிரல் பின்செல்லும்** — நாலடியார்[320]

பாபிலோனிய, யூத சமய நாட்காட்டியில், முன் பனிக்கால மாதத்தை, கிச்சலு என்றனர். கிச்சலு என்ற சொல், அற்சிரம் என்ற சொல்லின் திரிபாகவும் இருக்கலாம்.

அற்சிரம் என்ற தமிழ்ச்சொல்லே, அச்சிரா என்று வட மொழியில் திரிந்தது.

ooo

317. குறுந்தொகை, 30:1.

318. பதிற்றுப்பத்து, 55:16.

319. நற்றிணை, 61:8.

320. நாலடியார், 395:12.

23

## அமையம்

காலத்தைக் குறித்த இச்சொல்லை, வடசொல் என்றனர். அமை என்பதற்குத் தமிழில் வேறு பொருள் (அமைதல் - அமைந்திருத்தல்) உள்ளதால், அமையம் என்பது வடசொல்லே என்று கூறினர். டாக்டர் உ.வே.சா. அவர்களும் அமையம் வடசொல்லே என்பார். தமிழர், நாளை ஆறு பகுதிகளாக அமைத்திருந்தனர். அமைவு என்பதே பிரித்துப் பொறுத்துதல் என்றே பொருள்படும். மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், ஏற்பாடு என்ற வரிசைப்படி, நாளின் பொழுதுகள் அமைந்திருந்தன. இருள் சூழத் தொடங்கியதும், அது மறுநாள் தொடக்கமாகக் கணக்கிடப்பட்டது. அதுபற்றியே மாலை என்ற சொல்லை முதற்பொழுதாக வைத்தனர். பகல் முடிந்து விட்டால் ஒரு நாள் முடிந்ததாகக் கணக்கிட்டிருந்தனர். தொடக்க காலத் தமிழகத்தில் கடைப்பிடிக்கப்பட்ட இவ்வழக்கை, விவிலியமும் உறுதி செய்கிறது. மாலைபோய்க் காலை வந்தது என்ற குறிப்பு, விவிலியத்தின் முதல் படைப்பதிகாரத்தில் கூறப் பட்டுள்ளது.[321]

தமிழர், நண்பகலை அமையம் என்ற சொல்லால் அழைத்தனர்.

> உரிநிமிர்ந் தன்ன வுருப்பவி ரமையத்து — குறுந்தொகை[322]

பாம்பினது உரி (சட்டை) மேலெழுந்தாற் போல், வெப்பம் மிகுந்த நண்பகல் வேளை என்று குறுந்தொகை விளக்குகிறது.

---

321. Bible, Gen. 1:5.

322. குறுந்தொகை, 154:2.

தொன்மைக்காலத் தமிழர், நாளின் பொழுதை அறிய, மூங்கில் கம்பொன்றை நட்டு வைத்திருந்தனர். அதன் நிழல் சாயும் இடத்தைக் குறித்து, பொழுதுகளைக் கணக்கிட்டனர். நிழலின் சாய்வு, வேறுபடுதலையும், வடக்கு மற்றும் தெற்குத் திசைகளில் சாய்வதையும். ஆண்டு முழுதும் கண்காணித்து, ஞாயிற்றின் பெயர்ச்சியையும் அது நகரும் திசையையும் கணக்கிட்டனர். இம்மூங்கில் குச்சி, விழுவன் குச்சி[323] என்று சொல்லப் பட்டுள்ளது. நிழல் விழும் சாய்வைக் காட்டும் குச்சி என்று பொருள்படும்.

அமை என்பது மூங்கிலைக் குறித்த தமிழ்ச் சொல்லாகும். அமையின் நிழல், எப்பக்கமும் நீளாமல், தன் காலையே தொட்டு நிற்கும் பொழுது அமையம் எனப்பட்டது. அமையம் = நண்பகல்.

ஆடமை புரையும் வனப்பில் பணைத்தோள் – குறுந்தொகை[324]

ஆடமை ஆக்கம் ஐதுபிசைந் தன்ன – நற்றிணை[325]

அமைவிளை தேறல் மாந்திய கானவன் – சிலப்பதிகாரம்[326]

நாள் என்ற சொல்லும், நாண் என்ற சொல்லின் மறு சொல்லே. நாண் = வளைவு, வளைதல். நாணம் = வெட்கத்தால் உடல் வளைதல். வளைந்தகோடும் நாண் எனப்பட்டது.

நாக நாணா மலைவில் லாக – பரிபாடல்[327]

நாணில மன்றவெங் கண்ணே நாணேர்பு – குறுந்தொகை[328]

வளைவான வானத்தைக் கடந்து சென்ற ஞாயிறு, நாண் வழியைக் கடந்ததாகவே கருதப்பட்டு, நாள் எனும் சொல் அமைந்தது.

○○○

---

323. Non-Aryan Elements in Rig-Veda, M. Sunderraj, International Society for the Investigation of Ancient Civilization, 1981, p. 92.

324. குறுந்தொகை, 131:1.

325. நற்றிணை, 178:1.

326. சிலப்பதிகாரம், 27:217.

327. பரிபாடல், 5:24.

328. குறுந்தொகை, 35:1.

24

# அமிழ்தம்

எண்ணற்றத் தமிழ்ச் சொற்களைத் தம் சொற்களாகக் கூறிக் கொள்ளும் ஆரியர்கள், தமிழ் என்ற சொல்லோடு தொடர்புகொண்ட அமிழ்தம் என்ற சொல்லையும் வடசொல் என்று உரைத்து, அது அமிர்தம் என்ற தம் சொல்லின் திரிபே என்றனர். அமுது, அமுதம், அமிழ்தம் போன்ற தமிழ்ச் சொற்கள், தம் சொல்லே எனக் கூறும் ஆரியர்கள், பொய்யுரைக்கும் தன்மைக்கும் ஓரளவு உண்டு என்பதைப் புரிந்து கொள்ள வில்லை. எதைச் சொன்னாலும் தமிழர்கள் ஏற்றுக் கொள் வார்கள் என்ற உணர்வுகள் மேலிட்டதின் விளைவே, அமுதை யும் ஆரியச்சொல் என்ற வஞ்சத்தனமாகும். அமிர்தம் என்பது தேவருணவு என்றும், தேவருண்ணும் அவியுணவும், தேவன் என்ற சொல்லும் தமிழ்ச் சொற்களே என்பதையும் ஆரியர் அறியவில்லை. தொன்மைத் தமிழகத்தில் தேவர் வணக்க முறையும் இருந்ததில்லை. தமிழரை அசுரர் என்றும் தம்மைத் தேவர் என்றும் கூறிக்கொண்டு, பாற்கடலைக் கடைந்த கதை யொன்றையும் கூறினர்.

கடலையே பார்த்தறியாத ஆரியர், கடலைக் கடைந்து அமுது எடுத்த கதையில்,

அசுரரின் உதவியோடு, எடுக்கப்பட்ட அமுதை, அசுரர் களை ஏமாற்றிவிட்டு, தேவர்கள் அதனைக் கொண்டு போயினர். எஞ்சியிருந்த நஞ்சை, தமிழ்க் கடவுளான சிவனைக் குடிக்க வைத்தனர். இக்கதையில் சொல்லப்படும் மேருமலை, குமரிக் கண்டத்தில் இருந்ததே. பாம்பு தமிழர்கள் வழிபட்ட நாகர்களின் தெய்வமே. தமிழ்ச் சொற்களைத் தம் சொற்களாகத் திருடிச் சென்ற ஆரியரின் செயலுக்கு, இக்கதையும் கூட ஒரு உருவகமாக உள்ளது. மலை குறிஞ்சி நிலத்தையும், பாம்பு மருதநிலத்தையும்,

கடல் நெய்தல் நிலத்தையும் குறித்த உருவகங்களே. இத்தமிழ் நிலங்கள் கண்ட பண்பாட்டு நாகரிகத்தையே (அமுதையே) ஆரியர் எடுத்துக் கொண்டனர் என்ற செய்தியும் இக்கதையில் உள்ளது. பண்பாட்டு வளர்ச்சியால் ஏற்படும் சில தீமைகளும், நஞ்சு என்ற பொருளில், தமிழரிடமே விட்டுவிட்டு ஓடினர் என்றும் அறியலாம். நஞ்சுண்ட சிவன், தீமைகளையும் நல்லவை களாக மாற்றும் திறன் கொண்டிருந்தனர் என்பதை விளக்கும்.

பிறந்த குழந்தை வாயைத் திறந்தவுடன் அ என்ற ஒலியும், மூடும்போது ம் என்ற ஒலியும் இயற்கையில் பிறந்ததை யொட்டியே, அம்மா என்ற சொல் பிறந்தது. அம்மா, தண்மை யையும், குளிர்மையும், மேன்மையையும் கொண்டவள் என்பது பற்றியே, அம் என்ற தமிழ்ச் சொல்லுக்கு இப்பொருட்கள் அமைந்தன.

அம்[329] = தண்மை, அழகு, குளிர்மை. முகில், மேன்மை, உயர்வு
என்றவாறு விரியும்.

அம்-அம்மா = தண்மைகளின் ஊற்றானவள்.

அம்-அம்மம்[330] = தாயின் முலைக் காம்பு.
அம்மம் தரும் பாலும் அமுதம்.

அம்-அமிழ் = இன்பம், இனிமை. அம்-அமை - அம்மை = தாய்.

அம்-அமிழ்-உமிழ் = கொடுத்தல், வெளியேற்றுதல்,
பாலைச் சுருத்தல்.

பல் சுவையும் இனிமையும் கலந்ததே பால் எனப்பட்டது.
பல்-பால்.

அம் என்ற வேர்ச் சொல்லினின்றே அம்மா, அம்மம், அம்மை, அம்மு போன்ற சொற்கள் தோன்றின. அம்மு[331] = துணியால் மூடி வைக்கப்பட்டுள்ள குழந்தை. அமுதம் = குழந்தை யுண்ணும் பால். அம்மையே நமக்கு மொழியைக் கற்றுத் தந்த தால், மொழியையும் அமுதம் என்றோம். பாலும் மொழியும் அமுதம் எனப்பட்டன. அமிழ்து என்ற சொல்லே, தமிழ் என்று விரிந்ததாகவும் கூறுவர்.

---

329. சதுரகராதி, ப. 7.

330. வின்ஸ்லோ, அகரமுதலி, ப. 32.

331. மேலதே, ப. 33.

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ் – திருக்குறள்.[332]

அமிழ்து என்ற சொல்லை வள்ளுவரும் உரைத்தார் என்பதே அது தமிழ்ச் சொல் எனக் காட்டும். உரை எழுதிய ஆரியப் பிராமணர்கள், இவ்வாறான நஞ்சைக் கலந்து, தமிழ்ச் சொற்களை வடசொற்களாக்கினர். தம் மக்களின் சிறுகையினால் கலக்கப்பட்ட சோறு, பெற்றோர் பார்வையில், இனிமையினும் இனிமையானது என்று வள்ளுவர் கூறுகிறார். அமிழ்து = இனிமை யிலும் இனிமை (Sweater than the sweetest).

தன்போல்வார் இல்லுள் தயங்குநீர்த் தண்புறக்கை
என்போடு இயைந்த அமிழ்து – நாலடியார்.[333]

குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த நின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும் – சிலப்பதிகாரம்.[334]

அரும்பெற லமிழ்த மார்பத மாகப்
பெரும்பெய ருலகம் பெறீகியரோ வன்னை – குறுந்தொகை.[335]

கணைக்கால் ஆம்பல் அமித்தூநாறு தண்டபோது – நற்றிணை[336]

அமிழ்தம் என்ற தமிழ்ச் சொல்லை, ஆரியர் திறமையுடன் வடசொல்லாக்கிக் கொண்ட, சூதில் தமிழரும் மயங்கி நின்றனர். அமிழ்தம் நம் தாய்த்தமிழ்மொழிச் சொல்லே.

OOO

---

332. திருக்குறள், 64.

333. நாலடியார், 210.

334. சிலப்பதிகாரம், 2:58.

335. குறுந்தொகை, 83:1.

336. நற்றிணை, 30:3.

25

## அரசன்

குறிஞ்சி நிலத்தில் குடித்தலைமையும், முல்லை நிலத்தில் குழுத்தலைமையும், மருதநிலத்தில் குமுகாயத் தலைமையும் தோன்றின. மக்கள் கூட்டம் மருதநிலத்தில் பல்கிப் பெருகிய காலை, தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், தங்களுக்குள் ஏற்படும் பிணக்குகளைத் தீர்த்துக் கொள்ளவும், பகைவர்களிட மிருந்தும் படைஎடுப்புகளிலிருந்தும் பாதுகாவல் வேண்டியும், தங்களுக்குள் ஒரு தலைவனைத் தேர்ந்து கொண்டது. அவன் மன்னன், வேந்தன், அரசன் எனப்பட்டான். மன்பதையின் தலைவன் மன்னனாகவும், விண்திரையன் விந்திரன்-இந்திரன்-வேந்தன் என்றும் அழைக்கப்பட்டனர். மன்னனுக்குரிய முதற் கடமை பகையை ஒறுத்து அமைதியை நிலை நாட்டுவதே.

அரி எனும் சொல்லுக்கு ஒறு என்று பொருள்.

அரிதல் = ஒறுத்தல்.

அரிதல் = வெட்டுதல், துண்டித்தல், கொல்லுதல்,

அழித்தல் என்றவாறு பொருள் விரியும்.

அரி = கைப்பிடி கொள்ளும் அளவுள்ள, வெட்டப்பட்ட

(அ) அரியப்பட்ட நெற்கதிர்.

அரிதாள் =அரியப்பட்ட நெற்பயிரின் தாள்.

அரிவாள் = வெட்டும் வாள்.

அரிமா = கொல்லும் பண்புடைய விலங்கு.

அரிப்பு = நீரால் நிலம் அரியப்படுதல்.

அரா = கொல்லம் தன்மை கொண்ட பாம்பு.

அரம் - இரும்பை சிதைக்கும், கூராக்கும் கருவி.

அரன் = ஒறுப்பவன், ஒறுக்கும் தலைவன்.

அரி என்ற தொழிலைச் செய்தவன் அரியன் எனப்பட்டான். அரன் எனவும் சொல்லப்பட்டான். ஆரியர்கள், அரன் என்ற தமிழ்ச்சொல்லை, ஹரி என்றும், ஹரன் என்றும் திரித்துச் சொல்லி, அதனை விஷ்ணுவுக்கு ஏற்றி வைத்தனர். அரன், அரியன் என்ற தமிழ்ச் சொற்களே அரையன் என்றும் அரசன் என்றும் நீண்டன.

அரையன்-அரைசன்-அரசன் என விரிந்ததாகப் பாவாணர் விளக்குகிறார்.[337]

உரம் என்ற சொல் வலிமையைக் குறிப்பது எனவும், உரவு-உரவன்-அரவன்-அரசன் என்றவாறும், வலிமையுள்ளவன், தலைவன், ஆள்பவன் என்றும் விளக்குகிறார்.

அரசன்-அரையன் என்ற தமிழ்ச்சொல், கன்னடத்தில் ராயர் என்றும், தெலுங்கில் ராயலு-ராயடு என்றும், மராட்டியத்தில் ராவ் என்றும், வங்கத்தில் ராய் என்றும் வடமொழியில் ராஜன் என்றும் திரிந்தது.

அர்ச்சோன் (Archon) என்றும், அர்ச் (Arch) என்றும் கிரேக்கத்திலும் இலத்தீனிலும் சொல்லப்பட்டவைகளும் அரையனின் திரிபுகளே. ரெக்ஸ் (Rex) என்ற ஆங்கிலச் சொல்லும், Regis என்ற இலத்தீன் சொல்லும் மன்னனைக் குறித்தனவே. Regis ஆண்பால் Regina பெண்பால், அரசி எனப்படும். மேற் சொல்லப்பட்டவைகள் யாவும் அரையனின் திரிபுகளே.

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு — திருக்குறள்[338]

முறையுடை யரசன் செங்கோ லவையத்து — குறுந்தொகை[339]

மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார் — நாலடியார்[340]

அரசுபகை நுவலும் அருமுனை இயவின் — நற்றிணை[341]

---

337. தமிழர் வரலாறு, பாவாணர், ப. 266.

338. திருக்குறள், 381:2.

339. குறுந்தொகை, 276:5.

340. நாலடியார், 134:2.

341. நற்றிணை, 346:3.

அரசவையைப் பற்றிப் பதிற்றுப்பத்தும்,[342] அரசியல் பற்றி மதுரைக்காஞ்சியும்,[343] அரசிளங் குமரன் பற்றி மணிமேகலையும்,[344] அரசு பற்றி ஆசாரக்கோவை,[345] ஐங்குறுநூறு,[346] ஏலாதி[347] போன்ற நூற்களும் கூறுகின்றன. அரசன் தமிழ்ச் சொல்லே என அறிதல் வேண்டும்.

## அவை

சபை, சபா என்ற வடமொழிச் சொல்லினின்றே அவை என்ற சொல், தமிழில் எடுத்துக் கொள்ளப்பட்டதாகக் கூறப் படுகிறது. டாக்டர் உ.வே.சா. அவர்களும், அவை என்பது தமிழ்ச் சொல் அன்று எனக் கோடிட்டுக் காட்டியதைப் பற்றிக் கொண்டு, சில ஆண்டுகளுக்கு முன், ஆனந்தவிகடன் இதழில், அறிவியல் கேள்விகளுக்கு விடைசொல்லும் எழுத்தாளர் ஒருவர், அவை-சட்டமன்றப் பேரவை என்பதெல்லாம் கூட, தமிழ்ச் சொற்கள் அல்லவென்று எழுதினார். சபை, சபா என்ற வட மொழிச் சொல்லுக்கான வேர்ச் சொல்லையோ, வடமொழியின் மூலத்தையோ அவர் குறிப்பிடவில்லை. டாக்டர் உ.வே.சா. அவர்கள் கூட, அவை தமிழ்ச் சொல்தானா என்பதில் ஐயப்பாடு உள்ளதாகவே குறிப்பிடுகிறார்.

அது என்ற சொல் ஒருமையைக் குறிக்கும். அவை என்பது பன்மைச் சொல்லாகும். பலர், பல் பொருட்கள் என ஒரு கூட்டத்தைக் குறிப்பதாகவே அவை என்ற சொல் பயன்படுகிறது.

அவை-அவையம்=கூட்டம், பலர் கூடுதல்,
ஒன்றுசேர்தல், குவிதல் என விரியும்.
அவை=பலர் கூடுமிடம், புலவர் குழு. அவை-அவையல்= திரட்சி.
அவை=பல் பொருளை ஓரிடத்தில் நெறித்தல்-நெல்லைக் குத்துதல்.
அவை-அவி=பல்பொருளை ஒன்றாக்கி வேகவைத்தல்.
அவை-அவி-அவிழ்=ஒன்றைப் பலவாக விரித்தல்.

---

342. பதிற்றுப்பத்து, 85:9.
343. மதுரைக்காஞ்சி, 191.
344. மணிமேகலை, 4:47:95.
345. ஆசாரக்கோவை, 84:1.
346. ஐங்குறுநூறு, 8:2.
347. ஏலாதி, 426:4.

அ+வை= வைத்தல், கூட்டாக, குவியலாக வைக்கப்படுபவை என்ற பொருளில் அ=எட்டு, எண்திசை. வை=குவிப்பு. எண் திசையின் மக்களும் கூடும் கூட்டம். அவை=பல்வேறு திசையி னின்றும் வரும் புலவர் கூட்டம், அறிஞர் கூட்டம். அவை என்ற சொல்லே, சவை என்றும் சபை-சபா என்றும் திரிந்ததாக, சொல்லியல் அறிஞர் அருளி விளக்குகிறார். அவை என்ற சொல்லே, சவே என்று மேனாட்டு மொழிகளில் சொல்லப் பட்டு சோவியத் என்றும் திரிந்ததாகக் கூறுகிறார்.

**அவையடக்கியலே, அரில்தபத் தெரியின் —தொல்காப்பியம்**

அவையடக்கம்[348] என்ற தலைப்பில் தொல்காப்பியர், அவை என்ற சொல்லைப் பயன்படுத்தினார்.

**அவையறிந் தாராய்ந்து சொல்லுக – திருக்குறள்**

**ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா – திருக்குறள்**

திருவள்ளுவரும் அவையறிதல்,[349] அவையஞ்சாமை[350] என்ற தலைப்புகளில், அவை என்ற சொல்லைப் பன்முறைப் பயன் படுத்துகிறார். அவைக்களம்[351] பற்றிப் புறநானூறும், அவையத் தார்[352] பற்றிக் கலித்தொகையும் விளக்குகின்றன. அவை, புலவர் கூட்டமென்றும்,[353] அவையல், திரட்சி[354] என்றும் தமிழ் அகர முதலிகள் கூறுகின்றன.

அவை, மன்றம் என்ற சொல்லாலும் விளக்கப்பட்டுள்ளது. மன்மத-மக்கள். மன்றம்=மக்கள் கூடுமிடம். மன்றல்=கூட்டு, இணைப்பு, பொருந்துதல். மன்றல்=ஆணும் பெண்ணும் கூடும் திருமணம். மன்று, மன்றம் = அவை. மன்னன் = மன்றத்தின் தலைவன்.

**மன்றல் கறங்க மணப்பறை யாயின – நாலடியார்[355]**

---

348. தொல்காப்பியம், பொருள். 1370.

349. திருக்குறள், தலைப்பு 72.

350. மேலதே, தலைப்பு 73.

351. புறநானூறு, 283:6, சிலப்பதிகாரம், 30:193.

352. கலித்தொகை, 94:42.

353. சதுரகராதி, ப. 7.

354. மேலதே, ப. 7.

355. நாலடியார், 23:1.

புலம்புகட் டுண்ணும் புல்லென் மன்றத்து — நற்றிணை[356]

அவை, மன்றம் போன்றே கழகம் என்பதும் பலர் கூடுமிடத்தைக் குறிப்பதுவே. கல்-கலத்தல் என்ற வேர்ச்சொல்லினின்றே கழகம் என்ற சொல் நீண்டதாகப் பாவாணர் குறிப்பிடுகிறார்.

கல்-கல-கள-களகு-கழகு-கழகம் என்றவாறு.

ஆரியச் சார்பாளர்கள், குறைகாண வேண்டும் என்ற தீய நோக்கில், கழகம் என்பது சூதாடுமிடம், தீயவர்களின் கூட்டம் என்று, திருக்குறளை மேற்கோள் காட்டிக் கூறுவர். இது, சொல்லின் ஆழம் தெரியாதவர்களால், அரசியலுக்காகச் சொல்லப்படும் உண்மையற்ற செய்தியாகும். கழகம் என்பது மக்கள் கூடுமிடம் என்ற பொருளில் சொல்லப்பட்டது.

பழகிய செல்வமும் பண்புல் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின் — திருக்குறள்[357]

மேலும் ஆசாரக்கோவை, கலித்தொகை ஆகிய நூல்களையும் காட்டுவர்.

கடவுள், கழகத்தில் அமர்ந்து ஆய்வு செய்ததாகத் திருவிளையாடற்புராணம் கூறுவது, கழகம் என்பது கூட்டம் என்ற பொருளையே உணர்த்தும்.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழக மோடமர்ந்து.[358]

அவை என்பது தனித்தமிழ்ச் சொல்லே என அறிதல் வேண்டும்.

○○○

356. நற்றிணை, 33:3.

357. திருக்குறள், 937.

358. திருவிளையாடற் புராணம், திருநாள். 56.

26

## ஆரியர்

வேதங்களில் தங்களை ஆரியர் என அழைத்துக் கொண்டதற்கான சான்றுகள் ஓரிரண்டே காணப்படுகின்றன. இரிக்கு வேதம் முதல் அஷ்டகத்தில், 41ஆவது சூத்தத்தில் ஆர்யமா என்ற சொல் காணப்படுகிறது.[359] இச்சொல்லும் தேவர்களைப் பற்றிய சொல்லாகவே தெரியவருகிறது. தங்களை ஆரியர் என்ற பெயரால், வேதங்களில் அவர்கள் காட்டிக் கொள்ளவில்லை. தங்களை எஜமான் என்ற சொல்லாலேயே அழைத்துக் கொள்கின்றனர்.[360] பிராமணன் என்ற சொல்லும் இடம்பெற்றுள்ளது. பிராமணஸ்பதி[361] என்ற சொல்லும், பிரம்மாவைக் குறித்துச் சொல்லப்பட்டதாகத் தெரியவில்லை. பிற்காலத்திலேயே பிரம்மா என்ற சொல் இணைக்கப்பட்டது. தொடக்கத்தில் ஆரியர்களுக்கு என்ன பெயர் இருந்தது என்பதற்கானச் சான்றுகள் இல்லை. சிந்து வெளியில் அவர்கள் தங்கியிருந்த காலத்தில், ஆரியர்களின் சிவந்த நிறம், உயர்ந்த உருவம் இவைகளைக் கண்ட சிந்து வெளித் தமிழர்களே, அவர்களுக்கு ஆரியர் என்ற தமிழ்ப்பெயரைச் சூட்டியிருக்க வேண்டும். சிந்துவெளித் தமிழ்ப் பெயரான ஆரியர் என்ற முகவரியுடன் தான் அவர்கள் தமிழகத்துக்குள்ளும் நுழைந்திருக்க வேண்டும். ஆரியர் என்ற சொல்லைத் தமிழ்நாட்டுத் தமிழர்களும் ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும். ஏனெனில், ஆரியம் என்ற சொல்லுக்கான மூலச் சொல், வடமொழியில் இல்லை என்பது தெளிவு. ஆர்யா என்ற சொல்லை சுற்றிவளைத்துக் கொண்டுவந்து, அதற்கான பொருளை மாக்சு முல்லர் கொடுக்க முயன்றார்.

---

359. ரிக்வேத சம்ஹிதை, ப. 546.

360. மேலதே, பல இடங்களில்.

361. மேலதே.

“ஆரியம் தமிழின் இருமடித் திரிபாதலாலும், சமற்கிருதச் சொற்களின் ஐந்திலிருபகுதி தமிழாதலாலும் (40%) வடமொழி யாளர்க்கு ஆரியர் என்னும் பெயர் இந்தியாவிலேயே, அவர் தமிழரோடு தொடர்பு கொண்ட பின்னரே ஏற்பட்டதானாலும், ஆரியன் என்ற சொற்கு மூலம் தமிழிலேயே ஆய்ந்து காணல் வேண்டும்” என்று பாவாணர் கூறுகிறார்.[362]

ஆர்[363] என்னும் தமிழ்ச் சொல்லுக்கு, சிவந்த-உயர்ந்த
என்ற இருபொருளும் உண்டு.

ஆர்-ஆரல்=சிவந்த கதிர்களையுடைய கதிரவன்.

ஆர்-ஆரல்=எப்போதும் சிவந்து காணப்படும் செவ்வாய்க் கோள்.

ஆர்-ஆரல்=கார்த்திக் கூட்டம். கார்த்திகை மீன்.

ஆர்-அர-அரக்கு=சிவந்த மெழுகு. ஆர்-அரத்தம்=செங்குருதி.

பொதுவாகச் சிவந்த நிறமுடைய விண்மீன்களை ஆரல் என்றே தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன.

மணிமிடற் றண்ணற்கு மதிஆரல் பிறந்தோய் நீ — பரிபாடல்[364]

ஆரல் என்பது, கார்த்திகையைக் குறிக்கும் என்று கலித்தொகையும்[365] கூறுகிறது.

மேற்கண்ட சொற்கள், ஆர் எனும் வேர்ச்சொல்லினின்றும் சிவந்த என்ற பொருளைத் தந்தன. இனி, ஆர் எனும் வேர்ச் சொல், உயர்ந்த என்ற பொருளையும் குறித்தது என்பதையும் அறியலாம்.

ஆர்-ஆரல்-ஆரல் சுவர் = உயர்ந்த மதிற்சுவர் மற்றும் விண்வெளி, சுவர் என்பது விண்வெளியையும் குறிக்கும். சுவர்த்தீ என்பதே சுவாதி என்றும் சோதி என்றும் வடமொழியில் திரிந்தது.

ஆர்-ஆரிடம் = முனிவர்கள் ஓகம் செய்யும் மலைமுகடு.

ஆர்-அர்-அரண் = உயர்ந்த சுவர். பாதுகாப்புச் சுவர்.

ஆர்=மிக உயர்ந்து வளரும் காட்டு ஆத்தி மரம்.[366]

---

362. தமிழர் வரலாறு, பாவாணர், ப. 203.

363. மணிமேகலை, 4:50.

364. பரிபாடல், 9:7.

365. கலித்தொகை, 64:4.

366. அகநானூறு, 269:10.

ஆர்புனை தெரியலும் அலர்தார் வேம்பும் – சிலப்பதிகாரம்.[367]

ஆர்-ஆரம்=நீண்டு தொங்கும் மாலை.

பாரத்து அன்ன ஆர மார்பில் – நற்றிணை[368]

ஆர்-ஆர்த்த = உயர்ந்த, நிறைந்த, மேலான.

ஆர்த்த அறிவினர் ஆண்டினையர் ஆயினும் – நாலடியார்[369]

பிற்காலத்தில் வடபுலத்து மன்னர்களையும், அவர் ஆரிய ரல்லாராயினும் அவரையும் ஆரியர் என்றே தமிழர் அழைத்தனர். ஆரியப் பொருநன்[370] என்ற ஆரியப் புலவன் பற்றிய செய்தியை அகநானூறு தெரிவிக்கின்றது. தமிழ் மன்னர்களுக்கும் வட புலத்து ஆரிய மன்னர்களுக்கும் நீடித்த பகைமை நிலவியதாக நற்றிணை கூறுகிறது.[371] மலையமானின் வடபுலத்து வெற்றியைப் பற்றியும் நற்றிணை[372] கூற, ஆரிய வேந்தர்கள் பற்றிய செய்தியை பதிற்றுப்பத்து விளக்குகிறது.[373] ஆரியர் என்பதற்கு முனிவர்கள் என்ற பொருளை உ.வே.சா. கூறியதாக, ந. சுப்பிரமணியன் கூறுகிறார்.[374] சிவந்த உடலும், உயர்ந்த உருவகமும் கொண்ட வரை, ஆரியர் என்ற பெயரால் தமிழரே அழைத்தனர் என்பதும், ஆரியன் தமிழ்ச்சொல்லே என்பதும் தெளிவாகும்.

○○○

---

367. சிலப்பதிகாரம், 26:19.

368. நற்றிணை, 265:5.

369. நாலடியார், 351:1.

370. அகநானூறு, 386.

371. நற்றிணை, 170:6.

372. மேலதே.

373. பதிற்றுப்பத்து, 11: பதிகம் 7.

374. Pre. Pallavan Tamil Index, p. 91.

27

# இமையம்

இம் என்ற வடசொல்லுக்குப் பனித்துளி என்று பொருளாகும். அச்சலம் என்பது மலையாகும். இம்+அச்சலம்= இமாச்சலம் என்பது பனிமலையைக் குறித்த வடசொல்லாகும். இதன் வழியே, வேங்கடம்+அச்சலம்=வேங்கடாச்சலம் எனப் பட்டது. வேங்கை மரங்கள் சூழ்ந்த இடம், வேங்கையிடம்-வேங்கடம் எனத் திரிந்ததாகவும் கூறுவர். அதுபோன்றே விருத்தம் + அச்சலம் = விருத்தாச்சலம் (முதுமலை, பழமலை), அருணம் + அச்சலம் = அருணாச்சலம் (தீ மலை), சோணம்+ அச்சலம் = சோணாச்சலம் (சோணன் = சிவன் அல்லது தீ) என்றும் கூறப்பட்டன. இவையாவும் தொன்மைக்காலத்தில் தமிழ்ப் பெயரைக் கொண்டிருந்து ஆரியர்களால் வடமொழியில் மாற்றம் செய்யப்பட்ட ஊர்களாகும்.

சிமையம் என்ற தமிழ்ச்சொல்லே, இமையம் என்று திரிந்ததாகவும் கூறுவர். ஓலைச்சுவடிகளைப் படி எடுத்தவர்கள், சி என்ற எழுத்தைத் தவறாகக் கருதி இ என்று எழுதிவிட்டதால், சிமையம்-இமையமாயிற்று என்றும் கூறுவர். நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில் சிமையம் என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளதாகவும் கூறுவர்.

**நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை**

**– திருமுருகாற்றுப்படை**[375]

சிமை என்ற சொல் உயர்வு, மூப்பு என்ற பொருளில் சொல்லப்படுகின்றது.

சிமை=தலை. தலையில் உள்ள சுமைதாங்கும் துணி, சிம்மாடு-சும்மாடு.

---

375. திருமுருகாற்றுப்படை, 253.

உருவ முச்சூழ் சேட்சிமை யுயர்ந்தவ ருடமபட — பரிபாடல்[376]

தேனோர் சிமைய மலையி னிழிதந்து — பரிபாடல் திரட்டு[371]

சிமைய மலை எனும் சொல் இங்கே சொல்லப்பட்டுள்ள தைக் காண்க.

கணங்கொள் சிமைய வணங்குங் கானல் — குறுந்தொகை[378]

சிமையம், மலையின் உயர்ந்த இடமாகச் சொல்லப்பட் டுள்ளது. இமையம் என்ற வடசொல், சிமையம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே எனக் கரணியங்கள் உள்ளன.

ஆரியர்கள் சொல்லுகின்ற விளக்கம், உயர்ந்த என்ற பொருளில் அல்லாது பனி என்ற பொருளில் உரைத்தனர். இம் என்ற வடசொல் பனியை, பனித்துளியைக் குறித்தது.

இம் என்ற தமிழ் வேர்ச்சொல், மிகச்சிறிய என்ற பொருளைத் தரும் இம்மி என்ற சொல்லுக்கு மூலமானது. இம்மி=மிகச்சிறிய பொருள்.[379]

இம்-இமை-இமைத்தல் = குறுகிய கால இடைவெளியில் ஒளிர்தல்.

வான மீனின் வயின்வயி னிமைக்கும் — குறுந்தொகை[380]

மின்னல் மிகக் குறுகிய காலத்தில் ஒளிர்விட்டு மறைவது, இமைத்தல் என்பது குறுகிய, சிறிய அளவிலான காலத்தைக் குறிப்பது.

தண்குர லெழிலி பொன்சுட ரிமைப்ப — குறுந்தொகை.[381]

இமிழ்வது போன்றதிந் நீர்குணக்குச் சான்றீர் — பரிபாடல் திரட்டு[382]

இம்-இமிழ்=நீர்துளிகள். இம், இம்மி, இமம் ஆகியவை மிகச்சிறு அளவினைக் குறித்தப் பொதுச் சொல்லாகி, நீர், பனி ஆகியவற்றைக் குறித்த சிறப்புச் சொல்லாகியது. இம் என்ற தமிழ்

---

376. பரிபாடல், 9:3.

377. பரிபாடல் திரட்டு, 1:2.

378. குறுந்தொகை, 372:3.

379. வின்ஸ்லோ, அகரமுதலி, ப. 89.

380. குறுந்தொகை, 150:2.

381. மேலதே, 314:2.

382. பரிபாடல் திரட்டு, 2:82.

சொல்லே, இம் என்று வடமொழியிலும் சொல்லப்பட்டு, பனித்துளியைக் குறித்ததால், இமை"ம் என்று வடமொழியில் சொன்னாலும், அதுவும் தமிழ்ச் சொல்லே.

செல் என்ற தமிழ்ச்சொல், செல்லுதல்-நகர்தல் என்ற பொருளில் சொல்லப்பட்டுள்ளது. உயிரற்ற பொருட்களில், கண்ணுக்குத் தெரியாத காற்றும், தெரிந்த நீரும் அடங்கும். செல்லும் நீரே, சல சல என்றும் சொல்லப்பட்டது. செல்-சல்-சல் என்றவாறு என்க. செல் என்ற தமிழ்ச்சொல்லே, ஜல் என்று வடமொழியில் நீரைக் குறித்தது. ஜல்-ஜலம் என்றவாறும் நீண்டது. செல்-நகர்வது. அசெல் என்பது வடமொழிப் பொருளில் அசையாமை, செல்லா நிலைமை எனப்பட்டது. செல்லுக்கு எதிர்ச்சொல் அசெல். அசெல் என்பது செல்லாதது, நகராதது என்ற பொருளில் மலையைக் குறித்தது. அச்சல் (Achal) என்ற வடமொழிச் சொல், செல் என்ற தமிழ் மூலத்தினின்றும் திரிந்ததே. நீரைக்குறித்தல் ஜல் என்ற சொல்லும், மலையைக் குறித்த அச்செல் என்ற சொல்லும், தமிழினின்றும் திரிந்தவைகளே. மறைமலையடிகள், சலசலவென்று ஓடிய நீர், வடமொழியில் ஜலம் எனப்பட்டதாகக் குறிப்பிடுவார்.

இமாச்சல் என்ற வடசொல், தமிழ்ச் சொல்லின் திரிபே. இமயமலையை மேரு மலையென்றும்,[383] அதுவே ஞாலத்தின் நடுப்பகுதி என்றும், ஆரியத் தொன்மங்கள் கூறுவதைப் பரிபாடல், இமயக்குன்றம்[384] என்றும் மேலும் கூறுகிறது. இமயத்தில் வாழ்ந்த ஆரிய முனிவர்களை, இமயத் தாபதர்[385] என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இமயத் தொடரை இமய மால்வரை[386] என்றும் கூறுகிறது. சேரலாதனுக்கு இமயவரம்பன்[387] என்ற பெயர் இருந்ததையும் அறியலாம். ஆரிய வேதங்கள், தேவர்களை இமயவர்[388] என்றே கூறுகின்றன. சிவனும் கூட இமையவன்[389] என்றே அழைக்கப்பட்டான்.

○○○

---

383. மேலதே, 1:77.

384. பரிபாடல், 8:12-13.

385. சிலப்பதிகாரம், 26:9.

386. மேலதே, 29. உரைப்பாட்டு.

387. மேலதே, 36:3.

388. ஏலாதி, 36:3.

389. சிலப்பதிகாரம், 6:43.

28

## உலகம்

லோக் (Lok) என்னும் வடமொழிச் சொல்லினின்றே, உலகம் என்ற தமிழ்ச் சொல் தோன்றியதாக, வடமொழியார் கூறி வருகின்றனர். உலகம் தட்டை வடிவமானது என்றும், உலகின் ஒரு குறிப்பிட்ட விளிம்புவரை சென்றுவிட்டால், பிறகு கீழே விழுந்து விடுவோம் என்றும், கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரை, ஐரோப்பியர் நம்பிக் கொண்டிருந்தனர். உலகம் தட்டை யானதல்லவென்றும், உருண்டை வடிவமானது என்றும், அது சுழன்று கொண்டேயுள்ளது என்றும், அதே நூற்றாண்டில் வாழ்ந்திருந்த கலிலியோ என்ற இத்தாலிய வானியல் அறிஞர் கூறினார். உலகம் உருண்டை வடிவமானது என்பது 500 ஆண்டு கட்கு முன்புதான் மக்களுக்குத் தெரியவந்த நிலையில், பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே, உலகம் உருண்டை வடிவமானது என்பதைத் தமிழ்க் கணியன் சொல்லிவைத்தான். உலகம் என்ற சொல்லுக்கு, உருண்டை என்றே தமிழில் பொருளாகும்.

உல் என்னும் வேர்ச் சொல்லிணின்றே உலகு என்ற சொல் பிறந்ததாகப் பாவாணர் கூறுகிறார். உல்-உலகு-உலகம் = சுற்றி வரும் கோளவடிவம். இச்சொல்லின் பொருள் வடமொழியாளர் களுக்கே புரியாமல், உலகு என்ற சொல்லை, லோக் என்று திரித்துக் கொண்டனர். லோக் என்ற வடசொல்லுக்கு, அவர்கள் மொழியில் மூலமும் இல்லை, வேர்ச்சொல்லும் இல்லை என்பதும் அவர்களுக்குப் புரிந்திருக்கவில்லை. உல் என்ற வேர்ச் சொல்லினின்றும் தோன்றிய எண்ணற்ற சொற்கள் தமிழில் உள்ளன.

உல் = திரண்டிருக்கும் பொருள், திரட்சியுடைய தேங்காய்.

உல்லு = தேங்காயைத்துருவும் கருவி. அல்லது கழு.

உல்லம் = திரண்டு கொழுத்த ஒரு வகையான மீன்.

உல்லியர் = தேங்காயைத் துருவுவது போல், நிலத்தைத் துருவிப் பார்த்து நீரைக் கண்டுபிடிக்கும் மக்கள் (Water diviners)

உலா, உலவு = சுற்றி வருதல்.

உலவை = உலகைச் சூழ்ந்து சற்றிவரும் காற்று. வட்டமான வடிவில் உள்ள ஊர். மரத்தைச் சுற்றிப் பற்றிக் கொள்ளும் கொடி. மரத்தில் உள்ள வட்டவடிவமான ஓட்டை அல்லது பொந்து. சிறுவர்களின் விளையாட்டுப் பொருளான பந்து போன்றுள்ள கிலு கிலுப்பை. இவையனைத்தும் வட்ட கோளவடிவங்களைக் கொண்டுள்ளதை நோக்குக.

உலம் = குண்டுக்கல், திரட்சியான கல், கூழாங்கல்.

உலக்கை = வட்ட வடிவ பக்கங்களைக் கொண்ட
நெல்குத்தும் மரத்தடி.

உலை = வட் ட வடிவமான அடுப்பு = வட்டவாயுள்ள கலம்.

உலொட்டி (தெலுங்குச் சொல்) = கள் குடித்தபின் அங்கு மிங்கும் சுற்றிவருபவன். மேற்கண்ட சொற்கள் யாவும், வட்ட கோள வடிவங்களைக் காட்டும் தமிழ்ச்சொற்களே. உல் என்றும் தமிழ்ச் சொல்லுக்கு, வட்ட, கோள, உள்ளீடு இல்லாத, திரண்ட எனும் பொருள் விரியும்.

நனந்தலை யுலகமும் துஞ்சும் – குறுந்தொகை.[390]

நீரின் றமையா வுகலம் போல் – நற்றிணை.[391]

மூவே ருலகமு முலகினுண் மன்பதும் – பரிபாடல்.[392]

விரிகதிர் பரப்பி உலகமுழு தாண்ட – சிலப்பதிகாரம்.[393]

கெடுக உலகியற்றி யான் – திருக்குறள்.[394]

உலகு என்ற சொல்லை முதற்சொல்லாகக் கொண்டே, பெரும்பாலான இலக்கியங்கள் தொடங்கப்பட்டுள்ளன என்பது ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. உலகு என்பது வடசொல்

390. குறுந்தொகை, 6:3.

391. நற்றிணை, 1:6.

392. பரிபாடல், 3:9.

393. சிலப்பதிகாரம், 4:1.

394. திருக்குறள், 1062.

லாயின், இச்சொல்லைத் தமிழ்ப் புலவர்கள் முன்னிறுத்தியிருக்க மாட்டார். திருவள்ளுவர் உலகு என்ற சொல்லைப் பயன்படுத்தி யிருப்பதால், அது தமிழ்ச் சொல்லே எனத் தெளியலாம். உல் என்ற தமிழ் வேர்ச் செல்லினின்றே, உல்டு - வெர்ல்டு (world) என்ற ஆங்கிலச் சொல்லும் திரிந்துள்ளது world என்ற சொல் லுக்கு ஆங்கிலத்தில் வேர்ச்சொல் இல்லை.

ஞாலம் என்ற தமிழ்ச்சொல்லும் உலகைக் குறித்தது. ஞாலுதல் என்றால், தொங்குதல் என்றே பொருள்படும். இந்த உலகம் எந்தப்பிடிப்பும் இன்றித் தொங்கிக் கொண்டிருக்கிறது என்ற அறிவியல் விளக்கம் தரும் சொல்லாகவே ஞாலம் என்ற சொல் உள்ளது. ஞாண்டு கொண்டான் என்றால், நாண்டு கொண்டான், தூக்கில் தொங்கினான் என்ற பொருளாகும். ஞாயிறு - நாயிறு என்றானது போல், ஞான்று - ஞாண்டு நாண்டு எனத் திரிந்தது.

ooo

29

## கடிகை

ஒரு நாழிகையைக் குறிக்கும் தமிழ்ச் சொல்லாகும். நாளின் 60 நாழிகைகள், தற்கால வழக்கில் 24 மணி (hours)கள் எனப்படும். எனவே ஒரு நாழிகை என்பது 24 நிமயங்கள் (minutes) எனக் கொள்ளலாம்[395] நேரத்தையும் காலத்தையும் குறித்த கடிகா (Gadika) என்ற வடசொல்லினின்றே, கடிகை என்ற தமிழ்ச்சொல் பிறந்ததாகக் கூறினர். கடிகை என்ற சொல்லுக்கான வேரும் மூலமும் தமிழில் உள்ளதை வடமொழிச்சார்பாளர்கள் அறிந் திருக்கவில்லை.

**காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன**
**வாலெயி றூறிய வசையி றிநீர்** — **குறுந்தொகை.**[396]

தலைவியின் வாயில் ஊறிய நீர், தலைவனுக்குக் கரும்பின் அடித்துண்டம் போல் இனித்தது. கடிகை என்ற சொல், துண்டு - பகுதி - சிறுபகுதி என்ற பொருளில், கரும்புத் துண்டை விளக்கு கிறது. காலெறி கடிகை = கரும்புத்துண்டு. ஒரு பொருளின் உடைந்த, சிதைந்த, பிரிந்த துண்டுகளைக் கடிகை என்ற சொல் லால் தமிழர் அழைத்தனர். இக்கரும்புத் துண்டு பாடலை எழுதிய ஆசிரியர் யாவர் எனத் தெரியாததால், காலெறிக் கடிகையார் என்றே சொல்லப்பட்டார்.

வெல்லக்கட்டியைக் கடித்தால் உதிரும் துண்டுக்கும் கடி என்றே பொருளாகும். கடித்தல் என்ற வினைச் சொல், கடித்ததி னால் உடைந்த பொருளுக்கும் சொல்லப்பட்டது கடி - கடித்தல் என்பது தமிழரின் வழக்குச் சொல்லாகும். விலையுயர்ந்த கற்களின்

---

395. சிலப்பதிகாரம், 27:9.

396. குறுந்தொகை, 267:3.

சிறு துண்டுகளை (gems)க் கடிகை என்று நான்மணிக்கடிகை கூறுகிறது. இது ஒரு அறிவுரை கூறும் நூலாகும். விளம்பி நாகனார் எழுதியது. நெறிகளை, சிறு சிறு பகுதிகளாகப் பிரித்து, அவைகளை அறிவுரைகள் போல் வழங்கியதால் அதற்கு நான்மணிக்கடிகை என்று பெயரிடப்பட்டது. கடிகை = சிறு சிறு பகுதிகளாகக் கற்பித்தல், அல்லது அறிவுறுத்துதல். இதனை Didasko என்ற கிரேக்கம் கூறுகிறது. didactic என்று ஆங்கிலத்தில் திரித்துள்ளது. இச்சொல்லும் கூட கடிகை என்ற ஒலிப்பின் ஒற்றுமையைப் பெற்றுள்ளதை நோக்குக.

துண்டுகளான அனைத்துப் பொருட்களையுமே கடிகை என்று குறிப்பிடுவது தமிழ் மரபு. துண்டுக் கயிற்றையும் கடிகை என நெடுநல்வாடை[397] குறிப்பிடுகிறது. இரப்போரின் கையிலுள்ள கலத்தையும் கடிகை யென்று நாலடியார் கூறுகிறது.[398] கடி என்ற சொல்லின் நீட்சியே கடுக்கை (கொன்றை) என்ற சொல் லாகும்.[399] மிகச் சறிய பொருள் என விளங்கும்.

சிறு பகுதி என்று அறியப்பட்டதால், ஒரு நாளின் நாழிகை களும், அவை நாளின் சிறுபகுதிகளாயிருந்ததால், கடிகை எனப்பட்டன. இந்நாழிகைகளை அறிந்து அறிவிக்கும் கணக்கர் களைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

நாழிகைக் கணக்கர் நலம்பெற கண்ணுளர் – சிலப்பதிகாரம்.[400]

யாண்டும் மதியும் நாளும் கடிகையும் – சிலப்பதிகாரம்.[401]

துயம் புகூஉந் தவசி கடிஞைபோல் – நாலடியார்.[402]

கள் - களம் = நிலத்தின் ஒரு சிறு பகுதி.
கள் - களவு = செல்வத்தில் சிறுபகுதி எடுத்துக் கொள்ளப் படுதல்.
கள்ளுதல் என்பதற்குத் துண்டாக்குதல், பிரித்தல் என்றே பொருளாகும்.

---

397. நெடுநல்வாடை, 142.
398. நாலடியார், 99:3.
399. அகநானூறு, 393:15.
400. சிலப்பதிகாரம், 5:49.
401. மேலதே, 27:9.
402. நாலடியார், 99:3.

கள் - களை - களைதல் = பகுதிகளை அப்புறப்படுத்துதல்.

கள் - களி - கடி - கடித்தல் = துண்டாக்குதல்

கடி - கடிகை = ஒன்றிலிருந்து பிரிக்கப்பட்ட உறுப்பு.

கடி - கட்டி = ஒரு சிறு துண்டு.

உடலில் ஒரு பகுதியில் தோன்றும் புண்.

கடி - கட - கடாவு = ஒரு பகுதியை வீசி எறிதல்.

கடி - கடுப்பை = வெண்கடுகு. கடி - கடுக்கன் = சிறிய காதணி.

கள்ளி = வெட்டி நடப்படும் வேலி.

கடை[403] = சிறு சிறு பொருட்களை விற்கும் அங்காடி

கடி - கடிகை என்பது சிறு பகுதிகளைக் குறித்த தமிழ்ச் சொல், நாளின் சிறு பகுதியாகிய நாழிகைக்கும் சொல்லப் பட்டது. ஆனால் வடமொழியில், நாளின் பகுதிகளை மட்டுமே விளக்கும் வகையில் கூறியுள்ளனர்.

கடிகை + ஆரம் = கடியாரம், கடிகாரம் எனப்பட்டது.

கடிகாரம் தமிழ்ச்சொல்லே.

கடிகை = நேரிசை வெண்பாவின் ஒருபகுதி.

எனவே, கடிகை என்ற தமிழ்ச் சொல்லையே, வடமொழி யில் கடிகா எனத் திரித்துக் கொண்டனர் என்பது தெளிவு.

**கலாவம்**

கலாப என்னும் வடசொல், மயிலையும் மயில் தோகை யையும் குறித்துச் சொல்லப்பட்டதாக வடமொழியாளர் கூறு கின்றனர். மயில் என்து, வெப்ப நாடுகளில் உள்ள மலைப் பகுதிகளில் வாழும் பறவையினமாகும். அதுபற்றியே குறிஞ்சி நிலத்தலைவன் முருகனோடு மயில் இணைத்துக் கூறப்பட்டது. கலாப என்ற வடசொல்லையே தமிழ் கடன் பெற்றுக் கலாவம் எனக் கூறிக் கொண்டதாக வடமொழியாளர் கூறிக் கூறுவது, மயிலையே இந்தியாவுக்குள் நுழையுமுன்பு பார்த்தறியாத ஆரியர்க்கு, மயிலைப் பற்றிய சொல், அவர்கள் மொழியில் எங்ஙனம் வந்துற்றது என்பது கேள்விக்குறியே. ஐரோப்பிய நாடுகளுக்கு, மயில் தோகை தமிழகத்தினின்றே சென்றதாக, பாலத்தீன யூத மன்னன் சாலமன் குறிப்புகளிலிருந்து தெரிய வருகின்றது. தோகை என்ற தமிழ்ச் சொல், தோகா என்று எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ளது. நடு ஐரோப்பிய

---

403. சிலப்பதிகாரம், 6:139.

ஆரிய மக்களுக்கு மயிலைப் பற்றி எதுவும் தெரிந்திருக்க வாய்ப்பில்லை என்ற வரலாற்றை மூடிமறைத்து, மயிலைப்பற்றிய கலாவம் என்ற சொல்லை, வடமொழியிலிருந்து தமிழ் கடன் பெற்றதாகக் கூறுவது, பிள்ளைப் பேற்றினை அறியாதவள் பத்துப் பிள்ளைகள் பெற்றவருக்கு மருத்துவம் பார்த்தது போன்றுள்ளது.

**கலிமயிற் கலாவத் தன்னவிவள்** – குறுந்தொகை.[404]

**அணிகிளர் கலாவம் ஐதுவிரித்தியலு** – நற்றிணை[405]

**கலிமயிற் கலாவங் கால் குவிந்தன்ன** – புறநானூறு[406]

தலைவியின் கூந்தலை, மயிற்றோகைக்கு உவமையாகப் புலவர் பாடினர், கலாவம் வடசொல்லே என்றது, உரையாசிரியர்களான பிராமணர்கள் செய்த சூது என்பதே உண்மை. கலை என்ற தமிழ்ச் சொல்லைக் கலா என்று உரைத்தது போன்றே கலாவமும் கூறப்பட்டது. கலை என்பதைப் பக்கம் என்று தொல்காப்பியம் கூறி, நிலவின் வளர்தேய் பிறைகளை விளக்குகிறது. பக்கம் என்பதும், பக்ஷம் என்ற வடசொல்லின் திரிபாகவே கூறினர். கல் எனும் வேர்ச் சொல்லினின்றும் எண்ணற்ற தமிழ்ச் சொற்கள் விரிந்துள்ளன.

கல் - கல்லுதல் = வெளியே கொணர்தல்.
கல்வி - கல்லூரி என்றவாறு நீண்டது.
கல் - கல்லுதல் = தோண்டுதல், அகழ்தல்.
நிலத்தைக் கல்லியதே வேளாண்மை.
கல்லுதல் என்பதே Cult - Cultivation எனப்பட்டது.
கல் - கல்பி - கற்பி = மாணவனின் மன ஆழத்தைக் கண்டு, அதற்கேற்ப சொல்லிக்கொடு.
கல் - கலை = பண்பாடு.
பல்வேறு பண்புகள் கலத்தலே பண்பாடாகும்.
கல் - Culture என்றானது.
கல் - கல - கலத்தல் - கலுழி = பல்வேறு பொருட்களைக் கலந்து சுமந்து வரும் காட்டாறு.

---

404. குறுந்தொகை, 225:6.

405. நற்றிணை, 264:3.

406. புறநானூறு, 146:8.

கல் - கல - கலுழன் - பலவண்ணங்களைக் கொண்ட பருந்து

கலுழன் - கருடன் எனப்பட்டது.

கருடா என வடமொழியில் திரிந்தது.

கல் - கல - கலவு = கலத்தல், ஒன்றுபடுதல், ஒன்றோடொன்று சேர்தல்,

கல் = கலப்பு, ஆவுதல் = அணைதல். கல் ஆவு = கலாவு = கலப்பு.

கலாவம் = பல வண்ணங்கள் சேர்ந்து கலந்திருக்கும் மயில்தோகை.

**வானத்து வீசுவளி கலாவலின் – குறிஞ்சிப்பாட்டு.[407]**

கல் - கலையாதல் - கலையாவுதல் - கலாவுதல் என்றும் விளங்கும்.

**அணிகிளர் கலாவம் ஐதுவிரித் தியலும் – நற்றிணை.[408]**

கல் - கலை என்பது அழுகுணர்வையும் காட்டும் சொல்லாகும்.

**கலையென் காட்சி உழைக்கம் உரித்தே – தொல்காப்பியம்.[409]**

**எண்ணெண் கலையும் இசைந்துடன் போக – சிலப்பதிகாரம்.[410]**

கலாவம் என்ற தமிழ்ச் சொல், வடமொழி கூறுவது போல், மயிற்றோகையை மட்டும் குறிக்கவில்லை.

கலாவம்: இடுப்பில் ஆணியும் பல் மணிகள் கலந்த ஒட்டியாணம்.

கலாவம்: வரிசையாகப் பல வண்ண மணிகள் அடுப்பட்ட மணிக்கோவை.

கலாவம்: பதினாறு கோவையுள்ள மணியாரம்.

கலாவம்: ஆண்மயில், மயிற்றோகை.

மயிற்றோகையில் காணப்பெறும் பன்னிறங்களும் கலப்புற்றலையே கலாவம் என்றார் காலாவம் தனித்தமிழ்ச் சொல்லே.

○○○

---

407. குறிஞ்சிப்பாட்டு, 48.

408. நற்றிணை, 264:3.

409. தொல்காப்பியம், பொருள், 1545.

410. சிலப்பதிகாரம், 8:64.

30

## காமம்

காமா (Kama) என்ற வடசொல், பாலியல் தொடர்பான சொல்லாகக் கூறப்பட்டுள்ளது. காமசூத்ரா, காமராஜா, காமரூபி, காமவிகார் போன்ற சொற்களும் வடமொழியில் உள்ளன. காமா என்ற வடசொல்லே, காமம் என்று தமிழில் சொல்லப்பட்டு திரிபுச் சொல்லாகியது என்பது வடமொழியாளர் கூற்று. காமா என்ற வடசொல், பாலியல் தொடர்பான பொருளை மட்டுமே வடமொழியில் விளக்குகிறது. ஆனால் தமிழ்ச் சொல் லான காமம், பாலுணர்வு உட்பட வேறு பொருள்களையும் கொண்டுள்ளன என்பதை, வடமொழியாளர் உணரவில்லை. கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்ற பழமொழிக்கு வட மொழி விளக்கம் கூறின், அது முரண்பட்ட கருத்தை விளக்கும். இங்கு காமம் என்ற சொல் விருப்பம் என்ற பொருளில் சொல்லப்பட்டுள்ளது.

தமிழ் இலக்கியங்கள், தலைவன் - தலைவி காணும் களவொழுக்கத்தோடு தொடர்புபடுத்திக் காமம் என்ற சொல்லை விளக்குகின்றன. இருபாலாரிடையே தோன்றும் பாலியல் கவர்ச்சியும், அதன் வழி கிளைக்கும் இன்பக் கிளர்வுகளும், காமம் என்ற சொல்லால் விளக்கப்பட்டுள்ளன. காமம் என்ற சொல், பொதுவாக விருப்பத்தையும், சிறப்பாகப் பாலியல் தொடர்புகளையும் உணர்த்துகின்றது.

"பூந்தாதை ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கை முறைமை யையும், உள்ளிடத்தில் சிறகுகளையும் உடைய வண்டே! நீ என்னுடை நிலத்து வண்டாதலின் அந்த உறவு மேலோங்க, நான் விரும்பியதை நீ கூறாமல் (காமம் செப்பாது), உண்மையில் நீ கண்கூடாக ஆறிந்தவற்றைச் சொல்வாயாக," என்று தும்பி யிடம் கேட்கும் செய்தியொன்றை, குறுந்தொகை விளக்குகிறது.

இங்குக் காமம் என்ற சொல், சிற்றின்ப உணர்வுகளைக் குறிக்காமல், விருப்பம் என்ற பொருளைச் சுட்டுகிறது.

> கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
> காமம் செப்பாது கண்டது மொழிமோ – குறுந்தொகை.[411]

பொருளில்லா ஏழை, இன்பத்தை விரும்புகிறான். அவன் விருப்பத்தையும் காமம் என்ற சொல்லால் குறுந்தொகை மற்றொரு இடத்தில் காட்டுகிறது.

> இல்லோ னின்பங் காமுற் றாஅங்கு – குறுந்தொகை.[412]

காமம் என்ற சொல்லுக்கு, அன்பு - ஆசை - ஊர் - குடி - காமநோய் என்று சதுரகராதி பொருள் கூறுகிறது.[413]

தமிழ் இலக்கியங்கள், காமம் என்ற சொல்லை, காதல் தொடர்பான செய்திகளோடு இணைத்தும் கூறுகின்றன. காமக் கடவுள்,[414] காமத்துப்பால்,[415] காமம்,[416] காமன்,[417] காமர்,[418] காமவேள்,[419] காமவேள் கோட்டம்,[420] காமவேள் விழைவு,[421] காமனை வென்றோன்[422] என்றவாறு கூறுவதைக் காணலாம்.

கண் என்ற சொல்லே, காமம் என்ற சொல்லுக்கு வேர்ச் சொல்லாகும்.

கண் - காண் = கண்ணால் பார்ப்பது.

கண் - காண் - காண்மம் - காமம் = மென்மேலும் காணுகின்ற இன்பம்.

---

411. குறுந்தொகை 2:2.
412. மேலதே, 120:1.
413. சதுரகராதி, ப. 53.
414. சிலப்பதிகாரம், 6:2.
415. திருக்குறள் மூன்றாம்பிரிவு.
416. மணிமேகலை, 30:253.
417. கலித்தொகை, 84:24; 92:67, பரிபாடல், 11:123.
418. கலித்தொகை, 94:33.
419. பரிபாடல், 18:28.
420. சிலப்பதிகாரம், 9:60.
421. கலித்தொகை, 27:34, 30:13.
422. சிலப்பதிகாரம், 10:196.

கண் - கணி = எதிர்பாலாரைக் கண்டு அவர்தம் உள்ளக் கிடக்கையை அறிதல்.

கண் - கணி - கணிகை = காமநோய்க்கு அடிப்படையானவள்.

கண் - கணி - கணக்கன் = காம நோய்க்கு கரணியமான அறிவன் (புதன்).

கண் - கண்ணுளர் = கூத்தர், காதல் காட்சிகளை நடிப்பவர்.

கண் - கணவன் = காமத்தின் தலைவன்.

கண் என்ற வேர்ச்சொல், காமத்தின் சொற்களை விரிப்பதை நோக்குக.

**காதலில் தோன்றிய கண்கூடு வரியும் – சிலப்பதிகாரம்.[423]**

கண்கூடுவரி = தானாக முன்வந்து காதலிக்கும் ஒருவர் பற்றிய நாட்டியம்.

காண்பி (காட்டு) என்ற சொல்லைக் காமி என்றவாறும் சொல்லுவதை நோக்குக.

காமம் என்ற சொல்லுக்குப் பாவாணர் பின்வரும் விளக்கத்தைக் கொடுக்கிறார். கவ்வுதல் = வாயாற் பற்றுதல். கவ் - கவ - கவர் - கவர்தல் = விரும்புதல்.

கவ - கா - காதல் - கா - காம் - காமம் - கலமர் என்றவாறு.[424]

காம் + உறு = காமுறு. காம் + மன் = காமன்.

**கவர்வு விருப்பாகும் – தொல்காப்பியம்.[425]**

காமத்துடன் தொடர்பு கொண்ட மோகம் என்ற சொல்லும், தமிழ்ச் சொல்லே ஆகும்.

முக்கு = மூழ்குதல், திளைத்தல், இன்பத்தில் ஈடுபடுதல்.

முகிழ் = வெளிவரத் துடிக்கும் இன்பவேட்கை.

முகிழ்த்தல் = குவிதல், காம உணர்வுகள் மேலிடல்.

முகை = குவிதல், அரும்புதல்.

முகை - முக்கம் - மோகம் = பாலியல் நாட்டம்.

ooo

---

423. மேலதே, 8:77.

424. முதற்றாய் மொழிI, பாவாணர், ப. 23.

425. மேலதே,

31

## காலம்

காலா என்ற வடசொல்லின் திரிபாகவே, காலம் என்ற தமிழ்ச்சொல் உள்ளதென்று கூறினர். இதன் வழியில் காலம் என்பது வடசொல்லே என்றனர். கால் என்ற தமிழ் மூலச் சொல்லினின்றே, காலம் என்ற சொல் நீண்டது.

கல் - கல - கால் = எத்திசையும் பரவிக் கலந்திருக்கும் காற்று.

கல் = வலிமையுள்ள பாறை. கல் - கால் = வலிமை.

கால் = உடலைத்தாங்கும் உறுப்பு.

கால் = நீலம், நீர், தீ, காற்று என்ற நான்கில் ஒன்றாகிய காற்று. நான்கில் ஒன்று.

கல் - கர் - கார் = கருமை நிறம். கார் - கால் = கருமை நிறம்.

காலனும் காலம் பார்க்கும் – புறநானூறு,[426] 41:1.

கல் - கால் - காலன் = கருமை நிறம் கொண்ட யாமன்.
காலம் = கரிய நடு இரவு.

கால் - விடிகால் = கருமை அல்லது இருட்டு மறையும் பொழுது.

கால் + ஐ = காலை = இருள் மறையும் அழகிய பொழுது. ஐ = அழகு.

மால் + ஐ = மாலை = இருள் சூழும் அழகிய பொழுது

மால் = கருமை.

மல்லுதல் = கலத்தல். இருளும் ஒளியும் கலந்த பொழுதாகவும் கொள்ளப்படும். காலம் - காலை = பொழுதைக் குறித்தது. பேசுங்காலை, செய்தகாலை, வளருங்காலை. இவையே, பேசுங்கால், செய்தக்கால், வளருங்கால் எனவும் கூறப்படும்.

காலம்: இறந்த, நிகழ், எதிர்காலங்கள்.

---

426. புறநானூறு, 41:1.

காலம்: மூன்று அளவுகள். குறைவு (விளம்பம்), நடுவு (மத்திமம்), விரைவு (துரிதம்)

காலம்: காற்று உடலில் இருந்து வெளியேறும் பொழுது, இறப்பு.

காலம் - காலன் = காற்றை (உயிரை) வெளியேற்றும் யாமன்.

கால் - காலி = கால் + இலி = காற்றில்லாத வெற்றிடம்.

காலி என்பது வடசொல் எனக் குறிக்கப்படுகிறது.

காலிலி என்ற தமிழ்ச் சொல்லே, காலி எனத் திரிந்தது.

கால் - காலம் என்பது கருநிற முகிலையும்
குறித்துச் சொல்லப்பட்டது.[427]

கால் - காலம் என்பது எங்கும் கலந்துள்ள காற்றைக்
குறித்தும் சொல்லப்பட்டது.

திருக்குறள், காலமறிதல் என்ற, 49ஆம் தலைப்பாகச் சொல்லப்பட்டுள்ளதைக் கொண்டு, காலம் தமிழ்ச் சொல்லே என அறியலாம். நாளையும் பொழுதையும் பற்றிக் குறுந்தொகையில் பாடியுள்ள புலவருக்குக் காலெறிக் கடிகையார் என்றே பெயர் சூட்டப்பெற்றுள்ளது.

ஆலமுங் கூம்பு நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும் – பரிபாடல்.[428]

கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூலுறு முத்திற் காலொடு பாரி – குறுந்தொகை.[429]

தந்திரம் இடனே காலம் கருவியென்று – சிலப்பதிகாரம்.[430]

காலம் கருதி அவர்பொருள் கையுறின் – சிலப்பதிகாரம்.[431]

கால மாரி மாலை மாமழை – குறுந்தொகை.[432]

கால மாரி பெய்தன வதனெதிர் – குறுந்தொகை.[433]

---

427. கம்பராமாயணம், யுத்.வான. 21.

428. பரிபாடல், 4:68.

429. குறுந்தொகை, 51:2.

430. சிலப்பதிகாரம், 26:169.

431. மேலதே, 26:184.

432. குறுந்தொகை, 200:5.

433. மேலதே, 251:2.

மேற்கண்ட பாடல்கள், காலம் என்பது காற்று எனும் பொருள் குறித்தே சொல்லப்பட்டுள்ளன.

*காலாடிய சிவன் எனும் கூற்றில், கால் என்ற சொல், கால் களையும், காற்றையும் குறித்துச் சொல்லப்பட்டுள்ளது.*

*காலாடிய சிவன்: கால்களைக் கொண்டு நடமாடிய சிவன்.*

*காலாடிய சிவன்: காற்றினும் கடுகி நடமாடிய சிவன்.*

**வாதக்காலாந் தமக்கு மைத்துளர்க்கு நீரிழிவாம்**
**போதப் பெரு வயிராம் புத்திரர்க்கு – மேதினியில்**
**வந்தவினைத் தீர்க்க வகையறியான் வேளூரான்**
**எந்தவினைத் தீர்ப்பான் இவன்.**

என்றவொரு தனிப்பாடலை வீரமாமுனிவர் இயற்றியுள்ளார்.[434] இவ்வெண்பாவில், கால் என்ற சொல்லை, காற்று - கால் என்ற இரட்டுறமொழிதலில் கூறியுள்ளார்.

கால் என்பது காற்று எனவும், கார்முகில் எனவும் சொல்லப் பட்டுள்ளதால், ஆண்டின் குறிப்பிட்ட மாதங்களில், காற்றடிப் பதையும் மழை பெய்வதையும் கருத்தில் கொண்டு, காலம் என்ற சொல்லைத் தமிழர் உருவாக்கினர். இவ்வளவு விரிவர்ன விளக்கங்களைக் காலா (Kala) என்ற வடசொல் பெற்றிருக்க வில்லை.

கால் என்ற காற்றைக் குறித்தத் தமிழ்ச்சொல்லே, Gale என்று ஆங்கிலத்தில் திரிந்துள்ளது. Gale என்ற சொல்லுக்கான மூலச்சொல், ஆங்கிலத்தில் இல்லையென, ஆங்கில அகரமுதலி கள் கூறுகின்றன. Gale = Strong wind. எனவே, கால் - காலம் என்பன தமிழ்ச் சொற்களே என்க.

○○○

434. தனிப்பாடல், வீரமாமுனிவர்.

32

## குணம்

குணா என்ற வடசொல்லினின்றே குணம் என்னும் தமிழ்ச் சொல் பிறந்ததாகக் கூறினர். குண திசை என்ற கிழக்குத் திசை யையும் குறித்ததாகவும் உரைத்தனர். ஒரு மாந்தனுடைய பண்பு கள், இயல்புகள், நடைமுறைகள், பழக்கங்கள் இவைகளை விளக்கும் சொல்லே குணம் எனப்பட்டது. சுற்றத்தாலும், மற்றவராலும், இயற்கையாலும் மாந்தன் தாக்கமடைவதும், அத்தாக்கங்களுக்கு விடையளித்து, அவன் மேற்கொண்டிருக் கும், மேற்கொண்டு பழக்கத்தில் வந்த இயல்பே குணம் எனப் படும். ஒரு நிகழ்வைக்கண்டு அவன் மனம் வளையும் தன்மை யைக் குணம் என்றும் கூறலாம். இதில் புறத்தாக்குதலை விட, அகத்தாக்குதலே, மாந்தனுக்கு ஒரு இயல்பைப் பட்டறிவு வழியாக அளிக்கிறது. அப்பட்டறிவின் வெளிப்பாடு நன்மை தருவனவாயின் நற்குணம் என்றும், தீமை தருவனவாயின் தீக்குணம் என்றும் சொல்லப்படும்.

ஒரு தாக்கம் ஏற்படும் போது, மாந்தன் அத்தாக்கத்தோடு ஒன்றுபடுவதன் வழியாக, ஒன்று வளைந்து கொடுக்கிறான் அல்லது எதிர்கொள்கிறான். வளைந்து போதலை - வளைதல், பொருந்துதல், ஒத்துப்போதல் என்றவாறு கூறலாம். இப்பண்புகள் அச்சத்தின் வழியிலோ, அறவழியிலோ, மன்னிக்கும் மனப்பான் மையிலோ நிகழ்வுறலாம். இவ்வாறான வளைந்து கொடுக்கும் பண்பையே நற்குணம் என்கிறோம். குணம் என்ற சொல்லை ஆய்வு செய்கையில் மேற்கண்ட பொருள் விரிவுகளே கூறப்பட் டுள்ளன.

குணம் என்ற சொல்லுக்குக் குள் என்பதே வேர்ச்சொல் ஆகும்.

குள் - கொள் - கொள்ளுதல் = நிறைதல், பொருந்துதல், நிறைதல்.

குள் - கொள் = பெற்றுக் கொள்கின்ற,
ஏற்றுக் கொள்கின்ற என்றவாறு.

குள் - கொள் - கொண் - குணம் = கொள்ளப்பட்ட, ஏற்கப்பட்ட.

கோணம் - குணம்: வளைந்துள்ள,
நெகிழ்ந்து கொடுக்கும் தன்மையுள்ள.

குண்டு, குண்டான், குண்டில், குண்டி, குணுக்கு, குணு, போன்ற சொற்கள் அனைத்தும் வளைவு என்ற பொருளை உணர்த்துபவை.

சூழ்நிலைகளுக்கேற்ப வளைந்து கொடுக்கும் தன்மைகளே குணம் எனப்படும்.

**குணமெனும் குன்றேறி நின்றார் – திருக்குறள்[435]**

**குணம் நாடி குற்றமும் நாடி – திருக்குறள்[436]**

**அன்ன வினியாய் குணனு மின்ன – குறுந்தொகை.[437]**

இனி, குணம் என்பது கிழக்குத் திசையையும் குறித்துச் சொல்லப்பட்டது. குள் என்ற வேர்ச்சொல்லினின்றே, குணம் என்ற கீழ்த்திசை பற்றிய சொல்லும் விரிந்தது. குள் - கிள் - கீழ் - கிழக்கு = தமிழகப் புவியியல் அமைப்பில் தாழ்ந்த கீழ் நிலப் பகுதி. கீழ் - கிழ்க்கு - கிழக்கு = மேற்குப் பகுதியைக் காட்டிலும் கீழானபகுதி கிழக்கு.

குள் - குண் - குணம் = வளைவு. இது பள்ளத்தையும் தோற்றுவிக்கும்.
குணம் - குணக்கு = பள்ளமான கீழ்த்திசை.

கீழ்ப்பாங்கான, தாழ்ந்த, பள்ளமான திசை, தமிழகத்தைப் பொறுத்து, கிழக்குத் திசையாயிற்று. கீழ் என்ற சொல்லே, பள்ளத்தைக் குறித்தது. எனவே குண திசை என்பது கீழ்த்திசை யாயிற்று.

**குணகடல் முகந்து கடக்கோர்பு இருளி – நற்றிணை.[438]**

**குணதிசை குன்றத் துயர்மிசைத் தோன்ற – சிலப்பதிகாரம்.[439]**

---

435. திருக்குறள், 29:1.

436. மேலதே, 504:1.

437. குறுந்தொகை, 206:2.

438. நற்றிணை, 153:1.

439. சிலப்பதிகாரம், 27:196.

சேர நாட்டினும் தாழ்வான நிலப்பகுதியைக் கொண்ட சோழ நாட்டைக் குண புலம் என்று சிறுபஞ்ச மூலமும்,[440] குணக்குத் திசையென பதிற்றுப்பத்தும்,[441] குணவாயிலைக் கிழக்கு வாயில் என்ற பொருளில் அடியார்க்கு நல்லாரும்,[442] கூறுவதை ஒப்புநோக்க வேண்டும்.

இனி, குள் என்ற வேர்ச் சொல்லினின்றே, குடம் என்ற சொல்லும் பிறந்தது. குடம் என்பது மேல்திசையை அல்லது புவியியல் அமைப்பில் மேடான திசையைக் குறித்தது.

குள் - கோள் - கோடு = உயர்ந்துள்ள விலங்குகளின் கொம்பு, மரக்கிளைகள், மலையுச்சி, ஆற்றங்கரை என்றவாறு விரியும்.

கோடு - கோட்டை = உயர்ந்த படைக்கலனிருக்கை.

கோடு = உயரே தெரியும் பிறை நிலா.

குள் - குட - குடக - குடகு = உயர்ந்துள்ள மலை, மேற்குமலை.

குடகு - குடகம் - குடக்கம் = மேற்றிசை.

மலைத் தொடர் மிகுந்ததும். நிலவியல் கூறுகளில் உயர்ந்தும் காணப்படும் சேர நாட்டுப் பகுதிகள், குடதிசை என்று சொல்லப் பட்டன. கீழ் என்பது கிழக்காகவும், மேல் என்பது மேற்காகவும் பயன்பாட்டிற்கு வந்தன. குட திசை = மேற்றிசை.

குடவர் கோவே நின்னாடு புகுந்து – சிலப்பதிகாரம்[443]

குடவர் கோமான் வந்தான் நாளை – சிலப்பதிகாரம்[444]

குடவர் கோ, கோமான் ஆகியவை சேரனைக் குறித்தவை களே.

குடவர்: மேற்றிசை மக்கள் என்று பதிற்றுப்பத்தும்,[445] பட்டினப்பாலையும்,[446] புறநானூறும்[447] இன்ன பிற இலக்கியங் களும் கூறுகின்றன.

---

440. சிறுபஞ்சமூலம், 79.

441. பதிற்றுப்பத்து, 59:6.

442. சிலப்பதிகாரப் பதிகம்.

443. சிலப்பதிகாரம், 24:134.

444. மேலதே, 27:227.

445. பதிற்றுப்பத்து, 55:9.

446. பட்டினப்பாலை, 276.

447. புறநானூறு, 17:40.

குடவாயில்[448]: குடந்தைக்கு அருகிலுள்ள ஊரின், மேற்குப் புற வாயில். இவ்வூர் இன்று குடவாசல் என்று சொல்லப்படுகின்றது.

குள் - குட - குட்ட - குட்டுவன் = குட நாட்டுமன்னன். சேரன்.
குடமலை = மேற்கு மலை.
குட - குடகு = காவிரி தோன்றும் மேற்கு மலை.

**குடவரைச் சுனைய மாயிதழ்க் குவளை — நற்றிணை.[449]**

குள் எனும் வேர்ச் சொல்லின் நீட்சியான குணம் என்ற சொல், வடசொல்லைவிட நீண்ட பொருளைத் தமிழில் கொண்டுள்ளது.

ooo

448. அகநானூறு, 35-44-60.

449. நற்றிணை, 105:8.

33

## குவளை

கோளகா என்ற வடமொழிச் சொல்லினின்றும், குவளை என்ற தமிழ்ச் சொல் பிறந்ததாகக் கூறினர். குவளை என்ற மலரைச் செங்குவளை கருங்குவளை என்று தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. ஆனால் கோளகா என்ற வடசொல்லினின்றே குவளை என்ற சொல் பிறந்ததாகக் கூறுபவர்கள், இவ்வட சொல்லுக்கான மூலச் சொல்லையோ, வேர்ச்சொல்லையோ அறிந்திருக்கவில்லை.

குவளை = கண், கண் பொருந்தியிருக்கும் குழி, கலம்,
கலத்தின் வட்டவிளிப்பு.

குவளை = குவளை மலர் (Water lily - Pontederia)

தமிழகத்தில் வேளாளர் மரபினர் குவளை மலர்கள் மாலையை அணிவது, தொன்மைக்கான வழக்காகும். மன்னர்களும் ஒவ்வொரு மரபாருக்கேற்ற மாலையை அணிந்தனர். மகபாரதத்தில் குவளை மலர் மாலையை அணிந்திருந்ததாகக் கூறுவர். மருத நிலத்தை விரிக்கும் கம்பர், குவளைக்கண் விழித்து நோக்க என்று, குவளையைக் கண்ணாக உருவகம் செய்துள்ளார்.

குவளை மருத நிலத்து மலராகும்.

குவ - குவடு = திரட்சி, குவிந்திருக்கும் மண்மேடு.

குவ - குவலிடம் = மக்கள் குவிந்திருக்கும் ஊர்.

குவ - குவவு = திரண்ட, கூட்டம், ஞாலம், மேடு என்றவாறு விரியும்.

குவ - குவி = கூம்புபோல் குவிதல்.

குவை = குப்பைமேடு, மண்மேடு.

குவி - குவியல், குவிகை, குவிவு என்றவாறு விரியும்.

குவ - குவளை = குவிந்திருக்கும் மலர். குவளைமலர்

கும்முதல் என்பதே கூம்புதல் என்றும் நீண்டது.

கும் - குமுதம் = பகல் வேளையில் மலரும் ஆம்பல் மலர்.

கும் - கும்பு - கூம்பு - கூம்புதல் = குவிதல்.

கும் - குமி = குமித்தல் என்பது வழக்குச் சொல்.

குமித்தல் = குவித்தல்.

நெல்லைக் களத்தில் குமித்தான். குவியலாக இருக்குமாறு கொட்டினான்.

குவிதல் என்ற மூலச் சொல்லின் தீட்சியே, குவளை என்று தமிழ்ச் சொல்லாகும்.

குவளையொடு பொதிந்த குளவி நாறுநின் – குறுந்தொகை.[450]

பைஞ்சுனைக் குவளை – குறுந்தொகை.[451]

குவளையம் பைஞ்சுனை – மலைபடுகடாம்[452]

பறியாக் குவளை மலர் – நற்றிணை[453]

மல்லரைய மலிர்சுனைக் குவளை – அகநானூறு[454]

தீ நீர்ப் பெருங்குண்டு சுனைபூத்த குவளை – புறநானூறு.[455]

○○○

---

450. குறுந்தொகை, 59:3.

451. மேலதே, 342:4.

452. மலைபடுகடாம், 251.

453. நற்றிணை, 34:1.

454. அகநானூறு, 308:11.

455. புறநானூறு, 116:1.

34

## சகடம்

வண்டி, ஊர்தி என்று பொருளுரைப்படும் இச்சொல், சகட என்ற வடமொழிச் சொல்லே எனவும், சகரத்தை முதலெழுத்தாகக் கொண்டு, தமிழ்ச்சொற்கள் வாரா எனவும் உரைத்து, அதற்குச் சான்றாகத் தொல்காப்பியரையும் காட்டினர். தொல்காப்பியர் கூறியவற்றில் ஏற்கப்படாத செய்திகளும் உள்ளனவென்றும், தொல்காப்பியர் கூறிய தாலேயே அவை ஏற்கப்படவேண்டும் என்பது விதியுமல்ல என்றும், ஏற்கவேண்டி யதை ஏற்று, விலக்கவேண்டியவைகளை விலக்கவேண்டும் என்றும் பாவாணர் கூறுகிறார். குறிப்பாக, சகரம் தொடர்பான தொல்காப்பியரின் கூற்றை முற்றிலும் தவறான செய்தி எனக் கண்டிருக்கிறார். சகரம் தமிழ் எழுத்தே என்றும், அது சொல் லிற்கு முன்வரும் என்றும், வந்துள்ளது எனறும் சுட்டிக்காட்டு கிறார். சகரம், ஸகரமாக வடமொழியில் மாற்றம் செய்யப்பட்ட எழுத்தே. சகரம் தமிழில் ஒரெழுத்தில்லை என்பதை தமிழர் ஏற்றுக் கொண்டால், தமிழ் மொழியே செயலற்றுப்போகும். இவ்வாறு செயலிழக்கச் செய்யும் வழியாகவே, சகரம் தமிழ் எழுத்து இல்லை என்றுரைத்தனர். ஆரியரின் இவ்வகையிலான மொழித்திருட்டுக்கும், சூதுக்கும், தொல்காப்பியரும் இலக்கானார் என்பதைப் பாவாணர் சுட்டிக்காட்டுகிறார்.

கி.மு. 1500 ஆண்டுகளில், ஃபோனீசியர்கள் உருவாக்கிய எழுத்துவரிவடிவங்கள், தமிழ் மூலத்தைக் கொண்டவைகளே. தமிழ் எழுத்துக்களான உயிர் 12, மெய் 18, ஆக 30 எழுத்துக்களில், 22 எழுத்துக்களை, ஃபோனீசியர்கள் எடுத்துக்கொண்டனர். இந்த 22 ஃபோனீசியத்தின் எழுத்துக்களில், 18 எழுத்துக்கள் தமிழ் எழுத்தின் ஒலிப்பும், வரிவடிவமும் மாறாமல் இருந்தன. இவ்வாறு தமிழில் இருந்து எடுத்துக் கொள்ளப்பட்ட எழுத்துக் களில் சகரமும் ஒன்றாகும். கி.மு. 1500 ஆண்டுகளில், தமிழின்

வரிவடிவம் என்னவென்று அறிந்துகொள்ள, தமிழ் நாட்டில் சான்றுகள் கிடைக்கவில்லை.* ஆனால் அக்காலத்துச் சிந்துவெளித் தமிழ் எழுத்துக்களைத் தமிழின் வரிவடிவமாகக் கொள்ளுவதில் தவறில்லை. சிந்துவெளி எழுத்துக்களின் அதே வரிவடிவத்தையே, ஃபோனீசிய எழுத்துக்கள் பெற்றுள்ளன என்பதை விளக்கப் படத்தில் காணவும். தமிழ்ச் சகரமே, இன்று ஆங்கிலத்தில் S என்ற எழுத்துக்கு மூலமாகும். உலகில் இன்றைய வரிவடிவங்கள், தமிழ் (சிந்துவெளி) - ஃபோனீசியம் - கிரேக்கம் - இலத்தீன் - மேற்கு ஐரோப்பிய மொழிகள் என்றவாறு நீண்டன. கிரேக்கம், இவ்வரிவடிவங்களைப் ஃபோனீசியரிடமிருந்தே பெற்றதாக, எரடோட்டஸ் என்ற கிரேக்க வரலாற்றாய்வாளர் கூறுகிறார்.[456] இக்காலங்களில் சமஸ்கிருதம் என்ற மொழியே இருந்திருக்க வில்லை என்பது ஆய்வாளர்களின் முடிபுகளாகும் எனவே சகரம் தமிழ் எழுத்தே என்பதில் ஐயம் எதும் இல்லை.

தொல்காப்பியர் சொன்னச் சகரவிதியை,[457] கடைக்கழகப் புலவர்களும் கூட ஏற்றுக் கொள்ளவில்லை, என்பதை அவ் விலக்கியங்களே கூறுகின்றன.

**திருக்குறள்**

*சமன், சலம், சாதல், சாயல், சார்பு, சான்றோர், சிதைவு, சிறப்பு, சிறுமை, சிறை, சிற்றினம், சினம், சீர், சீர்மை* போன்ற சொற்கள் திருக்குறளில் இடம்பெற்றுள்ளன.

**மணிமேகலை**

*சக்கரம், சங்கம், சங்கு, சட்டை, சடை, சண்டிகை, சதுக்கம், சந்தனம், சந்தி, சந்து, சம்பு, சமம், சமயம், சல்லி, சாக்காடு, சாகை, சாணி, சாயல், சார்பு, சால், சான்று* என்றவாறு விரியும்.

---

456. Lebanon, Lonely Planet, p. 14.

457. தொல்காப்பியம், பல்வேறு அதிகாரங்களில் வருமாறு: 90, 364, 209, 1529, 885, 1040, 1191, 1306, 238, 889, 1162, 1603, 1072, 883, 496, 1382, 713, 503, 787, 1205, 1371, 835, 1205, 1371, 1155, 1548, 1605.

சகர விதிப்பிடியல்லாமல் தொல்காப்பியரே பல சொற்களைக் கையாண்டுள்ளார் சாயல், சார், சாவ, சிதல், சிதை, சிறந்று, சினன், சீர், சுட்டு, சுண்ணம், சுரம், சூத்திரம், சூழ்தல், செந்தமிழ், செப்பு, செம்மை, செய்தல், செயற்கை, செம், செல்வம், செவி, செழுமை, செறிவு, சேவல், சொல், என்றவாறு விரியும்.

கி.மு. 2000 ஆண்டில் வழக்கிலிருந்த தமிழ் எழுத்துகள், மயிலாடுதுறை

### சிலப்பதிகாரம்

சக்கரம், சகடம், சங்கம், சங்கிலி, சங்கு, சடைமுடி, சதங்கை, சதுரம், சந்தம், சமரி, சமை, சர்க்கரை, சவலை, சாண், சாத்து, சாம்பல், சாமை, சாயை, சாலினி, சாழல், சாறு, சான்றோர் என்றவாறு விரியும்.

### நாலடியார்

சக்கரம், சாய், சான்றாண்மை, சிதலை, சிறுகா, சீரியர், செந்நெல், செம்மை, செய்கை, செல்சுடர், செல்வர் என்றவாறு நீளும்.

### குறுந்தொகை

சேய், சேக்கை, சேண், சேய்த்து, சேயாறு, சேயிழை, சேரி, சேவடி, சேவல், சேறல், சேறி, சொன்றி, சோணை, சோலை, சோறு, சோழன், என்றவாறு நீளும்.

### பரிபாடல்

சகடம், சங்கம், சடங்கு, சமழ்ப்பு, சலம், சனி, சாங்கியர், சாந்து, சாரல், சாறு, சிகை, சீதைபு, சிமை, சிலம்பு, சிவிகை, சிற்றில், சிறகு, சிறை, சினம், சினை, சுடர், சுண்ணம், சுரபுன்னை, சுரும்பு, சுற்றும் என்றவாறு விரியும்.

### பதிற்றுப்பத்து

சமம், சரடு, சவட்டு, சாகாடு, சால்பு, சிந்தடி, சில்வளை, சிலை, சின்மை, சின்னூல், சீர், சுருள், தரை, சூடு, சூர், சூல், செந்தூக்கு, செம்மீன், வெயிர் செவ்வரி, செவ்வாய், சென்னி, சேரன், சொட்டை, சோழர் என்றவாறு நீளும்.

### பத்துப்பாட்டு

சகடம், சதுக்கம், சந்து, சலம், சவட்டி, சாடு, சாணம், சாந்து, சாவம், சிதர், சிமிலி, சிமையம், செருவிளை, செற்றை, சேக்கை, சேணோன், சேமம், சேறு என்றவாறு விரியும்.

தமிழ் இலக்கியங்களில் சகரத்தில் தொடங்கும் சொற்கள் பல்லாயிரக்கணக்கில் உள்ளன. இச்சொற்கள் எல்லாம் தமிழ்ச் சொற்கள் அல்லவென வடமொழியாளர் கூறியது, அவர்க்கு மறுப்புரை சொல்லவியலாதோர் இருந்த காலத்தில் நிகழ்வுற் றிருக்கலாம். மேற்கண்ட தமிழ்ச் சொற்களை வடமொழிச்

சொற்கள் என்போர், அச்சொற்களுக்கான வேர்ச் சொற்களை வடமொழியில் காட்ட இயலாது என்பதையும் அறிவர். இது தமிழ்ச் சொல்லே என, தக்கச் சான்றுகளுடன் மூலங்காட்டி நிறுவ தமிழர் முற்படுவதுபோல், வடமொழிச் சார்பாளர் முன் வருவதில்லை. ஏனெனில் அவர்களால் அதற்கானச் சான்று களைக் காட்ட இயலாது. கடை வழியாகச் சமயத்தையும் வேதங் களையும் காட்டித் தப்பிக்க முயல்வர். இன்றுவரை அவ்வாறே நிகழ்வுற்று வருவதைக் காணலாம்.

தமிழ் எழுத்தான சகரம், சொல்லில் அது இருக்கும் இடத்திற் கான ஒலியைக் கொடுக்கும். சதுக்கம், அச்சம், பெருச்சாளி, மூச்சு, வரிசை, தரிசு, தச்சை போன்ற சொற்களில், சகரத்தின் ஒலி மாறுபடுவதை நோக்குக. இந்த ஒலி மாற்றங்களைத் தனித் தனி எழுத்துக்களாக வடமொழியில் திரித்துக் கொண்டனர். வடமொழியில் அறியப்படும், ஸ, ஷ, ச, ஜ, க்ஷ போன்ற எழுத்துக்கள், தமிழ்ச் சகரத்தின் ஒலி மாற்றத்தால் உருவான எழுத்துக்களே. க, ச, ட, த, ப, என்ற வல்லொலித் தமிழ் எழுத்துக்கள், வடமொழியில் அதனதன் வரிசையில் புதிய எழுத்துக்களாயின. மேலை ஆரியத்துக்கு கீழை ஆரியமான சமற்கிருதத்துக்கும் ஒரு தொடர்பு உண்டென்றாலும், மேலை ஆரிய (செர்மானிய) மொழியில் இவ்வாறான எழுத்துக்களும் ஒலிப்புகளும் இல்லை என்பதே, சமற்கிருதம் தமிழினின்றே, இவ்வொலிப்புகளைப் பெற்றுக்கொண்டு, அதனைத் தன்வயப் படுத்திக் கொண்டது எனலாம்.

தொல்காப்பியர் கூறிய தவறான கருத்தை, ஆரியச் சார்பாளர்கள் தங்களுக்கு ஏற்புடையதாக்கிக் கொண்டனர் என்பது ஒரு கருத்து, தொல்காப்பியரை இவ்வாறு எழுதச்செய்து, அதன்மூலம் பயன்பெற்றுக் கொண்டனர் என்றும் ஒரு கருத் துண்டு. இதன் அடிப்படையில் தான், பாவாணரும் தொல் காப்பியரை ஆரியச் சார்பாளர் எனக் கருதினார்.

நன்னூல் உரையாசிரியர் மயிலை நாதர்தரும் பாடலை நோக்குக.

சரிசமழ்ப்புச் சட்டி சருகு சவடி
சளி சகடு சட்டை சவளி – சவிசூடு
சந்து சதங்கை சழக்காதி யிரிடத்தும்
வந்தனவாற் சம்முதலும் வை.

இப்பாடலில் சகடு, சகடம் என்ற சொல்லை ஆசிரியர் பயன்படுத்துகிறார்.[458]

சகடு - சகடம் - சக்கரம் போன்றவைகள் வண்டியோடு தொடர்புடையன. சக்கரம் என்பது, மாந்தன் முதன் முதலில் கண்டுகொண்ட அறிவியல் கண்டுபிடிப்பாகும். முந்திப் பிறந்த மூத்தவினமான தமிழினமே சக்கரத்தையும் கண்டுபிடித்தது. சக்கரம் என்ற சொல்லைச் சக்ரா (Chakra) எனத் திரித்துக் கொண்ட ஆரியர், அதனை ஆரியச் சொல் என்றே கூறிவந்தனர். பாவாணர் சக்கரம் தமிழ்ச்சொல்லே என்று கூறுகிறார். எல்லா சொற்களும் தமிழில் பொருள் குறித்தனவே என்று தொல்காப்பியர் கூறியபடி, சக்கரம் என்ற சொல்லும், தமிழில் உருவானது பற்றி அடியிற்கண்டவாறு அறியலாம்.

சர் - சரு - சருவல் - சருவம் = வட்டமான முகப்பைக் கொண்ட சட்டி.

சருவச் சட்டி என்ற சொல், இன்றும் நாட்டுப்புற மக்களின் வழக்குச் சொல்லாகும்.

சருவம் என்ற சொல்லையும் கூட, அது சராவ என்ற வட மொழிச் சொல்லின் திரியே என்றும் பொய்யுரைத்து வைத்தனர்.

சர் - சருகு - சருக்க - சருக்குதல் = சாய்தல், சரிதல், வளைதல், வழுவுதல், வழுக்கு தல், சருக்குதல் என விரியும்.

சருக்க என்ற தமிழ்ச் சொல், சர்க்கு என மலையாளத்திலும், ஜருகு என கன்னடத்திலும் திரிந்துள்ளதைப் பாவாணரும் சுட்டிக் காட்டுகிறார்.

சருக்கம் என்பது வட்டத்தை குறித்தத் தமிழ்ச் சொல்லே.

சருகு = வட்டவடிவில் தன்னைச் சுருட்டிக் கொண்ட இலை. காய்ந்த இலை. வட்டமாகத் தன்னைச் சுருட்டிக் கொணடிருக்கும் பாம்பைச் சர்ப்பம் என்றே ஆரியர் அழைத்தனர். சருக்கம் என்ற சொல்லின் திரிபாகவும் இச்சொல் உள்ளது.

சருவம் = வட்டமான வாயைக் கொண்ட சட்டி - மேற் கண்ட சொற்கள், சருக்கம் என்ற சொல்லின் நீட்சிகளே.

சருக்கம் + ஆரம் = வட்டமான வளையத்தின் உள்ளே, நடுப்புள்ளியைத் தொடும் கால்கள். இவ்விரண்டு சொற்களும்,

458. நன்னூல், மயிலைநாதர் உரை.

வண்டியின் வட்டையையும், ஆரக் கால்களையும் குறித்தன. சருக்கம் ஆரம் என்ற சொற்களே பிற்காலப் பேச்சு வழக்கில் சக்கரம் என்றாயின. சருக்கிச் செல்லுகின்ற வட்டை, சக்கரம் ஆயிற்று. சருக்கம் என்ற தமிழ்ச் சொல்லினின்றே, Circus (வட்டம்), Circle, Circuit, Circular, Circum ference போன்ற ஆங்கிலச் சொற்கள் பிறந்தன. சருக்கு என்ற சொல்லே, செக்கு எனவும் மாறிற்று. செக்கின்வழி வட்டமாயிருப்பதும், செக்கின் வாய்வட்டமா யிருப்பதும், சருக்கு என்ற சொல் அதற்குப் பொருத்தமானதே.

செக்கில் அறைக்கப்பட்ட கரும்புச் சாற்றின் கட்டிகளே வெல்லக்கட்டிகளாயின. தொல்தமிழர் கருப்பட்டியையே இனிப்புக்குப் பயன்படுத்தினர். செக்கு + அறை + கட்டி என்பது வெல்லத்துக்குப் பொருத்தமான பெயராகும். செக்கறைக்கட்டி என்பதே சர்க்கரைக் கட்டியாகத் திரிந்தது. சுருக்கமாகச் சர்க்கரை எனப் பட்டது. சக்கரை என்ற தமிழ்ச் சொல், சுக்கார் என்ற (Sukar) அரபு மொழியில் சொல்லப்பட்டுள்ளது. இது சக்கரை என்ற சொல்லின் திரிபே. சுகார் - சுகர் (Sugar) என ஆங்கிலத்தில் திரிந்தது. சுகார் என்ற அரபுச் சொல்லே, சக்கரை என்று தமிழில் திரிந்ததாகக் கூற இயலாது. ஏனெனில் அரபு நாடுகளில், கரும்போ, பனையோ விளைவது இல்லை. எனவே அவர்களுடைய சுகார் என்ற சொல், மூலச் சொல்லாக இருக்க வாய்ப்பில்லை. எனவே, சக்கரை - Sukar - Sugar என்று நீண்டது எனக் கொள்க.

செக்கு (oil press or cane press) எனும் தமிழ்ச் சொல்லி னின்றே, Cycle என்ற ஆங்கிலச் சொல் திரிந்தது. வலம் என்ற தமிழ்ச் சொல், சுற்றுதல் என்ற பொருளைக் கொணடது. வல் என்ற வேர்ச் சொல்லினின்றும் நீண்டது.

வல் என்ற சொல்லுக்கு விரைவு என்ற பொருளும் உண்டு. வலசை = ஓடுதல்.

வல் - வலி = நகர்த்துதல், வலித்தல் என்பது படகைத் துடுப்பு கொண்டு ஓடச் செய்தல் வல் என்ற தமிழ் மூலச் சொல்லே, Wheel என்று ஆங்கிலத்தில் திரிந்தது.⌖

சக்கரக்கை மன்னுயிர் முதல்வன் – மணிமேகலை.

சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர் – நாலடியார்.

---

⌖ வில் - வளைவு. வில் என்பதும் wheel எனப்பட்டது.

செக்கு என்ற சொல்லே, சக்கு - சக்கட - சகடம் என்றவாறு விரிந்தது.

சகடம் = வண்டி, ஊர்தி, தெலுங்கில் செக்கடா எனப் பட்டது. இந்தியில் ஜட்கா எனப்பட்டது. சக்கரத்தின் அல்லது செக்கின் பெயரையே, வண்டிக்கும் ஏற்றிச் சொன்னது சினை யாகு பெயர் என்று கூறுவர். தமிழ் இலக்கியங்களும் சகடம் என்ற சொல்லைப் பெருமளவில் பயன்படுத்தியுள்ளன.

பெருஞ்சகடு தேர்காட்ட – பெரியபுரணம்[459]

வானூர் மதியஞ் சகடையை – சிலப்பதிகாரம்[460]

சகடமும் தண்டார் சிவிகையும் பண்ணி – பரிபாடல்[461]

அருங்கரை நின்ற வுப்பெயர் சகடம் – குறுந்தொகை.[462]

சகடு - சாகாடு என்றும் சொல்லப்பட்டது.

பீலிபெய் சாகாடும் – திருக்குறள்.[463]

சகடு - சகடை என்றும் கூறப்பட்டது.

சகடையோ டார்ந்த வன்றே – கம்பராமாயணம்[464]

சகடு - சாடு என்றும் உரைக்கப்பட்டது.

குறுஞ்சாட் டுருளை – பெரும்பாணாற்றுப்படை.[465]

மேற்கண்ட அளவில் சொல்லப்பட்ட சகடம் தமிழ்ச் சொல்லே என்பது தெளிவு.

ОOO

---

459. பெரியபுரணம், திருநா. 6.

460. சிலப்பதிகாரம், 1:50.

461. பரிபாடல், 10:17.

462. குறுந்தொகை, 165:3.

463. திருக்குறள், 476:1.

464. கம்பராமாயணம், பிரமாத். 5.

465. பெரும்பாணாற்றுப்படை, 188.

## 35

## சூலி

நீலி, சூலி, காளி என்ற சொற்கள் யாவும் கொற்றவையைக் குறித்துச் சொல்லப்பட்ட தமிழ்ச் சொற்களே. கொல்லும் பாவை, கொற்பாவை - கொற்றவை எனப்பட்டது.

> அமரி குமரி கவுரி சமரி
> சூலி நிலி மாலவற் கிளங்கிளை – சிலப்பதிகாரம்[466] 12:67–68.

> கானக முகந்த காளி தாருகன் – சிலப்பதிகாரம்.[467] 20:39.

மேற்கண்ட சொற்கள் யாவும் கொற்றவையைக் குறித்த தமிழ்ச் சொற்களே. காட்டில் அமர்ந்திருப்பவள் அமரி எனப் பட்டாள். கும்மெனத் திரண்டிருந்த உருவத்தைப் பெற்றிருந்த தால் குமரி எனப்பட்டாள். குமரியைக் குமாரி என்று வட மொழியாளர் திரித்துக் கொண்டனர். கவுரி என்பது திறந்த வாயையுடைய, தொங்கும் நாக்கைக் கொண்டு, எதையும் கவ்வக் காத்திருப்பவள் என்ற பொருள் பற்றியது. கவ்வுதல் என்ற தமிழ்ச் சொல்லே, கவுரி - கௌரி என்று வடசொல்லில் திரிந்தது. சமர் = போரிடும் அல்லது போர்க்குணம் கொண்ட தலைவி. நீலி = நீலம் என்பது கருமை நிறமே. காளம் என்பதும் கருமை நிறமே. மாலின் தங்கை என்று காளியைக் குறித்தது பிற்கால ஆரிய வழக்கு. மால் = கறுப்பன், மாலின் தங்கையும் கறுப்பியே.

தொடக்க காலத்து ஆரியர்களுக்கும் பெண் தெய்வங்கள் இருந்ததில்லை. அவர் தமிழரோடு கொண்ட உறவின் அடிப் படையில் தமிழ்த் தெய்வமான சூலியையும் தம் முடையவ ளாக்கிக் கொண்டனர். ஆரியர்களில் பிற்காலத் தெய்வங்களான

---

466. சிலப்பதிகாரம், 12:67-68.

467. மேலதே, 20:39.

உஷா, உமா, சக்தி, பார்வதி, துர்க்கா போன்ற பெண் தெய்வங்கள் கொற்றவையின் விரிவாக்கப் பெயர்களே ஆகும். இலெட்சுமி என்ற மாலின் மனைவியும் கூடப் பிற்காலத்தில் உருவக்கப் பட்டவளே. இல் - இல்லம் - இல்லத்திலுள்ள அம்மா என்ற பொருளில் உருவான வடசொல்லே இலெட்சுமியாகும். இல் = வீடு, என்பதையே வேராக்கொண்டதே இச்சொல்லாகும்.

சரசுவதி என்ற பெயரும் பிற்காத்தில் ஏற்பட்ட சூட்டப் பட்டதே. சரசு என்ற சொல்லுக்கு நீர் நிலை என்றே பொருளாகும். சுரத்தல் - ஊற்று, நீர்ப்பெருக்கம் என்றவாறு, நீரோடு தொடர் புடையதே சுர என்ற தமிழ்ச் சொல்லாகும். சர என்ற சொல்லின் நீட்சியே சர - சரசு என்பதாகும். பிற்காலத்தில், அறிவின் சுரத்த லாகக் கொண்டு, கல்விக் கடவுளாகவும் சொல்லப்பட்டாள். உழை - உஷா எனவும், அம்மா - உமா எனவும் திரிந்தன.

பதி என்பது ஆணைக் குறித்தும் வதி என்பது பெண்ணைக் குறித்தும் சொல்லப்பட்ட வடசொற்களாகும். உண்மையில் இவையிரண்டும் தமிழ்ச் சொற்களே. பதி - பதிதல் - பதிவு = பொருந்துதல் என்ற பொருளில், பெண்ணோடு பதிந்தவன் பதி எனப்பட்டான். வை என்ற தமிழ்ச் சொல்லுக்கு, வைத்தல், பொருத்துதல் என்றே பொருளாகும். ஆணோடு அல்லது பதியோடு வைக்கப்பட்டவள் வைதி எனப்பட்டாள். வைதி - வதியாயிற்று அறிவைச் சுரக்கும் பெண் தெய்வம், சுரசுவதி எனப் பட்டாள். இச்சொல்லின் வடமொழித் திரிபே சரசுவதி என்ப தாகும். இல்லத்தில் வாழ்ந்தவளும் (திருமாலின் நெஞ்சிலும்) எண்ணற்ற செல்வத்தை (இலக்கம் - எண்ணமுடியாத என்ற பொருளில்) அளித்தவள், இலக்குமி எனப்பட்டு, இலெட்சுமி யானாள்.

துர்க்கை என்றதும் தமிழ்ச் சொல்லே. துள் என்ற வேர்ச் சொல்லின் நீட்சியே. துள் - துரு - துருத்து - துருத்தி = நீண்டிருப்பது, துருத்திக் கொண்டிருப்பது. செந்நாவை வெளியே துருத்திக் கொண்டும், பலகைகளைக் கொண்டிருப்பதும் பற்றியே துருக்கை எனப்பட்டாள். துருக்கை துர்கா எனத் திரிந்தது. அக்காலத்தில் போருக்குப் பயன்பட்ட கருவிகள் அனைத்தை

* இல் என்னும் தமிழ்ச் சொல், வீடு - நாடு - உலகம் என்ற பொருளில் விரியும். Lakshmi = The one who is the mother of the earth - An Encyclopedia of Hindu Deities, p. 295.

யும், துருக்கையின் கையில் கொடுத்தனர். சில துருக்கையின் உருவங்கள் எட்டுக் கைகளையும், சில பதினாறு கைகளையும் கொண்டுள்ளன. இதற்கு மேலும் போர்க்கருவிகள் இருந்திருப் பின் இன்னும் பல கைகளைத் துருக்கைக்கு அளித்திருப்பர்.

துள் - துரு = வெளியே பொங்கும் இரும்பின் கழிவு.

துரு - துருத்தி = பெருவயிற்றுக்காரனையும், அது துருத்தி யிருக்கும் கரணியத்தால் துருத்திக்காரன் என்பது உலக வழக்கு.

துருத்தி = உலைக்களத்தில் உப்பிப் பெருத்திருக்கும் காற்றுக் கருவி.

துருத்தி = ஆற்றின் இடையே உள்ள மேடான
தீவுப் பகுதி அல்லது மேட்டுப்பகுதி.

எனவே கொற்றவை, துருக்கை, நீலி, அமரி, கவுரி, காளி, சமரி போன்ற அனைத்துச் சொற்களும் தமிழ்ச் சொற்களே.

சூல் என்பது, சினை - கருப்பம் என்ற பொருளில் சொல்லப் பட்ட தமிழ்ச் சொல்லாகும். சிவனின் கையிலுள்ள சூலம், மூன்று கூர்மையான ஈட்டி போன்ற முனைகளைக் கொண்டதே. சூலம் என்பதை ஆண்குறி என்றே சொல்ல வேண்டும் உயிர்களைப் படைப்பவன் சிவனே என்பதால், அவனே முழுமுதற் கடவுள் எனப்பட்டான். அதுபற்றியே, படைப்புத் தொழிலின் உருவக மாகச் சூலமும், இலிங்கமும் சிவனோடு தொடர்புபடுத்தப் பட்டன. சூலைத் தருவது சூலம் (ஆண்குறி) எனப்பட்டது. படைப்புக் கடவுளான சிவன், அழிப்புக் கடவுளாக ஆரியரால் சொல்லப்பட்டான். படைக்கும் பெருமைமிக்க தொழிலை, பிரம்மாவுக்குக் கொடுத்து, அவனே முழுமுதற் கடவுளான பிரசாபதி என்றும் கூறினர். சிவனைப் படைப்புக்கடவுளாக ஏற்பது ஆரியருக்கு இழுக்கு என்பதாலும், சிவன் தமிழ்க் கடவுளான தாலும், சிவனுக்கு அழித்தல் தொழிலைக் கொடுத்தனர்.

சிவன் கையிலுள்ள சூலம் ஆண்குறியின் உருவகம் என்பது போல், அச்சூலத்தில் கட்டப்பெற்றிருக்கும் உடுக்கையைப் பெண் குறியாக உருவகம் செய்தனர். உடுக்கையின் இரு பக்கங் களைத் தொடைகளாகவும், நடுப்பகுதியைப் பெண் குறியாகவும் குறித்தனர். இவ்வளவு படைப்பு உண்மைகளைத் தரும் சூலத்தை யும் இலிங்கத்தையும், அதன் பொருளுணராமலேயே ஆரியர் ஏற்றுக் கொண்டு, அழிப்புக்கடவுளாகச் சிவனை அறிவித்தனர். பிரம்மா வுக்குப் படைப்புத் தொழிலைக் காட்டுவதற்கான குறிகள் எதையும் ஆரியர்கள் கொடுக்கவில்லை, பிரம்மா உலகத்தைப்

படைத்தான் என்பதைவிட, பிரம்மாவை ஆரியர்கள் படைத்தார்கள் என்பதே உண்மையான செய்தியாகும். பிரம்மாவைப் பற்றி இரிக்கு வேதம், எந்தவொரு நிகழ்வையும் குறிப்பிடவேயில்லை.

சுள் என்ற வேர்ச் சொல்லே, சூல் என்ற சொல்லைத் தந்தது. சுள் - சுர் - சூர் - சூல் = சினை உருவாகக் கரணியமான உயிரணு (ஆணுக்குரியது)

சுள் - சுர் - சுருங்கு - சுரும்பு = அளவில் மிகச் சிறியதாக உள்ளதைக் குறிப்பது.

சினை என்பதும், கண்ணுக்குத் தெரியாத சிறிய பொருளே. சூல் என்பதற்கும் சினை என்பதற்கும் வேறுபாடு உண்டு. சூல் முற்றியதே சினையாகும். சினை முற்றியதே கருவா நம். கரு முற்றியதே உயிர் உடலாகும். எனவே உயிருக்கும் மூலம் சூல் எனப் படுவதே.

சுல் - சூல் = மையப் புள்ளி, சுலவு = சுற்றி வருதல்.

சுல் - சுலாவு = சுழற்சி (whirling). சுழலும் சூறாவளியில் தோன்றும் கண் (eye) என்பதே சூல் எனவும் சொல்லப்படும்.

சூல் = உடலில் தோன்றும் நோய். பித்த, வாத, சிலேட்டுமச் சூலை என்று வடமொழியில் உரைத்தனர்.

சூலி = சூலை ஏற்றுக்கொண்ட பெண். சூலைத் தந்தவனின் மனைவி.

சூலினி = பெண்குறியை ஒத்த வெற்றிலை.

சூல் உளைதல் = பேறுகாலத்துத் தோன்றும் வலி.

சூற் சங்கு: முத்துக்களை தன்னகத்தே கொண்டுள்ள சங்குகள்.

சூல் முகில்: உடன் பெய்யவிருக்கின்ற மழையின் கருமுகில்.

சூல் - சூலம் என்ற தமிழ்ச் சொற்களுக்கு ஏராளமான எடுத்துக்காட்டுகளைத் தமிழ் வழக்கிலிருந்தும், இலக்கியங்களிலிருந்தும் எடுத்துக்காட்டலாம். சூல் - சூலம் என்ற சொற்களுக்கான வேர்ச்சொல்லும் தமிழிலேயே உள்ளது.

சூலியைத் துருக்கை என்றதும் தமிழ் வழக்கின்படியே கூறப்பட்டதாகும். துருத்துதல் என்ற பொருளில்,

வீமலி கான்யாற்றின் துருத்தி குறுகி – பரிபாடல்,[468]

---

468. பரிபாடல், 10:30.

காலையுங் காவுங் கயமுந் துருத்தியுந்தேன் – பரிபாடல்,[469]

விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தி – சிலப்பதிகாரம்,[470]

போன்ற இலக்கியங்கள் கூறும் விளக்கமே, துருக்கை என்ற வடசொல்லுக்கு மூலமானவைகளாகும். சூலியைப் பற்றிக் குறிஞ்சிப்பாட்டும்,[471] நெடுநல்வாடையும்[472] கூடப் பேசுகின்றன.

சூல் கொண்டவளை கருப்பவதி என்று வடமொழி கூறுகிறது. கர்ப்ப என்ற வடசொல், கரு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. தீவக்குறை என்றவாறு சொல்லப்படுவதை, தீபகர்ப்பம் என்று வடமொழியில் உரைத்தனர். கர்ப்பிணிப் பெண்ணின் வயிறு போன்று நீண்டு வளைந்திருந்ததே இதற்குக் கரணியம் ஆகும். இதனைக் கிரேக்கம் Peninsolos என்றும், ஆங்கிலம் Peninsula என்றும் திரித்துக் கொண்டது. Penin-sula என்ற சொல், பெண் - சூல் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. கடலில் வளைந்து நீண்டிருக்கும் நிலப்பகுதியை பெண்சூலுடன் உருவகம் செய் திருந்தனர். மேற்கண்ட எடுத்துக்காட்டுகளின் வழியில், சூல் என்பது தமிழ்ச் சொல்லே என விளங்கும்.

ooo

469. மேலதே, 16:17.

470. சிலப்பதிகாரம், 10:39.

471. குறிஞ்சிப்பாட்டு, 218:1.

472. நெடுநல்வாடை, 141 - 142.

36

# தண்டு

கோல், கொம்பு, குச்சி, கழி என்றவாறு சொல்லப்படும் கைத்தடியின் மற்றுமொரு தமிழ்ச் சொல்லே, தண்டு என்பதாகும். இதைப் பிராமணன் கையில் கொடுத்து, அதனை வடசொல் லாகக் கூறிவிட்டனர். தண்டால் அடித்து ஒறுப்பது தண்டனை என்றும் சொல்லப்பட்டது. பிற்காலத்தில் ஒறுப்பு அனைத்திற் கும் தண்டனை என்றே வழங்கலாயிற்று. தண்ட காரண்யம் என்ற வடவடுகு நாட்டின் காடு, அவ்வாறே தீயோரை ஒறுக்கும் வகையில், அவர்களை அக்காட்டில் விட்டு விடுவது பற்றியே சொல்லப்பட்டது. வடநாட்டில் கடுங்குற்றவாளிகளை தண்ட காரண்யத்தில் விட்டு விடுவது அவர்கள் வழக்காகவும் இருந்து வந்துள்ளது. ஆரியர்கள் தண்டக அடவியைக் கடந்து தமிழகம் வந்ததற்கு, முன்னோடியாக, இராமன் தண்டக அடவியைக் கடந்ததையே வழியாகப் பின்பற்றினர் என்றும் சொல்லப்படு கிறது. இன்று அறியப்படும் மத்தியப்பிரதேசம் தொடங்கி, கோதாவரி ஆறுவரையிலுள்ள பகுதிகள் தண்டக அடவியாக அறியப்பட்டிருந்தன.

குறிஞ்சி நிலத்தைவிட்டு, முல்லை நில நாகரிகத்துக்குள் நுழைந்த தமிழர்கள், ஆயர்கள் எனப்பட்டனர். ஆடுமாடுகளை வளர்த்த அவர்களின் கையில் எப்போதும் ஒரு கோல் இருந்தது. அக்கோல், ஆயர்களின் அடிப்படையானதாகவும் அமைந்தது. ஆயர்கள் தங்களுக்குள் ஏற்பட்ட தலைமைக்கு, அக்கோலையே ஆளுமையின் உருவகமாக அளித்தனர். முல்லை நில நாகரிகம் விரிவடைந்தபின், மருதநில நாகரிகம் தோன்றியபோது, தங்கள் தலைவனான மன்னன் கையிலும் ஒரு கோலைக் கொடுத்தனர். அக்கோல் ஆயர்களின் கோலைப் போன்றில்லாமல், பொன் னாலும் மணியாலும் செய்யப்பட்டிருந்தது. பொன்னின் சிவப்புக்

கருதியே, அக்கோல் செங்கோல் எனப்பட்டது பொதுவாக அக்காலத்து மக்கள் அனைவரும் தற்காப்புக்காக ஒருகோலைக் கொண்டிருந்தனர்.

இக்கோல் பற்றிய மனுவின் கருத்திலும், வர்ணாசிரமக் கொள்கை திணிக்கப்பட்டது. பிராமணனின் கோல், தலையள வும், சத்தியனின் கோல் கழுத்தளவும், வைசியனின் கோல் மார்பளவும் இருக்கவேண்டும் என வலியுறுத்தப்பட்டது. சூத்திரன் கோலை வைத்துக்கொள்ள தடைவிதிக்கப்பட்டது. தமிழ்நாட்டில் இவ்வாறான வேறுபாடுகள் இருந்ததில்லை. தற்காப்புக்கென கோலை வைத்திருந்ததிலும் சாதிமுறை திணிக்கப்பட்டது, ஆரியர்களின் மனு சட்டத்தால் அறியக் கிடக்கின்றது. **சிலப்பதிகாரத்தில் 22ஆம் அதிகாரத்தில் 15 முதல் 32 வரையிலான வரிகள், இளங்கோவடிகளால் எழுதப் பட்டவையல்ல என்றும், அவை பிற்கால இடைச்செறுகலே என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.**[473] பிராமணனின் பெருமைகளை உயர்த்திக் கூறும் இவ்வரிகளுக்கு, அடியார்க்கு நல்லார் உரை எழுதவில்லை என்பதிலிருந்தே, இவை இடைச் செறுகலே என்பது தெளிவாகின்றது. பிற்காலத்தில் இருந்த பிராமணப் புலவனால் இவ்வரிகள் சேர்க்கப்பட்டுள்ளன.

நன்பகல் வரிவடி யூன்றிய காலினன்
விரிகுடை தண்டே கண்டிகை காட்டம்
பிரியாத் தருப்பை பிடித்த கையினை
நாவினு மார்பினு நவின்ற நூலினன் – சிலப்பதிகாரம்.[474]

என்றவாறு அவ்வரிகளில் உள்ளன. தண்டு பிராமணன் கையி லிருந்ததாகக் கூறப்படுவதை நோக்குக. விரிகுடை, தண்டு, கமண்டலம், தருப்பைப்புல், முப்புரிநூல் என்பன பிராமண னைக் காட்டும் பொருட்களாகவுள்ளன. புல் முதல் மரம் வரை யிலான உயிர்களுக்குத் தரு என்ற தமிழ்ச் சொல் பயன்படுத்தப் பட்டது. மக்களுக்கு அனைத்து வகையான பயன்பாட்டுப் பொருட்களை அவை தருவதால் - தரு எனப்பட்டது. பைப்புல் = பச்சைப்புல், பசும்புல். தருப்பைப்புல் என்பது சரியான தமிழ்ச் சொல்லே. இதனைத் தர்ப்ப என்று வடமொழியில் திரித்துக் கொண்டனர்.

---

473. சிலப்பதிகாரம், அடியார்க்கு நல்லார் உரை, டாக்டர் உ.வே.சா. ப. 490.

474. மேலதே, 22:15-32.

தருப்பையிற் கிடத்தி வாளிற் போழ்து — மணிமேகலை[475] 23:13.

கமண்டலம் என்ற சொல்லும் தமிழ்ச்சொல்லே. சிறிய கலம் என்று பொருள்படும்.

கம் - கம்மு - கம்மல் = குறைகல், சிறிதாதல் என்ற பொருளில் சொல்லப்பட்டது.

பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முறுக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே — குறுந்தொகை.[476] 156

தண்டும் கமண்டலமும் கூறப்பட்டுள்ளன.

தள் என்ற தமிழ் வேர்ச்சொல்லே, தண்டு என்ற சொல்லைத் தந்தது.

தள் - தளிர் - தளிர்ப்பு = வெளிவருதல், நீளுதல், வளர்தல்.

தளிர்மேல் நிற்பினும் தட்டாமல் செல்லா — நாலடியார்.[477]

தள் - துள் - துள்ளன் = உயரே நீளுதல், எழும்புதல்.

உள்ளூர்க் குரீஇத் துள்ளு நடைச் சேவல் — குறந்தொகை.[478]

தள் - துள்ளு - துளிர்ப்பு = தளிர்ப்பு என்ற சொற்பொருளையே கொள்க.

துளிதலைக் தலைஇய தளிரன் னோளே — குறுந்தொகை[479]

தள் - தடி - தடித்தல் = அளவில் பெரிதாகுதல், தடி = கோல்.

தள் - தடி - தண்டி - தண்டு = நெருங்கு, விரும்பு, இவைகளின் நீட்சி.

தண்டித் தண்டிற் றாய்ச்செல் வாரும் — பரிபாடல்.[480]

தண்டு = நீட்டிக் கொண்டு வெளியே வரும் கொம்பு. தடித்த கழி.

---

475. மணிமேகலை, 23:13.

476. குறுந்தொகை, 156.

477. நாலடியார், 355:1.

478. குறுந்தொகை, 85:2.

479. மேலதே, 227:7.

480. பரிபாடல், 10:100.

தண்டு - தண்டம் = குற்றத்துக்கான ஒறுப்பு. தண்டினால் அடித்தது பற்றி வந்தது.

**கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த**
**னடு முரண் தேய்க்கு மரம்** – **திருக்குறள்.**[481]

தண்டம் = குற்றத்திற்கான ஒறுப்பு என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது.

**சகடமுந் தண்டார் சிவிகையும் பண்ணி** – பரிபாடல்.[482]

தண்டு பிராமணன் கையிலிருந்ததால், அதனை வடசொல்லாக்கிக் கொண்டு, அதுவே மூலச்சொல் என்றும் உரைத்தனர்.

தள் என்னும் வேர்ச்சொல்லினின்றும் நீண்ட தண்டு என்ற தமிழ்ச் சொல், நீண்ட தடித்த, வளர்ந்த மரக் கொம்பைக் குறித்த தாகும். மேலும் தள் எனும் வேரினின்றே உயர்தல், எழுதல், நீளுதல், வெளிவருதல், தடித்தல், ஒறுத்தல் போன்ற சொற் களும் நீண்டன என்பது தெளிவு. தண்டு தமிழ்ச்சொல்லே.

○○○

---

481. திருக்குறள், 567.

482. பரிபாடல், 10:17.

## 37

# தூதன்

த்வூத் (Dwooth) என்ற வடமொழிச் சொல்லே, தூது என்று தமிழில் திரிந்ததாகக் கூறினர். தூது தமிழ்ச்சொல் அல்ல வென்றும் உரைத்தனர். ஒரு செய்தியை எடுத்துச் செல்வது தூது எனப்பட்டது. அன்னத்தையும், தென்றலையும், புறாக்களையும், கிளிகளையும், திங்களையும், கடவுளையே கூட தூதுவிட்ட தொன்மக் கதைகள் தமிழில் உள்ளன. அகத்திணையோடு தொடர்புடைய இச்சொல், பிற்காலத்தில் செய்தி பரிமாற்றம் செய்பவர்கள் அனைவருக்கும் ஏற்றிச் சொல்லப்பட்டது. தமிழகத்தில் முதன்முதலில் ஆரியர் செய்த தொழிலே, தூது செல்லும் பாங்கத் தொழிலாகும். தலைவனின் உள்ளக் கிடக்கை யைத் தலைவிக்கு அறிவித்து, தலைவியைத் தலைவன்பால் திருப்பும் தொழிலே பாங்கத் தொழிலாகும். பாங்கத் தொழிலில் ஆரியர் ஈடுபட்டபோது, தூது என்ற சொல்லை அறிந்து கொண்டனர். தூது என்ற வடசொல்லுக்கான வேர்ச்சொல், வடமொழியில் இல்லை என்பதே, தூது தமிழ்ச்சொல் என்பதை யுணர்த்தும்.

ஊ என்ற தமிழின் உயிர்நெடிலெழுத்து, இயற்கையாகத் தோன்றியதாகும். ஆ, ஈ, ஊ, ஏ, ஓ போன்ற உயிர் நெடில்கள், ஏதோவொரு செய்தியைத் தொலைவில் இருப்பவர்க்கு அறிவிக்கவே தோன்றின. தம் உள்ளத்தில் எழும் உணர்வுகளைத் தம்மை அறியாமலேயே வெளிப்படுத்தும் ஒலிகளே, மேற்கண்ட எழுத்துக்களின் ஒலிகளாகும் என்று பாவாணர் கூறுகிறார். மகிழ்வு, நோவு, வியப்பு, இழிவு, இரக்கம், தெளிவு ஆகியவற்றின் உணர்வுகள், இவ்வொலிகள் வாயிலாக வெளிப்படுத்தப்பட்டன

என்பதும் பாவாணரின் கருத்தாகும்.[483] தமிழ் மெய்யான த் உடன் இணைந்த ஊ என்ற உயிர் தருவதே தூ என்ற உயிர்மெய் எழுத்தாகும்.

ஊ என்ற ஒலி, தொலைவில் உள்ள ஒருவருக்குச் செய்தி யொன்றைக் கொடுத்தது.

கூ கூ என்னும் ஒலி, கூவியழைக்கப் பயன்பட்டது. கூ-கூவு கூகை = கூவும் பறவை. சூ சூ என்னும் ஒலி, ஒன்றை விரட்டு வதற்குப் பயன்பட்டது. சூச்சூ, சீச்சீ போன்றவை. பூ பூ என்னும் ஒலி, வாயிலுள்ள காற்றை ஊதித்தள்ளி, ஒலிக்கப்பட்டது பூப்பூ. தூ தூ என்னும் ஒலி, வெளியே ஒன்றைத் தள்ள அல்லது செலுத்தப் பயன்பட்டது. தூத்தூ என்று உமிழ்வது, ஒரு வகை யிலான வெளியேற்றமே. ஓரிடத்தின் பொருளை தொலைவில் தள்ளுவதே தூதூ என்ற சொல்லுக்குப் பொருளாய் அமைந்தது. தூத்தூ என்றவாறு, தூற்று என்ற சொல் நீண்டது. தூற்று = பதர்களை வெளியேற்று. தூற்று = ஒருவனின் புகழுக்கு இழக்கு உண்டாக்கு. தூற்றுதல் தொலைவில் படர்ந்து சென்று அவ்வேலையைச் செய்தது. மற்றவர்மேல் வெறுப்புகொண்ட பெண்ணொருத்தி, மண்ணை வாரித் தூற்றுவது என்பது தமிழ் நாட்டின் வழக்காகும்.

தூதூ - தூது - தூறு - தூற்று = முறத்தால் தவசங்களைத் தூற்றியெடுத்தல், பழி சொற்களைப் பரப்புதல். தூறு பேசுதல் என்பதே, அவ என்ற சொல் இணைக்கப்பட்டு, அவதூறு என்று பிற்காலத்தில் உணரப்பட்டது.

தூ - தூப்பு - துப்பு = வாயினின்றும் நீரை வெளியேற்றுதல்.

தூக்கம் = நீண்ட வேளை அயர்தல், உறங்குதல்.

தூக்கு = நீண்ட கயிறு, உறி, தூக்கிச் செல்லப் பயன்படும் கருவி.

தூண் = நீண்ட உயரமான முட்டுக்கால்.

தூண்டில் = நீண்ட கயிற்றைக் கொண்ட மீன்பிடிக்கும் கருவி.

தூம்பு = நீண்டு வளர்ந்துள்ள மூங்கில்.

தூர் = ஆழத்தில் உள்ள கலங்கள்.

தூவு = நீள வாக்கில் தெளித்தல்.

தூவி = மயிலின் நீண்ட தோகை.

---

483. முதற்றாய் மொழி ஐ, ப. 13.

தூது = நீண்ட தொலைவிற்கு அனுப்பப்படும் செய்தி.

தூது + அவன் = தூதுவன், செய்தியைக் கொண்டு செல்பவன்.

மேற்கண்ட சொற்களில், தூ என்ற எழுத்து, நீண்ட, நெடிய, தொலைவு ஆகிய பொருள்தரும் சொற்களின் முதலாக வருவதை நோக்குக. தூ என்பது தொலைவு. தூ + தூ = நெடுந் தொலைவு. இருமுறை சொல்லப்பட்டது தொலைவின் நெடிய பண்பைக் காட்டுவது. தூதூ என்ற சொல்லே பிற்காலத்தில் தூது என்ற வழக்கில் வந்தது. தூர் என்ற வடசொல்லும் தொலை வைக் குறித்ததே. தூ + ஊர் = தூவூர் = தொலைவிலுள்ள ஊர். தூவு என்ற தமிழ்ச்சொல், தொலைவு என்ற பொருளோடு தொடர்புபடுவதை நோக்குக. தூவூர் - தூர் என்றும் தமிழில் சொல்லப்பட்டது.

தூர் - தூரி = தொலைவிலுள்ள இடத்துக்குச் செல்லப்
பயன்பட்ட எருது, நீண்ட ஊஞ்சல்.

தூர் = நிலத்தில் நீண்ட தொலைவு செல்லும் வேர்.
ஆழத்தில் படியும் வண்டல்.

தூர் என்ற தமிழ்ச் சொல், தொலைவு என்ற பொருளோடு
தொடர்புடைய தமிழ்ச் சொல்லே.

இச்சொல்லை, தூர் என்றே வடமொழியில் இணைத்துக் கொண்டனர்.

தூர்தர்ஷன் = தொலைக்காட்சி. தர்ஷன் = காட்சி. அதனைத் தரிசனம் என்றவாறு, பிராமணர்கள் தமிழில் மாற்றம் செய்து, கடவுளைக் காண்பது என்ற பொருளில் உரைத்தனர்.

தரி என்ற தமிழ்ச் சொல்லுக்கு, நிலையான இருப்பு என்று பொருள்.

தரி கொள்ளுதல் = நிலையான குடியிருப்பு.
(To become settled in a place)

தரி கொள்ளவில்லை = ஓரிடத்தில் நில்லாமல்
அங்கு மிங்கும் அலைவது.

தரித்தல் = நிற்றல், அணிந்து கொள்ளுதல்.

தரித்தல் என்பது, நிலையாகக் கோவிலில் (வைக்கப்பட் டிருந்த) கடவுள் குடியிருப்பது என்ற பொருளாகி, அக்கடவுளைக் காண்பது தரிசனம் எனப்பட்டது.

தரி என்ற தமிழ்மூலச் சொல்லினின்றும் தர்சன் என்ற வடசொல் பிறந்தது. பிற்காலத்தில், நிலையாக நின்று காட்சி தருபவை அனைத்தும் தர்ஷன் என்ற பெயரால் சொல்லப்பட்டன.

மெலிந்தில ணாம்விடற் கமைந்த தூதே – குறுந்தொகை.[484]

பண்புடைமை தூதுரைப்பான் பண்பு – திருக்குறள்.[485]

இளங்கால் தூதன் இசைத்தனன் ஆதலின்
– சிலப்பதிகாரம்.[486]

தண்ணந் தூறைவன் தூதொடும் வந்த – நற்றிணை.[487]

தூது, தூர் போன்றவை தமிழ்ச் சொற்களே என்க.

○○○

484. குறுந்தொகை, 182:7.

485. திருக்குறள், 681:2.

486. சிலப்பதிகாரம், 8:9.

487. நற்றிணை, 167:5.

38

## மதி – திங்கள் – மாதம்

மதியின் சுழற்சியை வைத்துக் கணக்கிடப்பட்ட நாட்காட்டி, மாதம் என்று திங்களைக் குறித்தது. மதி என்ற சொல்லின் நீட்சியே மாதம் எனப்பட்டது. மதி - மாதம் இரண்டும் தமிழ்ச் சொற்களே. மாதம் என்ற தமிழ்ச் சொல்லை, மாசம் என்று வடமொழி திரித்துக் கொண்டு, அதுவே மூலச்சொல் என்றும் கூறுவது, தவறான செய்தியே. நகரிய நாகரிகத்தில் வாழ்ந்திருந்த தமிழர், நிலையான குடியனராய் இருந்ததும், நிலைக் குடியினரே, நாட்காட்டிகளைத் தங்களது காலக் கணக்குக்கு ஏற்படுத்திக் கெண்டதும், இமைப் பொழுதினின்றும், ஆண்டுக் கணக்கு வரையில் வரையறுத்துக் கொண்டதும் இக்காலக் கணக்குகளை விளக்கும் சொற்கள் எல்லாம் தமிழ்ச் சொற்களாக இருப்பதும், நாட்காட்டியை உருவாக்கியவர் தமிழரே என்பதை விளக்கும். நாளொரு இடமும் பொழுதொரு புல்வெளியும் நாடிச் சென்று கொண்டிருந்த நாடோடி ஆரிய இனத்திற்கு, இவ்வாறான நாட்காட்டி முறைகள் தேவைப்பட்டிருக்கவில்லை. இந்த வரலாற்றைத் தலைகீழாக மாற்றி, ஆரியமே அனைத்தையும் உலகிற்களித்தது என்பது, திட்டமிட்ட சூதும், அறிவுத் திருட்டு மாகும். தமிழர் நாட்காட்டியின் பெயர்கள், கணக்குகள் அனைத்தையும் தமது என்றே கூறிக் கொள்ளும் ஆரியர், அச் சொற்களுக்கான மூலச் சொற்கள் தமிழில் இருப்பதை அறியவு மில்லை, பிற்காலத்தில் இவைகளையெல்லாம் ஆய்வு செய்து கண்டுபிடித்து விடுவார்களே என்ற உணரவுமில்லை. ஈராயிரம் ஆண்டுகளாக, ஆரியர் சொன்னவைகளையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தமிழர்கள், இன்று ஆரியரை நோக்கி எதிர்க் கேள்வி கேட்கும் போது, நிலை தடுமாறுகின்றனர். உலகிற்கே வானியலைக் கற்றுத்தந்த தமிழன், நாட்காட்டியை அறிமுகப் படுத்திய தமிழன், ஆரியச் சூதில் அடிமைப்பட்டுப் போனான்.

சோமம் என்ற ஆரியச் சொல்லே, நிலவைக் குறித்துச் சொல்லப்பட்டது. உலகின் மொழிகளில் நிலைவைக் குறித்த சொற்கள் அனைத்தும் தமிழ் மூலத்தைக் கொண்டவைகளே. சோம்பு - சோம்பல் என்ற தமிழ் மூலச் சொல்லே, சோம என்று வடமொழியில் திரிபுபட்டது. சோம்புதல் = மயங்குதல், மதி தடுமாறுதல் என்றவாறு பொருள் விரியும். மதியை மயக்கிய தாலும், வெள்ளுவா (முழுநிலவு) நாளில் வடிக்கப் பட்டதாலும், சோமம் என்றே ஆரியரின் தேறல் அழைக்கப்பட்டது. இந்த சோமக்கள்ளும் கூட, ஆரியர்களின் முன்னோர்களால் வடிக்கப் பட்டு, குடிக்கப்பட்டதாகத் தகவல் இல்லை. சிந்து வெளித் தமிழர்களே இக்கள்ளை வடிக்க ஆரியருக்குக் கற்றுக் கொடுத் திருக்க வேண்டும். ஏனெனில் சோமம் என்ற தமிழ் மூலச் சொல்லைக் கொண்டே அம்மது அழைக்கப்படுவதால், அது தமிழரின் தேறலே என எண்ண இடமுண்டு.

தொன்மைக் காலத்தில், கார்காலம் தொடங்கி அடுத்த கார்காலம் வரையிலான காலத்தை ஓராண்டாகக் கணக்கிட்ட முறையும் தமிழகத்தில் இருந்துள்ளது. இக்கால அளவும் விண்மீன்களை அடிப்படையாகக் கொண்டே கடைப்பிடிக்கப் பட்டன. வருடை என்ற தமிழ்ச்சொல், ஆட்டையும் விண்மீனை யும் குறித்தது. மாரிக்காலத்து வருடை மீனே, வருஷ என்று வடமொழியில் திரிக்கப்பட்டு, அது மழையையும் குறித்தது.

வருடையைப் படிமகன் வாய்ப்பப் பொருடெரி – பரிபாடல்.[488]

வருடை - ஆடு அல்லது மேழ ஓரை. திங்களை மைய மாகக் கொண்ட ஆண்டுக் கணக்கே, தமிழ்நாட்டில் பரவலாக இருந்தது. காருவா நாள் தொடங்கி (மறைநிலவு நாள்) மறு காருவா வரையிலான 29 அல்லது 30 நாட்களை ஒரு திங்களாகக் கொண்டிருந்தனர். இக்கணக்கில் நாட்கள் சில எஞ்சின. எனவே பிற்காலத்தில் ஞாயிற்றின் சுழற்சியையும் கணக்கில் கொண்டனர். கடைக்கழகக் காலங்களில் ஞாயிறு - திங்கள் இணைந்த மாதக் கணக்கு வழக்கில் இருந்தது. திங்கள் தனது சுற்றுப்பதையில், நாளுக்கு ஒரு மீனாகத் தங்கி, 27 மீன்களையும் கடந்து செல்வதே ஒரு மாதம் எனப்பட்டது. இவ்வாறு 12 முறைகள் கொண்ட சுற்று ஓராண்டாகக் கணக்கிடப்பட்டது. திங்கள் 12 முறைகள் 27 மீன்களைச் சுற்றிவருவதும், ஞாயிறு இம்விண்மீன்

488. பரிபாடல், 11:5.

கூட்டங்களை ஒரு முறை சுற்றி வருவதும், ஒரே கால அளவாக உள்ளது. எனவே, நாட்காட்டி ஞாயிறு - திங்கள் சழற்சிகளைக் கொண்டே, தமிழர்களால் உருவாக்கப்பட்டன. ஞாயிற்றின் சுற்றுக்காலம், 365 நாள் - 6மணி - 9நிமையம் - 9.6 நொடிகளாகும். மதியைக் குறித்த சோம எனும் வடசொல், தமிழ் மூலத்தைக் கொண்டிருந்தது போல் சூர்ய என்ற ஞாயிற்றைக் குறித்ததும் தமிழ் மூலத்தைக் கொண்ட சொல்லே.

சுள் எனும் வேர்ச் சொல்லினின்று நீண்டதே
சூர்ய என்ற வடசொல்லாகும்.
சுள் - சுட்டெரிப்பது. சுள்ளெனச் சுடும்
வெயில் பற்றியது வழக்குச்சொல்.

சுள் - சுர் - சூர் - சூர்ய என்று வடமொழியில் திரிந்தது. உதய சூரியன் என்ற சொல்லும் தமிழ் மூலச் சொல்லே. உதை என்ற தமிழ் மூலச் சொல்லுக்கு, தள்ளு - உயர்த்து நகரவை என்ற பொருள் நீட்சியுண்டு. உதை - உதைய - உதயா என்று திரிந்தது.

தொல்தமிழர் கொண்டிருந்த திங்கள் நாட்காட்டியையே, யூதரும் எகிப்தியரும் பாபிலோனியரும் கொண்டிருந்தனர். தொடர்ந்து இசுலாமியரும், கிறுத்துவ சமயத்தினரும் கூட, திங்கள் ஆண்டுக் கணக்கைக் கடைப்பிடித்து வருகின்றனர் இசிரா (Hijira) என்ற இசுலாமிய ஆண்டு திங்களை அடிப்படையாகக் கொண்டதே. உயிர்த்த ஞாயிறு (Easter Sunday) என்ற கிறித்துவப் பெருவிழா திங்கள் கணக்கை அடிப்படையாகக் கொண்டே, கொண்டாடப்பட்டு வருகின்றது.

தமிழர்களின் கிழமைக்கு (வாரத்துக்கு) ஏழுநாட்கள் என்ற கணக்கும், ஆண்டுக்குப் பன்னிரு திங்கள் என்ற கணக்கும் யூதர்களால கடைப்பிடிக்கப்பட்டு வந்த செய்தியை விவிலியம் தெளிவாகக் காட்டுகிறது.[489] பாபிலோனியத் திங்கள் பன்னிரெண்டும், தமிழ்ப் பெயர்களையே மூலமாகக் கொண்டுள்ளன. பாபிலோனியர், திங்கள் கணக்கில் வரும் கூடுதல் நாட்களை, 13வது மாதமாகக் கடைப்பிடித்தனர். இதனைப் பதின்மூன்றாம் அடர் (Adar) மாதம் என்றனர்.[490] அடர் = தொடர்வது என்ற தமிழ்ச் சொல்லே. ஞாயிற்று ஆண்டு, திங்கள் ஆண்டின் அடிப்படையில் எழுந்ததே. 27 மீன்கூட்டங்களையும் 12 ஓரைகளாகப்

489 The New American Bible, Dict. p.

490. Ibid.

பிரித்து, ஒவ்வொரு ஓரையிலும், ஞாயிறு தங்கிக் கடந்து செல்லும் காலமே ஓராண்டு எனப்படுகிறது.

திண்ணிலை மருப்பின் ஆடுதலை யாக
விண்ணூர்பு திரிதரும் வீங்குசெலல் மண்டிலத்து
முரண்மிகு சிறப்பிற் செல்வனொடு நிலைஇய
உரோகிணி நினைவன் நோக்கி — நெடுநல்வாடை.[491]

ஆடுதலையாக = மேழ ஓரையை முதலாக் கொண்டு. உரோகிணி = சகடு உள்ள விடை ஓரையை இரண்டாவதாக்க கொண்டு எனப் பொருள்படும். ஞாயிற்று ஆண்டின் தொடக்க மும், திங்கள் ஆண்டின் தொடக்கமும், மார்ச் 21 முதல் ஏப்ரல் 14 விரையிலான காலங்களில் நிகழ்வுற்றிருக்க வேண்டும். இது வேனில் தொடக்க காலமாகும். தமிழரும் இம்முறையைக் கைக்கொண்டிருந்தனர். இதனை அடிப்படையாகக் கொண்டே, ஆரியரும் (ஏப். 14) தங்களது ஆண்டுக் கணக்கைத் தொடங்கினர். தமிழரின் மரபுப்படியே, பாபிலோனிய, யூத சமயங்களும் ஏப்ரல் கால அளவையே, முதல் திங்களாகக் கொண்டிருந்தனர் என்று விவிலியம் கூறுகிறது. ஆரியருடைய ஆண்டுத் தொடக்க நாளையே தமிழர் கடைப்பிடித்தனர் என்பது முன்பு சொல்லப் பட்டது போன்றே, அடிப்படையில் தவறான செய்தியாகும். யூதரும் பாபிலோனியரும் தமிழரே என்ற நோக்கில், அவர்தம் நாட்காட்டியையே, தொல் தமிழரின் நாட்காட்டியாகக் கொள்வதில் தவறில்லை.

வியாழனை மையமாகக் கொண்ட நாட்காட்டியும் தமிழகத்தில் வழக்கில் இருந்தது. வியாழன் ஒரு முறை ஞாயிற் றைச் சுற்றிவர 12ஆண்டுகள் என்ற கணக்கில் 5 சுற்றுக்களைக் கொண்ட 60ஆண்டுகள் நாட்காட்டியும் தமிழரின் கண்டு பிடிப்பே. இந்த 60ஆண்டுகளின் பெயர்களும் தமிழிலேயே இருந்தன. அவைகளை முற்றிலுமாக வடமொழியில் திரித்துக் கொண்டு, தமிழ்ப் பெயர்களை அழித்துவிட்டனர். இக்கணக்கின் படி இரு நூற்றாண்டுகளுக்கு மூன்று சுழற்சிகள் வருவதால், தெளிவான கணக்கை வரலாற்றில் பதிவு செய்ய இயலாத நிலை யில், இம்முறை கைவிடப்பட்டது. ஆனாலும் 60 ஆண்டுக் கணக்கை ஞாயிற்றுத்திங்கள் நாட்காட்டியில் இணைத்துக் கொண்டு ஆண்டின் பெயர்களை மட்டும் வைத்துள்ளனர்.

491. நெடுநல்வாடை, 160-163.

இந்த 60 ஆண்டுகளும் தமிழ் மூலத்தைக் கொண்டவைகளே என்பதை சொல்லாய்வுகள் வழியாக நிறுவ இயலும். இவைகளில் ஏவிளம்பி, விளம்பி, கால உத்தி, துன்மதி போன்ற பெயர்கள் தமிழ்ச் சொற்களாகவேயுள்ளன.

வியல் = விரிவான. வியலன் - வியழன் - வியாழன் என்றவாறு நீண்ட இத்தமிழ்ச் சொல்லுக்கு, விரிவடைந்த, பருத்த பெரிய கோள் என்பதே பொருளாகும்.

குரு என்பதை (Guru) மெலிந்து ஒலித்து, அதனை வடமொழிச் சொல்லே என்றனர்.

குரு (Kuru) என்பது தமிழ்ச் சொல்லே.

குரு = குருத்தல், வளர்தல், விரிதல், பெரிதாகுதல் என்றவாறு நீளும்.

குரு - குருகு = வளர்ந்து கொண்டிருக்கும் இளமை.

குருக்கத்தி = குழந்தைக்குப் பால் கொடுத்து வளர்ச்சிக்குக் கரணியமான தாயின் முலை.

குருக்கத்தி = வெட்ட வெட்ட வளரும் ஒருவகை மரம்.

குருதி = உணவினால் ஊறிக் கொண்டிருக்கும் செந்நீர்.

குருத்து = வளர்ந்து வெடிக்கும் நிலையில் உள்ள மரத்தின் ஓலை, குழந்தை.

குருப்பு = முகத்தில் வளர்ந்து உப்பிப் பருக்கும் முகப்பரு.

குரு (Kuru) = ஆசிரியன். குழந்தையின் அறிவை வளர்ப்பவன்.

அன்னை, தந்தை, குரு, தெய்வம் என்ற தமிழ்த்தொடரை, மாதா, பிதா, குரு, தெய்வம் என்று வடமொழியில் மாற்றிக் கொண்டனர். தெய்வத்துக்கு வடமொழியில் சொல்லே இல்லை. பகவன் - பகவானாகவும், தெய்வம் - தேவ் என்றும் சொல்லி திரித்துக் கொண்டனர். பகவன் என்ற தமிழ்ச் சொல்லை, வள்ளுவரும் பயன்படுத்தியுள்ளதை நோக்குக.

"இடபத்து வியாழன் நின்ற யாண்டு மிருச்சிக ஞாயிற்று" என்ற கல்வெட்டுச் செய்தி,[492] வியாழன் ஆண்டும் தமிழகத்தில் வழக்கிலிருந்ததைக் காட்டும். விக்கிரமாதித்தன் ஆண்டு என்பது, அம்மன்னன் ஆட்சிக்குவந்த ஆண்டெனக்கருதி, கி.மு. 58 முதல் நடைமுறைப் படுத்தினர். தற்போது திருவள்ளுவர் ஆண்டு வழக்கில் உள்ளது போல், முற்காலத்தில் தொல்காப்பியர்

492. தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், க. நெடுஞ்செழியன், ப. 159-160.

ஆண்டும் நடைமுறையில் இருந்தது. மேழத்துக்குப் பதிலாகத் துலையை முதலாகக் கொண்டது பரசிராம ஆண்டெனப்படும். இது மலை நாட்டில் வழக்கிலிருந்தது.

ஆங்கில ஆண்டு:[483] ஆங்கில ஆண்டுக்கும் ஆங்கிலேயருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை இருந்தாலும் இது ஆங்கில ஆண்டு என்றே அழைக்கப்படுகிறது. இன்று உலகமுழுதுமுள்ள மக்களும் அரசுகளும் இம்முறையை ஏற்றுக் கொண்டுள்ளதால், பெருங் குழப்பம் தவிர்க்கப்பட்டுள்ளது. இருந்தாலும் அந்தந்த நாட்டு மக்களும். ஆங்கில ஆண்டுடன், தங்கள் தங்கள் மரபுப் படியான ஆண்டுக் கணக்குகளையும் கொண்டுள்ளனர். இந்தியாவில் பிராமணர்கள் ஆங்கில ஆண்டை ஏற்றுக் கொண்டிருந்தாலும், ஆங்கில புத்தாண்டைக் கொண்டாடுவதில் எதிர்ப்புத் தெரிவித்து வருகின்றனர். ஆங்கில ஆண்டில் சொல்லப்படும் கி.மு., கி.பி. என்ற சொற்கள் (Before Christ = B.C., Anno Domini = A.D) அவர்களைத் தயக்கம் காட்டச் செய்கின்றன. Anno Domini - A.D. என்ற சொற்களுக்கு, கடவுள் பிறந்த பிறகு, என்பது பொருளாகும். கடவுள் என்பது இயேசுவைக் குறிப்பதால், இத்தயக்கம் நிலவுகிறது. இசுரேல் நாடும் (யூதர்களாதலால்), A.D. என்ற சொல்லைப் பயன்படுத்துவதில்லை. வரலாற்றுக்கு முன்பின் (Before and after history) என்ற சொற்களைப் பயன்படுத்துகின்றனர்.

கிறித்துப் பிறப்புக் காலங்களில், பாபிலோன், பாலத்தீனப் பகுதிகளில் ஒரே முறையிலான நாட்காட்டியே வழக்கில் இருந்தது. அது 12 மாதங்களையும் 360 நாட்களையும் கொண்டிருந்தது. ஐரோப்பிய நாடுகளிலும் தனித்தனியான நாட்காட்டிகள் வழக்கிலிருந்தன. கி.மு. 46இல் உரோமப் பேரரசன் ஜீலியஸ் சீசர், தனது ஆளுகைக்குட்பட்ட பகுதிகளில், புதிய நாட்காட்டியொன்றை அறிமுகம் செய்தான். இதற்குச் ஜீலியன் காலண்டர் என்று பெயர். இந்நாட்காட்டியில் 365 நாட்களும், எஞ்சிய நாட்களைக் கணக்கிட லீப் ஆண்டு முறையையும் அறிமுகம் செய்தனர். கி.பி. 8ஆம் நூற்றாண்டில், இந்நாட்காட்டி சில மாறுதல்களுக்கு உட்பட்டது. தொடர்ந்து ஜீலியன் நாட்காட்டியே, கி.பி. 16ஆம் நூற்றாண்டு வரை வழக்கில் இருந்தது. கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் இசுலாமியர்கள் திங்களை

---

493. Oxford Encyclopedia, p.

மையமாகக் கொண்ட நாட்கட்டியையே பயன்படுத்தி வருகின்றனர். இது பாபிலோனியர் கடைப்பிடித்த தமிழரின் நாட்காட்டியே. **இது பற்றியே பாபிலோனியரையும், பாலத்தீனத்தாரையும், அராபியரையும் சோமகுலத்து மக்கள் என்று கேரளத்துத் துறவி சுவாமி சாக்கியானந்தா கூறினார்**. பாண்டிய மன்னர்கள் மதிமரபைச் சார்ந்தவர்கள் என்பது நோக்கத்தக்கது.

கி.பி. 1582ஆம் ஆண்டில், கத்தோலிக்கக் கிறித்துவத் தலைவர் எட்டாம் கிரகோரி என்ற போப்பாண்டவர், புதியதொரு நாட்காட்டியை அறிமுகம் செய்தார். அதுவே இன்று வரையில் வழக்கில் இருந்துவரும் ஆங்கில நாட்காட்டியாகும். உகோ பூன் கொம்பானி (Ugo Buoncompagni) என்ற இயற்பெயரைக் கொண்ட கிரகோரி இளமையில் சட்டம் பயின்றவர். மிகச் சிறந்த கல்வியாளர். இவர் காலத்திலேயே, கத்தோலிக்க சமயத்தார் ஏராளமான பள்ளிகளையும் மருத்துவமனைகளையும் தோற்றுவித்தனர். கிறித்துவர்களின் கல்வி மருத்துவப் பணிகளைத் தொடங்கி வைத்தவர் இவரே. ஜீலியன் நாட்காட்டியில் இருந்த சில குறைகளைக் கண்ணுற்ற கிரகோரி, ஆண்டுக்கு 365. 2425 நாட்கள் என்று துல்லியமாகக் கணக்கிட்டு, புதிய நாட்காட்டியை அறிமுகம் செய்தார். இவர்காலத்தில் தற்போதைய மார்ச் 25 என்ற நாளே, ஆண்டின் தொடக்க நாளாக இருந்தது. இம்முறை ஏறக்குறைய தமிழர், பாபிலோனியர், யூதர் கடைப்பிடித்து வந்த ஆண்டுத் தொடக்கமாகும். இக்காலம் வேனில் தொடக்கம் என அறியப்படும். ஆரியர்களும் இக்கால அளவிலேயே தங்கள் ஆண்டுக்கணக்கையும் தொடக்கினர். ஆரியர்களுக்கென தனியான ஆண்டுக் கணக்கு ஏதும் இருந்ததில்லை. அதனை அவர்கள் கண்டுபிடிக்கவுமில்லை. தமிழ் நாட்டில், சோழநாட்டினர் கடைப்பிடித்து வந்த சித்திரை (சிறிய + திரை = சிற்றிரை - சித்திரை) மாதத்தையே, அவர்களும் கொண்டு, ஆண்டும் பிறப்பு அம்மாதத்திலேயே தொடக்கிக் கொண்டனர். சித்திரை என்பது வடசொல் அன்று. சிறிய ஆடை என்ற தமிழ்ச் சொல்லே, வடமொழியில் திரிபுபட்டுள்ளது.

மார்ச் 21ஆம் நாளன்று, நிலநடுக்கோட்டுப் பகுதிகளில், இரவும் பகலும் ஒரே கால அளவைக் கொண்டிருக்கும் நாளாகும் (மீண்டும் செப்தம்பர் 21ஆம் நாளிலும் இதே அளவு சொண்டதாக அமையும்) இந்நாளைப் பொருத்தமான ஆண்டுத் தொடக்க நாளாகவே தமிழர் கொண்டிருந்தனர். இந்நாள் தமிழர் கணக்குப்

படி, தள்ளிச் சென்று ஏப்ரல் 14ஆம் நாளில் பிற்காலத்தில் நிலைத்துவிட்டது. வேனில் முடங்கி, கார்காலம் தொடங்கும் (செப். 21) நாளையும் முதல் நாளாகக் கொண்ட வழக்கும், தைத்திங்களை முதல் நாளாகக் கொண்ட பனி முடங்கல் கணக்கையும், தமிழர் கொண்டிருந்தனர். எனவே தமிழகத்தில், வேனில் தொடக்கம் (ஏப்ரல்), மாரிகாலத் தொடக்கம் (அக்டோபர்), பனி முடங்கல் (ஜனவரி - தை) ஆகிய காலங்களிலும் ஆண்டுத் தொடக்கங்கள் கொண்ட நாட்காட்டிகளும் இருந்துள்ளன.

சனவரி முதல் நாள் ஆண்டின் தொடக்கம் என்பதை, கி.பி. 1752ஆம் ஆண்டில் ஆங்கிலேயர் அறிவித்துக் கொண்டனர். அக்காலங்களில், ஆங்கிலேயர் கொண்டிருந்த உலகளாவிய வணிகம் மற்றும் ஆளுமை, இந்நடை முறையை மற்றவர்களும் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்துவிட்டது. இதன் வழியில் த்தான் ஆங்கில ஆண்டுப்பிறப்பு எனக் கூறும் வழக்கம் தோன்றியது. கிரகோரியன் நாட்காட்டியில். ஆங்கிலேயர் செய்த மாற்றம், ஆண்டுத் தொடக்க நாளை மாற்றியது மட்டுமே எனலாம்.

மாசம் என்ற வடசொல்லையே, மாதம் என்று தமிழ்ப் படுத்தினர் என்றவாறு சொல்லப்படுவது தவறான கருத்தாகும். இரிக்கு வேதம் சொல்லுகின்ற வானியல் மற்றும் நாட்காட்டித் தொடர்பான செய்திகள் அனைத்தும், தமிழகச் சூழல்களில் நடைபெற்றனவே என்பதை, அவ்வேதத்தை ஊன்றிப் படிப் பவர்களால் உணர இயலும். தமிழரின் நாட்காட்டிமுறை, ஆரியர்கள் இந்தியாவுக்கு வருமுன்பே, இந்நாட்டில் வழக்கில் இருந்ததாகும். மதி என்ற சொல்லினின்று மது என்ற சொல் நீண்டதா, மதுவிலிருந்து மதி நீண்டதா என்று வேறுபடுத்த இயலாது. இரண்டும் ஒன்றையொன்று பற்றிக் கொண்டிருக்கும் சொற்களாகும். மது என்ற பொருளிலேயே, ஆரியச் சொல் லாகத் திரிக்கப்பட்ட சோமம், கிரேக்கச் சொல்லான Luna ஆகி யவை உள்ளன. Luna என்பதற்கும் மயக்கம் என்றே பொரு ளாகும். மதிமயங்கிய பித்தர்களை Lunatics என்பர். இதைக் குறித்தே திங்களுக்கும் Lunar என்ற பெயர் வைக்கப்பட்டது.

நா (tongue) என்பது உறுப்பை மட்டும் குறிக்காமல் பேச்சையும் (Speech)யும் குறிக்கும். (பேச்சுக்கும் ஸ்பீச்சுக்கும் உள்ள தொடர்பை நோக்குக) உல என்ற தமிழ்ச் சொல்லுக்கு பிறழ்தல் என்ற பொருளும் உண்டு. உலம்பல் பேச்சு = கோர்வை யற்ற பேச்சு உலநா = பித்தர்களின் பேச்சு.

நுளம்பு உலம்புதொறு உளம்பும் – குறுந்தொகை.[494]

உலம்பு = ஈக்கள் ஒலிக்கும் பொருளற்ற ஒலி. உலம்பு நா = பொருளற்ற ஒலிப்பேச்சு.

உலநா என்ற தமிழ்ச் சொல்லே, லூநா என்று கிரேக்கத்தில் சொல்லப்பட்டு, லூநாட்டிக்ஸ் (Lunatics) என்றானது. நிலவு மயக்கம் தருவதால், அது மதி எனப்பட்டது.

மதி = மாதம். மதியின் சுழற்சிக் கொண்டு அறியப்பட்டது.

மதி - மாதம் - மாசம் என்று வடமொழியில் திரிபுபட்டது.

மதி - மது - மதுரம் = கள், தேன் ஆகியவை. மதியை மயக்குவன.

மதி - மதம் = யானையின் மதிமயக்கம். மதம் தமிழ்ச் சொல்லே.

மதி - மத்தம் = பித்துப்பிடித்த நிலை. மந்தகாசம் என்பர்.

மதம் - மத்தம் - பித்தம், என்று நீண்டது.

பித்தா பிறைசூடி = சிவனின் பெயர்கள்.

மதமதப்பு = மயக்கநிலை.

மது- மாது - மயக்கம் கொடுக்கும் பெண்.

மாது - மாதா எனவும் நீண்டது.

தமிழ்மொழியில் திங்கள் என்ற சொல், நிலவையும் மாதத்தையும் குறித்ததுபோல், எபிரேய மொழியில் ஈரா (Yerah) என்ற சொல்லும், நிலவையும் மாதத்தையும் குறித்தது. ஈர்-ஈர்தல் என்ற தமிழ்ச்சொல், இரண்டு என்ற சொல்லின் வேர்ச் சொல்லாகும். ஈர் - ஈரண்டு - இரண்டு. நிலவின் சுழற்சியை இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. காருவா முதல் வெள்ளுவா வாரையிலான நாட்கள், முதற் பகுதியெனவும்

2. வெள்ளுவா முதல் காருவா வரையிலான நாட்கள், இரண்டாம் பகுதியெனவும் கொள்ளலாம். இதனையே வளர் பிறை (சுக்கிலபட்சம்), தேய்பிறை (கிருஷ்ணபட்சம்) என்றும் கூறுவர்.

சொக்கு = ஒளிரும் தன்மை கொண்ட. சொக்க - சுக்கு - சுக்கில என்று திரிந்தது. கருமை - கிருஷ்ண வாயிற்று. இதுவும் தமிழ்ச் சொல்லின் திரிபே. சொக்கத் தங்கம், சொக்கநாதன் என்றவாறு சொல்லப்படுவதை நோக்குக.

494. குறுந்தொகை, 86:5.

ஒரு மாதத்தை ஈரும் (இரண்டாக்கும்) இவ்விரண்டு பகுதி களைக் கருத்தில் கொண்டே, ஈரா என்றவாறு எபிரேய மொழியில் சொல்லப்பட்டது. இது ஈர் என்று தமிழ்ச் சொல்லின் திரிபே. எபிரேய மொழியில் மாதத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட ஈரா என்ற செல்லே, அங்கிலத்தில் year என்ற சொல்லுக்கு மூலச் சொல்லாகும். கதிரவனின் வட பயணம், தென்பயணம் என்ற இருகூறுகளும், ஒரு ஆண்டை ஈர்கின்றன என்ற அளவில் Year என்ற சொல்லுக்கும் ஈர் என்பதே மூலச் சொல்லாகும். ஆண்டு என்பதே Annum என்று சொல்லப்பட்டது. காலம் + யாண்டு என்ற சொற்களே காலண்டர் எனவும் திரிபுபட்டிருக்க வேண்டும். மதி என்ற சொல்லே, மாதம் என்ற வழியில் Month என்றும் கூறப்பட்டதாகப் பாவாணர் கூறுகிறார். Moon என்ற ஆங்கிலச் சொல்லும், முன்னி என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாக இருக்கலாம். முன்னி = முந்தி வருதல். முதலில் வெளிவருதல்.

**அகலிலைப் பலவின் சாரன் முன்னி – குறுந்தொகை.**

முன்னி = முதலில் நோக்கி, என்ற பொருளில் சொல்லப் பட்டுள்ளது.

ООО

39

# முகம்

உலகிலுள்ள அனைத்துப் பெயர்களும் தமிழ் மூலத்தி னின்றும் தோன்றியவைகளே. பலவாயிரம் ஆண்டுகளில், அவை பல்வேறு மொழிமாற்றங்களால் திரிபுபட்டுப் போயின. உலக மொழிகளில், ஆறு, கடல், மலை, புல்வெளி, வளைகுடா, பள்ளத்தாக்கு போன்றவைகளைக் குறிக்கும் அனைத்து மொழிச் சொற்களும் தமிழ் மூலத்தினின்றும் பிறந்தவைகளே. ஆறு - யோர் என்ற எபிரேய மொழியிலும், இரவு - ரிவர் என்று ஆங்கில மொழியிலும், மலை - செல்லா (நகராத) என்பது, அசலம் என்று வடமொழியிலும், புல்வெளி - பிலெய்ன் என்றும், குளம்பு - கல்ஃப் என்றும், வாலி (வால்போல் நீண்ட) - Valley என்றும் சொல்லப்பட்டன. அதே போல், நாள், கோள், கிழமை, திங்கள், ஆண்டு, கதிரவன், மீன்கள் ஆகியவைகளும் தமிழ் முலத்தைக் கொண்டே பன்மொழிகளிலும் திரிந்துள்ளன. விளக்கம் - ஆசிரியரின் வானியலின் மூலவர் தமிழரே என்ற நூலில் காண்க.

மாந்த உடலின் உறுப்புக்களும், தமிழ் மூலத்தினின்றும் திரிந்து சொற்களாகவே பன் மொழிகளிலும் உள்ளன. முகம் என்பதற்குப் பக்கம் என்ற பொருளும் உண்டு. பக்கம் - பேச் எனப்பட்டது Pacis (இலத்தீன்) - Face (ஆங்கிலம்). பக்கம் - பாகிஸ், பேஸ் என நீண்டது. ஒலிகளை ஈர்க்கும் உறுப்பான காது, ஈர் - ear எனப்பட்டது. தோலுக்குள் ஊடி இருப்பதே உடலாகும். ஊடி - உடல் ஆனது. ஊடி - Body எனப்பட்டது. வெளியே தள்ளப்பட்டுள்ள வயிறு, வள்ளுதல் = வளைந்திருத்தல், என்ற பொருளில், வள்ளம் எனப்பட்டு, Belly என்று திரிந்தது. வாயி னின்றும் வயிற்றுக்குச் செல்லும் வளைவான பகுதியை, துறடு எனலாம். துறட்டுக்கழி என்பது வளைந்த முன்பகுதியைக் கொண்டது. துறடு - துறட்டு என்பதே throt எனப்பட்டது.

இடம் - மேலுள்ள உறுப்பு, head எனப்பட்டது. இடுப்பையும் முழங்காலையும் தைக்கும் பகுதி, thigh என்று சொல்லப்பட்டது. மயிர் - hair எனவும், பக்கம் (பின்) Back எனவும் சொல்லப் பட்டன. ஐம்பெரு விரல்கள் கையிலும், ஐங்குறு விரல்கள் காலிலும் உள்ளன. ஐங்குறு என்பதே, பைங்குறு - Finger எனத் திரிந்தது. கருவறையினின்றும் முதலில் தள்ளப்பட்டதால், அது தலையாயிற்று. புட்டம் என்பதே Buttocks ஆயிற்று.

தமிழின் முதல் உயிர்மெய் எழுத்து க என்பதாகும். க எனும் உயிர்மெய்யினின்று கண், காது, கை, கால், கழுத்து போன்ற சிறப்பான உறுப்புக்களின் பெயர்கள் தோன்றின. உணவை வைக்கும் இடம், வை - வய் என்றும், வை + இறு (இறுப்பு) வயிறு என்றும் சுனையை வெளியேற்றும் உறுப்பு சுன்னம் என்றும், சுருங்கி விரிவதால் சூதம் - சூத்தம் என்றும் சொல்லப்பட்டன. இவ்வாறு இயற்கையோடு இணைந்து, மாந்த உறுப்புக்களின் பெயர்கள் தமிழில் தோன்றின. அவைகளைப் பன்மொழிகளின் சொற்களின் வாயிலாகவும் நாம் அறிய இயலும். இந்நிலையில் முகம் என்ற சொல், வடசொல் என்றும், முக என்பதினின்றே தமிழில் திரிந்தது என்றும் வடமொழியாளர் கூறுகின்றனர்.

முந்தித் தெரிவதும், முந்திவந்ததும், முன்னால் உள்ளதுமான பகுதியே முகம் எனப்பட்டது. முகம் என்ற தமிழ்ச் சொல்லே, வடமொழியில் முக்-முகி என்றவாறு திரிந்தது. சொர்ணமுகி என்ற வடசொல்லுக்குப் பொன்முகத்தாள் என்றே பொரு ளாகும். பொன்போல் ஒளிரும் முகமுடையவன் என்று நீளும்.

சுள் - சுர் - சொர் - சொர்ண என்றவாறு, சுள் என்ற வேர்ச் சொல்லே, சொர்ண என்ற சொல்லைத் தந்தது. சுள் என்பது சுடர்விடும் என்ற பொருளைத் தருவதாகும்.

முன்நீண்டிருப்பது மூக்கு என்றும், மூக்கும் வாயும் சேர்ந் தவை மூஞ்சி யென்றும், மூக்கும் வாயும் கன்னமும் சேர்ந்தவை முகரை என்றும், மூக்கும் வாயும் கன்னமும் நெற்றியும் சேர்ந்தவை முகம் என்றும் பாவாணர் விளக்குகிறார்.[495]

முரு - முக்கு - மூக்கு = முகரும் உறுப்பு.

முகர் = நாற்றத்தை அறிதல்.

---

495. முதற்றாய் மொழி ஐ, ப. 43.

முகர்தலால் உணரப்படும் சாம்பிராணிக் கட்டியை மிர் (Myrrh) என்று எபிரேய மொழியில் காணலாம். முகர் - மிர் எனத் திரிந்தது.

முகம் - முகவாய் - மோவாய் = முன்பகுதி.

முக - முகப்பு = முன் மண்டபம்.

முகம் - முகன் - முகனை - மோனை = சீர்களின் முதலிடம்.

முகம் - முகமன் = வரவேற்புக் கூறுதல். முக - முகடு = மலையுச்சி.

முகம் - முகில் = பார்வையில் முந்தித் தெரியும் மால்.

முகம் - முகிழ் = முட்டிக் கொண்டு வெளிவரும் பூவிதழ்.

முகம் - முகை = முந்தி வரும் கூட்டம்.

முகம் என்பது முன்னுதல் என்ற பொருளில், அரபுச் சொல்லான முகாம் என்பதும் திரிந்தது. முகாம் = முந்திச் சென்று தங்குமிடம்.

மோப்பக் குழையும் அனிச்சம் முகம் திரிந்து – திருக்குறள்.[498]

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி – திருக்குறள்.[497]

முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ் – குறுக்தொகை.[498]

OOO

496. திருக்குறள். 90:1.

497. மேலதே, 708:1.

498. குறுந்தொகை, 304:2.

40

## வசி – வாசம்

வாசம், நிவாசம் ஆகிய சொற்கள், வீட்டையும் குடியிருப்பையும் குறிக்கும் வடசொற்கள் என அறியப்படுகின்றன. திருமகளின் நெஞ்சில் குடியிருப்பதால் சீனிவாசன் என்று விஷ்ணுவை அழைத்தனர். (ஸ்ரீ நிவாஸ்). வாசம், வாசகம், வாசனா, வாசா, வாசிகன், வாசாலம், வாசி, வாச்சி போன்ற சொற்கள் வடமொழிச் சொற்களே என்பர்.

வாசா = வாய்ச்சொல் அல்லது வாய்மொழி.

வாசிகன் = வாய்மொழியால் செய்தியை அறிவிக்கும் ஆள்.

வாசாலம் = வாய்ச் சால்பு. சிறப்பான அறிவார்ந்த பேச்சு.

வாசி = திரும்பத் திரும்பப் படிப்பதால் பெறும் அறிவு, கல்வி.

வாய்ச்சி = கூர்மையான வாயுள்ள (முனையுள்ள) மரத்தைச் செதுக்கும் கருவி.

மேற்சொல்லப்பட்ட சொற்கள் யாவும், வாய் என்ற தமிழ் மூலத்தினின்றும் வடசெற்களாகத் திரிந்தவைகளே. வாய் என்ற சொல்லுக்கான வேர்ச்சொல் வை என்பதாகும். உணவை வைக்கும் இடம் வாய் எனப்பட்டது.

வை = வைத்தல் பொருத்துதல், நிலைத்தல், உயர்தல் என்றவாறு பொருள்விரியும்.

வை - வையம் = நிலம், இடம், ஞாலம், வீடு, குடியிருப்பு.

வை - வைப்பு.

வைப்பு - வசிப்பு = குடியிருத்தல், வாழுதல், நிலை கொண்டிருத்தல்.

வாழும் இடம் மற்ற இடங்களைவிட உயர்வானதாக இருக்கும். மேட்டுநிலம்.

வை - வசி - விசி = மேடான இடம்.

விசி - விசும்பு = உயர்ந்துள்ள வானம்.

விசி - வீச்சு - வீச்சம் = மேலெழும் கெட்ட மணம். வீச்சு = நீண்ட.

வை - வசி - வாஸ = குடியிருப்பு. வை என்ற வேரின் நீட்சி.

வாஸ - நிவாஸ.

வை - வாய் - வாய்ச்சி - வாசி: வாயால் ஓதுதல். வாய்மொழிக் கல்வி.

வை - பொருந்துதல், இணைதல், பற்றுதல், சேர்தல் என விரியும்.

வை - விசி - வேசி = ஆடவரைப் பற்றும் விலைமகள்.

வை - வைப்பு - வைப்பாட்டி = பற்றியிருக்கும்
ஆண்மகனை ஆட்டிப்படைக்கும் பெண்.

ஆட்டி = ஆட்சி என்ற பொருளில், ஆறுதல் எனப்பட்டது.

வை + கோணம் = அழிவில்லாத உயர்ந்த இடம்.
இதுவே வைகுண்டம் எனப்பட்டது.

**பெருகுவது போலத் தோன்றிவைத்தீபோல் – நாலடியார்.[499]**

**வைத்தூறு போலக் கெடும் – திருக்குறள்.[500]**

வை = இருத்துதல், பொருத்துதல், அடைத்தல்
என்ற பொருளை நோக்குக.

வைப்பு = இடம், நிலம், ஞாலம்.

**வரனென்னும் வைப்பிற்கோர் வித்து – திருக்குறள்.[501]**

**நீரில் வைப்பிற் சுரனிறந் தோரே – குறுந்தொகை.[502]**

**இன்னா வைப்பிற் சுரனிறந் தோரே – குறுந்தொகை.[503]**

நீரில் வைப்பு = நீரில்லா இடம்.

இன்னா வைப்பு = இடுக்கண் வரும் இடம்.

**சுரம்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட – குறுந்தொகை.[504]**

---

499. நாலடியார், 234:1.
500. திருக்குறள், 435:2.
501. மேலதே, 24:2.
502. குறுந்தொகை, 211:7.
503. மேலதே, 314:7.
504. மேலதே, 309:2.

**வாச மணத்துவர் வாய்க்கொள் வோரும் – பரிபாடல்[505]**

*வாசம் = தங்கியிருத்தல், வாசவர் = குடியிருப்போர்.*

**பாசவர் வாசவர் மைந்நிண விலைஞரோடு – சிலப்பதிகாரம்[506]**

*வாசவர் = குடியிருப்போர்.*

**அகல்விசும்பு ளோர் கோமான் – திருக்குறள்[507]**

*விசும்பு = வான்வெளி.*

*விசும்பு - விஸ்வ என்று வடமொழியில் திரிந்தது.*

விசி என்ற தமிழ்ச்சொல்லுக்கு மேடான, உயர்ந்த என்பது பொருளாகும். விசி - விச்சு - விச்சை = உயர்வான கைத்தொழில், தொழில் நுணுக்க அறிவு. வித்தை என்றும் சொல்லப்படும்.

**விசிபிணி முழவின் விழக்கோள் விரும்பி – மணிமேகலை,[508] 22:63.**

*விசிபிணிமுழவு = உணர்ந்த மேடையில்*
*பொருத்தப்பட்டிருந்த முழவு.*

*விசி என்ற சொல் மலையையும் குறித்தது.*

*விசியில் வாழ்ந் தவன் விச்சியன்.*

விச்சிக்கோ என்ற சொல்லைப் புறநானூறும்,[509] குறிஞ்சிப் பாட்டும்,[510] பதிற்றுப்பத்தும்[511] கூறுகின்றன. உயர்ந்த விண்வெளியில் வாழ்ந்திருந்த இந்திரனை, விச்சியர் கோன் (விசயர் கோன்) என, சிலப்பதிகாரம்[512] கூறுகிறது. வடநாட்டு மன்னர்களை, அவர்கள் இமைய மலையில் வாழ்ந்திருந்தார் என்ற பொருள்

---

505. பரிபாடல், 12:22.
506. சிலப்பதிகாரம், 5:26.
507. திருக்குறள், 25:1.
508. மணிமேகலை, 22:63.
509. புறநானூறு, 151, 200:8.
510. குறிஞ்சிப்பாட்டு, 328:5.
511. பதிற்றுப்பத்து, 9 ஆம்பத்து, பதிகம். 4.
512. சிலப்பதிகாரம், 24:54.

கொண்டு, விசயன் என்று சிலப்பதிகாரமும்[513] மணிமேகலை[514] யும் கூறுகின்றன. அவர்கள் வெற்றியாளர்கள் (விஜயர்கள்) என்று பொருளில் சொல்லப்படவில்லை. குட்டுவனை எதிர்த்த வடபுலத்து மன்னனை விசித்திரன்[515] என்றே சிலப்பதிகாரம் கூறுகிறது.

வை என்ற வேர்ச் சொல்லே, வசி - வதி போன்ற சொற் களைத் தந்தது. இவை வாழும் இடங்களைக் குறித்தன. வசி - வாசம் - வாசன் போன்ற சொற்களும் உருவாயின.

ООО

513. மேலதே. 26:159.

514. மணிமேகலை, 26:86.

515. சிலப்பதிகாரம், 26:152.

## 41

# முத்து

முக்தா (Mukta) என்ற வடமொழி சொல்லிலிருந்தே, முத்து என்ற தமிழ்ச் சொல் திரிந்ததாக வடமொழியாளர் கூறுகின்றனர். ஒரு சொல், ஒரு மொழியில் இயற்கையில் உருவாகியிருக்க வேண்டும் அல்லது கடன் பெறப்பட்டிருக்க வேண்டும். மணிலாக் கொட்டை என்ற சொல் தமிழுக்குப் புதியது. அதனை நிலக் கடலை என்றும் கூறினர். மணிலாக் கொட்டை என்பது, தமிழகத்தின் வித்துமன்று, கிழக்கு நாடுகளில் (பிலப்பைன்ஸ் நாட்டு மணிலாத்துறை முகத்திலிருந்து) வணிகத் தொடர்பு கொண்ட தமிழன், அங்கிருந்து கொண்டு வந்த பயறு, மணிலாப் பயறு எனப்பட்டது. அந்நாட்டவர் அதனை அழைத்த பெயரே அதற்கு முலப்பெயராகும். கடலையே கண்டிராத ஆரிய மக்கள், கடலில் விளைந்த முத்தை, தமது மொழிச் சொல் என்று கூறிக் கொள்வது கேட்பவர்களை அறிவிலிகள் என்று எண்ணியதன் விளைவே. இரிக்கு முதலான வேதங்களில் முத்தைப் பற்றிய செய்திகள் எதுவுமில்லை. முத்து என்ற தமிழ்ச் செல்லை, முக்தா என மாற்றிக் கொண்டு, இதுவே மூலச்சொல் எனக் கூறவும் ஆரியர்கள் துணிவு கொண்டிருந்தனர். முதன் முலில் ஆரியர்கள், இந்தியாவுக்குள் நுழைந்த பின்னரே கடலைக் கண்டிருக்க வேண்டும். கடலைக் கண்டு மிரண்டுபோன ஆரியர்கள், கடற் பயணம் செல்ல அச்சப்பட்டு, பிராமணன் கடற் பயணம் செல்லக் கூடாது என்று விதித்தனர். முக்தா என்ற சொல்லே, மூலச்சொல் என ஆரியர் கூறுவது, கடலோடிய, கடலில் மூழ்கி முத்துக் குளித்த, தொல் தமிழ்ப் பரவர்களை இழிவு படுத்துவதாகும்.

வரலாறு தெரிந்த காலத்துக்கு முன்பே, பாண்டிய நாட்டு முத்துக்கள் உலகப் புகழ் பெற்று விளங்கின. வால்மீகி இராமாயணம் கிட்கிந்தா காண்டத்தில், குரக்கினங்களுக்கு அறிவுரை

கூறப்படும் செய்தியில், "பொன்னாலும் மணிகளாலும் முத்துக் களாலும் அழகுற்றப் பொன்னிறமாக விளங்கும் கவாடபுரத்தின் அழகில் மயங்கிவிடாமல் இருக்குமாறு", கூறப்பட்டுள்ளது.[516] இது குமரிநாட்டின் முத்துக்கள் பற்றிய செய்தியை, ஆரியர் அறிந்திருந்ததையே காட்டுகிறது. சாணக்கியரின் அர்த்த சாஸ்திரமும், கவாடக முத்துக்களைப் பற்றி விளக்குகின்றது.[517] யூதமன்னன் சாலமன் (கி.மு. 900) காலத்திலும், பின்னர் வந்த உரோமப் பேரரசு காலங்களிலும், பாண்டிய நாட்டு முத்துக்கள், மேலை நாடுகளுக்கு அனுப்பப்பட்ட செய்திகள் வரலாற்றில் காணப்படுகின்றன.

பரல் என்ற தமிழ்ச்சொல், பொதுவாகச் சிறு கற்களைக் குறித்தாலும், சிறப்பாக விலையுயர்ந்த முத்து, மாணிக்கம் போன்றவைகளைக் குறித்தது. பரல் என்பது சிறுமணி அல்லது சிறுகல் எனப்படும். கண்ணகியின் சிலம்பும், பாண்டிமாதேவி யின் சிலம்பும் முறையே மாணிக்க முத்துப்பரல்களைக் கொண் டிருந்தன. முத்து, உரோமானியர்களால் பெர்லா என்று அழைக்கப் பட்டது. தற்போது ஆங்கிலத்தில் பெர்ல் எனத்திருந்துள்ளதை நோக்குக.

பரல் - Perla (இலத்) - Pearl (ஆங்கிலம்).

பரல் - பெர்ல் ஆனது போல், முத்து - முக்தா என்று வடமொழியில் திரிந்தது.

**வன்பரல் தெள்ளறல் பருகிய விரலை — குறுந்தொகை.[518] 65:1.**

முத்து என்பது உருண்டை வடிவமானதெனறும், முத்தை, முண்டு, முண்டை, முட்டு, முட்டை, முட்டி, முட்டான் ஆகிய சொற்கள் முத்து என்ற சொல்லுடன தெடர்புடையன என்றும் பாவாணர் கூறுகிறார்.[519]

முண்டு = உருண்ட கட்டை.

முண்டை = உருண்டு திரண்ட முட்டை.

முத்தை = சோற்றுருண்டை.

---

516. பழங்காலத் தமிழ் இலக்கியங்கள், திரவியம், தலைப்பு: குமரிநாடு.

517. மேலதே,

518. குறுந்தொகை, 65:1.

519. தமிழர் வரலாறு, முன்னுரை.

முட்டு = நடத்தற்குரிய உருண்ட பறை.

முட்டி = கொம்மட்டி. கொமுட்டி (பழம்) என்று வழக்கில் உள்ளது.

முட்டான் = நீற்றிற்குரிய சாணவுருண்டை,

என மேலும் விளக்குகிறார்.

முள் என்ற வேர்ச் சொல்லினின்றே மேற்கண்ட சொற்கள் நீண்டன.

முள்ளுதல் = முனைத்தல், வெளிவருதல்,

முட்டிக் கொண்டு தோன்றுதல்.

முள் - முட்டு - முத்து = உருண்டு திரண்ட மணி.

முத்து - மொத்து = உருண்டு திரண்ட ஒரு பொருளால் இடித்தல்.

முத்து - முதிர் - முதிர்வு = முழுமை. வளர்ச்சியின் இறுதி நிலை.

முத்து - முத்தம் = உருண்டு திரண்ட இதழ்களின்

அன்புப் பரிமாற்றம்.

முத்தை முத்தா என்றது போல், முதிர்வையும் முத்தி என்றனர்.

முக்தி = வீடுபேறு.

முத்து - முத்தறை = முத்து போல் வட்ட வடிவம் கெண்ட

பதிவுக் கருவி (Seal).

முத்தறை - அறைதல் = பதியவைத்தல். முத்தறை - முத்திரை என்றானது. முத்ரா என வடசொல், இலைச்சினையையும். நடனத்தின் அங்க அசைவுகளையும் குறிக்கின்றது. முத்தும் - முற்றம் என்றானது. முற்றம் = முந்திவருவது.

முத்து - மொத்து - மொந்து - மொந்தை = உருண்டு திரண் டுள்ள கள் கலம் அல்லது குடுக்கை.

மொந்தன் = உருண்டு திரண்டுள்ள வாழைப்பழம்.

மொத்து - மொத்தம் = ஒன்றாக இணைத்தல்,

மூட்டையாகக் கட்டுதல்.

மொட்டை = மயிரில்லாத உருண்டையான தலை.

முத்து என்ற சொல், தமிழில் வேறு பலவாறான பொருள் களிலும் கூறப்பட்டுள்ளது. முத்து = உருண்டு திரண்ட விதை, அம்மை நோயின் சொப்புளம், கண்ணீர்த்துளி, பனித்துளி, என்றவாறு விரியும். ஆமணக்கு விதையை, முத்துக் கொட்டை அல்லது கொட்டை முத்து என்பர். ஒரு வகையான உருண்டு திரண்ட அரிசிக்கு முத்துச்சம்பா என்பது பெயர். வெள்ளைச் சோளம், முத்துச்சோளம் ஆகியவை முத்து என்றே அழைக்கப்

பட்டன. முத்து, முத்துச்சாமி, முத்தையன், முத்தப்பன் போன்ற ஆண்பாற் பெயர்களை, தமிழ் நாட்டினர் இன்றும் வைத்துக் கொள்கின்றனர். புன்செய் தவசங்களை முத்து என்ற சொல்லால் தமிழர் அழைத்தனர். அவைகளைத் தாங்கிய பெயர்களும் இன்றும் தமிழர் வழக்கில் உள்ளன.

மருத முத்து = மருத நிலத்தில் விளையும் நெல் மணி.

வெள்ளைமுத்து = வெண்ணிறமான சிறிய சோளமணி.

மக்காச் சோளம்.

பச்சை முத்து = பச்சைநிறமான

பச்சைப் பயறு அல்லது பாசிப்பயறு.

மஞ்ச முத்து = மஞ்சள் நிறமான முத்துச் சோளம்.

காத்த முத்து = கார்த்த முத்து என்ற கருநிறம்கொண்ட

உளுந்து - உழுந்துப் பயறு.

சோணைமுத்து = நெந்நிறம் கொண்ட துவரை.

சிவப்பு நிறம் பற்றிச் சிவனுக்கு ஏற்றிச் செல்லப்பட்டது.

நல்ல முத்து = முத்து அல்லது அரிசி பற்றிச் சொல்லப் பட்டது.

செம்மை - செண்மை - என்ற தமிழ்ச்சொல்லே, சோண என்று வடமொழியில் திரிந்து, சிவப்பையே குறித்தது. சோணாச் சலம் = சிவந்தமலை - செம்மலை. செம்மையைக் குறித்த சேது என்ற தமிழ்ச் சொல்லே, கேது (Kethu) என்று வடமொழியில் திரிந்தது.

வேழ முடைத்து மலை நாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து – பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து – தனிப்பாடல்.[520]

முத்தைப்பற்றிக் கடைக்கழக இலக்கியங்கள் கூறும் செய்தி களாவன:

முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்றுறை – நற்றிணை.[521]

நூலறு முத்திற் கலொடு பாறி – குறுந்தொகை.[522]

---

520. ஔவையாரின் தனிப்பாடல்.

521. நற்றிணை, 23:6.

522. குறுந்தொகை, 51:2.

தொகுகதிர் முத்துக் தொடைகலிழ்பு மழுக — பரிபாடல்.[523]

மலையத் தாரமும் மணிமுத் தாரமும் — சிலப்பதிகாரம்.[524]

முறிமேனி முத்த முறுவல்வெறிநாற்றம் — திருக்குறள்.[525]

புலவர்கள், வெண்மையைக் குறிக்க முத்தையே உவமையாகக் கூறினர். தலைவியின் புன்னகையில் முத்துக்கள் உதிர்வதாகத் தலைவன் கூறுவதும், தலைவியின் சிறிய வெண்ணிறப் பற்களை முத்துக்களாகக் கூறுவதும், இலக்கிய நயம் கொண்டவைகளாகும். தமிழரின் வாழ்வோடுப் பின்னிப் பிணைந்த முத்து என்ற தமிழ்ச் சொல்லை, வடசொல் என்று கூற, ஆரியர்க்கு எத்துணை நெஞ்சழுத்தம் இருந்தது என்பதை நோக்குக. முக்தா, முத்தி போன்ற வடசொற்களுக்கு, அவர்கள் மொழியில் மூலச் சொற்கள் இல்லை என்பதே, முத்து, தனித்தமிழ்ச் சொல் என்பதை விளக்கும்.

○○○

---

523. பரிபாடல், 6:16.

524. சிலப்பதிகாரம், 4:62.

525. திருக்குறள், 1131:1.

42

## பிச்சை

பிக்ஷா (Biksha) என்ற வடசொல்லினின்றே பிச்சை என்ற தமிழ்ச்சொல் பிறந்ததாகக் கூறிவருகின்றனர். இரத்தல் என்னும் பொருளில், பிக்ஷாகாரம் (இரத்தல் செய்த உணவு), பிக்ஷாடனம் (இரத்தல்), பிக்ஷாதானம் (ஈதல்) என்றவாறு வடமொழியில் சொல்லப்பட்டுள்ளன. பிச்சாண்டார் கோயில் எனும் தமிழ் நாட்டு ஊர் பிக்ஷாண்டார் கோயில் என்றே அழைக்கப்படு கின்றது. மக்கட் பேறில்லாத கணவன் மனைவியர், தெய்வத்தை வேண்ட, தெய்வம் அளிக்கும் அக்குழந்தைக்கு, பிச்சை அல்லது பிச்சையம்மாள் என்றவாறு பெயர் சூட்டுவது தமிழ் நாட்டில் வழக்காக உள்ளது. கிறித்துவர்களும் பிச்சை என்ற பெயரைக் கொண்டுள்ளனர். அந்தோணிப் பிச்சை, லூர்து பிச்சை போன்ற பெயர்கள் வழக்கில் உள்ளன. இசுலாமியரும், அல்லாபிச்சை, நாகூர் பிச்சை, மரியம்பிச்சை என்றவாறு பெயர்களைச் சூட்டிக் கொள்கின்றனர். தமிழ்க் கடவுளான சிவன், பிச்சை எடுத்ததி னால், அவன் பிச்சாண்டவன் எனப்பட்டான். பிக்ஷாண்டார் கோயில் போன்று பல ஊர்களின் பெயர்களும், பிராமணர் களால் வடமொழியில் மாற்றம் செய்யப்பட்டன. கும்பகோணம், மாயவரம், வேதாரண்யம், கபிஸ்தலம் போன்ற பெயர்கள், தஞ்சை மாவட்டத்தின் சில ஊர்களாகும். இப்பெயர்களுக் கான ஆரியக் கதைகள் சிலவற்றையும் சேர்த்துக் கொண்டனர். மரைக்காடு என்பது, மான்கள் பெருமளவில் வாழ்ந்திருந்த காடு எனப்பட்டது. பின்னர் அது மறைக்காடு (சமயக்காடு) என்றானது. ஆரியர் அதனை வேதாரண்யமாக்கிவிட்டனர்.

அண்மையில் மெட்ராஸ், சென்னை என்று மாற்றம் செய்யப்பட்டது. சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்திருந்த சென்னப்ப (சின்னப்ப) நாயக்கன் என்ற தெலுங்கு மன்னன்

ஆண்ட இப்பகுதிக்குச் சென்னப்ப நாயக்கன் பட்டினம் என்று பெயர் இருந்ததாம். அவன் பெயரை யொட்டியே சென்னை என்று தமிழில் மாற்றம் செய்யப்பட்டதாம். காலம் காலமாகப் புகழ்பெற்று வந்த மயிலை, திருவல்லிக்கேணி, பட்டினப்பாக்கம் போன்ற தனித்தமிழ்ப் பெயர்களைத் தாங்கியுள்ள ஊர்கள் சென்னையில் உள்ளன. மயிலையில் வள்ளுவர் கூட வாழ்ந்திருந்த தாகச் சொல்லப்படுகிறது. பெயர் மாற்றம் செய்ய நினைத்தவர் கள் திருமயிலை அல்லது மற்ற தமிழ்ச் சொற்களைக் கொண்ட பெயர்களில் ஏதேனுமொன்றைச் சூட்டியிருக்கலாம். தெலுங்கு மன்னன் சென்னப்பனின் பெயரைத் தமிழகத்தின் தலை நகருக் கும் சூட்டியது, தமிழரைத் தமிழ்நாட்டைச் சிறுமைப்படுத்திய செயலாகும். சென்னை என்ற சொல்லுக்குத் தமிழில் எந்தப் பொருளுமே இல்லை. பொருளில்லாச் சொற்களே தமிழில் இல்லை என்று தொல்காப்பியர் கூறினார். சென்னை என்பது தமிழ்ச் சொல்லும் அல்ல, அதற்கு எந்தப் பொருளும் இல்லை என்பதை நோக்குக. தமிழன் சிந்தனை வளம்பெற்ற இக்காலத் திலேயே தமிழ்மொழி சிறுமைப்படுத்தப்படும்போது, ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு, வெள்ளை மனத்துடையோராய் இருந்த தமிழரை ஆரியர் ஏமாற்றியது வியப்பைத் தரும் செய்தியன்று.

**கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சைப் புகினும் கற்கை நன்றே** — **தனிப்பாடல்**[526]

**ஓர்இல் பிச்சை யார மாந்தி** — **குறுந்தொகை**[527]

இரந்துண்ணுதலைப் பிச்சைப் பெறுதல் என்று இலக்கியங்கள் கூறுகின்றன. பிய் என்ற வேர்ச் சொல்லினின்றே பிச்சை என்ற சொல் பிறந்தது. ஒரு பொருளின் சிறிய பகுதியே பிச்சை எனப் படும். வீட்டிலுள்ள உணவுப் பொருட்களில் ஒரு சிறு பகுதியைப் பிய்த்து அளிப்பதே பிச்சை எனப்படும்.

*பிய்-பிய்த்தல்=ஒன்றைப் பலவாக்குதல். பிய்த்தல்-பிக்கல்.*

ஒரு சிக்கல் மேலும் பலவாக உருவெடுப்பதையே பிக்கல் (பிடுங்கல்) என்கிறோம்.

*பிய்-பிள்-பிளவு=ஒன்று பலவாக உடைதல்.*
*பிய்-பிச்சல்-பலவாதல்.*

---

526. தனிப்பாடல், அதிவீரராம பாண்டியன்.

527. குறுந்தொகை, 277:3.

பிய்-பிய்ச்சு-பிசுக்கு=ஒரு பொருளின் சிறிய பகுதி.

பிய்-பிசிர்=சிறுபகுதி.

பிசிர்-பிசின்=சிறு மெழுகு.

பிய்ப்பு-பிசுப்பு=பிசுபிசுப்பு. பலவாகிச் சிறுத்தல்.

பிய்-பிசி=சோற்றுருண்டை. பிய்-பிசி-பிச்சி=சிறுபூ.

பிச்சி-பிச்சு-பிச்சா=நஞ்சு (வடமொழியில்)

நஞ்சுண்ட சிவனையும் குறிக்கும்.

பிச்சா=நஞ்சு சிறு பகுதியாகும். சிறு நஞ்சே உயிரைக் கொல்லும். சிறிய அளவைக் குறித்ததே பிச்சா என்ற வட சொல்லாகும்.

பிச்சா=சிறுபகுதி. பிச்வா=சிறுவாள் அல்லது குறுவாள் (அரபுமொழியில்) பிச்சு-பிஞ்சு=சிறிய காய், இளங்காய்.

பிஞ்சகன் என்ற வடசொல், தலையில் அணியும் ஓரணி கலனைக் குறித்தது. இதுவும் பிஞ்சு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. சிறிய பிறை நிலவை சிவன் தலையில் சூடியிருப்பதால், பிஞ்சகன் என்று அழைக்கப்பட்டான்.

பின்னு மலிரும் பிசிர் போல விண்ணும் — பரிபாடல்.[528]

பிய்த்தல் என்ற மூலத்தைக் கொண்ட பிச்சை எனும் சொல், தமிழ்ச்சொல்லே.

○○○

528. பரிபாடல், 6:83.

## 43

# யாமம்

ஜாமம், யமா போன்ற வடசொற்கள் நடுஇரவையும், காலனையும் குறித்துச் சொல்லப்பட்டவைகள் ஆகும். இச் சொற்களினின்றே யாமம் என்ற சொல்லும், எமன் என்ற சொல்லும் தமிழில் திரிபுற்றதாக வடமொழியாளர் கூறுகின்றனர். எமன் என்பான், தென்திசையில் உள்ள நீத்தார் உலகிற்குத் தலைவன் என்று ஆரியத் தொன்மங்கள் கூறுகின்றன. மேற்கண்ட சொற்களுக்கான வேர்ச்சொற்கள் வடமொழியில் இல்லை என்பது ஒருபுறமிருக்க, தென் திசைக்கு முற்றிலும் தொடர் பில்லாத ஆரியர், எமன் தென் திசையில் இருப்பதாகக் கூறுவது பொருத்தமுடையதாகத் தெரியவில்லை. யகரத்தில் சொற் களைத் தொடங்கும் வழக்குத் தமிழில் இல்லை. யகர நெடில் கொண்டே தமிழ்ச் சொற்கள் உள்ளன. யா என்ற வேர்ச் சொல்லி னின்றும் பல சொற்கள் தமிழில் நீண்டுள்ளன. பொதுவாக, யா என்ற சொல்லில் தொடங்கும் சொற்கள் வளர்ச்சி, பெருக்கம், நீட்சி, இணைப்பு என்றவாறு விரியும்.

யா=கட்டு, இணை, சேர், கூடு என்றவாறு நீளும்.

யாக்கை=உறுப்புகளால் கட்டப்பட்டுள்ள உடல்.

யாப்பு-யாத்தல்=இலக்கண விதிகளுக்குட்பட்டு,
இயற்றப் படும் பாடல்கள்.

யாக்கை-ஆக்கை=கட்டுவதற்குப் பயன்படும் கயிறு.

யாண்டு=நாட்களையும் மாதங்களையும் கொண்டு
கட்டப்பட்ட ஆண்டுக் கணக்கு.

யாணர்=மரங்களை இணைத்துப் பொருட்கள் செய்யும் தச்சர்.

யாடு=உடுக் கூட்டமாகிய மேழக்குறி.

யா என்னும் சொல், இருள்-இரவு-இருட்டு-கருமை ஆகிய வற்றைக் குறிப்பதாகவும் உள்ளது. இரவில் காவல் செய்யும் பணியாளர்களை யாமக்காவலர் என்று சிலப்பதிகாரம் கூறு கிறது.[529] இவரை யாமிகர் என்று வடமொழி கூறுகிறது.

யாமங் காவல ரவிய மாறே — குறுந்தொகை[530]

யாமம் பொதுவாக இரவையும் சிறப்பாக நடு நிசியையும் குறித்தது.

காரும் மாலையும் முல்லை குறிஞ்சி
கூதிர் யாமம் என்மனார் புலவர் — தொல்காப்பியம்.[531]

நடுநாள் யாமத்துந் தமியங் கேட்டே — நற்றிணை[532]

வான்கண் விழியா வைகறை யாமத்து — சிலப்பதிகாரம்[533]

யாமத்தும் யானே யுளேன் — திருக்குறள்[534]

நள்ளென் றன்றே யாமஞ் சொல்ல — குறுந்தொகை[535]

யா என்ற சொல் நீரையும் குறித்தது. யாமரம் என்பது பாலையிலுள்ள வோர் மரம். இம்மரத்தின் பட்டையில் நீர் மிகுந்திருக்கும். வெப்பம் மிகுந்த கோடையில், நீரின்றித் தவிக்கும் தனது பிடிக்கு (குட்டி), இம்மரப்பட்டையை உரித்துப் பிழிந்து யானை நீரை அளிக்கும். யாமரம்=நீர் மரம்.

பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் பொளிக்கும் — குறுந்தொகை[536]

பொத்தில் காழ வத்த யாஅத்து — குறுந்தொகை[537]

முளிசினை யாஅத்துப் பொளிபிளந்தூட்ட — அகநானூறு[538]

---

529. சிலப்பதிகாரம், 5:29; 10:1, 15:105.
530. குறுந்தொகை, 375:6.
531. தொல்காப்பியம், பொருள். 952.
532. நற்றிணை, 129:9.
533. சிலப்பதிகாரம், 10:1.
534. திருக்குறள், 1167:2.
535. குறுந்தொகை, 6:1.
536. மேலதே, 37:3-4.
537. மேலதே, 6:1.
538. அகநானூறு, 335:6.

புன்றலை மடப்பிடி யுணீஇய ரங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனை கவுட்
படிஞிமிறு கடியுங் களிறே — அகநானூறு[539]

கயந்தலை மடப்பிடி உயங்குபசி களைஇயர்
பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை — நற்றிணை[540]

மேற்கண்ட செய்திகள் வாயிலாக, யா என்ற சொல் நீரையும் குறித்தது என அறியலாம். நீர் என்ற சொல்லே, நீல்-நீலம் என்றானது. நீல்=நீர் (தெலுங்கு). எகிப்திய ஆறு நீல் என்ற சொல்லின் வழியில் தோன்றியதே. நீல்-நைல் எனப்பட்டது. நீலாறு தோன்றிய இடத்தினின்று எகிப்துக்குள் நுழையும் வரையில் வெண்மை நிறமாகவும், பின்னர் நீல நிறமாகவும் மாறுகிறது என்பது செய்தியாகும். நடு ஆப்பிரிக்கப் பனிமலையில் தோன்றும் ஆறு, தொடக்கத்தில் வெண்மை நிறமாக உள்ளதென்பர். நீலம் என்பதும் தமிழ்ச் சொல்லே. அது வடசொல்லாகத் திரிக்கப்பட்டது. நீலம் கருமையைக் குறித்ததே. கண்ணனும் இராமனும் கருநிறத்தோரே என்பதால், நீலவண்ணத்தில் சுட்டப்படுகின்றனர். கருநிற நஞ்சும் நீலம் என்றே சொல்லப்பட்டது. நீலகண்டன் என்று சிவனைச் சொல்வர். கண்டம் என்பது, கணு என்ற தமிழ் மூலத்தின் திரிபே. நீலமலை=கருமலை. நீலன்=கரிய நிற சனிக் கோள். நீலி=காளி.

யா-யம்-அயம் என்று நீண்டு நீரையே குறித்தது. யம் (yam) என்ற சொல்லுக்கு எகிப்திய மொழியில் கடல் என்றே பொருளாகும்.

எனவே யா என்ற சொல்லுக்கு, இருட்டு, நீர் என்ற இரு பொருளும் உண்டு.

குமரி நாட்டு மக்கள் தென்கடலைக் கடக்கவியலாது நின்றனர். தெற்கே கடலும் பனிமலையும் கொண்ட இருண்ட கண்டமாகத் தென்முனை காட்சியளித்தது. கருமை நிறங் கொண்ட இருண்ட கண்டம் என்ற பொருளில் தென்திசையை யாத்திசை என்று தமிழர் அழைத்தனர். யாத்திசையின் தலைவன் யாமன் எனப்பட்டான். யாமனைத் தென்திசையின் தலைவனாகச் சிவனே குறித்தான் என்று திருமந்திரம் கூறுகிறது. குமரிக் கண்டத்தின் தென்திசையில் கடல் இருந்தது பற்றியும், இருட்டாக இருந்தது பற்றியும் திரைக் கருந்திசை என்று அழைக்கப்

539. மேலதே, 59:7-9.

540. நற்றிணை, 137:6-7.

பட்டிருக்க வேண்டும். திரைக்கரு என்பதே தெற்கு என்று நீண்டிருக்க வேண்டும். திரை=கடல்.

வடக்கு என்பதும் தமிழ்ச் சொல்லே. வடுத்தல் என்பது, நீளுதல், பருத்தல், பெருகுதல், உப்புதல் என்றவாறு பொருள் படும். குமரிக்கண்டத்தின் வடபகுதி நீண்டிருந்து, நிலப்பகுதி யாகவுமிருந்தது. வடுத்தல் என்பதே வடதிசையாயிற்று. வடம் =விரிந்து தழைத்திருக்கும் ஆலமரம். நீண்ட கயிறு (வடக்கயிறு) வடம்=வளர்ந்து செல்லும் நகரியக் குடியிருப்புகள்.

வடை=உப்பிப் பருத்திருக்கும் உணவுப் பொருள்.

நிலப்பகுதி வளர்ந்திருந்ததால் வடதிசை என்றும், நீர் நிறைந்த இருண்ட பகுதி தென்திசை என்றும், கரணியத்தோடு தான் சொல்லப்பட்டன.

யா-யாமம்=தென்திசை என்றவாறு அறியப்படுவதை, எபிரேய மொழியில் உள்ள யாமன்[541] என்ற சொல் உறுதி செய்கிறது. யாக்கோபு-இராக்கேல் என்ற இணையின் கடைமகனான பின்-யாமின் என்பான், தெற்கத்தியான் என்ற பொருளால் அறியப் படுகின்றான். பின் என்பது, பின்னால், கடையாக என்ற பொருளில் சொல்லப்பட்டது. யாக்கோபுவின் மக்கள் பன்னிரு வருக்கும் பிற்காலத்தில் நாடுகள் பிரித்துக் கொடுக்கப்பட்ட போது, பின்-யாமின் மரபாருக்குத் தென்கோடிப் பகுதியில் நாடு ஒதுக்கப்பட்டது. யாமன் என்ற தமிழ்ச் சொல்லே யாமின் என்று எபிரேய மொழியில் திரிந்தது. யாமீன் என்று அரபு மொழியில் சொல்லப்பட்டது. பின்-யாமின் என்ற பெயரே, ஆங்கிலத்தில் பெஞ்சமின் (Benjamin) என்று வழங்கப்படுகிறது. தமிழைப் போலவே, ஜா என்ற எழுத்து எபிரேய மொழியில் இல்லை என்பதை அறிக. யா என்ற எபிரேயச் சொற்கள் அனைத்தும் ஆங்கிலத்தில் ஜே (J) என்ற ஒலிப்பில் திரிபுபட்டன.

யா என்ற சொல் திசையைக் குறித்தது பற்றிய மேலும் ஒரு செய்தி விவிலியத்தில் கூறப்பட்டுள்ளது. நாவாய் என்ற பெயர் கொண்ட நோவா என்பானின் மகனாக யா-பெத் என்பவனும், அவன் மகனாக யாவன் என்பவனும் விவிலியத்தில் கூறப்பட் டுள்ளனர். இவ்விரு பெயர்களும் தந்தைக்கும் மகனுக்கும் உரிய பெயர்களாகும். யா-பெத்[542] என்ற பெயருக்கான விளக்கத்தை விவிலியம் கொடுக்கவில்லை. ஆனால் யாவன் (Yavan) என்ற

541. The New American Bible, Dict., p. 36.

542. Gen. 5:32.

பெயருக்கான பொருள், திசையைப் பற்றியதே[543] என்று விவிலிய ஆய்வாளர்கள் குறித்துள்ளனர். பின்-யாமின் என்ற சொல், மிகவும் பிற்காலத்தில் வழங்கப்பட்ட சொல்லாகும் (கி.மு. 2000). யாவன் என்ற சொல், தமிழ் ஒலிப்புடனும், தமிழ்ப்பெயராகவும், தமிழுக்கே உரிய 'ன்' விகுதியைப் பெற்றும், தெளிவாக உள்ளது. யாவனின் காலம் கி.மு. 15000-10000ஆண்டுகளாக இருக்கலாம்.

நோவாவின் பெயரனான யாவன் என்பான், தென்திசையி னின்றும் வந்தவன் என்ற பொருள் பற்றியே யாவன் என்று அழைக்கப்பட்டதாக விவிலியம் கூறுகிறது. இவன் மரபாரே, கிரேக்கம்-ஆசியாமைனர்-கப்படோசியா போன்ற நாடுகளில் பல்கிப் பெருகி வாழ்ந்தவர்கள் என்றும், யாவன் என்பான் பேசிய மொழியினின்றே, இந்திய-ஐரோப்பிய மொழிகள் தோன்றின என்றும் விவிலிய விளக்கம் கூறுகிறது. யாவன் என்பான் தமிழனே என்ற நோக்கில், தமிழ் மொழியினின்றே இந்திய ஐரோப்பிய மொழிகள் தோன்றின என்பது சரியான சிந்தனையாகும். எனவே, செமிட்டிக் இன மொழிகளுக்கும், இந்திய ஐரோப்பிய மொழிகளுக்கும், தாய்மொழியாகத் தமிழ் இருந்தது என்பதையே, விவிலியத்தில் கூறப்பட்டுள்ள பெயர்களும், நிகழ்வுகளும் காட்டுகின்றன.

யாவன் என்பானின் மரபாரையே யாவனர்-யவனர் என்று தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன.[544] யவனர் தமிழ் மரபாரே என்பதைக் கடைக்கழகப் புலவர்களும் மக்களும் அறிந்திருக்க வில்லை. பிற்காலத்தவர் யவனர் என்பாரை, கிரேக்கர்களாக மட்டும் குறிப்பிடாமல், உரோமையர், யூதர், அராபியர் போன்ற மேலை நாட்டு மக்களையும் குறிக்கும் சொல்லாகப் பயன்படுத் தினர். யவனர் என்பார், நெடிய உயரமும், சிவந்த நிறத்தையும், அழகான உருவையும் கொண்டிருந்ததால், யவ்வனம் (அழகு) என்ற வடசொல்லால், யவ்வனர்-யவனர் என அழைக்கப்பட்ட தாக, பொருந்தாக் கதையையும் கூறினர். யவனம் என்பது

543. The New American Bible, Dict., p. 96.

Javan: Son of Ya-pet (Gen.10:2). As a geographical name, it designates the Greek colonies of the West Coast of Asia Minor (Is. 66:9; Ezek. 27:13) Continental Greece (Joel, 4:6) and the Greco-Macedonian Kingdom. (Dan. 8:21) - The New American Bible.

544. அகநானூறு 149:9; மணிமேகலை, 19:108; முல்லைப்பாட்டு 61, நெடுநல்வாடை 101 என விரியும்.

இசுலாமியர் நாடு என்றும், அது பாக்ட்ரியா, ஆப்கானித்தானம், அரேபியா போன்ற நாடுகளையே குறிப்பதாக ஆரியச் சமயம் கூறுகிறதென்றும், யவனர் என்பார் இந்தியாவின் மீது படையெடுத்து வந்த இசுலாமியர் என்று எச்.எச். வில்சன் கூறுவதாகவும் விளக்குகின்ற வின்ஸ்லோ[545] தமிழ் அகரமுதலியின் கூற்றுத் தவறானது.

வடமொழியில் யா எனத் தொடங்கும் சொற்கள், தென் திசையைக் குறித்தே சொல்லப்பட்டுள்ளன. தமிழில் சொல்லப் 'பட்ட கருமை என்ற பொருளையும், அவை உணர்த்தின. ஜாமம் ரன்பது, யாமம் என்ற தமிழ்ச்சொல்லின் திரிபே. யமா எனப் பட்ட யாமனைத் தென்திசையின் தலைவனாக, வேதங்களும் தொன்மங்களும் கூறுகின்றன. யாம்யம் (வடமொழி)=தென் திசை. பாமினி (வடமொழி)=தென்திசை. யமுனா=தென்திசை நோக்கி ஓடிவந்து, ஒரு முனையில் (கங்கையில்) கலக்கும் ஆறு. யாமுனை என்பது தென்முனை என்ற பொருளைக் கொண்டதே. வடமொழியிலும் மூத்த மொழியான எபிரேயம், யாத்திசை பற்றிச் சொல்வதாலும், யா-யாமம்-யாவன் போன்ற தமிழ்ச் சொற்களையும் அம்மொழி கொண்டிருப்பதாலும், யா எனும் எழுத்து-சொலின் பொருள் எபிரேய மொழியில் உணரப்பட்டுள்ளதாலும், யாமம் என்ற சொல் வடமொழியின் தமிழ்த் திரிபே எனக் கூறுவது நகைப்பிற்கிடமானது. தமிழ்ச் சொல்லான யா எனும் வேரினின்றே, சமற்கிருதம், எபிரேயம், கிரேக்கம் உட்படப் பன்மொழிகளும், பல சொற்களைக் கடன் பெற்றன என்பது தெளிவு.

யா என்ற தமிழ்ச் சொல் தென்திசையையே குறித்தது என்பதற்கானச் சான்று தமிழ் இலக்கியங்களில் தெளிவாகக் கூறப்படவில்லை என்பது, ஒருசில மொழியியல் ஆய்வாளர்களின் கருத்து. எண்ண முடியாத சொற்களைக் கொண்ட தமிழ்மொழியின் சொற்கள் அனைத்தையும் இலக்கியங்களில் அடைத்து நிரப்பிவிட இயலாது. தமிழ் இலக்கியங்களில் சொல்லப்படாத பல சொற்கள் (எ.கா. பயணம்) தமிழரின் பேச்சு வழக்கில் உள்ளன. ஒரு சொல், தமிழ்ச்சொல் என்பதை, அவைகள் இலக்கியங்களில் சொல்லப்படாவிட்டாலும், அதன் வேர்ச்சொல் கொண்டு அறிந்து, அதனைத் தமிழ்ச்சொல்லாக ஏற்றுக் கொள்ளலாம் என்பதும் பாவாணருடைய கருத்தாகும்.

ooo

---

545. வின்ஸ்லோ தமிழ் அகரமுதலி, ப. 904.

44

## நகரம்—நாகரிகம்

நகர் என்ற தமிழ் வினைச் சொல்லை மூலமாகக் கொண்டு, பன்மொழிகளிலும் பல சொற்கள் உருவெடுத்துள்ளன. ஆனால் வடமொழியாளர், நாகரிகம் என்ற சொல்லை வடமொழியி னின்றே தமிழ் கடன் பெற்றதாகக் கூறியுள்ளனர்.

*நகர் (வடமொழி) = பெரும் ஊர் அல்லது பட்டணம்.*

*நாக்ரிக் (வடமொழி) = நகரியத்தால் உருவான பண்பாடு, வழக்காறுகள்.*

*நாகரா (வடமொழி) = வடமொழியின் தேவநாகரி எழுத்துக்கள்* (alphabets)

நகர் என்ற தமிழ்ச் சொல்லுக்கு, அகலுதல், நீளுதல், விரிதல், பிரிதல் என்றவாறு பொருள் விரியும். நகர் என்ற சொல், ஆற்றைக் குறித்து, எபிரேய பாபிலோனிய-அரபு மொழிகளில் சொல்லப் பட்டுள்ளன. நெஹ்ரா (Nehra-Nehr) என்ற சொல், மேற்குறிப் பிட்ட மொழிகளில் ஆற்றையே குறித்தது. காஷ்மீரத்து மொழி யிலும் நெஹ்ரு (Nehru) என்ற சொல் ஆற்றைக் குறித்தே சொல்லப் பட்டுள்ளது. ஆற்றங்கரையில் வாழ்ந்திருந்த பிராமணப் பண்டிதர்களைக் குறிக்க நெஹ்ரு என்ற சொல் வழக்கில் இருந்த தாகவும், அப்பெயரையே நேரு கொண்டிருந்தார் என்றும் சொல்லப்படுகின்றது. நேரு (Nehru) என்ற பெயரே, நகர் என்று ஆற்றைக் குறித்தத் தமிழ்ச் சொல்லின் திரிபாகும். நகர்-நகர்ந்து செல்லும் ஆறு.

ஆரியர் எக்காலத்தும் நகரிய வாழ்க்கை நிலையைக் (Urban Civilization) கொண்டிருந்தவர் அல்லர் என்பதும், இந்தியா வில் தமிழரின் நகரிய நாகரிகத்தைக் கண்டு வியப்புற்றனர் என்பதும், வரலாறு கூறும் செய்திகளாகும். நகரிய நாகரிகத்தை

அறிந்திராத ஆரியர், நகர்-நாகரிகம் என்ற சொற்களைத் தம் மொழியில் கொண்டிருந்தனர் என்பது தவறான செய்தியாகும். நகர்-நாகரிகம் போன்ற சொற்களுக்கான வேர்ச்சொற்கள் வடமொழியில் இல்லையென்பதைப் பற்றியெல்லாம் அவர்கள் சிந்திக்கவில்லை. சொன்ன பொய்யைத் திரும்பத் திரும்பக் கூறி அதனை மெய்யாக்க முயன்றனர்.

குமரிநாட்டில், குமரி ஆற்றங்கரையில் தோன்றிய தமிழரின் நாகரிகம், உலகிற்கே முதல் நகரிய நாகரிகம் ஆகும். நகர் என்ற ஆற்றைக் குறித்த தமிழ்ச் சொல், பிற்காலத்தில் வழக்கிழந்து போயிற்று. அதனை மேலை நாட்டார் விடாமல், தமது மொழியில் நிலைக்க வைத்துள்ளனர். நகர் என்னும் ஆற்றங்கரைகளில் தோன்றியதே நாகரிகம் எனப்பட்டது. வரலாற்றுக்கு முற்பட்ட குமரியாற்று நாகரிகம் தமிழருடையது. ஆற்றின் பெயராலேயே அக்கண்டமும் அழைக்கப்பட்டது. குமரி என்ற தமிழ்ச் சொல்லை, குமாரி என்று வடமொழியில் திரித்துக் கொண்டனர். நா என்னும் வேர்ச் சொல்லினின்று-நீட்சி, வளர்ச்சி என்றவாறும், கருமை நிறம் என்றவாறும் சொற்கள் நீண்டன. நா=நீட்சி, கருமை.

**1. நீட்சி என்ற பொருளில் நா எனும் வேர்ச்சொல் தரும் சொற்களாவன:**

நா-நாக்கு = நீண்ட தன்மை கொண்ட சுவைக்கும்,
பேசப் பயன்படும் உறுப்பு.

நா-நாகணம் = பேசத் தெரிந்ததாகக் கூறப்படும் ஒரு பறவை.

நாகு-நாகம்=நீண்ட உடலைக் கொண்ட பாம்பு;
நீண்ட வாலைக் கொண்ட குரங்கு.

நாகம் = நீண்ட துதிக்கையைக் கொண்ட யானை;
உயர்ந்து வளர்ந்த ஒரு மரம்.

நா-நகம்= உயர்ந்த மரம் மற்றும் மலை;
விரல் நுனியில் உள்ள தோலின் நீட்சி.

நகல்=அப்பால் செல்லுதல் என்ற வினை. நீளுதல்.

நகர் = வளர்ந்து விரிந்து செல்லும் ஊர்.

நா-நகர்-நகர்வு-நகர்த்து = அசைப்பு, நீட்டு, கூட்டு
என்று பொருள் கொண்டன.

எந்தை ஓம்பும் கடிப்படை வியல் நகர் — நற்றிணை[546]

546. நற்றிணை, 98:8.

நகர நம்பியர் திருதரு மறுகில் – சிலப்பதிகாரம்[547]

நா-நகு = ஒளிவிடுதல், மகிழ்தல், புன்னகைத்தல்.

நக்கதோர் பழியு மிலமே போதவிழ் – குறுந்தொகை[548]

நகுதல்=தலைவன் தலைவியோடு நீண்ட நேரம் கூடி மகிழ்தல்.

நகு-நகை = ஒளிவிடும் அணி வகை.

பனிமலர்க் கண்ணாரோ டாட நகைமலர் – பரிபாடல்[549]

நகை = அணிவகையோடு, முகம் வெளிப்படுத்தும் மகிழ்வுக் குறிப்பும் ஆகும்.

நா-நாகம் = வளர்ச்சி, நீட்சி. நாகம்-நாகர் = வளர்ச்சியுற்றோர்.

நா-நகர் = வளர்ச்சியடைந்த ஊர். நகர்-நாகர் = அவ்வூரின் மக்கள்.

நாகம்-நாகர் = பாம்பினை வழிபட்டோர்.

நா என்ற வேர்ச் சொல்லினின்று, நகர்-நாகர், நகம்-நாகம் போன்ற சொற்கள் நீண்டன.

## 2. கருமை என்ற பொருளில் நா என்னும் வேர்ச்சொல் தரும் சொற்களாவன

நா-நாகு-நாகணம் = பேசத் தெரிந்த கருநிறப்பறவை.

நாகு=கருமை நிறம் கொண்ட பெண், தமிழ்ப்பெண்.

நாகு=கருநிறம் கொண்ட பெண் எருமை, கருநிறம் கொண்ட நத்தை.

நா-நாகு-நாகம் = நீண்ட உடலைக் கொண்ட கருநாகம்.

நாகம் என்ற சொல்லில் கருமையும் நீட்சியும் பின்னிப் பிணைந்துள்ளதை நோக்குக.

நாகு-நாகம்=நீண்ட வாலைக் கொண்ட கருங்குரங்கு.

கரிய நிற யானை.

நாகம்=உயர்ந்து வளர்த்து கரிய நிறப் பட்டைகளைக் கொண்ட மரம்.

ஒளிதிக முத்தி யுருகெழு நாகம் – குறுந்தொகை.[550]

---

547. சிலப்பதிகாரம், 3:168.

548. குறுந்தொகை, 320:5.

549. பரிபாடல், 8:24.

550. குறுந்தொகை, 12:4.

எருமையும் மரையும் பெற்றமும் நாகே — தொல்காப்பியம்[551]

நீர்வாழ் சாதியுள் நந்தும் நாகே — தொல்காப்பியம்[552]

கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூன் மடநாகு — குறுந்தொகை[553]

*நாகு-நாகல்=கரிய பழங்களைத் தரும் நாகல் அல்லது நாவல் மரம்.*
*நாகு-நாகர்=கருநிறம் கொண்ட மாந்தர், தமிழர்.*

நகரில் வாழ்ந்திருந்த, அல்லது கருநிற நாகத்தை வழிபட்ட, அல்லது கரிய நிறம் கொண்ட தமிழ் மாந்தரே நாகர் எனப் பட்டனர்.

பூமுடி நாகர் நகர் — பரிபாடல் திரட்டு.[554]

நக்கர் எனும் சொல், குள்ளமான என்ற பொருளிலும் சொல்லப் பட்டுள்ளது. குள்ளமான கருப்பினத் தமிழர்களையே நக்க சாரணர் என்று மணிமேகலை கூறுகிறது. தமிழ் மக்கள் மேலை நாட்டாரைக் காட்டிலும் உயரம் குறைந்தவர்களே என்பது தெளிவு.

*நக்கை=குட்டையான தென்னைமரம்.*
*நக்கவாரி=குட்டையான தென்னை மரங்கள் அடர்ந்துள்ள கடலிடைப்பட்ட நிலப்பகுதி அல்லது தீவு.*

நக்கவாரி என்ற சொல்லே நிக்கோபார் எனத் திரிந்தது. இடைக்காலச் சோழர்களின் கல்வெட்டுகள் இவ்விடத்தினை நக்கவரம் என்று குறிப்பிடுகின்றன. நக்கர் என்ற சொல்லே, நாகர் என்ற சொல்லுக்கு மூலச்சொல் என்பாருமுளர். நாகு-

---

551. தொல்காப்பியம், பொருள். 1562.

552. மேலதே, 1563.

553. குறுந்தொகை, 164:1.

554. History of Tamilnad, Dr. N. Subramaniyan, Chapt. III, p. 17.

Nahariham: Sense of obligation, is not necessarily concerned with Nagara, a city but with Nagar - Pre Pallavan Tamil Index.

Negrito: The Negrito is related to Negro and is found scattered over a wide area from East Africa to Andamans and even beyond. The Kadars and Pulayans living in south west part of Tamilnadu may be taken to represent this early racial group - History of Tamilnad.

நாகர்; நகர்-நாகர்; நாகம்-நாகர்; நக்கர்-நாகர் என்ற பல்வேறு சொற்களும் நாகர் என்ற சொல்லைத் தந்தன என்றாலும் நா என்ற வேர்ச் சொல்லினின்றே இச்சொற்கள் யாவும் தோன்றின.

தேவ நாகரி என்ற எழுத்து முறை, தமிழர் கண்டுபிடித்ததே என்பதை, தேவ + நாகர் என்ற தமிழ்ச் சொற்களே கூறா நிற்கின்றன. தேவநாகரி எழுத்துக்கள் தமிழ் வரிவடிவத்தின் புதிய வடிவங் களே எனலாம். இதனை வடமொழியாளர் தமதாக்கிக்கொள்ள முயல்வது நகைப்பிற்கிடமானதே. காடர், புலையர் என்ற தொல்தமிழ் இனத்தார், தமிழகத்தின் மேற்குப்பகுதியில் வாழ்ந் தவர் என்றும், நாகர் எனப்படுவோர் அவரே என்றும் ந. சுப்பிர மணியன் கூறுகிறார்.[554] இதற்குச் சான்றாகப் பரோடா நகர்ப் பகுதியில் கண்டெடுக்கப்பட்டுள்ள படிமம் ஒன்றைக் காட்டு கிறார். இவ்வுடல் உயரம் குறைந்து காணப்படுவதாகவும், இது நாகர் இன மாந்தனுடையதாக இருக்கலாம் என்றும் கருதுகிறார். இவ்வினம் Negrito என அழைக்கப்பட்டதாக அறியப்படுகின்றது.

நாகரிகம் என்ற சொல், நகர்-நகரப் பண்பாடு என்பதின் விரிவு எனப்படுவது தவறு என்றும், நாகர் என்ற சொல்லி னின்றே, நாகர்+இயம்=நாகரியம்-நாகரிடம் எனத் திரிந்தது என்றும், தமது பல்லவர் காலத்துக்கு முந்தைய தமிழ் எனும் நூலில் குறிப்பிடுகின்றார்.[555] இவர் கூற்றும் ஏற்கக் கூடியதாகவே உள்ளது. நீக்ரோ என்ற ஆங்கிலச் சொல், நாகர் என்ற தமிழ்ச் சொல்லின் நீட்சியே எனலாம். நாகரிகம் என்பது கண்ணோட்டம் என்று திருக்குறளும், பண்பாடு என நற்றிணையும் கூறுகின்றன.

Nigri-நிக்ரி = இலத்தீன் மொழியில் கருமை நிறம் எனப் பட்டது. Niger நிகர்=கருப்பின மக்களைக் குறித்தது. இது ஆங்கிலத்தில் Negro-நிக்ரோ என்றும் திரிந்தது. நைஜீரியா என அழைக்கப்படும் ஆப்பிரிக்க நாட்டின் பெயர் Niger என்ற இலத்தீன் சொல்லினின்றும் தோன்றியது. நாகர்கள் கருமை நிறம் பற்றிய Negro என அழைக்கப்பட்டனர் என்பதால், இச் சொல்லுக்கான மூலச் சொல் நாகு என்ற தமிழ்ச் சொல்லே என அறியலாம்.

**நஞ்சும் உண்பர் நனிநா கரிசர்** — **நற்றிணை.**[556]

---

555. Pre.Pallavan Tamil Index, Dr. N. Subramaniyan, p. 487.
556. திருக்குறள், 580:2.

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர் — திருக்குறள்[557]

நாகர் எனப்படும் கறுப்பினத் தமிழர் பெருமளவில் வாழ்ந் திருந்த நகரங்கள் முறையே, நாகூர், நாகப்பட்டினம், நாகர் கோயில் என்றவாறு விரிவுபடும். நாகபுரி, நாகாலாந்து போன்ற பெயர்களும், நாகர்களின் குடியிருப்புக்களை அறிவிப் பனவே. குமரிக்கண்ட பேரழிவிற்குப் பிறகு நாகர் என்ற தமிழ் மரபாரில் சிலர் வட மெசபத்தோமியாவில் குடியேறினர். விவிலியம் கூறும் அபிறகாமின் பாட்டன் நாகோர் (Nagore) என்றே அழைக்கப் பட்டான். நாகர் மரபில் தோன்றியவனே அபிறகாம் என்பவனு மாவான். நாகோர் என்ற சொல், நாகோர் என்பான் வாழ்ந்திருந்த ஊரையும் குறித்துச் சொல்லப்பட்டுள்ளது. ஊரும் பெயரும் ஒரு சொல்லாலேயே அழைக்கப்படுவது தமிழர் வழக்கே. (எ.கா. சிதம்பரம்) இந்த நாகோர்[558] என்ற நகரம், அறம் நகரத் துக்கு (Aram Naharaim) அருகில் இருந்ததாகவும் விவிலியம் கூறு கிறது.[559] அறம் நகரம் என்ற தமிழ்ச்சொல், வடமெசபத்தோமி யாவின் இரு ஆற்றிடைப் பகுதியைக் குறிப்பதாகும்.

எனவே, நகர்-நகரம்-நாகர்-நாகரிகம் போன்ற சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்களே என்றும், அவை ஆரியர்கள் வாழ்ந்திருந்த வடஇந்தியப் பகுதிகளிலும், வடமெசபத் தோமியப் பகுதிகளிலும் வழக்கில் இருந்தன என்றும் அறிய லாம். மேற்கண்ட சொற்களை வடசொற்கள் என உரிமை கொண்டாட, ஆரியத்திற்கு எந்தத் தகுதியும் இல்லை என்பது தெளிவு.

### 3. நா எனும் வேர்ச் சொல்லினின்று, பேச்சு—கல்வி என்ற சொற்களும் விரிந்தன

நா-நாவு-நாவாடு=பேசு, உள்ளக் கிடக்கையை வெளிப் படுத்து.
நா-நாவு-நவில்=சொல், பேசு.

நாவு என்ற சொல்லுக்குக் கூப்பிடு என்ற பொருளுமுண்டு. கூப்பிட அழைக்கப் பயன்படும் ஒருவனது பெயர், நாவு-நாவம்-

---

557. நற்றிணை, 355:7.

558. The New American Bible, Gen. 24:10.
Nahor: A city of northern Mesopotamia near Haran - The New American Bible.

நாம (நாமம்) என்று வடமொழியில் திரிந்தது. Name என்ற ஆங்கிலச் சொல்லுக்கு, நா என்ற தமிழ்ச்சொல்லே வேராகும்.

நா நயம்=இனிமையான பேச்சு. சரியான பேச்சு. நடுநிலை யுடன் பேசப்படுவது.

நா நயம் என்பதே, நாயம் என்றும், ஞாயம் என்றும் நீண்டது.

நாமகள்=கல்விக்கு உரியவள். நாவின் வழியே கல்வி பெறப்படுவதால் என்க.

நாமகளையே, கலைமகள் என்றனர். சரசுவதி வடசொல் லாகும்.

அமிழ்து பொதி செந்நா வஞ்ச வந்த – குறுந்தொகை[560]

குழையக் கொடியோர் நாவே – குறுந்தொகை[561]

மாமகளும் நாமகளும் மாமயிடன் செற்று – சிலப்பதிகாரம்[562]

OOO

559. Ibid, Gen. 24:10.

560. குறுந்தொகை, 14:1.

561. மேலதே, 24:5.

562. சிலப்பதிகாரம், 27: வெண்பா, 1.

45

## பலி

தெய்வத்திடம் நேர்ந்து கொண்ட கடனுக்காக, மேடையொன்றில் வைத்து வெட்டப்படும் விலங்கு, தெய்வத்திற்கான விருப்பப் பொருட்கள் உள்ளிட்ட படையல் என்பனவே பலி என்ற சொல்லால் அறியப்படுகின்றன. தெய்வத்துக்குப் படைக்கப் படும் சோற்றுணவு, பூக்களால் செய்யப்படும் பூசெய் ஆகியனவும் அடங்கும். பிதிர்கள் எனப்படும் ஆரியர்களின் முன்னோர்கள், காக்கை உருவில் வந்து, அவர்கள் தரும் உணவை உண்டதாகவும் வேதங்களும் தொன்மங்களும் கூறுகின்றன. பலி என்பது வட சொல்லே என்றும், தமிழ் அச்சொல்லைக் கடன் பெற்றுக் கொண்டது என்றும் கூறப்படுவது, காலம் காலமாய்த் தமிழர் கொண்டிருந்த தெய்வ நம்பிக்கைகளைக் கொச்சைப் படுத்துவதாகும்.

ஆரியர்கள் இந்தியாவுக்கு வருமுன்னர், விலங்குகளைப் பலியிட்டதாகவோ, வேள்விகள் செய்ததாகவோ வரலாறு கூறவில்லை. ஆடுமாடுகளைத் தெய்வத்துக்குக் காவு கொடுக்கும் வழக்கு, தொல்தமிழர் கொண்டிருந்ததாகும். மாந்தன் விரும்பிய உயர்ந்த பொருளையே காவு கொடுக்கவும் தேர்ந்தெடுத்தான். மாந்தன் விரும்பியுண்ட உணவு, இறைவனுக்கும் படையலாகக் கொடுக்கப்பட்டது. மாந்தனின் விருப்பமே இறைவிருப்பமாகவும் சொல்லப்பட்டது. ஆடு, கோழி, பன்றி போன்ற விலங்குகளைத் தமிழர் காவு கொடுத்தனர். ஆரியர்களும் தொடக்கத்தில் இவைகளோடு புரவிகளையும் சேர்த்துக் காவு கொடுத்தனர்.

ஆடுமாடுகளைக் காவு கொடுக்கும் வழக்கு, பாபிலோன், பாலத்தீனம், எகிப்து ஆகிய நாடுகளிலும் நடைமுறையில் இருந்ததாக விவிலியம் கூறுகிறது. யூதர்கள் தங்கள் தெய்வத்துக்கு விருப்பமான காவுவிலங்காக ஆட்டையே தேர்வு செய்தனர்.

யூதர்களின் தெய்வமும் தமக்கு ஆட்டையே காவு கொடுக்குமாறு மக்களைக் கேட்டுக் கொண்டதாகவும் விவிலியம் கூறுகிறது. மேடையில் வைக்கப்பட்ட விலங்கு எரிக்கப்படும்போது எழு கின்ற புகை, தெய்வத்தைச் சென்றடைவதாக யூதர்கள் நம்பினர். அப்புகை கீழ்நோக்கியோ, பக்கவாட்டிலோ சென்றால், தெய்வம் அப்பலியை ஏற்றுக் கொள்ளவில்லை என்றும் நம்பினர். விலங்கின் தசையும் எலும்பும் முழுதுமாக எரிக்கப்பட்டது. இப்பலி முறைக்கு ஓலா (Olah) என்று எபிரேய மொழியில் கூறப்பட்டுள்ளது. ஓலா என்பது முழுதும் எரித்தல் என்பதே பொருளாகும். ஓலா[563] என்பது உலை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். உலை என்பது அடுப்பு, தணல் மேடை என்றவாறு கொள்ளப்படும். உலைக்காவு=நெருப்பில் எரிக்கப்படும் பலிப் பொருள். உலைக்காவு என்ற தமிழ்ச் சொல்லே, holocaust என்று ஆங்கிலத்தில் திரிபுபட்டுள்ளது. Holy என்ற ஆங்கிலச் சொல்லும், உலை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. இச்சொல் whole (முழுதும்) என்ற பொருளையும் தருகிறது. உலைக்காவு என்ற தமிழ்ச்சொல், தகனப்பலி என்று தமிழ் விவிலியத்தில் மொழிமாற்றம் செய்யப் பட்டுள்ளது. பலி என்பதை Sacrifice என்றும் ஆங்கிலத்தில் குறித்தனர். சா-சாகாடு-சாக்காடு போன்ற தமிழ்ச் சொற்கள் இறப்பைக் குறித்தன. பலிப்பொருளான ஆடு சாகடிக்கப்படுவது பற்றியே, ஆட்டைச் சாக (சாகம்) என்று வடமொழியில் அழைத்தனர். சாஆடு=கொல்லப்பட இருக்கின்ற ஆடு என்றும் பொருள் விரியும். சா என்ற வேர்ச் சொல்லினின்றே, சாக என்ற வடசொல் திரிந்தது. வெட்டப்பட்டுப் பலியிடப்படும் ஆடு, தூய்மையானது, தெய்வத் தன்மை பொருந்தியது என உணரப் பட்டது. சா-சாகம் என்று வடமொழியில் திரிந்தவாறு, சாகர் (Sacer) என்று இலத்தீன் மொழியில் மாற்றமடைந்தது. சாகர் (Sacer) என்பதே, Sacred என்று ஆங்கிலத்தில் திரிந்தது. Sacred என்ற சொல்லின் வழியே, Sacral, Sacrament, Sacrifice போன்ற சொற்கள் நீண்டன. அனைத்துச் சொற்களுக்கும் சா என்பதே தமிழில் சொல்லப்பட்ட வேர்ச்சொல்லாகும். காவு கொடுத்தல், பலியிடுதல் போன்ற செயல்களைத் தமிழரே தொடக்கத்தில் கைக்கொண்டிருந்தனர் என்பதையும், தமிழர் வழியில் மேலை

---

563. The New American Bibles, Dict. P. and Deut. 33:10.

Olah: In Hebrew, Olah or total sacrifice comprises the whole animal on the altar with nothing at all reserved for the priest or the person sacrificing-Bible.

நாட்டவரும், ஆரியரும் கைக் கொண்டனர் என்பதையும், அவர்கள் மொழிகளிலுள்ள, சாவைக் குறித்தத் தமிழ்ச் சொற்களால் அறியலாம். சாகம் என்பது போன்றே, அஜா என்ற வட சொல்லும் ஆட்டைக் குறித்தது. இது, அசை (அசைபோடுதல்) என்ற ஆட்டின் செயல் குறித்தவாறு திரிந்த சொல்லேயாகும்.

பொதுவாகப் பலி எனப்படுவது, தங்களது வாழ்வு வளர்ச்சியடையவும், தாங்கள் வாழ்ந்து வளர்ந்து எதிரிகள் வீழவும், வளர்ச்சியை மையமாகக் கொண்டு செலுத்தப்படும் காவு அல்லது படைப்பு எனலாம். ஆரியர்களின் பலிகளும், பின்னர் செய்யப்பட்ட வேள்விகளும், தன்னலத்தை அடிப்படையாகக் கொண்டு, தாங்கள் மட்டுமே வாழ, வளர மேற்கொண்ட நடவடிக்கைகள் ஆகும். பலி என்ற சொல்லுக்கு வளர்ச்சி என்பதே உட்பொருளாகும். அது வளர்ந்து உயர்ந்த புகையையும் கூடக் குறித்தது.

பல் என்பதே பலி என்ற சொல்லுக்கு வேர்ச் சொல்லாகும்.
பல்-துளிர்த்தல், வளர்தல், கிளைத்தல், உயர்தல்
என்றவாறு பொருள் விரியும்.
பல்-பல்லுதல்-முளைத்தல்: விழுந்து முளைப்பதால்
அது பல் (tooth) எனப்பட்டது.

பல்-பலவு-பலா=பழத்தின் மேற்தோலில், பற்களைப் போன்று பல முட்கள் முளைத்திருப்பதால், அது பலா எனப் பட்டது.

முட முதிர் பலவி னத்த நும்மொடு — நற்றிணை.[564]

பலாப்பழத்தில் சக்கைகள் உள்ளன என்பது பற்றியே, அது சக்கைப்பழம் என்றும் அழைக்கப்பட்டது. இன்றும் மலையாளத்தில் சக்கைப்பழம் என்றே அழைக்கப்படுகின்றது. சக்கை என்ற தமிழ்ச் சொல்லே, Jack என்று ஆங்கிலத்தில் திரிந்தது. சக்கைப் பழம்=Jack fruit உருண்டு திரண்டிருந்த பழம், உருட்டு என்ற தமிழ் மூலத்தைக் கொண்டே, fruit (ஃப்ரூட்) எனவும் ஆங்கிலத்தில் திரிந்தது

பல்-பல்கை-பலகை=பலாவின் மரத்தினின்றே முதலில் பலகைகள் அறுக்கப்பட்டன என்பதையே, பலகை என்ற சொல் விளக்குகிறது.

---

564. நற்றிணை, 26:6.

பல்-பல்லி=துண்டிக்கப்படும் போதெல்லாம், தனது வாலை மீண்டும் மீண்டும் வளர்த்துக் கொள்ளும் உயிரினம். பல்லுதல்= வளர்தல்.

பல்லி=வளர்ந்தது என்ற பொருளில் உயர்ந்த இடத்தையும் குறித்தது. மேட்டு நிலத்தில் உள்ள இடையர் குடியிருப்பு.

பல்லி-பலி=உயர்ந்த மேடை, மன்னனின் முரசு
வைக்கப்பட்ட இடம்.

பல்-பல-பல்கு-பல்கி=ஒன்று பலவாகத் துளிர்த்தல், பெருகுதல்.

மக்கள் வளர்ச்சியைப் பல்கிப் பெருகுதல் என்று குறிப்பிடு கின்றோம்.

பல்-சுரத்தல், ஊற்றாய்ப் பெருகுதல்.

பல் என்பதே, பால் என்று நீண்டது. பால்=குழந்தைக்கு வளர்ச்சியைக் கொடுக்கும் உணவு. பல்-பல. பல்-பால்=பல வளர்ச்சிக்கான கூறுகள் கொண்டது. பால் அருந்துபவன் பாலகன் என்றும், பாலன் என்றும் சொல்லப்பட்டான். இச்சொல்லின் பகர முதலெழுத்தின் ஒலிப்பைக் குறைத்துப் பாலா (Bala) என்று வடமொழியில் திரித்துக் கொண்டனர். ஆனால் கிரேக்க மொழியானது பால் (Pal-Paul) என்ற தமிழ் ஒலிப்பிலேயே அச்சொல்லை ஒலித்தது. பால் என்ற கிரேக்கச் சொல்லுக்கு இளையவன், சின்னவன் என்றே பொருளாகும். இளமையைக் குறித்த பால் என்ற தமிழ்ச்சொல்லே, பாலா என்று வடமொழி யிலும், பால் என்று கிரேக்க மொழியிலும் திரிபுபட்டது. St. Paul என்ற கிறித்துவ சமயத்தின் தொடக்ககாலச் சமயப் பணியாளர், சின்னப்பர் என்றே தமிழில் சொல்லப்படுவதை நோக்குக.

பால்-பாலிகை: தவசங்கள் முளைத்தல், வளர்தல்.

முளைப் பாலிகை: கலத்தில் முளைக்க வைக்கப்பட்டுள்ள
தவசப் பயிர்கள்.

விளக்கினர் கலத்தினர் விரிந்த பாலிகை — சிலப்பதிகாரம்.[565]

பால் வெண்மை நிறமானது பற்றியே, வெண்மணல் நிறைந்த நிலம் பாலை எனப்பட்டது வெண்மரங்கள் நிறைந்தவை எனவும் கூறலாம். மரப்பட்டைகள் வெண்மை நிறம் கொண்டு விளங்கு வதால், அந்நிலத்தின் கடுங்கோடை வெயில், மரத்தினால்

---

565. சிலப்பதிகாரம், 1:58.

ஈர்க்கப்படாமல், எதிரொளிக்கப்படுகிறது. வெண்மை நிறம்-வெய்யிலை ஏற்காது என்பது தற்கால அறிவியல் கண்டுபிடிப்பாகும். பாலை=வெப்பத்தை ஏற்காமல் வெளியிடும் நிலம் என்றும் கூறலாம்.

பிடிபிளந் திட்ட நாரில்வெண் கோட்டுக்
கொடிறுபோல் காய வாலிணர்ப் பாலை – நற்றிணை[566]

பிடியானை தின்னுதல் பொருட்டு, மரத்தின் மேலுள்ள தோலைப் (பட்டையை) யானை பறித்துக் கொண்டதால், நாரில்லாத வெளிரிய மரங்கள் நிறைந்துள்ள நிலம் பாலை நிலமென நற்றிணை கூறுகிறது. வேனில் கொடுமையால், முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் தங்களுடைய இயல்புகளினின்றும் திரிந்துபோவதால், பாலை தோன்றியதாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது.

முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும் – சிலப்பதிகாரம்[567]

பல்-பால்=சுரத்தல், கொடுத்தல் என்ற பொருளில் பாலித்தல் என்ற சொல்லும் நீண்டது. பாலித்தல்-அருள்பாலித்தல்= அருளாசி வழங்குதல்.

பல்-பலி=ஈடேற்றம். எண்ணியது பலித்தது என்ற வழக்கை நோக்குக. பலித்தல் என்பது மாந்தனின் செயலாகவும், பாலித்தல் இறைவனின் செயலாகவும் சொல்லப்பட்டது.

பீடம் என்ற சொல்லும், பலியுடன் தொடர்பு கொண்டது. பீடம் என்பது மேடை என்ற பொருளில் வடமொழியில் சொல்லப்பட்டது. மடத்தின் தலைமையும், தலைமையிடமும் பீடம் என்றே சொல்லப்பட்டன. பீடம்=பெருமை, மேன்மை, வலிமை ஆளுமை என்ற பொருளில் சொல்லப்பட்டுள்ளன. பீட (Peeta) என்ற வடசொல், பீடு என்ற தமிழ்ச் சொல்லின் திரிபேயாகும். பீடுநடை என்பதை நோக்குக.

பீடு = பெருமை (greatness, dignity and superiority)

566. நற்றிணை, 107:2-3.

567. சிலப்பதிகாரம், 11:64-66.

பீடு = வலிமை (Might, strength and Valor)

**பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய — சிலப்பதிகாரம்[568] 5:57**

**பீடிகை யோங்கிய பெரும்பலி முன்றில் — மணிமேகலை,[569] 6:52**

பிள்-பிட-பிடகு-பிடகம் = உயர்ந்த மேடை அல்லது பெட்டி.

பலி என்ற சொல், பல் எனும் வேர்ச்சொல்லினின்றும், பீடம் என்ற சொல், பிள் என்ற வேர்ச் சொல்லினின்றும் திரிந்த தமிழ்ச் சொற்களே.

இனி, வல் என்ற வேர்ச் சொல்லினின்றும், பலி என்ற சொல் நீண்டிருக்க வாய்ப்புண்டு. வல்-வலி-பலி என்றவாறு. வகரம் பிறமொழிகளில் பகரமாக மாறுவது பல்வேறு சொற்களால் அறியப்படும்.

வல்-வல்லுதல்=உயர்தல், துளிர்த்தல், தோன்றுதல், மேல் நோக்குதல்.

வல்-வல்லம்=தன் தரையினின்றும் உயர்ந்து நிற்கும் மேட்டு நிலம். மேட்டுநில ஊர். வல்லக் கிழவோன்: வடவாரியர்களை வல்லம் என்ற இடத்தில் வென்ற சோழன்.

வல்வில் = உயர்ந்து நீண்டிருக்கும் வில். வல்வில் ஓரி-வில்லிற் சிறப்புற்ற மன்னன்.

வல்-வல்லான் = வலிமை கொண்ட மறவன், வீரன். வீரன் என்று எழுதும் முறை தவறானது. வீறு-வெறி-வெற்றி போன்ற சொற்களோடு தொடர்புகொண்டவனை வீறன் என்று எழுதுவதே சரியானது. வீறம்-வீர என்று வடமொழியில் திரிந்தது.

வல்-வல்லம் என்ற தமிழ்ச்சொல்லே, Wall என்று ஆங்கிலத்தில் திரிந்தது. வல்லம் என்ற தமிழ்ச்சொல், வல்லம் (Vallum) என்றே இலத்தீன் மொழியிலும் கூறப்பட்டுள்ளது. வல்லம் (தமிழ்) - வல்லம் (இலத்தீன்) - வால் (ஆங்கிலம்)

வல்லி=உயரே தாவிப் பறக்கும் வண்டினம், தாவும் வேங்கை.

வல்-வல்லம்=சூதாட்டப் பலகையை வைக்கும் மேடான இடம்

---

568. மேலதே, 5:57.

569. மணிமேகலை, 6:52.

வல்சி=உயிர் காக்கும் சோறு. உயர்வான அறத்துக்கு உவமையாகச் சொல்லப்பட்டது.

வல்லுப்போர் வல்லாய் மலைமேன் மரம் – பரிபாடல்[570]

கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி – சிலப்பதிகாரம்[571]

வல்லியம் பெருந்தலைக் குருளை மாலை – நற்றிணை[572]

சிறுகாலை யேதமக்குச் செல்வழி வல்சி – நாலடியார்[573]

வல்-வலி என்பதும், பலி எனத் திரிந்தது எனக் கொள்ளலாம்.

பலி என்ற சொல் தமிழ் இலக்கியங்களில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டிருப்பது, பலி தமிழ்ச் சொல்லே என்பதை உறுதிப்படும்.

விலைப்பலி யுண்ணும் மலர்ப்பலி பீடிகை – சிலப்பதிகாரம்[574]

மாஇில் மரத்த பலியுண் காக்கை – நற்றிணை[575]

விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே – குறுந்தொகை[576]

பலிகள் ஆர்கைப் பார்முது குயவன்
இடுபலி நுவலும் அகன்றலை மன்றத்து – நற்றிணை[577]

பலிக்கந்தம்,[578] பலிபீடிகை,[579] பலிமுன்றில்[580] ஆகிய சொற்கள், காவு கொடுக்கும் இடம் பற்றிய செய்திகளையும் தெரிவிக்கின்றன.

---

570. பரிபாடல், 18:41.
571. சிலப்பதிகாரம், 2:29.
572. நற்றிணை, 2:5.
573. நாலடியார், 328:1.
574. சிலப்பதிகாரம், 12:43.
575. நற்றிணை, 281:1.
576. குறுந்தொகை, 210:11.
577. நற்றிணை, 293, 2-3.
578. மணிமேகலை, 6:60.
579. சிலப்பதிகாரம், 5:78, 86.
580. மணிமேகலை, 6:52.

46

## அக்கம்–பக்கம்

ஏறக்குறைய எல்லாத் தமிழ் மக்களும் நாளும் பயன்படுத்தி வரும் சொற்கள் அக்கம்-பக்கம் என்பனவாகும். இச்சொற் களையே வடசொற்கள் என்றும், அவை அக்ஷம், பக்ஷம் என்பவைகளின் திரிபுகளே என்றும் வடமொழியாளர் கூறுவதி லிருந்து, தமிழின் அனைத்து சொற்களுமே வடசொற்கள் எனவும், தமிழ் வடமொழியினின்றும் பிரிந்து சென்ற மொழியே என்றும், வடமொழியை நிலைநிறுத்திக் கொள்ளவே, இவ்வா றான பொருத்தமற்ற பொய்யுரைகளையெல்லாம் கூறிவைத்தனர். இவைகளையும் தமிழர் ஏற்றுக்கொண்டது, வியப்பினும் வியப் பான செய்தியாகும்.

அக்ஷம் - அக்கம் என்றும், பக்ஷம்-பக்கம் என்றும், யக்ஷா-இயக்கம் என்றும், அக்ஷரம்-அக்கரம் என்றும் திரிபு பட்டதாகக் கூறினர். இது தலைகீழ்ப்பாடம் என்பதும், தமிழ்ச் சொற்களின்றே அவைகளைத் திருடிக்கொண்டனர் என்பதும், மேற்சொல்லப்பட்ட சொற்களுக்கெல்லாம் தமிழில் வேர்ச் சொற்கள் உள்ளனவென்பதும், ஆரியர்கள் அறியாதவையுமல்ல. இச்சொற்களுக்கெல்லாம் வடமொழியில் வேர்ச்சொற்களே இல்லை என்பது ஒருபுறமிருக்க, இச்சொற்களுக்குப் பின்புலத்தி லுள்ள அறிவியல் கண்டுபிடிப்புகளும் தங்களுடையதே என்று ஆரியர்கள் சொல்லிக் கொள்வதும், அறிவுத் திருட்டேயன்றி (Plagiarism) வேறல்ல. நிலவின் பக்கத்தை வைத்தே நாட்கள் கணக்கிடப்பட்டன. எனவே நாட்களைக் குறிக்கும் சொல்லாகப் பக்கல் (தேதி) என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. திதி என்ற சொல்லிலிருந்தே தேதி என்ற சொல் பிறந்ததாகவும், அதுவே date என்ற ஆங்கிலச் சொல்லுக்கும் மூலச்சொல் என்றும் கூறினர்.

திதி என்பதே தீ தீ என்றவாறு இரட்டித்துக் கூறப்பட்ட ஒளியின் அடிப்படையில் உருவான சொல்லாகும். ஒரு நாளில் நிலைபெற்ற ஒரு விண்மீனை ஒரு தீயாகவும், அத்தீயில் நுகர்ந்து நிலைகொள்ளும் திங்களை ஒரு தீயாகவும் கொண்டே, தீத்தீ என்ற சொல் உருவானது. அதன் பொருளையறியாத ஆரியர் அதனைத் திதி என்று திரித்துக் கொண்டனர். திதி என்பவள் தமிழனை மணந்து கொண்டதாக ஆரியர் கதை கூறும். தெற்கு என்ற பொருளில் திதியும், அதற்கு எதிர்ச்சொல்லாக வடக்கு என்ற பொருளில் அதிதியும், ஆரிய மொழியில் பயன்படுத்தப் பட்டன. திதி என்ற தமிழ்த் திரிபுச் சொல்லை, பிற்காலத்துப் பிராமணர்கள் தேதி என்றும் குறித்தனர். திதி-தேதி-date என்ற சொற்களுக்கு இடையே தொடர்பிருப்பதாகக் கூறப்படுவதும் தவறான செய்தியாகும். அராபியரும், யூதரும், பாபிலோனியரும், ஈச்ச மரத்தின் நீண்ட இலை மட்டையை நாட்களைக் கணக்கிடப் பயன்படுத்தினர். இந்த மட்டையில் பக்கத்துக்குப் பதினைந்து இலைகள் இருந்தன. இவ்விலைகளை ஒவ்வொரு நாளும், ஓரிலையாக மடித்து வைத்தனர். இவ்வாறு மடித்து வைக்கப் பட்ட ஒரு மட்டை ஒரு மாதத்தைக் குறித்தது. 12 மட்டைகளை ஒரு கட்டாக்கி ஆண்டைக் குறிக்க வைத்துக் கொண்டனர். இந்த ஈச்சமரத்தின் இலையை, Dactyl என்று கிரேக்கமொழி கூறுகிறது. இது, தகடு+இலை தகடிலை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே யாகும். கூர்மையான இலை என்பதே தகடிலை என்பதின் பொருளாகும். தகடு=கூர்மை. Dactyl என்ற கிரேக்கச் சொல்லே, Date என ஆங்கிலத்தில் திரிந்தது. Date என்ற ஆங்கிலச் சொல்லுக் கான மூலச் சொல், தகடிலை என்ற தமிழ்ச் சொல்லே. வட மொழியாளர்கள், Date என்ற சொல்லுக்கு மூலச் சொல்லான Dactyl என்ற சொல்லை மறைத்து விட்டு, திதி என்பதே Date எனத் திரிந்தது என்று பொருந்தாக் கதையையும் கூறிவைத்தனர்.

பகு .என்ற வேர்ச்சொல்லினின்றும் பல்வேறு தமிழ்ச் சொற்கள் உருவெடுத்தன.

பகு=கொடு, முறி, தறி, பங்கிடு, வெட்டு, பிள என்றவாறு பொருள் விரியும்.

ஊ துலைப் பெய்த பகுவாய்த் தென்மணி — குறுந்தொகை[581]

581. குறுந்தொகை, 155:4.

பகுவாய்=பிளவுபட்ட வாய்.

பாவடி யுரல பகுவாய் வெள்ளை — குறுந்தொகை[582]

பகுவாய்=அகன்ற வாயையுடைய உரல்; தாழி. பகுவாய்க் கொள்கலம், பகுவாய்ப் பறை போன்ற சொற்கள் இலக்கியங் களில் காணப்படுகின்றன.

பகு-பகுதி=முழுமையின் ஒரு பகுதி அல்லது சிறுபகுதி. படையில் ஒரு பிரிவு, செல்வத்தில் ஒரு பகுதியாகச் செலுத்தப் படும் திறை.

பகு-பகல்=பகுக்கப்பட்ட நாளின் ஒரு பகுதி.

பகலன்=ஞாயிறு. பகலவன்=சிவன்.

பகலன்-பகவன்=சிவந்த ஒளியையுடைய ஞாயிறு, சிவன்.

பகவன்-பகவல்=தெய்வத் தொடர்புடைய.

பகவன்-பகவான் என்று வடமொழியில் திரிந்தது.

பகவன்-பக்வான் (Bagwan)

பகவன்=தெய்வத்தொடர்புடைய.

பகவல் கீதை-பகவத் கீதை=சமயப் பாடல்கள்.

பகவதம்-பாகவதம்-பாகவதர்=சமயப் பாடல்களை இசைப்போன். (வடமொழி)

பகு-பாகம்=ஒரு பகுதி.

பாகம் என்ற சொல் பாகா என்று வடமொழியில் திரிந்தது.

பகு-பாகம்-பாகை=வட்டத்தின் 360 பகுதிகளில் ஒன்று.

பகு-பக்கம்=நிலவின் தோற்றம்.

அத்தோற்றமே பக்கல் என நாளையும் குறித்தது.

மாக்கடல் நடுவண் எண்ணாள் பக்கத்து — குறுந்தொகை.[583]

பகு-பக்க-பக்கி=எப்பக்கமும் பறந்து செல்லும் பறவை. பக்கத்தில் விரியும் சிறகு.

இசைபடு பக்க மிருபாலுங் கோலி — பரிபாடல்.[584]

---

582. மேலதே, 89:1.

583. மேலதே, 91:6.

584. பரிபாடல், 21:31.

பக்கி=பறவை. பக்கி என்ற தமிழ்ச்சொல், பக்ஷி என்று வடமொழியில் திரிந்து பறவையைக் குறித்தே சொல்லப்பட்டது.

பக்கி-பக்கிரி (அரபுச் சொல்) - Faqir.

எப்பக்கமும் சுற்றித் திரியும் சமயத் தொண்டன்.

பகு-பக்கு-பாக்கு=சிறு அளவு.

உடைத்துப் பகுதிகளாக்கப்படும் கொட்டை.

பாக்கு-பாக்கி (அரபுச்சொல்)=வரவேண்டிய பொருளில் ஒரு பகுதி.

பகு-பக்கு=வெளிப்பக்கம் தெரியும் மரப்பட்டை. மரத்தின் வெளிப்பக்கம்.

பக்குடுக்கை=மர ஆடை அல்லது மரவுரி.

பக்குடுக்கை நன்கணியார்[585]: புறநானூற்றுப் புலவர். மரவுரி தரித்ததினால் பக்குடுக்கையார் எனப்பட்டார். அணுக் கொள்கையை உலகிற்கு முதல்முதல் அறிவித்த தமிழ்க்கணியன். புறநானூற்றில் 194 ஆவது பாடலை இயற்றியவர்.

பக்கம்-பக்கல்=நிலவின் தோற்றம்.

தோற்ற வழியில் கணக்கிடப்படும் நாள்.

பக்கம்-பக்ஷம் என வடமொழியில் திரிந்தது. வளர்பிறையின் காலத்தை சுக்லபக்ஷம் என்றும், தேய்பிறையின் காலத்தை கிருஷ்ணபக்ஷம் என்றும் கூறினர்.

சுள்-சுடு-சூடு=சுள்ளெனச் சுடுதல். சுள்-சுக்கு=நாவைச் சுடும் சுக்கு.

சுக்கு வெண்மை நிறம் கொண்டது. சுள்-சுக்கு எனவும் நீண்டது.

சுள்-சுர்-சுடு=ஒளிர்தல், நிலவின் ஒளி, வெண்மை நிறமான ஒளி.

சுள்-சுர்-சொக்கு=வெண்மை நிறமான பொருள்.

சுக்கு-சுக்லம் =வெண்மை நிற விந்து.

சுக்லம் என்பது வெண்மை நிறம் பற்றிய வடமொழியின் திரிபுச் சொல்லாகும்.

சொக்குப்பக்கம்-சுக்கில பக்ஷம் எனத் திரிந்தது. ஒளிரும் பக்கம்

கரு என்ற சொல்லே, கிரு-கிருஷ்ண என்று வடமொழியில் திரிந்தது. கரு-கருப்பு. தேய் பிறையானது கரும்பக்கம்-கிருஷ்ண பக்ஷம் எனத் திரிந்தது. பக்கம் என்ற தமிழ்ச் சொல்லே, பக்ஷம் எனத் திரிந்தது.

---

585. புறநானூறு, 194.

ஆனா ணிறைமதி யலர்தரு பக்கம் போல் – பரிபாடல்[586]

வழியது பக்கத் தமர ருண்டி – பரிபாடல்[587]

அலர்தரு பக்கம் = வளர்பிறை-சுக்லபக்ஷம்

வழியது பக்கம் = தேய்பிறை-கிருஷ்ண பக்ஷம்

பக்கம் என்ற சொல்லைப் போன்றே, அக்கம் என்ற தமிழ்ச் சொல்லையும், வடமொழியின் திரிபுச்சொல் என்றனர். அஃகம் என்ற தமிழ்ச் சொல்லே, அக்கம் என்றானது. அக்கம்-அக்ஷம் என வடமொழியில் திரிபுற்றதாகப் பாவாணர் கூறுகிறார்.[588]

ஒரு ரிரண்டஃக மாயிற்று – சீவக சிந்தாமணி

ஆம்பல்... மீட்டஃகுதறும் – காஞ்சி புராணம்

அகம் என்ற இயற்கையின் எழுத்தோசை, அக்கமென மிகுந்து, அம்மிக்க வல்லின மெய் ஆய்தவெழுத்தாகத் திரிதலில், அஃகமாயிற்று என நன்னூலை மேற்கோள் காட்டி, மாறல் கார்த்திகேயனார் கூறுகிறார்.[589]

குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே – நன்னூல்[590]

அஃகம்-அக்கம், அஃகல்-அற்கல், அஃது-அது, அஃறிணை-அற்றிணை, எஃகு-எக்கு, கஃசு-கச்சு, பஃறேர்-பற்றேர் என்றவாறு நீண்ட சொற்களை ஒப்புநோக்குக.

அஃகம்-அக்கம்-அக்ஷம் என்று வடமொழியில் திரிந்தது. அக்ஷம் என்ற சொல், ஞாலத்தின் நேர்வரையைக் (terrestrial latitude) குறித்துச் சொல்லப்பட்டது. அஃக வேற்றுமை (difference of latitude), அக்ஷ வித்தியாசம் என்றும், அஃகோரை-அகோரை என்றும் வடமொழியில் திரிபுபட்டன. அகோரை என்ற வடசொல், அஃகு+ஓரை என்பதே. அகோரை என்பது,

---

586. பரிபாடல், 11:31.

587. மேலதே, 11:35.

588. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி, பாவாணர், ப. 67.

589. மொழிநூல் இலக்கணவியல், மாறல் கார்த்திகேய முதலியார், ப. 15.

590. நன்னூல், எழுத்தியல், 35.

ஒரு நாளை மணிகளாகவோ, 2½ நாழிகளாகவோ வகுக்கின்ற தன்மையதாக உள்ளதென வெங்காலூர் குணா குறிப்பிடு கின்றார்.[591]

அஃகு என்ற தமிழ்ச் சொல் கூர்மையைக் குறித்தது. அஃகு என்ற தமிழ்ச் சொல்லே, Accu (தமிழ்) -Acus-Acutus (இலத்தீன்)-Acute (ஆங்கிலம்) என்றவாறு திரிந்ததாகப் பாவாணர் கருது கிறார். அகரம் உகரம் என்று சொல்வதைப் போல், அஃகரம் என்ற சொல்லானது தமிழ் எழுத்துக்களை விளக்கும் பொதுச் சொல்லாகும். அஃகரம்-அக்கரம் என்றும் சொல்லப்பட்டது. இதனை அக்ஷரம் என்று வடமொழியில் திரிந்துக் கொண்டு, தமிழில் சொல்லப்பட்ட பொருளையே அவர்களும் எடுத்துக் கொண்டனர். தமிழின் முதல் எழுத்துக்களான, அ-உயிர்முதல், க-உயிர்மெய்முதல், ஃ ஆய்தம் ஆகியவற்றை இணைத்த சொல்லே, அஃகரம் எனப்பட்டது. அஃகரம் என்ற தமிழ்ச் சொல்லின் உட்பொருள் பற்றித் தெரியாத ஆரியர், அக்ஷரம் என்று திரித்துக் கொண்டு, அது எழுத்தைக் குறிப்பதாகவும் கூறிக் கொண்டனர். அக்கம்-பக்கம்-அக்கரம் ஆகிய சொற்கள் தனித் தமிழ்ச் சொற்களே.

○○○

591. வள்ளுவத்தின் வீழ்ச்சி, வெங்காலூர் குணா, ப. 142.

47

## தேயம்–தேசம்

தேஷ் என்னும் வடமொழிச் சொல்லினின்றே, தேசம் என்ற தமிழ்ச் சொல் பிறந்ததாகவும், தேசத்தைத் தேயம் என்று தமிழ் மரபுப்படி மாற்றிக் கொண்டதாகவும், வடமொழியாளர் கூறுகின்றனர். தேசம், தேசிகம், தேசீயம் ஆகியவை வடமொழிச் சொற்களே என்பதும் அவரது கூற்றாகும். எந்தத் தேயத்தையும் தமக்கெனக் கொண்டிராத ஆரிய இனம், பல்லாயிரம் ஆண்டு கட்கு முன்பே, அரசியல் நெறிப்படுத்தப்பட்ட தேயத்தையும், அதற்கான சட்டங்களையும், விதிமுறைகளையும் கொண்டிருந்த தமிழ் மக்களுக்குத் தேயம் என்ற சொல்லை அளித்ததாகக் கூறுவது, எவ்வளவு பெரிய பொய்க் கூற்று என்பதை வரலாற்றை ஆராய்ந் தோர் புரிந்து கொள்வர்.

தேயம், நாடு, மண்டிலம், கோட்டம், கூற்றம், நகரம், ஊர், சிற்றூர் என்ற பல அடுக்கு அமைப்பு முறைகளைக் கொண் டிருந்தவர் தமிழராவர். நகரிய நாகரிகம் என்னவென்பதே தெரியாத ஆரிய இனம், ஒரு நாட்டைப்பற்றிய இலக்கணத்தை வகுத்துக் கொடுத்தது என்பது, ஆண்டி தன்னை ஆள்பவனாக நினைத்துக் கொள்ளுதல் போன்றதே. தேயம் என்ற சொல்லுக்கு உரையெழுதிய பிராமணத் தமிழ் உரையாசிரியர்கள், குழப்ப மான விளக்கங்களையே கொடுத்தனர். திருக்குறளுக்கு உரை யெழுதிய பரிமேலழகரும், தொல்காப்பியத்துக்கு உரையெழுதிய நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும், தேயம் என்ற சொல்லைப் புரிந்து கொள்ளாமல், இடம் என்ற பொருளிலேயே விளக்க மளித்துள்ளனர்.

தேர்-தேரம்-தேயம் =பலவிடங்களையும் ஆய்ந்து பார்த்து, நலன்கள் உண்டாவென அறிந்து, இறுதியில் வாழ விருப்பப் பட்ட நாடு.

தேயம் - வாழ்க்கை முறைமைக்கான கூறுகள் ஒருங்கே அமையப்பெற்ற பெருநிலம்.

தேம்-தேயம் = இனிமையான தேன். வாழ்க்கை இனிமை யாக அமைய வேண்டுதல் பற்றியே, தேம் என்ற தேனைக் குறித்த சொல், தேயத்திற்கும் கூறப்பட்டது. ஒரு நாட்டில் "பாலுந்தேனும்" பாய்ந்தோடியது என்ற வழக்குத் தொடர் தேன் என்ற தேம் என்ற பகுதியே, தேயம் எனப்பட்டதை உணர்த்தும். கானான் நாடு (பாலத்தீனம்), பாலுந்தேனும் நிறைந்திருந்த நாடு என்று விவிலியம் கூறும் வழக்குத் தொடர், தமிழ் வழக்காறுகளை அடிப்படையாகக் கொண்டதே. பால் என்பது நீர்வளத்தையும், தேன் என்பது வேளாண் வளத்தையும் குறிப்பனவாகும்.

தேம்-தேயம்-தேசம்=வலிமை பெற்றிருக்கும் நாடு.

தேசம்-தேசியம்=நாடுகளில் பேசப்பட்ட மொழிகள்.

**தேசிகத் திருவின் ஓசை கடைப்பிடித்துத்**
**தேசிகத் திருவின் ஓசை யெல்லாம் – சிலப்பதிகாரம்[592]**

**தேசிகம் என்றிவை ஆசின் உணர்ந்து – சிலப்பதிகாரம்[593]**

பண்டைக்கால இந்தியாவில், (கி.மு. 10000) தமிழ்மொழி மட்டுமே பேசப்பட்டது. இந்நிலை, கி.மு. 4000 வரையில் நீடித் திருந்தது. பின்னர் தமிழ் மொழியில் வட வட்டாரத் தேவை களுக்கேற்பச் சொற்கள் திரிபுபட்டன. அத்திரிபுச் சொற்களும் தமிழ்ச் சொற்களின் ஒலிப்பையே கொண்டிருந்தன. இவைகளைப் பற்றித் தொல்காப்பியமும் விளக்குகிறது. தமிழ்மொழி, திசைச் சொற்களாகவும் (வட்டார), கொடுந்தமிழ்ச் சொற்களாகவும் திரிபுபட்டன. ஆரியக் கலப்பிற்குப் பின்னர், சமற்கிருதம் என்ற புதிய மொழி தோன்றியது. இம்மூன்று மொழித்திரிபுச் சொற் களும் தமிழிலும் கலந்தன என்பதையும் தொல்காப்பியம் கூறுகிறது. இயற்சொல் திரிசொல், திசைச்சொல், வடசொல் லெனப் பிரிந்தன. இவ்வாறாகப் பேசப்பட்ட மொழிகளையே தேசிகம் என்று சிலப்பதிகாரம் சுட்டுகிறது. தண்ணுமை ஆசிரியர் (நாடக இசையாசிரியர்) நான்கு வகையான சொல்வழக்கையும் கொண்டிருந்ததாக, அரங்கேற்றுக் காதையில் கூறப்பட்டுள்ளது. தேயம் என்ற சொல்லையும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

---

592. சிலப்பதிகாரம், 3:31-32.

593. மேலதே, 3:47.

நறுமலர் மேனி நடுங்குதுயர் எய்த
அறியாத் தேயத்து ஆரிடை உழந்து — சிலப்பதிகாரம்.[594]

திருக்குறளிலும் தேயம் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.

பொருளெனும் பொய்யா விளக்க மிருளுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று — திருக்குறள்[595]

தேயம் என்ற சொல், தொல்காப்பியத்தின் எழுத்து, சொல் அதிகாரங்களில் கூறப்படவில்லையாயினும், பொருளதிகாரத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டுள்ளது.

பார்ப்பார், அரசர், ஏனோர், தாபதர், பொருநர் ஆகியோர் பற்றிக் குறிப்பிடும் தொல்காப்பியம், அவர்களது பணிகளைப் பற்றிக் குறிப்பிடும்போது, பக்கம் என்ற சொல்லையும், அறிவரைப் பற்றிக் கூறும்போது, தேயம் என்ற சொல்லையும் பயன்படுத்துகிறது. தமிழ்நாட்டுக்கு அறிவர் நாடு என்றும் பெயர் இருந்ததைத் தொல்காப்பியம் வாயிலாக அறிந்து கொள்ளலாம்.

அறுவகைப்ப்ட்ட பார்ப்பனர் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியி னாற்றிய அறிவன் தேயமும்
நாவிரு வழக்கின் தாபதப் பக்கமும்
பாலறி வழக்கின் பொருநர் கண்ணும்
அனைநிலை வகையொடு ஆங்கெழு வகையின்
தொகைநிலை பெற்றது என்மனார் புலவர் — தொல்காப்பியம்.[596]

ஏனோர் = வணிகர் மற்றும் வேளாளர். தாபதர்=துறவோர்.

பொருநர் = மறவர் என்ற வீறக் குலத்தவர்.

தேயம் நாடு என்ற பொருளில், தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளன.

---

594. மேலதே, 14:18-19.

595. திருக்குறள், 753.

596. தொல்காப்பியம், பொருள். 1:43:3.

ஊரது சார்வுஞ் செல்லுந் தேயமும்[597]

கொள்ளார் தேயங் குறித்த கொற்றமும்[598]

சென்ற தேளத் துழப்புநனி விளக்கி[579]

*(தேளம்-தேயம் நாடு என்ற பொருளில்)*

இமையோர் தேளத்தும் எறிகடல் வரைப்பினும்,[600]

கழிந்தார் தேளத் தழிபட ருறீஇ
பொழிந்தார் புலம்பிய கையறு நிலையும்,[601]

*(கையறு நிலை = இறந்தோருக்காக, இறக்க இருப்போர் இரங்குதல். தேளம் = மறுஉலகம்)*

தோழி தேளத்தும் கண்டோர் பாங்கினும்[602]

அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேளத்தும்[603]

*(அறிவன் தேயம், பார்ப்பனர் தேயம் என்ற இருநாடுகள் பற்றிய செய்தியை நூற்பா அறிவிக்கின்றது)*

எல்லா வாயிலும் இருவர் தேளத்தும்
புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப[604]

அறிவர்களுக்கு இணையாகப் பார்ப்பனர்களும் நிலை பெற்றிருந்தனர் என்பதை மேற்கண்ட வரிகள் மெய்ப்பிக்கின்றன. தொல்காப்பியர் காலத்திலேயே (கி.மு. 700) ஆரியம் தமிழகத்தில் வேரூன்றி விட்டதையே இச்செய்தி உறுதிப்படுத்துவதாக அறியலாம். சிலர் இக்கூற்றை மறுக்கின்றனர். அறிவர் என்பார் கணியரே என்றும், பார்ப்பனர் என்பாரும் கணியரே என்றும், கணிய மரபில் தோன்றிய வள்ளுவரே பார்ப்பனர் என்றும்

---

597. மேலதே, 2:10:1.

598. மேலதே, 4:5:51.

599. மேலதே, 5:52:1.

600. மேலதே, 2:9; 26-27.

601. மேலதே, 1:39:6.

602. மேலதே, 4:5:6.

603. மேலதே, 4:5:15.

604. மேலதே, 4:37.

கூறப்பட்டதாகவும், கூறுவர். பார்ப்பான் என்ற சொல் தமிழ்ச் சொல்லாக விருப்பதால், தமிழகத்தில் இருந்த பார்ப்பனரைப் பின்னுக்குத் தள்ளி விட்டு, அவ்விடத்தைப் பிடித்துக் கொண்ட ஆரியர், தம்மையும் பார்ப்பனர் என்றே சொல்லிக் கொண்டனர் என்றும் கூறப்படுவதில் உண்மையுமுண்டு. பார்ப்பனர்-ஐயர்-சான்றோர்-அந்தணர்-அறவோர் போன்ற சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்களாயிருக்க, இச்சொற்களுக்கு உரியவர் தாங்களே என்று ஆரியர் கூறிக் கொள்வது, உண்மையற்ற செய்தியாகும்.

தேசம் என்பதும் தேசிகம் என்பதும் தமிழ்ச் சொற்களே. தேசம் என்ற சொல்லில் உள்ள சகரத்தை ஷகரமாகத் திரித்திக் கொண்டு, தேஷ் என்றவாறு மாற்றிக் கொண்டனர். தமிழ்ச் சகரம் வடமொழியில் ஷகரமாகச் சொல்லப்படுவது பற்றிய எடுத்துக்காட்டுகளாவன: சிவ-ஷிவ; செண்பகம்-ஷெண்பக, சகடம்-ஷகட, சக்தி-ஷக்தி என்றவாறு விரியும். தேயம் என்ற சொல்லில் உள்ள யகரம் சகரமாக மாறியதும் தமிழில் பல சொற்களால் ஏற்கப்படும். மயக்கு-மசக்கு; முயல்-முசல்; மை-மசி; நேயம்-நேசம்; தயக்கம்-தசக்கம்; குயவர்-குசவர்; மயிர்-மசிர்; காய்ப்பு-கசப்பு; உயரம்-உசரம்; வியாழன்-விசாழன்; அயலூர் - அசலூர் என்றவாறு விரியும்.

வளங்கள் நிறைந்த பகுதியை நாடிச் சென்றதால், அது நாடு என்று சொல்லப்பட்டது. நாடு=நாடுதல். நாடு-நாட்டல்= நாடுவதெனச் சொல்லுதல். நாட்டல்=உறுதிப்படுத்துதல். நாடு-நாட்டு=புதிய நாட்டைத் தமதென அறிவித்தல். நாடு என்ற தமிழ்ச் சொல், எபிரேய மொழியில் நோட் (Nod) எனத் திரிந் துள்ளது.[605] ஆதாம், ஏவாள் இணையின் தலைமகனான காயன் (Cain) என்பான், தனது தம்பியாகிய ஆ-எல் (Ab-el) என்பானைக் கொன்றுவிட்டுத் தேவனின் சினத்துக்கு ஆளானான். இதன் பொருட்டு, அவன் இதுவரையில் வாழ்ந்திருந்த நாட்டை விட்டு, புதிய நாட்டுக்குத் துரத்தப்பட்டான். அப்புதிய நாடு இடன் (Eden) தோட்டத்துக்குக் கிழக்குத் திசையில் இருந்ததாகவும், அப்புதிய பகுதியை Nod என்றும் விவிலியம் கூறுகிறது. நோட்-நாடு என்ற சொல்லின் திரிபே ஆகும். நாடு-நாட்டல் என்ற தமிழ்ச் சொல்லின் பொருளில், நாட்டல் (Natal) என்ற இலத்தீன் மொழிச் சொல், நாட்டையே குறித்தது. Natal என்ற சொல்

605. The New American Bible.

வழியே, Nation என்ற ஆங்கிலச் சொல்லும் பிறந்தது. Nation, Nationality, Native, Nativity போன்ற ஆங்கிலச் சொற்கள், நாடு-நாட்டல் என்ற தமிழ் மூலத்தைக் கொண்டவைகளே. இவை நாட்டல் என்ற மூலச் சொல்லினின்றும் தோன்றியவைகளே.

Nadal *(தமிழ்)* - Natal *(இலத்தீன்)* - Nation *(ஆங்கிலம்)*

தென் ஆப்பிரிக்க நாட்டின் ஒரு பகுதியான Netal என்ற மாநிலம், நாடல் என்ற தமிழ்ச் சொல்லை மூலமாகக் கொண் டதே.

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு — திருக்குறள்[606]

ooo

606. திருக்குறள், 397.

48

## ஓரை

ஓரை என்ற சொல், தமிழ்ச் சொல் அல்லவென்பது, சென்ற நூற்றாண்டில் வாழ்ந்திருந்த தமிழறிஞர்கள் சிலரின் கருத்தாக விருந்தது. டாக்டர் உ.வே.சா. அவர்கள், ஓரை என்பது வட சொல்லே என்றும், வையாபுரிப்பிள்ளை, டாக்டர் ந. சுப்பிர மணியன் போன்றோர், அது கிரேக்கச் சொல்லே என்றும் கூறினர். ஓரா என்ற வடசொல்லுக்கும் ஓரை என்ற தமிழ்ச் சொல்லும், ஹோரா (Hora) என்ற கிரேக்கச் சொல்லே மூலச் சொல் என்றும் சிலர் கருதினர். இதனை வடமொழியாளர் மறுத்து, வடமொழி யினின்றே கிரேக்கமும் தமிழும் இச் சொல்லைக் கடன்பெற்றன என்று உரைத்தனர். வானியலைக் கண்டுபிடித்தவர் ஆரியரே என்றும், ஆரிய வானியலை அடிப் படையாகக் கொண்டே, பிற்காலத்தில் கிரேக்கர் வானியல் கொள்கைகளை வகுத்தனர் என்றும் வடமொழிச் சார்பாளர்கள் கூறிவருகின்றனர். இந் நிலையில் மேலை நாட்டவரோ, தாலமி என்ற கிரேக்க அறிவிய லாரே வானியலின் தந்தை என்றும், அவரே முதன் முதலில் 1022 விண்மீனுக்கும் பெயரிட்டவர் என்றும் கூறினர்.

இருடிகள் (ரிஷிகள்) என்ற முனிவர்கள், தாலமிக்கு முன்பே வாழ்ந்திருந்தவர்கள் என்பதும், இருடிகளின் வானியல் கொள்கை, வேதங்களில் பரவலாகச் சொல்லப்பட்டுள்ளன என்பதும், வடமொழிச் சார்பாளர்களின் கூற்றுகளாகும். வசிட்டன் என்ற முனிவனே வானியலின் தந்தை என்றும், இவன் தந்த வானியல் கொள்கைகளே இரிக்குவேதத்தில் கூறப்பட்டுள்ளன என்பது வடமொழியாளர்களின் கூற்றாகும். வசிட்டன் கூறிய வானியல் பற்றிய செய்திகளை, அவனது பெயரனான பராசரசக்தி என்பான் கேட்டு, ஆரியச் சுடரியம் அல்லது பிறப்பியத்தைத் (Aryan

Astrology) தோற்றுவித்தான் என்றும் கூறுவர். இவனது படைப் பான, “பிருகத் பராசர ஓரை சாத்திரம்” (Brihat Parashra Hora Shastra) என்பதே, உலகில் தோன்றிய முதல் சுடரிய நூல் என்றும் கூறுவர்.

சுடரியம் (சாதகம்-Astrology) கூறும் முறைகள் பற்றி வேதங்களில் காணப்படுவதால், சுடரியத்தைக் கண்டுபிடித்தவர் ஆரியரே என்பது அவர்களின் கூற்றாகும். இருடிகள் என்ற முனிவர்கள் வரலாற்றுக் காலத்துக்குப் பல்லாயிரம் ஆண்டுகள் முன்பாக வாழ்ந்திருந்தனர் என்றும், விண்வெளியில் பரந்து நிறைந்திருந்த காற்றில், சுடரியம் பற்றிய செய்திகள் கலந்திருந்தன என்றும், அவைகளைத் தம் அறிவாற்றலால் ஈர்த்து, அதனைப் படித்துணர்ந்து, அச்செய்திகளை நூலாக எழுதிவைத்தனர் என்றும் கூறுவர். இவைகள் வரிவடிவங்களில் இருந்தனவா, ஒலிவடிவங்களில் இருந்தனவா, எம்மொழியில் அவ்வாறு இருந்தன என்பது பற்றிய விளக்கங்கள் ஏதுமில்லை. எனவே இவைகளுக்கு மூலங்காட்டத் தேவையில்லை என்றும், வேதங்கள் சொல்வதே உண்மையானவை என்றும், மேற்கொண்டு சான்று களைக் கேட்பது அறியாமை என்றும் கூறிவைத்தனர். பராசர சத்தி என்பான் கண்டுபிடித்த சுடரியம் (சாதகம்) கூறும் முறைகள், தலைமுறைகளுக்குச் செவி வழி மாற்றங்களாக கொடுக்கப் பட்டன.

தமிழில் கடைக்கழக நூலாக அறியப்படும் வியாழமாலை, பல்வேறு வானியல் உண்மைகளை விளக்கும் நூலாக இருந் திருக்க வேண்டும். அதனாலேயே அந்நூல் அழிக்கப்பட்டது அழிக்கப்பட்ட, அழிந்துபட்ட நூல்களை விடுத்து கிடைத்துள்ள நூல்களில் தொல்காப்பியம், மணிமேகலை, சிலப்பதிகாரம், பரிபாடல் போன்ற நூல்கள் தரும் வானியல் பற்றிய செய்திகள், அந்நூலாசிரியர்கள் கற்ற தமிழ் முதனூல்களினின்றும் கற்றுச் சொல்லப்பட்டவைகள் ஆகும். அம்முதனூற்கள் யாவையென எந்தவொரு ஆசிரியரும் விளக்கம் தரவில்லை. என்மனார் புலவர் என்று இருசொற்களில் தொல்காப்பியர் முடித்துக் கொண்டார். கி.மு. 10000 ஆண்டுகட்கு முன்பே, தமிழர் வானியலில் சிறந் திருந்தனர் என்பதை, பாபிலோனிய, எகிப்திய ஃபோனீசியக் குறிப்புகளின் வாயிலாக அறியமுடியும். இவர்கள் ஒருகால் தமிழராயிருந்த குமரிக் கண்டத்து மக்களின் மரபுகளே என்ப

தால், பாபிலோனியரிடமிருந்த கற்ற வானியலை, கிரேக்கர் தமது மொழியில் எழுதிவைத்துள்ளனர். கிரேக்கர் பதிவு செய்த வானியலின் கலைச் சொற்களும், விண்மீன்களின் பெயர்களும், தமிழ்த் திரிபுச் சொற்களாக உள்ளனவென்பதால், தமிழரே வானியலின் மூலவர்கள் என்பதில் தவறேதுமில்லை.

வேதங்களில் ஆரியர் சொன்ன வானியல் குறிப்புகளும், தமிழ் மூலத்தினின்றும் எடுக்கப்பட்டவைகளே. வடமொழி கூறும் நாள் கோள்களின் பெயர்களும், கலைச்சொற்களும், விண்மீன்கள் மற்றும் ஓரைகளின் பெயர்களும் தமிழ் மூலத் தைக் கொண்டவைகளே. விளக்கத்திற்கு ஆசிரியரின், வானியலின் மூலவர் தமிழரே என்ற நூலைக் காண்க. மந்திரம் (Mantra) என்ற ஆற்றல் வாய்ந்த ஒலி அலைகள் விண்வெளியில் பரவியிருந்த தாகவும், அவ்வொலியலைகளை தம் நுண்ணிய கேட்கும் புலனால் அறிந்து, அவற்றை மக்களுக்கு வெளிப்படுத்திய தாகவும், ஆரிய வானியலாரைப் பற்றி வடமொழி வேதங்கள் உரைக்கின்றன. அவ்வாறு கண்டறியப்பட்டதின் வழியேதான், ஓகம் (Yoga) மெய்யியல் (Philosophy), ஞாலஅறிவு (Geomency), மருத்துவம் (Medicine), இலக்கியம் (Literature), இசை மற்றும் கலைகள் (Music and fine arts), வரலாறு (History) போன்றவை, கண்டறியப்பட்டன என்றும் வேதங்கள் கூறுகின்றன. வானத்தி னின்றும் கண்டறியப்பட்டன என்பது, வானியலை அளித்திருந்த தமிழ்க் கணியர்களின் நூல்களினின்றும் அறியப்பட்டனவென் பதே உண்மையான செய்தியாகும். மைத்திரியாணி உபநிடதம் (Maitriyani Upanishat) என்னும் வடமொழி நூல், வானியல் பற்றிய செய்திகளைக் கூறுகிறது. கதிரவன் பற்றியும், உயிர்க்காற்று (Prana) பற்றியும் கூட விளக்குகிறது. ஆரியர்கள் தமிழினின்றும் கற்றுக் கொண்டதை மறைத்து, தாங்களே கண்டறிந்ததாகக் கூறுவதும், அதற்குச் சான்றுகளாக வேதங்களைத் தவிர மற்ற வைக் கூறாமல் நிற்பதும், சமயம் என்ற போர்வையில் ஒளிந்து கொண்ட தந்திர நிகழ்வேயாகும். சமயத்தின் பேரால் சொல்லப் பட்டால் எதிர்க்கேள்விகளை எவரும் தொடுக்கமட்டார் என எண்ணியே, வேதங்களைச் சான்றுகளாக்கினர்.

தமிழர் வானியலையும், தமிழ் மொழியைப் பற்றியும் அறிந்திராத மேலை நாட்டவரும், தமிழர் நம்பியதைப் போன்றே, ஆரியர் சொன்னதை உண்மையென நம்பி, ஆரியர் சொன்ன

வானியலையும், சுடரியத்தையும் கற்றனர். அவ்வாறாகச் சுடரியம் கற்றுத் தெளிந்த டேவிட் ஃபிராலி (David Frawley) என்பார், ஆரியர்களின் சுடரியத்தை (Astrology) ஏற்றிப் போற்றுகிறார். அவர் கூறும் சில கருத்துக்களாவன.[607]

"வரலாற்றுக் காலத்துக்கும் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே, ஆரியச் சுடரியம் கண்டுபிடிக்கப்பட்டது. இளவேனில் காலத்திய கதிரவனின் பெயர்ச்சியால் (Vernal equinox) உலகில் ஏற்படும் ஒரே கால அளவிலான இரவு பகல்கள் பற்றியும், கார்த்திகை என்ற ஆரல் மின் கூட்டம் (Pleiades) எழுவது பற்றியும், விடையின் (Taurus) எழுச்சி உச்சத்தில் இருந்தது பற்றியும், வேதங்கள் சொல்கின்றன. மிதுன, ஓரியன் மீன் கூட்டங்களின் ஆளுமை பற்றியும் (The Vernal equinox in Mirugashira), அதற்கு முன்பாகக் கடகத்தின் ஆற்றல் நிலைபெற்றிருந்த காலங்கள் பற்றியும் (equinox in Punervasu) கூட வேதங்கள் கூறுகின்றன. பன்னிரு மீன் கூட்டங்களும் 360 பாகைகளாக வகுக்கப்பட்டு, கதிரவனின் சுற்று கண்டறியப்பட்டது. ஏழு புரவிகள் பூட்டிய கதிரவனின் தேர்பற்றிய செய்தியும் அறியப்படுகின்றது. ஆரியச் சுடரியம் (Hindu Astrology) என்பது வேதகாலத்துக்கும் முற்பட்டது. இவைகள் கண்டுபிடிக்கப்பட்ட காலம் கி.மு. 6500க்கும் முற்பட்டது."

உலகின் முதல் வானியல் கண்டுபிடிப்புகள், ஆரியருக்கே உரியவை என்பது ஃபிராலியின் கூற்று. இவரைப் போன்றே மேலும் பல மேலை நாட்டவர், ஆரியத்தின் வானியலே முதலில் கண்டுபிடிக்கப்பட்டது என்பதாகக் கூறினர். இவர்கள் கூற்றுகள் அனைத்தும் ஆரிய வேதங்கள் சொல்வதை அடிப்படையாகக் கொண்டவைகளே. இக்கூற்றுகளுக்கு ஏற்ற மற்றச் சான்றுகள் எதனையும் இவர்களால் காட்ட இயலவில்லை. அவ்வாறு காட்டப்படும் சான்றுகள், ஆரியரின் பொய்த்தன்மையை அறிவிப்பனவாக உள்ளன என்பதை அம்மேலை நாட்டவர் அறிந்திருக்கவில்லை. ஆரியரின் இந்திய வருகை கி.மு. 2000 ஆண்டுகட்கு முற்படவில்லையென வரலாற்று ஆய்வாளர்கள் உறுதி செய்து விட்ட நிலையில், ஆரிய வானியல் கி.மு. 6500 ஆண்டுகளில் சொல்லப்பட்டதாகக் கூறுவது, அடிப்படைச்

607. The Astrology of the Seers, David Frawley, p. 21-22.

சான்றுகள் இல்லாததாகும். எந்த நிலையிலும், தமிழரின் வானியலையே ஆரியம் ஏற்றுக் கொண்டது என்பதை ஒப்புக்கொள்ள, இந்த நாள் வரை எந்த ஆரியரும் முன்வரவில்லை.

தமிழர் கண்டுபிடித்த வானியல் அறிவியல் உண்மைகளை அடிப்படையாகக் கொண்டது (depends upon facts). தமிழர் வானியலை ஒட்டி, வள்ளுவக் கணியர்கள், எதிர்காலம் பற்றி உரைக்கும் சுடரியக் கலையையும் வளர்த்துக் கொண்டனர். இந்தச் சுடரியக்கலை, நம்பிக்கையை (faith) அடிப்படையாகக் கொண்டது. வள்ளுவர் உருவாக்கித் தந்த சுடரியமே, ஆரியர் தமதெனக் கூறிக் கொண்ட சோதிடக் கலையாகும். சோதிடம் என்ற சொல்லும், சுவர்த்தி-சுவாதி-சோதி-சோதிடம் என்றவாறு வடமொழியில் திரிந்தது. வேதங்கள் கூறும் வானியல் ஆசிரியர்கள், வள்ளுவம் மற்றும் கணிய மரபுகளில் தோன்றிய தமிழர்களே என்பது, அவர்களின் பெயர்களைக் காணும்போதே தெரிய வரும். கணன், கணியாரன், கணாதன் போன்ற வடமொழிப் பெயர்கள் யாவும் கணியன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுகளே யாகும். இவ்வாசிரியர்கள் யாவரும் தமிழ்க் கணியர்களே என்பதை, ஆய்வுகளால் மெய்ப்பிக்கவும் இயலும்.

கிரேக்கர்களும், ஆரிய வானியலை அடிப்படையாகக் கொண்டே, புதிய செய்திகளை அளித்தனர் என்ற கூற்றிலும் உண்மையில்லை கிரேக்கர்களின் வானியல் அறிவு, பாபிலோனியத் தமிழர்களிடமிருந்து கற்றவைகளே.[608] தாலமிக்கு முன்பே, விண்மீன்களுக்குப் பெயரிட்டவர்கள் தமிழர்களே. கிரேக்கத்தின் வானியல் பெயர்களை நோக்குங்கால், அப்பெயர்கள் யாவும் தமிழ் மூலத்தினின்றே எடுக்கப்பட்டச் சொற்களாக உள்ளன. எடுத்துக்காட்டாக, அய்ட்ரா (Hydra) என்ற மீன் கூட்டத்திற்கான பெயர், கிரேக்கமொழியில் சொல்லப்பட்டுள்ளது. இதற்குப் பாம்பு என்றும் பொருள் சொல்லப்பட்டுள்ளது. தென்திசையில் தெரியும் இம்மீன்கூட்டம், படமெடுத்தாடும் பாம்பைப் போல் தெரிவதாகும். ஆடு+அரா=ஆடரா=படமெடுத்தாடும் பாம்பு. ஆடரா என்ற தமிழ்ச் சொல்லே, அய்ட்ரா என்று கிரேக்கத்தில் திரிந்துள்ளது. இவ்வாறு பல கிரேக்கச் சொற்களுக்கு, விளக்கம் தரவும் இயலும். தென்பாம்புக்குப் பெயரிட்டவன் தமிழனா கிரேக்கனா என்பது, பெயரைப் பார்த்தாலே விளங்கும்.

---

608. History of Religion, Ancient Greek Religion, p. 270.

தமிழ்க் கணியர்கள் பெயரிட்ட பல்வேறு வானியல் கலைச் சொற்களில் ஓரை என்பதும் ஒன்றாகும். ஓரை என்ற சொல்லைத் தமிழகத்தினின்றும் வெளியேறியத் தமிழர்களான, பாபிலோனியர், ஃபோனீசியர், யூதர், எகிப்தியர் போன்றோரும் பயன் படுத்தி வந்துள்ளனர் என்பது, அவர்களின் சமய-வரலாற்றுக்கு குறிப்புகளினின்றும் தெரிய வருகின்றது. இறுதியாகவே, ஆரியர்கள் ஓரை என்ற சொல்லைத் தங்கள் மொழியில் இணைத்துக் கொண்டனர். இறுதியாக இணைக்கப்பட்ட ஒரு சொல்லை, முதற் சொல்லாக ஆரியர்கள் கூறுவது வேடிக்கையானது.

கி.மு. 6000 ஆண்டுகளில், எகிப்திய மொழியில் ஓரை என்ற சொல் பயன்பாட்டில் இருந்தது.[609] ஓரஸ், ஓரா என்ற எகிப்தியக் கடவுளர்களின் பெயர்கள், ஓரை என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுகளே. ஞாயிற்றையே அவர்கள் ஓரா என்றனர். காலை வேளைக் கதிரவன் ஓரஸ் என்று அழைக்கப்பட்டான். அவன் மகனும் ரா (Ra) என்றே அழைக்கப்பட்டான். ஓரை என்ற சொல் (Horus), எகிப்திய மொழியில் காலை நேரத்தைக் குறிப்பதாகவே யுள்ளது என இலாக்கியர் (Lockyer) என்னும் மேலை நாட்டு வானியல் ஆய்வாளர் கூறுகிறார்.[610] பாபிலோனியத்தின் முழு முதற்கடவுளான மருதூக் என்பானும் ஞாயிற்றுக்கடவுளே என்றும் கூறுகிறார். ஓரியன் (Orion) என்ற உடுக்கூட்டம், இள வேனிற் காலத்தில் விடியற்காலையில் எழும். விடியற்காலைப் பொழுதை விளக்கும் ஓரை என்ற தமிழ்ச் சொல்லே, ஓரையன் (Orion) என்று கிரேக்கத்திலும் திரிபுபட்டுள்ளது எனலாம்.

ஆரிய, கிரேக்க இனங்கள் வரலாற்றில் அறியப்படும் காலங்களுக்கு முன்பே ஓரை என்ற சொல், எகிப்தியர்களால் வழங்கப்பட்டு வந்தது. கிரேக்கத்தில் சொல்லப்பட்டுள்ள ஓரா (Hora) என்ற சொல், எகிப்தியர்களிடமிருந்து கடன்பெற்றச் சொல்லாகும். ஆரியம் தமிழிடத்தினின்றும், கிரேக்கம் எகிப்திடமிருந்தும் ஓரை என்ற சொல்லைக் கடன்பெற்றுக் கொண்டன. எகிப்தியச் சொல்லுக்கும் மூலச்சொல் தமிழ்ச் சொல்லே என்க. வழிவழியாகச் சொல்லப்பட்டு வந்த ஓரை என்ற சொல்லை, தமிழர்கள் பயன்படுத்தி வந்துள்ளனர் என்பதைத் தொல்காப்பியம் விளக்குகிறது.

---

609. Outer Space: Myths Name Meanings, Calender, Gertrude and James Jobes, p. 219.

610. Dawn of Astronomy, Lockyer, p. 25.

மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோர்க் கில்லை — தொல்காப்பியம்[611]

களவொழுக்கத்தில் நாள்-காலம் பார்த்துக் கூட்டத்தைத் துறக்கும் வழக்கு, தலைவனுக்கு இல்லை என்பதே இதன் பொருளாகும்.

காலத்தைக் குறிக்கப் பயன்பட்ட ஓரை என்ற சொல், குறிப்பிட்ட காலங்களில் தோன்றி மறையும் விண்மீன் கூட்டங்களுக்கும் ஏற்றிச் சொல்லப்பட்டது. பிற்காலத்தில் கூட்டப் பெயராக (Collective) அறியப்பட்டு, கூட்டமாக விளையாடும் மகளிருக்கும் சொல்லப்பட்டது. பெண்கள் விளையாடும் ஆட்டம் ஓரை என்றவாறு சொல்லப்பட்டுள்ளது.

ஓரை யாயங் கூறக் கேட்டும் — குறுந்தொகை[612]

ஓரை மகளி ரோரங் காட்ட — குறுந்தொகை[613]

ஓரை மகளி ரஞ்சி யீர்ஞெண்டு — குறுந்தொகை[614]

மாலை நேரத்தில் மகளிர் ஆடும் விளையாட்டு எனவும், நீர் விளையாட்டு எனவும், குறிப்பிட்ட பொழுதில் ஆடப்பட்ட விளையாட்டு எனவும், ஓரை எனும் சொல்லுக்கு விளக்கமளிக்கப் பட்டுள்ளது. நற்றிணையும்[615] கலித்தொகையும்[616] இவற்றை விளக்கும் இவ்வரிகள் மாலைப் பொழுதில் நடைபெற்ற விளையாட்டைக் குறிக்கின்றது. தற்காலத்தும் ஊர்ப்புறங்களில், ஏரிகளில் குளிப்போர், ஓரியாடுதல் என்ற சொல்லைப் பயன்படுத்தி வருவதை நோக்குக.

ஓர்-ஓர்தல்=அறிதல்,[617] தெளிதல், பொழுதை அறிதல்.

ஓர்தல்=நடு நிலையில் நின்று நல்லது கெட்டதுகளை ஆராய்தல், தெளிதல்.[618]

---

611. தொல்காப்பியம், பொருள். 1081.

612. குறுந்தொகை, 48.

613. மேலதே, 316.

614. மேலதே, 401.

615. நற்றிணை, 155:1.

616. கலித்தொகை, 75:4.

617. மணிமேகலை, 23:143.

618. பரிபாடல், 8:78-82.

ஓர்தல்=கலத்தல்.[619] இருளும் ஒளியும் கலக்கும் காலைப் பொழுது

ஓரை=மகளிர் ஒருவரோடொருவர் கலந்து விளையாடும் ஆட்டம்.

ஓரை=முப்பது பாகைகளுக்குள் அடங்கும், கலந்திருக்கும் மீன் கூட்டம். (இராசி). ஐந்து நாழிகைகளின் தொகுப்பு - கதிரவனோ அல்லது விண்மீன்கூட்டமோ தோன்றும் வேளை. (The raising of a sign).

ஓரை=தொடுவானில் தெரியும் காலைப் பொழுது (Horizon), தொடுவானம் விண்மீன்கூட்டங்கள் தோன்றும் பொழுதை ஓர்ந்து பார்த்தறிந்து தெளிவுற்றதனால், அப்பொழுது ஓரை எனப்பட்டது. பிற்காலத்தில் விண்மீன் கூட்டங்களுக்கும் ஓரை என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. பிறகு கூட்டத்திற்கும் ஓரை என்ற சொல்லே பயன்பாட்டில் வந்தது. ஓரை என்பது கூட்டம், கலப்பு என்ற பொருளில் புளியோரை, புள்ளோரை என்ற சொற்கள் வழக்கில் வந்தன. புளிச்சாறும் சோறும் கலந்த உணவு புளியோரை எனப்பட்டது.

ஓரை என்ற தமிழ்ச் சொல், Hora என்று வடமொழியில் சொல்லப்பட்டுள்ளதை, வராகமிகிரர் எழுதியுள்ள பிருகத் சங்கிதை எனும் நூலில் காணலாம்.[620]

எகிப்திய மொழியில் சொல்லப்பட்டுள்ள தெய்வங்களைப் பற்றிய குறிப்புகளில் Horus என்ற பெயர் இடம்பெற்றுள்ளது.

கிரேக்க மொழியில் காலத்தைச் சொல்லும் பொருளில் Hora என்ற சொல் இடம் பெற்றுள்ளது. Horoscope என்ற ஆங்கிலச் சொல், கோள்களின் இருப்பிடங்களைக் குறிக்கும் வரைபடமாகும். இதனை இராசிக் கட்டம் என்று ஆரியச் சோதிடம் கூறுகிறது. Horoscope என்ற ஆங்கிலச் சொல், Hora+ Skopos என்ற கிரேக்கச் சொற்களின் கூட்டாகும்.

Hora=காலம் (Time). Skopos = கணிப்பவன் (Observer)

---

619. மேலதே, 16:25, 20:75.

620. Glossary of Madras Presidency, p. 105-106.

காலத்தைக் கணிப்பவன் அல்லது காலங்களைக் கோர்ப்பவன் என்ற பொருளில் Horascopas என்ற சொல் உள்ளது. Skopos என்ற சொல், கோர்ப்பு என்று தமிழ்ச் சொல்லின் திரிபேயாகும். ஓரைக்கோர்ப்பு என்பதே Horoscope என்று ஆங்கிலத்தில் திரிபுபட்டுள்ளதை நோக்குக.

ஓரை என்ற தமிழ்ச் சொல்லே, Hour என்ற ஆங்கிலச் சொல்லுக்கும் மூலச் சொல்லாகும்.

வானியல் தொடர்பான தமிழ்க்கலைச் சொற்களே, உலகின் பல்வேறு மொழிகளிலும் கூறப்பட்டுள்ளதால், வானியலின் மூலவர் தமிழரே என்பது தெளிவு.

○○○

# துணைநின்ற நூல்கள்

## தமிழ்

1. தொல்காப்பியம்,
கடைக்கழக இலக்கியங்கள் மற்றும் பிற்கால இலக்கியங்கள்.

2. இந்திய வரலாறு,
டாக்டர். ந. சுப்பிரமணியன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி)லிட், சென்னை, 1964.

3. ரிக்வேத ஸம்ஹிதை,
சிவத்தியாநா நந்த மஹரிஷி, சாது அச்சுக்கூடம், இராயப் பேட்டை, சென்னை, 1937.

4. சூத்திரர்கள் யார்?
டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், மொழிபெயர்ப்பு: பெ. சுந்தரம், சாந்தா பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, 1994.

5. கேட்டையும் மூலமும்,
டாக்டர் எஸ். சுந்தரம், தினமணிச்சுடர், 1.7.1989, ப. 3.

6. சதுரகராதி,
வீரமாமுனிவர், பதிப்பாசிரியர் டாக்டர் சூ. இன்னாசி, வீரமாமுனிவர் ஆய்வுக் கழகம், தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை, 1979.

7. வள்ளுவத்தின் வீழ்ச்சி,
குணா, தமிழக ஆய்வரண், வெங்கலூர், 1996.

8. தமிழர் வரலாறு,
தேவநேயப் பாவாணர், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி, 1972.

9. மனுதர்மம்,
தமிழ்நாடன், குயில் பண்ணை, சேலம், 1993.

10. சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும்,
டாக்டர். உ.வே.சா., பெசண்ட் நகர், சென்னை, நூல் நிலைய வெளியீடு, 1996.

11. மணிமேகலை,
டாக்டர் உ.வே.சா. நூல்நிலைய வெளியீடு, பெசண்ட் நகர், சென்னை, 1998.

12. தமிழ் ஆங்கில அகராதி,
எம். வின்ஸ்லோ, ஆசியக் கல்விச் சேவை, புதுதில்லி, 1979.

13. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,
அ. வேலுப்பிள்ளை, பாரி பதிப்பகப் பண்ணை, சென்னை, 1978.

14. குடந்தை மறைமாவட்டப் பொன்விழா மலர்,
கும்பகோணம், 1949.

15. திவ்வியப் பிரபந்த அருஞ்சொல் அகராதி,
வித்துவான் சு. பாலசார நாதன், டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம், பெசண்ட் நகர், சென்னை, 1994.

16. குறுந்தொகை மூலமும் உரையும்,
டாக்டர் உ.வே.சா. நூல் நிலைய வெளியீடு, பெசண்ட் நகர், சென்னை, 2000.

17. சிலப்பதிகாரம், மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரையும்,
டாக்டர் உ.வே.சா. நூல் நிலைய வெளியீடு, பெசண்ட் நகர், சென்னை, 2001.

18. தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம்,
க. நெடுஞ்செழியன், மனிதம் பதிப்பகம், திருச்சி-21, 1990.

19. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி,
பாவாணர், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1985.

20. மொழி நூல்,
இலக்கணவியல், மாசுறல் கார்த்திகேய முதலியார்.

21. தமிழ்நாடும் களப்பிரர் ஆட்சியும்,
இர. பன்னீர் செல்வம், வி. மாணிக்கம் கம்பெனி, சென்னை, 1973.

22. பாண்டியர் செப்பேடுகள் பத்து,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1967.

○○○

## துணை நின்ற நூல்கள்

### (ஆங்கிலம்)

23. The Cambridge Encyclopedia,
Ed. David Crystal, Cambridge University Press, 1994.

24. The History of Religion,
Sergi Tokarev, Progress Publishers, Moscow, 1989.

25. Sahani Institute of Palaeobotany and the National Research Institute,
New Delhi, News: Indian Express, dt. 17.01.2001.

26. Bhishma's study of Indian History and culture.
Gen.Ed. Dr. Shripad Dattatraya Kulkarni, Bombay, 1995.

27. The Men and Message of the Old Testament,
Peter. F. Ellis, Mount Saint Alphonsus Seminary, Esopus, New York, 1962.

28. Lebanon,
Ann Jousiffe, Lonely Planet Publications, Australia, 1998.

29. Non-Aryan Elements in the Rig Veda,
M. Sunderraj, Ed. N. Mahalingam, International Society for the Investigation of Ancient Civilization, Madras, 1981.

30. Man in Evolution,
M.R. Sahani, Calcutta, 1952.

31. The New American Bible,
Catholic Educational Guild, Members of the Catholic Biblical Association of America, Washington, 1969.

32. Rig Veda Sanhita,
Ed. H.H. Wilson, Cosmo Publications, New Delhi, 1987.

33. Fixed stars,
Bernadette Brady, Goodwill Publishing House, New Delhi, 1998.

34. Original Sanskrit Texts,
On the origin and History of the People of India - Their Religion and Institutions. J. Muir, Vol V, Trubner and Company, London.

35. Satpatha Brahmana,
Swami Satya Prakash Sarasvati, F.O.S. in Ancient India, Govindram Hasanand Nai Sarak, New Delhi, 1986.

36. Glossary of Madras Presidency.

37. Parallel Myths,
J.F. Bierlein, Ballantine Books, New York, 1994.

38. Indus Scripts Among Dravidian Speakers,
Dr. R. Mathivanan, Internation Society for the Investigation of Ancient Civilizations, Madras, 1995.

39. Outer Space: Myths, Meanings, Calenders, Jobes, Gertrude and James, Scarecrow, New York, 1964.

40. Pre-Pallavan Tamil Index,
Dr. N. Subramanian, University of Madras, 1966.

41. The Astrology of the Seers,
David Frawley, Motilal Banarsidass Publishers Private Limited, Delhi, 1996.

42. The Dawn of Astronomy,
Lockyer, J. Norman, Kila, M.T.: Kessinger, 1992.

43. An Encyclopedia of Hindu Deities,
Demi Gods, Godlings, Demons and Heros, Fredrick W. Bunee, D.K. Prinworld (P) Ltd, New Delhi, 1995.

ooo

## சொற்பட்டியல்
### (தமிழ்)

24

○○○

## சொற்பட்டியல்
### (ஆங்கிலம்)



○○○

## Phoenician Alphabet

The Phoenicians were crucially important to the development of the alphabet. Their language, a variant of 'north-west' Semitic, was very close to Hebrew and Moabite. The earliest Phoenician inscription that has survived is on King Hiram's sarcophagus found at Byblos, dating from the 11th century BC.

Until the alphabet was invented, writing was restricted to scribes who could learn the complicated hieroglyphic and cuneiform scripts. Hieroglyphs were pictorial representations of whole words or ideas in quite involved symbols. Cuneiform script was made up of wedge-shaped characters from which this writing system was named – the Latin word *cunaus* means 'wedge'.

Trade was no doubt the 'mother of invention' that saw the development of the much simpler 22-letter alphabet. It was a writing system that was less complicated and quicker to write than the heiroglyphic and cuneiform scripts. The Phoenicians took this alphabet with them throughout the Mediterranean. The Greeks soon adopted the system and it is from Greek that Latin and subsequently all European written language is descended.

Herodotus, the 5th-century BC Greek historian and the 'father of history', wrote that the alphabet was introduced into Greece by Cadmus and his Phoenician followers. The Greeks did not, according to Herodotus, call the new letters 'alphabet' but 'phoinikia grammata' – 'Phoenician letters'. The modern term 'phonetic' comes from this revolutionary idea of assigning symbols to corresponding sounds.



Front and back of an arrow head from around 1100 BC, with Phoenician script translated as 'Arrow of X son of Y'.

| Latin Script | Early Phoenician (11th c BC) | Late Phoenician (9th c BC) | Early Greek (7th c BC) | Aramaic | Hebrew | Punic (Carthage) | Modern Arabic |
|---|---|---|---|---|---|---|---|
| a | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | א | [illegible] | ا |
| b | [illegible] | [illegible] | | [illegible] | ב | [illegible] | ب |
| g | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ג | [illegible] | ج |
| d | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ד | [illegible] | د |
| h | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ה | [illegible] | ه |
| w | [illegible] | [illegible] | [illegible] | | ו | [illegible] | و |
| z | | [illegible] | [illegible] | [illegible] | ז | [illegible] | ز |
| h | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ח | [illegible] | ح |
| t | [illegible] | [illegible] | [illegible] | | ט | [illegible] | ط |
| y | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | י | [illegible] | ي |
| k | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | כ | [illegible] | ك |
| l | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ל | [illegible] | ل |
| m | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | מ | [illegible] | م |
| n | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | נ | [illegible] | ن |
| s | [illegible] | [illegible] | | [illegible] | ס | | |
| o | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ע | [illegible] | ع |
| p | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | פ | [illegible] | ف |
| s | | [illegible] | | [illegible] | צ | [illegible] | ص |
| q | | [illegible] | [illegible] | [illegible] | ק | [illegible] | ق |
| r | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ר | [illegible] | ر |
| sh | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ש | [illegible] | ش |
| t | [illegible] | [illegible] | [illegible] | [illegible] | ת | [illegible] | ت |

## தமிழ் (பிராமி)

உயிர் எழுத்து

அ ஆ இ ஈ உ ஊ ஏ ஓ

மெய் எழுத்து

க் ங் ச் ஞ் ட் ண் த் ந் ப் ம்

ய் ர் ல் வ் ழ் ள் ற் ன

த ஸ

உயிர்மெய் எழுத்து (க)

க் கா கி கீ கு கூ கே கை கோ

புது எழுத்து 9

## அசோகன் பிராமி

உயிர் எழுத்துக்கள்

அ ஆ இ உ ஏ ஓ அம்

உயிர்மெய் எழுத்துக்கள் (வர்க்க எழுத்துடன்)

க1 க2 க3 க4 ங ச1 ச2 ச3 ஞ

ட1 ட2 ட3 ட4 ண த1 த2 த3 த4 ந

ப1 ப2 ப3 ப4 ம ய ர ல வ

ஷ1 ஷ2 ஷ3 ஸ ஹ கா கி கீ கு கூ

கூட்டெழுத்துக்கள்

கே கோ க்ர த்ர த்ப இன்ய இம்ஹ இஸ்தி

ர்சி க்ந வர் இம்யூ ஹம்ய க்யச தோயி தேம்

புது எழுத்து 9

தேனி மாவட்டம், ஆண்டிப்பட்டி வட்டம், புள்ளிமான் கோம்பை தமிழ் - பிராமி நடுகற்கள்



நடுகல் கிடைத்த பகுதி



kal

pētutiyaṉ antavaṉ

kūṭal ūr ā kōḷ



..அன் ஊர் அதன்

aṉ ūr ataṉ

..ன் அன் கல்

ṉ a ṉ kal

வேள் ஊர் அவ் வ ன்

vēḷ ūr a v va ṉ

ப த வன்

pa ta va ṉ




கி.மு. 50,000 - 30,000
அரேபியா
இந்தியா
ஆப்பிரிக்கா
மடகாஸ்கர்
இந்தோனேசியா
தென்
குமரிக் கண்டம்
தென் முனை

பூம்புகார் அருகே கடலில் மூழ்கிய

தினமலர் 18.12.2002

# 11 ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய உலகின் முதல் நவீன நகரம்

## இங்கிலாந்து நாட்டு ஆழ்கடல் ஆராய்ச்சியாளர் கண்டுபிடிப்பு

நாகப்பட்டினம், டிச. 18—

நாகை மாவட்டம் பூம்புகார் அருகே சுமார் 11 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கடலில் மூழ்கிய ஒரு பிரமாண்ட நகரம் தான் உலகில் முதன்முதலில் தோன்றிய நவீன நகர நாகரீகமாக இருக்கக் கூடும் என்று இங்கிலாந்தைச் சேர்ந்த ஆழ்கடல் ஆராய்ச்சியாளர் கிரஹாம் ஹான்காக் என்பவர் கண்டறிந்துள்ளார்.

இவர் கடந்த 2001ம் ஆண்டு பூம்புகார் கடற்பகுதியில் மேற்கொண்ட தீவிர ஆழ்கடல் ஆராய்ச்சியின் மூலம் இந்த உண்மையை கண்டறிந்துள்ளார். இந்த ஆராய்ச்சி தற்போதைய வரலாற்று ஆய்வாளர்களின் கருத்தான 'மெசபடோமியா' (தற்போதைய ஈராக்) பகுதியில் சுமேரியர்களால் சுமார் 5 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நகர நாகரீகம் தோற்றுவிக்கப்பட்டது என்பது தவறானது என தெரிவிக்கிறது.

கிரஹாம் ஹான்காக் என்பவர் இங்கிலாந்தைச் சேர்ந்த உலகப் புகழ் பெற்ற ஆழ்கடல் ஆராய்ச்சியாளர். இவரது பல கண்டுபிடிப்புகள் வரலாற்று உலகில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியவை. இந்திய அரசின் கட்டுப்பாட்டில் கோவாவில் அமைந்துள்ள 'தேசிய ஆழ்கடல் ஆராய்ச்சி கழகம்' என்ற நிறுவனம் கடந்த 1990ம் ஆண்டு வாக்கில் வரலாற்று புகழ் பெற்ற பூம்புகார் நகர கடற்பகுதியில் ஒரு ஆய்வினை மேற்கொண்டது.

இந்த ஆய்வுகள் 1993ம் ஆண்டு வரை தொடர்ந்து நடைபெற்றன. இந்த ஆய்வின் போது பூம்புகார் கடற்பகுதியிலிருந்து சுமார் 3 கி.மீ., தொலைவிற்குள் பல் வட்ட வடிவமான கிணறுகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. இந்த கிணறுகள் பூம்புகார் முதல் தரங்கம்பாடி வரையிலான கடற்பகுதியில் பரவி இருப்பது கண்டறியப்பட்டது. இதுதவிர சங்க காலத்தைச் சேர்ந்தது என கருதப்படும் சுட்ட செங்கற்களால் ஆன 'ட' வடிவ கட்டிடம் ஒன்றும் கண்டறியப்பட்டது.

இத்துடன் நீரில் சுமார் 23 அடி ஆழத்தில் குதிரை குளம்பு வடிவில் 85 அடி நீளமும், 2 மீ., உயரமும் கொண்ட பல பொருட்கள் கண்டறியப்பட்டன. இவை அனைத்தும் பூம்புகார் கடற்பகுதியில் ஒரு பெரிய நகரம் மூழ்கி இருக்கக் கூடும் என்பதை உறுதிபடுத்தும் விதத்தில் அமைந்திருந்த போதிலும், தேசிய ஆழ்கடல் ஆராய்ச்சி கழகம், தன்னுடைய ஆய்வினை நிதி பற்றாக்குறை காரணமாக பாதியில் நிறுத்தி விட்டது.

இந்நிலையில் கடந்த 2000ம் ஆண்டு இந்தியாவிற்கு வந்த கிரஹாம் ஹான்காக், தேசிய ஆழ்கடல் ஆராய்ச்சி கழகத்திடமிருந்து பூம்புகார் பற்றிய விபரங்களை கேட்டறிந்தார். நிதி பற்றாக்குறை காரணமாக ஆராய்ச்சி பாதியில் நிறுத்தப்பட்டது என்பதை அறிந்த அவர் இங்கிலாந்தை சேர்ந்த 'சானல் 4' என்ற பிரபல தொலைக்காட்சி நிறுவனம் மற்றும் அமெரிக்காவைச் சேர்ந்த 'லர்னிங்சானல்' என்ற தொலைக்காட்சி நிறுவனம் ஆகியவற்றின் நிதியுதவி மற்றும் இந்திய ஆழ்கடல் ஆராய்ச்சி கழகத்தின் ஒத்துழைப்புடன் 2001ம் ஆண்டு ஆராய்ச்சியை தொடர்ந்தார். அந்த ஆராய்ச்சிக்கு அதிநவீன 'சைடு ஸ்கேன் சோனார்' என்ற கருவி பயன்படுத்தப்பட்டது. இந்த கருவி பூம்புகார் கடற்பகுதியில் குறுக்கும் நெடுக்குமாக நீண்ட அகலமான தெருக்களுடன், உறுதியான கற்களால் கட்டப்பட்ட கட்டிடங்களின் இடிபாடுகளுடன் கூடிய ஒரு பிரமாண்ட நகரம் மூழ்கியிருப்பதை துல்லியமாக காட்டியது. பின்னர் அக்காட்சிகளை கிரஹாம் ஹான்காக் நவீன காமிராக்கள் மூலம் படம் எடுத்தார்.

இந்த மூழ்கிய நகரம் குறித்த தனது ஆராய்ச்சியை தொடர்ந்த ஹான்காக், அந்த நகரம் கடலில் சுமார் 75 அடி ஆழத்தில் புதையுண்டிருப்பதை கண்டறிந்தார். இன்றைக்கு சுமார் 17 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு 'ஐஸ் ஏஜ்' எனப்படும் பனிக்கட்டி காலத்தின் இறுதி பகுதியில் தட்பவெப்ப மாறுதல்கள் காரணமாக பனிப்பாறைகள் உருகியதன் விளைவாக கடல் மட்டம் சுமார் 400 அடி உயர்ந்து, அதன் விளைவாக பல நகரங்கள் கடலினுள் மூழ்கியதாக வரலாறு தெரிவிக்கிறது.

இத்தகைய பனிக்கட்டி உருகும் நிலை சுமார் 7 ஆயிரம் ஆண்டு காலம் தொடர்ந்ததாக வரலாறு தெரிவிக்கிறது. பூம்புகார் அருகில் இந்த நகரம் சுமார் 75 அடி ஆழத்தில் புதையுண்டு கிடப்பதை கொண்டு பார்க்கும் போது, இந்த நகரம் சுமார் 11 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மூழ்கி இருக்கக் கூடும் என ஹான்காக் கருதினார். தனது ஆராய்ச்சியை பற்றிய விபரங்களை அவர் இங்கிலாந்தின் புகழ் பெற்ற டர்ஹாம் பல்கலைக் கழகத்தின் நிலவியல் துறை பேராசிரியர் கிளன் மில்னே என்பவரிடம் தெரிவித்தார். அதன் மீது ஆராய்ச்சி மேற்கொண்ட கிளன் மில்னே, ஹான்காக்கின் கருத்து சரிதான் என உறுதிப்படுத்தினார்.

சுமார் 11 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கடல் மட்டம் 75 அடி உயர்ந்திருக்கக் கூடும் என்றும், அதனை வைத்து பார்க்கும் போது இந்த நகரம் 11 ஆயிரத்து 500 ஆண்டு கால பழமை வாய்ந்தது என்ற முடிவினையும் அறிவித்தார். இதன் மூலம் உலகின் நவீன நாகரீகம் நமது பூம்புகார் நகரில் 11 ஆயிரத்து 500 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றியது என்பது தெளிவாகிறது.

மேலும் பூம்புகார் நகர நாகரீகம் ஹரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய நாகரிகங்களை விட மிகவும் மேம்பட்ட ஒன்று என்றும் கிரஹாம் ஹான்காக் தெரிவிக்கிறார். பூம்புகாரில் இவர் மேற்கொண்ட ஆராய்ச்சியின் படங்கள், இங்கிலாந்து மற்றும் அமெரிக்காவில் 'அண்டர்வேர்ல்டு' என்ற பெயரில் தொலைக்காட்சி தொடராக இந்தாண்டு பிப்ரவரியில் ஒளிபரப்பப்பட்டது. இந்த தொலைக்காட்சி தொடர் உலக வரலாற்று ஆராய்ச்சியாளர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியுள்ளது. இந்த படங்களை கடந்த வாரம் பெங்களூரில் நடந்த கண்காட்சி ஒன்றில் கிரஹாம் ஹான்காக் வெளியிட்டார்.

மேலை நாட்டு வரலாற்று மற்றும் கடல் ஆராய்ச்சியாளர்களின் கவனம் பூம்புகாரின் பக்கம் திரும்பியுள்ள போது, இந்திய ஆராய்ச்சியாளர்கள் மட்டும் பூம்புகார் பற்றி தெரிந்து கொள்ள எந்த விருப்பமும் கொள்ளவில்லை என்பது வருத்தத்திற்குரிய உண்மை. மூழ்கி போனது பூம்புகார் நகரம் மட்டுமல்ல, தற்போது இருக்கும் வரலாற்று புகழ் பெற்ற பூம்புகார் நகரமும் அரசால் அலட்சியப்படுத்தப்பட்ட நிலையில் தான் உள்ளது. சோழ மன்னர்களின் ஆட்சி காலத்தில் புகழ் பெற்ற துறைமுக நகரமாக விளங்கிய பூம்புகார் பண்டைகால தமிழ் இலக்கியங்கள் பலவற்றாலும் போற்றப்பட்டுள்ளது.

சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ள நிகழ்வுகள் நடைபெற்றதாக கருதப்படும் பூம்புகாரை பற்றி கோவில் கல்வெட்டுகள் பலவும் செய்திகள் தெரிவிக்கின்றன. கடந்த 1973ம் ஆண்டு அப்போதைய முதல்வர் கருணாநிதி பூம்புகாரின் வரலாற்று பின்னணியை நினைவு கூறும் வகையில் சிலப்பதிகார கலைக்கூடம், இலஞ்சி மன்றம், பாவை மன்றம், நெடுங்கால் மன்றம் உட்பட சிற்பக்கலை நுணுக்கம் வாய்ந்த கட்டிடங்களை கட்டியுள்ள போதிலும், சுற்றுலா பயணிகளை ஈர்க்கும் விதத்தில் வசதிகள் பூம்புகாரில் இல்லை.

மகாபலிபுரம் அருகிலுள்ள கடலோர பொழுதுபோக்கு பூங்காக்கள் போல ஒன்றை பூம்புகாரில் அரசு அமைத்தால் சுற்றுலா பயணிகளை வெகுவாக கவரலாம்.

ஹான்காக்கின் ஆராய்ச்சிகள் வெளிநாட்டு சுற்றுலா பயணிகளை கவரும் வாய்ப்பை ஏற்படுத்தியுள்ளதால் இத்தகைய வசதிகள் பூம்புகாரில் அவசியம் என பொதுமக்கள் எதிர்பார்க்கின்றனர்.

17.01.2002

THE NEW INDIAN EXPRESS
★ CHENNAI

# Underwater dig pushes back Indian civilisation to 7,500 BC

EXPRESS NEWS SERVICE

New Delhi, Jan 16: An innocuous-looking piece of wood picked up from the sea-bed in the Gulf of Cambay along with a horde of other artifacts is set to push back Indian civilisation's antiquity to 7,500 BC.

The carbon dating of the wooden artifact recently carried out by the Birbal Sahani Institute of Palaeobotony and the National Geophysical Research Institute, indicate the settlements, accidentally discovered by the team of oceanographers, could be one of the oldest Neolithic sites discovered in India.

Announcing this at a press conference, Minister for Science and Technology and Ocean Development Murli Manohar Joshi said "The impact of these discoveries will be far-reaching. Not only would they link various theories regarding the earliest human settlements in the country, they would also open avenues for understanding the geomorphic characteristics of the Gulf of Cambay."

The presence of an archaeological site indicative of a very ancient culture in the present Gulf of Cambay was first made public by the Ministry in May last year. Subsequently, further underwater exploration was carried out in the area which yielded a cache of artifacts, including the wood dating back to 7,500 BC, of an ancient culture.

Commenting on the discoveries, Prof S N Rajguru, former joint director and head of department of Archaeology, Deccan College, said, "These collections represent an exciting breakthrough in offshore archaeology. They suggest that the entire landscape between Bhavnagar and Hazira were probably connected around 7,000 BC."

The acoustic images of the area present channel like features indicating the presence of a river in the region.

"Geometrical structures and antiquities have been discovered in an area only within 200 m adjoining the channel suggesting human activity on the banks of the river that was present at that time," Rajguru added.

A series of surveys was conducted by the National Institute of Ocean Technology (NIOT) during 2000 to 2001. Having discovered a possible settlement earlier in 2001, NIOT undertook a confirmatory survey in November 2001 in the Gulf of Cambay area with advanced marine underwater survey techniques with side-scan sonar and sub-bottom profiler.

According to B Sasisekaran, research associate in the National Science Academy, "The carbon dating of 7,500 BC obtained for the wooden piece recovered from the site changes the earlier held view that the first cities appeared in the horizon around the 3,500 BC (the valley of Sumer around C 3000 BC and at Harappa C 2500 BC)".

The materials collected at the site include artifacts, possible construction elements with holes and studs, pot shreds, beads, fossil bones which are significant signs of human activity. "A detailed examination revealed a riverine conglomerate at a water depth of 30-40 m between 20 and 40th km, west of Hazira near Surat," NIOT officials said.

The minister said that the sonar images of the site were similar to staircases, temples and bathrooms, adding further investigation was necessary. He said the findings would be submitted to scientific journals within 10-15 days. He said more sophisticated equipment was needed to carry out the research.

o link the evidences together and carry out further research at the site, the government has decided to form a specialised group of archaeological experts from NIOT, National Institute of Oceanography, Archaeological Survey of India, Physical Research Laboratory, Lucknow and BSIP and NGRI.

"Further investigation of this area is important as this has implications and might throw some light on the development of civilisation, besides having a bearing on the Indian history," Joshi said.

## ஆசிரியரின் பிற நூல்கள்

1. வெள்ளக் குயில்
(வீரமாமுனிவரின் வாழ்க்கை வரலாற்று நூல்)
2. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே
(சொல்லாய்வு நூல்)
3. வானியலின் மூலவர் தமிழரே
(சொல்லாய்வு நூல்)
4. சிந்துவெளி நாகரிகம் தமிழர் நாகரிகமே
(வரலாற்றுச் சொல்லாய்வு நூல்)
5. தொல்காப்பியச் சிந்தனைகள்
(வரலாற்றுச் சொல்லாய்வு நூல்)
6. உலகளாவிய தமிழ்
(சொல்லாய்வு நூல்)
7. உலக மொழிகளில் தமிழின் வேர்ச் சொற்கள்
(சொல்லாய்வு நூல்)
8. எல்-யா
(சொல்லாய்வு நூல்)
9. சமற்கிருதத்துக்கும் தாய்மொழி தமிழே
(சொல்லாய்வு நூல்)
10. Thamizh - And Hebrew
(English)
11. The Babylonian Thamizh
(English)
12. தமிழ் நாட்டுக் கிறித்துவம் பகுதி - I
(வரலாற்று நூல்)
13. தமிழ் நாட்டுக் கிறித்துவம் பகுதி - II
(வரலாற்று நூல்)
14. தமிழும் சமற்கிருதமும் பகுதி - I
(மொழி ஆய்வு நூல்)
15. தமிழும் சமற்கிருதமும் பகுதி - II
(மொழி ஆய்வு நூல்)

○○○

